# சங்க அகப்பாடல்களில் பல்லுயிரிச்சூழல்

பாரதியார் பல்கலைக்கழக முனைவர் (Ph.D) பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**க. வெள்ளியங்கிரி எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்.,**

நெறியாளர்

**முனைவர் வெ.அ. நாகரத்தினம் எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எச்.டி.,**

தமிழ் உயராய்வுத்துறை

அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி)

கோயம்புத்தூர் - 641018


மே - 2018

## நெறியாளர் சான்றிதழ்

இடம்: கோயம்புத்தூர்
நாள்: 24.05.2018

முனைவர் வெ. அ. நாகரத்தினம் எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எச்.டி.,
உதவிப் பேராசிரியர்
தமிழ் உயராய்வுத்துறை
அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி)
கோயம்புத்தூர் - 641018

**"சங்க அகப்பாடல்களில் பல்லுயிரிச் சூழல்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக **திரு. க. வெள்ளியங்கிரி** அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு 2013 – 2018 ஆம் கல்வியாண்டில் கோயம்புத்தூர் அரசு கலைக் கல்லூரித் தமிழ் உயராய்வுத்துறையில் என் மேற்பார்வையில் தன்னிலையாக ஆக்கப்பட்டது என்றும், இதற்கு முன் இப்பொருள் குறித்து எவ்வகை ஆராய்ச்சிப் பட்டமும் எவருக்கும் வழங்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**நெறியாளர் கையொப்பம்**
**(வெ. அ. நாகரத்தினம்)**

**ஒப்புதல் கையொப்பம்**
**(முனைவர் மெய். இரெ. எழிலி)**
இணைப் பேராசிரியர் & தலைவர்
தமிழ் உயராய்வுத்துறை
அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி)
கோயம்புத்தூர் - 641018.

**முதல்வர்**
அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி)
கோயம்புத்தூர் - 641018

## ஆய்வாளர் உறுதிமொழி

இடம்: கோயம்புத்தூர்
நாள்: 24.05.2018

திரு. க. வெள்ளியங்கிரி
முனைவர்பட்ட ஆய்வாளர்
தமிழ் உயராய்வுத்துறை
அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி)
கோயம்புத்தூர் - 641018

**"சங்க அகப்பாடல்களில் பல்லுயிரிச் சூழல்"** என்னும் தலைப்பில் கோயம்புத்தூர் அரசு கலைக் கல்லூரித் தமிழ் உயராய்வுத்துறையில் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்வாய்வேடு **முனைவர் வெ. அ. நாகரத்தினம்** அவர்களை நெறியாளராகக் கொண்டு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும் எந்தப் பல்கலைக்கழகத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

**ஆய்வாளர் கையொப்பம்**

**(க. வெள்ளியங்கிரி)**

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் வெ. ஆ. நாகரத்தினம் எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எச்.டி.,**
உதவிப் பேராசிரியர்
தமிழ் உயராய்வுத்துறை
அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி)
கோயம்புத்தூர் - 641018

**ஆய்வுக் கட்டுரை வெளியிட்டமைக்கான உறுதிச் சான்றிதழ்**

**(Certificate of Genunies of the Publication)**

என் நெறியாளுகையின்கீழ் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொண்டு வரும் திரு. க. வெள்ளியங்கிரி என்பவர் பல்கலைக்கழக மானியக் குழுவால் அங்கீகரிக்கப்பட்ட பதிவுகள் இணையத் தமிழ் இதழில் (http//www.pathivugal.com.) **பண்டைத் தமிழரின் சூழலியல் அறிவு** என்ற தலைப்பில் (வெளியீட்டு எண்: ISSN: 1481-2991) 19.03.2015 ஆம் நாளன்று ஓர் ஆய்வுக் கட்டுரையும், தமிழாய்வுச் சங்கமம் என்னும் காலாண்டிதழில் **சூழலியல் பார்வையில் சங்க இலக்கியம்** என்ற தலைப்பில் (வெளியீட்டு எண்: ISSN: 2320 – 3412 ஜுலை – டிசம்பர் 2017) ஓர் ஆய்வுக் கட்டுரையும் வெளியிட்டுள்ளார் எனச் சான்றளிக்கப்படுகிறது. இவ்வெளியீடு அவரது ஆய்வேட்டின் ஆய்வு முடிவுகளை உள்ளடக்கியதாக உள்ளது.

துறைத்தலைவர் கையொப்பம் நெறியாளர் கையொப்பம்

பாரதியார் பல்கலைக்கழகம்

# BHARATHIAR UNIVERSITY

COIMBATORE - 641 046, TAMILNADU, INDIA.

State University | Re-accredited with "A" Grade by NAAC | Ranked 14th among Indian Universities by MHRD-NIRF

## CERTIFICATE OF PLAGIARISM CHECK

| | | |
|---|---|---|
| 1 | Name of the Research Scholar | VELLIYANGIRI . K |
| 2 | Course of study | ~~M.Phil.~~, / Ph.D., |
| 3 | Title of the Thesis / Dissertation | சங்க அகப்பாடல்களில் பல்லுயிரிச் சூழல் |
| 4 | Name of the Supervisor | Dr. V.A. NAGARATHINAM |
| 5 | Department / Institution/ Research Centre | DEPARTMENT OF TAMIL, GOVERNMENT ARTS COLLEGE (AUTONOMOUS) COIMBATORE - 641018 |
| 6 | Acceptable Maximum Limit | 30 % |
| 7 | % of Similarity of content Identified | 02% |
| 8 | Software Used | URKUND |
| 9 | Date of verification | 21/05/2018 |

Report on plagiarism check, items with % of similarity is attached

Signature of the Supervisor
(Seal)

முனைவர். வெ. அ. நாகரத்தினம்,
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச். டி.,
உதவிப் பேராசிரியர்
தமிழ் முதுகலை மற்றும் உயராய்வுத்துறை,
அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி),
கோயம்புத்தூர் - 641 018.

Signature of the Scholar

21/5/18

R&D Director (BU) / Head of the Department
(Seal)

முனைவர் மெய். இரெ. எழிலி
இணைப்பேராசிரியர் & துறைத்தலைவர்
தமிழ் உயராய்வுத்துறை
அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி)
கோயம்புத்தூர் - 641 018.

21/5/18

University Librarian (BU)



Research Coordinator (BU)

URKUND

# Urkund Analysis Result

| | |
|---|---|
| Analysed Document: | Velliyangiri K.docx (D38953908) |
| Submitted: | 5/21/2018 1:18:00 PM |
| Submitted By: | bulib_librarian@yahoo.co.in |
| Significance: | 2 % |

## Sources included in the report:

Nagarani. R.pdf (D29771993)
Kiruthika. S.docx (D33164182)
Amsa Raj R.docx (D35856202)
Mayuri. L.pdf (D32932609)
g.kalaivani-0035 thesis.pdf (D19965546)
A_Manickam _Tamil.pdf (D32689953)
Bhuvaneshwari-20171371.pdf (D37399534)
Dheivasikamani K_MPhil.pdf (D32456768)
http://www.seu.ac.lk/researchandpublications/seuars/2016/culture%20and%20history/Culture%20&%20History%20-%20Page%2036-42.pdf
http://irdp.info/journals/j3/volume3/International_Journal_of_Linguistics_and_Computational_Applications_Volume3_Issue2_2016_Veeramani.pdf
http://shodhganga.inflibnet.ac.in/bitstream/10603/55951/9/09_chapter%202.pdf

## Instances where selected sources appear:

40

# நன்றியுரை

கோயம்புத்தூர் அரசு கலைக் கல்லூரித் தமிழ் உயராய்வுத்துறையில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கியுதவிய கல்லூரியின் முதல்வர் அவர்கட்கு முதற்கண் என் நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

ஆய்வு மேற்கொள்ள ஊக்கப்படுத்தியதுடன் ஆய்வு தொடர்பான நூல்களையும் வழங்கி உதவிய தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் மெய். இரெ. எழிலி அம்மா அவர்கட்கும் என் நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.

முழுமையாகத் தன்னியல்புடன் ஆய்வு மேற்கொள்ள உதவியதுடன் இன்முகத்துடன் அவ்வப்போது தேவையான அறிவுறுத்தல்களை வழங்கியும், ஆய்வு தொடர்பான கலந்துரையாடல்களை நடத்தியும் நெறிப்படுத்தி ஆய்வு செம்மையுற உதவிய எனது நெறியாளர் முனைவர் வெ. ஆ. நாகரத்தினம் அம்மா அவர்களுக்கு என்றென்றும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வு மேற்கொள்வதில் ஊக்கப்படுத்திய தமிழ்த்துறைப் பேராசிரியர்களான முனைவர் மு. மீனாட்சி, முனைவர் சந்திரா கிருட்டிணன், முனைவர் மா. சுப்புரத்தினம், முனைவர் க. சு. சிவகாமசுந்தரி, முனைவர் மோ. செந்தில்குமார், முனைவர் சேனாவரையன் ஆகியோர்க்கும் பிற பேராசிரியப் பெருமக்கட்கும் எனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு தொடர்பான கருத்துக்களையும் நூல்களையும் வழங்கி ஊக்கப்படுத்திய தமிழ்த்துறையின் மேனாள் பேராசிரியர் முனைவர் கா. மஞ்சுளா அம்மா அவர்கட்கு என் நன்றிகள்.

முனைவர் பட்ட ஆய்வுநெறிக் கூட்டத்திற்குப் புறநிலைக் கருத்தாளராக வந்து ஆய்வு தொடர்பான ஐயங்களைப் போக்கித் தகுந்த விளக்கங்களை அளித்த கோயம்புத்தூர் நிர்மலா மகளிர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் சகோதரி. அருள்சீலி அவர்களுக்கு நன்றிகளைக் கூறிக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான சூழலியல் தொடர்பான கருத்துக்களை வழங்கி உதவிய மதுரை திருமங்கலம் ‘இறகுகள்’ சூழல் அமைப்பின் நிறுவனர் திரு. இரவீந்திரன் நடராசன் அவர்கட்கும், கோயம்புத்தூர் ஓசை அமைப்பின் ஓசை காளிதாசு ஐயா அவர்கட்கும் இவ்வமயம் நன்றிகளைக் கூறிக்கொள்கிறேன்.

பெற்றெடுத்தது மட்டுமல்லாமல் முனைவர் பட்டம் எனும் பேறு எனக்கு வாய்க்க வாய்ப்பளித்த கல்லா மேதைகளான என் பெற்றோர் திரு. க. கருப்புசாமி, திருமதி க. ராசம்மாள் ஆகியோரின் திருவடிகளை வணங்குகின்றேன். என் வாழ்வு சிறக்க

தியாகச்சுடராய் விளங்கிவரும் தங்கை திருமதி. க. கோகிலாவிற்கு எனது நன்றிகள் பற்பல.

ஆய்வு சிறக்க அனைத்து வழிகளிலும் என்னுடன் நின்று ஊக்கப்படுத்தி உதவிய அன்பமை மனையாள் திருமதி அ. கல்பனா அவர்கட்கு என் நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

ஆய்வின் அனைத்து நிலைகளிலும் என் நலன் கருதி உடன் நின்று உதவிய நட்பமை நல்லுள்ளங்கள் அனைவருக்கும் என் நன்றிகளைக் காணிக்கையாக்குகின்றேன்.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த அறிவுடைச் சங்கப் புலவர்கள் யாத்த பாடல்கள் சூழலியல் அறிவின் சுரங்கமாகும். அவை தற்காலத்து மக்களுக்குச் சூழலுயிரிகள் குறித்த அறிவினை வழங்குகின்றன. அத்தகைய அறிவினை இன்றைய தலைமுறையினரும் பெற சங்கப் புலவர்கள் இன்றியமையாதவர்கள். அவர்கள் இன்றெனின் பழந்தமிழர்களின் இரண்டாயிரமாண்டு சூழலியல் அறிவு கடத்தப்படாதொழிந்திருக்கும். எனவே இத்தருணத்தில் சங்கப் புலவர்கட்கும் நன்றி நவிலுதல் என் கடனாம்.

தமிழ்த்தளத்தில் எனக்கு அடிப்படை அறிவினை ஊட்டிய பேரூர், தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடத்திற்கும், தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் தமிழ்க் கல்லூரிக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். போந்தெம் உயிர்க்குயிராந் துணையொத்த சாந்தையரின் இன்னருள் அடியேனுக்கு வாய்க்க அருளிய தவத்திரு பேரூர் அடிகளார், தவத்திரு இளைய அடிகளார் ஆகியோரின் பொன்னார் திருவடிகளுக்கு நன்றி மலர்களைச் சூட்டி மகிழ்கின்றேன்.

# பொருளடக்கம்

| இயல் | தலைப்பு | ப.எண் |
| --- | --- | --- |

# முன்னுரை

இலக்கியங்கள் மனிதனால் படைக்கப்பட்டு அவனது உணர்வுகளை வெளிப்படுத்துவனவாய் அமைகின்றன. உலக அளவில் தோன்றிய இலக்கியங்கள் அனைத்தும் மனித சமுதாயத்தின் வெளிப்பாடாகவே அமைந்துள்ளன. அவ்வகையில் அவை மனிதன் சார்ந்துள்ள இயற்கையையும் வெளிக்காட்டுவதாய் அமைவதையும் காணமுடிகின்றது. உலகளவில் மனிதனையும் இயற்கையையும் இணைத்து எழுந்த இலக்கியங்கள் பல. அவற்றுள் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு மனிதன் இயற்கையோடியைந்து வாழ்ந்த காலத்தில் மனித உணர்வுகளை இயற்கைச் சூழலின் பின்புலத்தில் எடுத்துக்காட்டிய சங்க இலக்கியங்கள் இடம்பெறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

மனித வாழ்வியலை இயற்கையோடு ஒன்றுபடுத்திக் காட்டுபவை சங்க இலக்கியங்கள் ஆகும். சங்க இலக்கியத்தில் மனித உணர்வினை மட்டும் வெளிப்படுத்தும் நோக்கில் உவமைகளையோ இயற்கைச் சூழல்களையோ சுட்டாமல் மனித உணர்வினை மட்டும் சுட்டும் தனித்தன்மை வாய்ந்த பாடல்கள் சிலவே. பெரும்பாலான சங்க இலக்கியப் பாடல்களை எடுத்துக்கொண்டால் அவற்றில் மனித உணர்வுடன் இயற்கையை எவ்வகையிலேனும் இணைத்துக்காட்டி இயற்கையின் தன்மையையும் உணர்த்தும் பான்மை அடங்கியிருப்பதை உணரமுடிகின்றது. இவ்வாறு இயற்கையை இணைத்துப் பாடுவது என்பது வெறும் பாடல் இனிமை கருதி எனும் நிலையில் மட்டுமில்லாமல் சங்ககாலத்தில் மனிதனுக்கும் இயற்கைக்கும் இருந்த மிகநெருங்கிய உறவு மற்றும் சங்கச் சமுதாய மனிதர்கள் இயற்கையை எவ்வெவ்வகைகளில் ஆராய்ந்து அறிந்திருந்தனர் என்பதை வெளிக்காட்டும் காலக்கண்ணாடி எனும் நிலையிலும் அமைகின்றது.

இயற்கையோடியைந்து வாழ்ந்த தமிழ்ச்சமுதாயம் தற்காலத்தில் இயற்கையிலிருந்து விலகிவிட்ட தன்மையைக் காணமுடிகின்றது. ஒட்டுமொத்த உலக சமுதாயமும் இந்நிலையில்தான் இயங்கி வருகிறதென்றால் அது மிகையாகாது. மனித சமுதாயத்தின் இயற்கையிலிருந்து விலகிய செயல்பாடுகள் மனிதன் உள்ளிட்ட இயற்கையின் அனைத்துக் கூறுகளையும் பாதிப்பிற்குள்ளாக்குகின்றன எனலாம். இந்நிலை மனித சமுதாயத்தினை இயற்கைச் சூழலில் கவனமுடன் செயல்பட வழிவகுத்துவிட்டது. இதன் காரணமாக ‘சூழலியல்’ எனும் துறை தோற்றம் பெற்று முடிந்தவரை இயற்கையுடன் மனிதனை இணைக்க முற்பட்டு வருகின்றது. இந்நிலையில் நமது மூதாதையர்கள் இயற்கையுடன் எவ்வாறு ஒன்றியிருந்தனர், அவர்கள் தமக்கும் தமது சூழலுக்கும் இடையே எவ்வகை உறவினைப் பேணிவந்தனர் என்பதை அறிந்து கொள்வது இன்றியமையாததாகும். அவ்வகையில் தமிழ் மக்களின் முன்னோடிகளான சங்ககால மக்களின் சூழலியல்சார் செயல்பாடுகளை அறிவதன் மூலம் அவர்களது சூழலியல் கோட்பாடுகளை அறியமுடியும். இயற்கையின் உயிருள்ள கூறுகளான பல்வகை உயிரினங்களும் சூழலியலில் ஒருபகுதியாக அமைகின்றன. அவைதமது சூழலுடன்

இணைந்தியங்கும் தன்மை மற்றும் தமக்குள் கொண்டுள்ள உறவு ஆகியவற்றை விளக்கும் பல்லுயிரிப் பன்மயம் பற்றிய சங்க அகப்பாடற் பதிவுகளை வெளிக்காட்டுவதாக இவ்வாய்வு அமைகின்றது.

**ஆய்வுத் தலைப்பு**

**"சங்க அகப்பாடல்ககளில் பல்லுயிரிச்சூழல்"** என்பது ஆய்வின் தலைப்பாகும்.

**ஆய்வுப்பொருள்**

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களில் அமையப்பெற்ற அகப்பாடல்களில் காணக்கிடக்கின்ற பல்லுயிரிச்சூழல் பற்றிய செய்திகளை ஆராய்வதே இவ்வாய்வேட்டின் மையப்பொருளாக அமைகின்றது.

**ஆய்வு நோக்கம்**

சங்க இலக்கியத்தைச் சூழலியல் நோக்குடன் அணுகிய ஆய்வுகள் ஏராளம். தாவரங்கள், விலங்குகள், மரங்கள் எனத் தனித்தனியே குறிப்பிட்ட உயிரின வகைப்பாட்டின் அடிப்படையில் பல ஆய்வுகள் தோன்றியுள்ளன. சூழலியலில் குறிப்பிடப்படும் சூழல்தொகுதி (Ecosystem) என்பது பல்வேறு உயிரினங்கள் மற்றும் இயற்கைக் கூறுகளின் ஒட்டுமொத்த இணைச்செயல்பாடாகும். அவ்வகையில் பல்வேறு உயிரினங்களையும் இணைத்துக்காணும் 'பல்லுயிரியியம்' (Biodiversity) எனும் சூழலியல் கருத்தாக்கமே சூழல்தொகுதியின் இயக்கத்திற்கு அடிப்படை. இதனால் பல்லுயிரியியவளம் காக்கப்படவேண்டும் எனும் கருத்து வலுப்பெற்றுவரும் தற்காலத்தில் சங்க அகப்பாடல்களைப் 'பல்லுயிரியியம்' எனும் கருத்தாக்கத்தின் அடிப்படையில் அணுகுவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வுக்களம்**

சங்க அக இலக்கியங்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை, குறிஞ்சிப்பாட்டு ஆகிய எட்டு நூல்கள் ஆய்வுக் களமாக அமைகின்றன. இந்நூல்களுள் சுட்டப்பட்டுள்ள உயிரின வகைமையுள் மனித இனப்பதிவுகள் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. சூழலிலுள்ள பல்வகை உயிரினங்களையும் மேலாண்மை செய்பவனாக மனிதன் விளங்குகின்றான். அவனது செயல்பாடுகள் சூழலியலில் பல்வேறு சிக்கல்களை உருவாக்கி பிற உயிரினங்களின் வாழ்க்கை சிதையக் காரணமாகவுள்ள நிலையில் மனித இனத்தை விடுத்து அவனால் பாதிப்பிற்குள்ளாகிவரும் பிற உயிரியற் காரணிகளை மட்டும் கருத்தில் கொள்வதாக இவ்வாய்வு அமைகின்றது.

**ஆய்வுத் தரவுகள்**

ஆய்வுக்குரிய தரவுகள் முதன்மைச் சான்றாதாரம், துணைமைச் சான்றாதாரம் எனும் வகையில் பகுக்கப்பட்டுள்ளன.

**முதன்மைச் சான்றாதாரம்**

எட்டுத்தொகையில் அமையப்பெற்ற நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய நூல்களும் பத்துப்பாட்டில் அமையப்பெற்ற முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை, குறிஞ்சிப்பாட்டு ஆகிய நூல்களும் ஆய்வின் முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

**துணைமைச் சான்றாதாரம்**

சங்க இலக்கியங்கள் குறித்த ஆய்வு நூல்கள், இலக்கண நூல்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், சூழலியல் தொடர்பான நூல்கள், கட்டுரைகள், இதழ்கள், இணையவழித்தரவுகள் ஆகியவை துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வுக் கருதுகோள்**

தொல்காப்பிய கருப்பொருள் வரிசையுள் அமைந்துள்ள உயிரிக் கருப்பொருள் தொகுப்பினுள் சூழலியலின் பல்லுயிரியியத்தை அடக்கிக் காணமுடியும். சங்க அகப்பாடல்களில் பல்லுயிரி வகைமைப் பதிவுகள், அவற்றின் வாழிடச்சூழல் தொடர்பான பதிவுகள் காணப்படுகின்றன. அவை பண்டைத் தமிழ் மக்களின் மரபார்ந்த சூழலியல் அறிவினை வெளிக்காட்டுகின்றன. அவர்களது சூழலியல் அறிவினைப் புரிந்துகொள்வது, தற்காலச் சூழலியல் கோட்பாடுகளை அறிந்துகொள்வதற்கும் வளம்பெறச் செய்தவற்கும் உறுதுணையாக அமையும் என்பதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வில் பின்வரும் அணுகுமுறைகள் கையாளப்பட்டுள்ளன.

- பகுப்பாய்வு அணுகுமுறை
- விளக்கமுறை அணுகுமுறை
- ஒப்பீட்டாய்வு அணுகுமுறை
- சூழலியல் அணுகுமுறை

**ஆய்வு முன்னோடிகள்**

தமிழ் இலக்கியங்களில் தொன்மையான இலக்கியங்களான சங்க இலக்கியங்களைக் கொண்டு பல்வேறு ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டுள்ளன.

1. முனைவர் மெய். இரெ. எழிலி, சங்கப்பாக்களில் சூழலியல் விழுமியங்கள், முனைவர்பட்ட ஆய்வேடு, தமிழ்த்துறை, அரசு கலைக் கல்லூரி, கோயம்புத்தூர், அக்டோபர், 2012.

2. முனைவர் கே. பரிமளா, நற்றிணையில் தாவரங்கள், முனைவா் பட்ட ஆய்வேடு, தமிழ்த்துறை, பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர், டிசம்பா் 2012.

3. முனைவர் ஈ. யுவராணி, சங்க அகப்பாடல்களில் கருத்துப் புலப்பாடு, முனைவர்பட்ட ஆய்வேடு, கொங்கு கலை அறிவியல் கல்லூரி, ஈரோடு, ஆகஸ்டு, 2013.

4. திரு. H. இராமசாமி, சங்க இலக்கியத்தில் மலர்கள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, டிசம்பர், 2004.

5. டாக்டர் மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரி நிலையம், சென்னை, 2006.

ஆகிய ஆய்வேடுகளும் நூல்களும் இவ்வாய்விற்கு முன்னோடிகளாக அமைகின்றன.

**ஆய்வேட்டின் அமைப்புமுறை**

இவ்வாய்வு முன்னுரை முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

முன்னுரை

இயல் 1 : கருப்பொருளும் பல்லுயிரியியமும்

இயல் 2 : பல்லுயிரி வகைமை

இயல் 3 : பல்லுயிரி வாழிடச்சூழல்

இயல் 4 : பயன்பாட்டு நோக்கில் சங்க இலக்கியப் பல்லுயிரியியம்

முடிவுரை

**முன்னுரை**

ஆய்வுத்தலைப்பு, ஆய்வுநோக்கம், ஆய்வுக்களம், ஆய்வுத்தரவுகள், ஆய்வுஅணுகுமுறைகள், ஆய்வுமுன்னோடிகள், ஆய்வுக்கருதுகோள், ஆய்வுப்பகுப்பு ஆகியன ஆய்வின் முன்னுரையாக அமைகின்றன.

**இயல் - 1**

**“கருப்பொருளும் பல்லுயிரியியமும்”** என்னும் இவ்வியலில் உயிரினத் தோற்றம், அவற்றின் வளர்ச்சிநிலை, நிலம் மற்றும் திணைப்பகுப்பு, கருப்பொருள் என்பதன் பொருள்,

தொல்காப்பியத்தில் சுட்டப்பட்டுள்ள கருப்பொருள் வரிசை, தொல்காப்பியத்திற்குப் பின்புவந்த இலக்கண நூல்களில் சுட்டப்படும் கருப்பொருள் நிலை, இலக்கண வல்லுநர்கள் சுட்டும் கருப்பொருள் நீட்சி, பல்லுயிரியியம் என்பதன் விளக்கம், பல்லுயிரியியம் தமிழ் இலக்கண மரபில் தோன்றிய கருப்பொருளுடன் உள்ளடங்கும் தன்மை ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

**இயல் - 2**

உலகில் எண்ணற்ற உயிரினங்கள் வாழ்ந்து வருகின்றன. அறிவியல் அறிவிற்கும் எட்டப்படாத பல உயிரினங்கள் வாழ்ந்து வரலாம். உயிரினங்கள் அவற்றின் தன்மையின் அடிப்படையில் பலவாறுவகைப்படுத்தி அறியப்படுகின்றன. இவ்வகைப்பாட்டையே பல்லுயிரியியம் எனும் சூழலியல் பிரிவு விளக்குகின்றது. சங்க அக இலக்கியங்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை, குறிஞ்சிப்பாட்டு ஆகிய நூல்களில் சுட்டப்பட்டுள்ள உயிரினங்களை அவற்றின் தன்மை அடிப்படையில் வகைப்படுத்திக் காண்பதாக **“பல்லுயிரி வகைமை”** என்னும் இவ்வியல் அமைகின்றது.

**இயல் - 3**

உயிரின வாழ்வாதாரத்தின் அடிப்படை வாழிடமாகும். ஓர் உயிரினம் நன்முறையில் இயங்குவதற்கும் தன்னை நிலைநிறுத்திக் கொள்வதற்கும் இன்றியமையாததாக வாழிடம் அமைகின்றது. சங்க அகப்பாடல்களில் உயிரின வாழிடங்கள் பல இடங்களில் விளக்கப்பட்டுள்ளன. பறவைகள் கூடுகட்டி வாழ்தல், கழிமுகங்கள் பல்லுயிரின வாழிடமாக அமையப் பெற்ற தன்மை போன்றவை சிறப்புற காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. அவ்வாறு காட்சிப்படுத்தப்பட்டுள்ள வாழிடத் தரவுகளைக் கொண்டு உயிரின வாழிடத் தன்மைகளை வகைப்படுத்தி ஆராய்வதாகப **“பல்லுயிரி வாழிடச்சூழல்”** என்னும் இவ்வியல் அமைந்துள்ளது.

**இயல் - 4**

சங்ககாலத்தில் இயற்கைவளம் மிகுத்திருந்ததைச் சங்க இலக்கியக் காட்சிகள் தெளிவுப்படுத்துகின்றன. பல சூழற்றொகுதிகளில் அடங்கியிருந்த பல்வேறுபட்ட இயற்கை அமைவுகளையும் அதில் இயங்கிவந்த உயிரினவளங்களையும் அவை எடுத்துக்காட்டுகின்றன. தற்காலத்தில் ஏற்பட்டுள்ள சூழலியற் சீர்கேடுகளாலும் இயற்கை சார்ந்த கவனமின்மையாலும் பல்லுயிரினவளம் பாதிக்கப்பட்டு வருவது கண்கூடு. சங்க அகப்பாடல்களில் காட்சிப்படுத்தப்பட்டுள்ள பல்லுயிரினவளக் காட்சிகளை அடிப்படையாகக் கொண்டும், அவற்றில் வெளிப்பட்டுள்ள பல்லுயிரின அறிவைக் கொண்டும் வெளிப்படுத்தக் கூடிய பல்லுயிரினவளச் சிந்தனைகளின் வாயிலாக பல்லுயிரினவள மேம்பாட்டுக்குப்

பயன்படக் கூடிய கருத்துகளைத் தொகுத்துக் காட்டுவதாகப் **“பயன்பாட்டுநோக்கில் சங்க இலக்கியப் பல்லுயிரியியம்”** என்னும் இவ்வியல் அமைந்துள்ளது.

**முடிவுரை**

ஒவ்வொரு இயலின் முடிவிலும் பெறப்பட்ட முடிவுகள் இறுதியில் ஆய்வுமுடிவாகத் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

**துணைநூற்பட்டியல்**

ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள் பற்றிய விவரங்கள் ஆய்வேட்டின் இறுதியில் அகரவரிசையில் இடம்பெற்றுள்ளன. மேலும் ஆய்வுக்குப் பயன்பட்ட அகராதிகள், இதழ்கள், இணையதள முகவரிகள் போன்றவற்றின் விவரங்களும் தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்பு**

பின்னிணைப்பு என்னும் பகுதியில் சங்க அகப்பாடல்களில் காணப்படும் உயிரினப் பெயர்ப்பட்டியல் பின்னிணைப்பு – I எனவும், ஆய்வு தொடர்புடைய சில படங்கள் பின்னிணைப்பு – II எனவும் கொடுக்கப்பட்டுள்ளன.

## இயல் - 1

## கருப்பொருளும் பல்லுயிரியியமும்

உலகம் பல்வகைப் பொருட்களால் ஆனது. அவற்றை உயர்திணை, அஃறிணை என இரு கூறாகப்பகுக்கலாம். இப்பகுப்பு அறிவினை அடிப்படையாகக் கொண்டு அமையப்பெற்றது. சிந்திக்கும் திறனைக் கொண்டமைந்த மனிதனை முதற்கண்நிறுத்தி பிறவற்றைப் பின்நிறுத்தும் தன்மையது. இப்பகுப்பு மேன்மையுடைத்ததேயாகும். காரணம் பேச்சு, மொழி, எழுத்து, இலக்கியம், கலை என எண்ணற்ற தனித்திறன்களைக் கொண்டது மனித இனம். அத்துடன் உலகைப் பல்வேறு வகைப்படுத்தி அறியவல்லதும், உலகப் பொருட்களை ஒரு சேரத் தொகுத்து அறியவல்லதுமாக அது விளங்குகிறது. மனிதனால் வளர்ந்துள்ள அறிவியல், பகுத்தும் தொகுத்தும் அறியவல்ல அறிவினை மேன்மையுடையதாகக் கண்டு அதனடிப்படையில் பகுத்தும் தொகுத்தும் அறியவல்ல மனிதனை உயர்திணை எனச் சுட்டியுள்ளது. இப்பகுப்பானது முழுக்க முழுக்க மனித உணர்வின் வழிவந்ததாகும். அஃறிணையில் அடங்கியுள்ள பிற உயிருள்ள உயிரினங்கள் மனிதனை அவற்றின் அறிவினடிப்படையில் எதாவது ஒரு பகுப்பில் அடக்கியுள்ளதா? என்பது மனிதன் அறியாத அல்லது அறியவியலாத விடயமாக உள்ளது. மனிதனாயினும் பிற உயிரினமாயினும் தம்முடைய அறிவு, அறிவியல், கலை, இலக்கியம் போன்றவற்றைத் தகவல் தொடர்பின் அடிப்படையிலேயே வெளிப்படுத்துகின்றன. அவ்வகையில் இதுவரை மனிதனால் அறியமுடியாத அவனையொழிந்த வேறொரு உயிரினத்தால் படைக்கப்பட்ட அறிவுச் செயல்பாடுகளோ இலக்கியங்களோ அல்லது பிறகலைவடிவங்களோ இதுவரை கிடைக்கவில்லை. இதனாலேயே இன்றுவரை மனிதன் மட்டுமே ‘உயர்திணை’ என்னும் கோட்பாடு உலகில் நின்று நிலவிவருகிறது.

உயர்திணையாக விளங்கிவரும் மனிதன் மற்றும் பிற உயிரினங்கள் உலவிவருவது நாம் வாழும் புவியில் மட்டுமே என்பது இதுவரை விளங்கிவரும் உண்மையாகக் கருதப்படுகிறது. வேற்றுகிரகவாசிகள் பற்றிய சிந்தனை இருந்தும் சான்றின்மையால் மேற்கூறிய கருத்து உண்மையாக நிலைத்துவருகிறது. இவ்வாறு உயர்திணையாக விளங்கிவரும் மனிதன் என்பவன் தனித்த செயல்பாடற்றவனாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். தான் உயிர்வாழ மிகவும் இன்றியமையாததான உணவைப்பெற அவன் அஃறிணையில் பகுத்துள்ள தாவரத்தையோ அல்லது விலங்கையோ சார்ந்துள்ளான். தனது இனவிருத்தி எனும் நிலையில் தன்திணையில் வேறொரு பாலைச் சார்ந்துள்ளான். தான் பாதுகாப்பாக வாழ உறைவிடத்தை அமைக்கையில் கல், மண் போன்ற அஃறிணைக்கண் அமையப் பெற்ற உயிரல் பொருட்களைச் சார்ந்தவனாகின்றான். மேலும் அறிவுவளர்ச்சி பெற்ற மனிதன் விதைக்கவும், அறுக்கவும், வானூர்தியில் பறக்கவும், விண்வெளி ஓடம் விடவும் தட்பவெப்பநிலையினைச் சார்ந்தவனாக அமைகின்றான். மொத்தத்தில் உலகின் உயரிய உயிரினமாக இருந்துவரும் மனிதன்

தனித்தியங்க முடியாத சூழல் சார்புடைய உயிரியாக விளங்குவதை அறிந்துகொள்ள முடிகிறது.

மனிதன், அவனது சூழல் உயிரினங்கள், சூழல் உயிரல்பொருட்கள் இவற்றின் கூட்டுச் செயல்பாடே உலகம், உலக இயக்கம் எனலாம். சிறப்புத்தன்மை கருதி மனிதன் தனது சூழல் உயிரினங்களிடமிருந்தும், உயிரல் பொருட்களிடமிருந்தும் சார்ந்திருந்தும் தனிப்பட்ட பொருளாகக் காட்சிதருகிறான். உயிரினங்கள் வாழும் பூமி தோன்றி மனிதன் எனும் அறிவுச்ச உயிரினம் உருவாகிச் சிறக்கும் வரை எண்ணற்ற இயற்கைச் செயல்பாடுகள் நிகழ்ந்துள்ளன. இவ்வியற்கைக்கு, உலகத்திற்கு, உலகம் இயங்கிவரும் பால்வெளிக்கு, பல்பால்வெளிகள் உள்ளிட்ட ஒட்டுமொத்த பிரபஞ்சவெளிக்கு அவ்வியற்கைச் செயல்பாடுகள் யாவும் கருப்பொருட்களாக அமைகின்றன. பிரபஞ்ச வெளிக்கு (அண்டம்) பால்வெளிகள் கருப்பொருள்; பால்வெளிக்கு சூரிய குடும்பங்கள் கருப்பொருள்; சூரிய குடும்பத்திற்கு அதன்கோள்கள் கருப்பொருள்; கோள்களுக்கு அவற்றுள் காணப்படுவன எவ்வெவையோ அவ்வவை கருப்பொருள்கள். மேற்கூறப்பட்டவற்றின் அடிப்படையில் 'கருப்பொருள்' என்பது 'உள்ளிருக்கும் பொருள்', 'காணப்படும் பொருள்', 'உள்ளடங்கியிருக்கும் பொருள்' என்பது தெளிவாகிறது.

மனித அறிவினால் இதுவரை உணரப்பட்டது எனப் பொதுவாகப் பார்க்கையில் அண்டம், பால்வெளி, உலகம், சூரிய குடும்பத்தின் பிறகோள்கள் என்பவற்றைச் சொல்லலாம். மனிதனின் தெளிந்த அறிவு எனப்பார்க்கையில் அது உலகைத் தாண்டி அதிகத்தொலைவு பயணிக்கவில்லை என்றே சொல்லலாம். அவ்வகையில் அவனது பதிவுகள் யாவும் உலகம், உலகப்பொருட்கள், உலகப்பொருட்களின் செயல்பாடுகள் என்ற நிலையிலேயே அடங்கி விடுவதைக் காணமுடிகிறது. மேற்கூறிய 'உள்ளடங்கியிருக்கும் பொருள்' என்பதை சுட்டும் 'கருப்பொருட்களாகவே' அவனது பதிவுகள் அமைந்துள்ளன.

'கருப்பொருட்கள்' என்னும் கருத்தில் எண்ணற்ற விடயங்கள் அடங்கியிருக்கும் தன்மையை நோக்கி அவற்றைப் பகுக்கையில் உயிரிப்பொருள், உயிரல்பொருள் எனும் இரு பகுப்பினுள் அடக்கிவிடலாம். உலக இயக்கம் இவற்றைத் தாண்டிச் செல்லவில்லை. மனிதப் பதிவுகளும் இவற்றைத் தாண்டிச் செல்லவில்லை. காண்பதும் வாழ்வதும் இவையாகவே உள்ள நிலையில் மனிதப்பதிவுகள் யாவும் இவ்விரு கருப்பொருட்களாகவும் அவற்றின் செயல்பாடுகளாகவுமே பதிவாகியுள்ளன. இவற்றுள் உயிரிக்கருப்பொருளே இன்றியமையாவிடம் பெறுகின்றது. இரண்டாம் நிலையில் உயிரல் கருப்பொருள்கள் வைக்கப்படுகின்றன. உலகம் பல்வகை உயிரிக்கருப்பொருள்களால் நிரம்பியுள்ளது. இவ்வுயிரிக் கருப்பொருள் வகையையே 'பல்லுயிரியம்' என்னும் சொல் குறிக்கிறது. பல் + உயிரியம், பல் + உயிர் + இயம். பல்வகை உயிரினக் கொள்கை எனச் சுட்டலாம். இப் 'பல்லுயிரியம்' எனும் சொல் பிற்காலத்திய சூழலியல் ஆய்வாளர்களால்

முன்வைக்கப்பட்ட நிலையில் தமிழ் இலக்கிய உலகில் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு தொல்காப்பியரால் கூறப்பட்ட கருப்பொருள் பகுப்புடன் பொருத்திப் பார்க்கும் வகையில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். தொல்காப்பியரின் கருப்பொருள் பகுப்பு சூழலியலில் சுட்டப்படும் பல்லுயிரியக் கருத்தாக்கத்துடன் பொருந்தும் முறைமையை ஆராயும் விதமாக இவ்வியல் அமைகின்றது.

**உயிரினத் தோற்றம்**

பல்வகை உயிரினங்களும் அவை வாழும் பூமியும் தோன்றிய விதம் பற்றிய ஆய்வுகள் தொடர்ச்சியாக நடந்து வருகின்றன. முடிந்த முடிபாக எந்த ஆய்வுமுடிவுகளும் வெளிவரவில்லை எனலாம். உலகம் தோன்றவும் அவ்வுலகில் உயிரினங்கள் தோன்றவும் வாழவும் ஏற்ற சூழ்நிலை அமையவும் அதில் உயிரினங்கள் தோன்றி வளர்ச்சி அடையவும் பலகோடிக்கணக்கான ஆண்டுகள் பிடித்தன என்கிறது அறிவியல். கருத்துமுதல்வாதத்தை அடிப்படையாகக் கொண்ட சமயவாதிகள் அறிவியலுக்கு நேர்மாறான கருத்தை முன்வைக்கின்றனர்.

உலகத் தோற்றம் பற்றிய சிந்தனை இன்று நேற்று தோன்றியதன்று. மனிதன் சிந்திக்கத் தொடங்கியபொழுதே தொடங்கிவிட்டது. ‘‘வரலாறு தோன்றுவதற்கு முன்பே தாம் வசிக்கும் பூமியைப் பற்றி அறிய மனிதர்கள் முயன்று வந்திருக்கிறார்கள்’’[1] என்கிறார் ஜார்ஜ் கேமாவ்.

வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்தே மனிதனிடம் உலகம், உயிரினங்களின் தோற்றம் பற்றிய ஆய்வும் சிந்தனையும் இருந்துவந்துள்ளது. அதனடிப்படையிலேயே மக்களிடம் உலகத்தோற்றம் பற்றி எண்ணற்ற கதைகள் தோன்றி நிலவி வருகின்றன. அவ்வகையிலேயே அறிவியல் முறையிலான விளக்கங்களும் தோன்றின.

பொதுவாக உலகம் இறைவனால் படைக்கப்பட்டது எனும் கருத்து நிலவுகிறது. முதலும் முடிவுமற்ற ஆதிப்பரம்பொருள் மட்டுமே முதலில் இருந்தது. அது தன் சக்தியால் இயங்கிற்று. அதன் வலிமையால் இயக்கும் சக்தியும் ஜடமான பிரகிருதியும் தோன்றி பின் விருப்பத்தின் காரணமாக மற்ற வளர்ச்சிகள் தோன்றின என்பது வேதத்தின் கருத்தாக உள்ளது[2]. எபிரேயர்களின் கதையின்படி உலகம் ‘‘யகோவா’’ எனும் கடவுளால் படைக்கப்பட்டது. கிறித்தவ வேதமான பரிசுத்த வேதாகமம் உலகப் படைப்பைப் பற்றி பின்வருமாறு கூறுகிறது. ‘‘ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார்.’’[3] உலகம் இறைவனால் படைக்கப்பட்டது என்பதை

‘‘அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்’’[4]

எனும் தமது சிவஞானபோத முதல்நூற்பாவில் மெய்கண்டார் சுட்டுகிறார். இதற்கு உரைகண்ட அருணைவடிவேலு முதலியார் “ ‘உலகம் தோன்றல், நிற்றல், அழிதல் என்னும் முத்தொழிலை உடைய காரியமாய் (செயப்படுபொருளாய்) இருத்தலின், தன்னைச் செய்வோன் ஒருவனை உடையது’ எனக்கூறுதல் ஆசிரியரது கருத்து”[5] என்கிறார். இவ்வாறு சமயங்களும் சமயவாதிகளும் தத்தமது சமயக்கொள்கைகளின்படி உலகத்தோற்றம் பற்றிய கருத்துக்களை முன்வைத்துள்ளனர்.

அறிவியல் அடிப்படையில் உலகத் தோற்றத்தை ஆராயும் அறிவியலாளர்கள் தங்களது ஆய்வு முடிவுகளின்படி பல்வேறுபட்ட உலகத் தோற்றக் கொள்கைகளை முன்வைக்கின்றனர். இவற்றுள் சில விலக்கவும், ஏற்கவும் பெறுகின்றன. அண்டத்தோற்றம் பற்றி மூன்றுவிதக் கொள்கைகள் பெரிதும் பேசப்படுகின்றன. அவை பின்வருமாறு.

1. பெருவெடிக் கொள்கை (The Big Bang Theory)
2. மாறாநிலைக் கொள்கை (The Steady State Theory)
3. துடிப்புக் கொள்கை (The Pulsating Theory or the Oscillating Universe Theory)

இவ்வாறு மூன்றுவிதத் கொள்கைகள் இருப்பதே உலகத் தோற்றத்திற்கான முடிந்தமுடிபான கொள்கை அறுதியிடப்படவில்லை என்பதற்குச் சான்றாகும். எனினும் ஓரளவுக்கு அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட கொள்கையும் உண்டு. “இம்மூன்று கொள்கைகளுள்ளும் பெருவெடிக் கொள்கை என்பதே பெரும்பாலும் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுவரும் கொள்கையாகும்”[6] என்கிறார் முனைவர் மகிழேந்தி. பெருவெடிப்பின் காரணமாகப் பிரபஞ்ச மையத்திலிருந்து வெடித்துச் சிதறி, அவை குளிர்ந்து பூமியும் மற்றகோள்களும் உருவாயின என்கிறது அறிவியல். இதனை “முதன் முதலில் பெரும் வெடிப்பின் காரணமாக (Big Bang) ஈர்ப்பு சக்தியை மீறிக்கொண்டு அதி திணிவு நெருப்புப்பந்து (Surperdense Ball) வெடித்துச் சிதறி, டைனமைட் வைத்தால் பெரிய பாறை வெடித்துச் சிதறுவது போன்று, சிறுசிறு துகள்களாக வெடித்து நட்சத்திரங்கள், கோள்கள், துணைக்கோள்கள் முதலியன உண்டாயின. அவை 4100 கோடி ஆண்டுகள் பிரபஞ்சத்தின் மையத்திலிருந்து விலகி, பலூன் ஊதப்பெற்று உப்பி பெரிதாவது போன்று விரிந்து, விலகிப் பறந்து செல்கின்றன”[7] என விளக்கியுள்ளார் டாக்டர் எம்.ஆர். விஜயகுமார். மேற்கூறப்பட்ட அறிவியற் கருத்துகளின் அடிப்படையில் பார்க்கும்பொழுது பெருவெடிப்பின் காரணமாகச் சிதறி விழுந்த நெருப்புப்பந்து படிப்படியாகக் குளிர்ந்து நீர், நிலம் தோன்றி உயிரினங்கள் வாழத்தகுதியான கோளமாக உருவாகியது என்பதை அறியமுடிகின்றது. இவ்வாறு உருவான பூமியில் உயிரினங்கள் தோன்றுவதற்கும் பலவகையான கதைகளும், கொள்கைகளும் உருவாகியுள்ளன.

உலகத்தைப் படைத்த இறைவனே அதன்கண் உயிரினங்களையும் தோற்றுவித்தான் என்பது சமயவாதிகளின் கருத்தாக உள்ளது. அறிவியலாளர்கள் தங்களின் ஆய்வு முடிவுகளின்படி தத்தமது கருத்துகளை முன்வைக்கின்றனர்.

“உயிர்ப்பொருள்கள் முதன்முதலாக எவ்வாறு தோன்றின என்ற எண்ணம் பல நூற்றாண்டுகளாகப் பலப்பல அறிஞர் கருத்தில் தோன்றி வந்தது. எனினும் இதற்குத் திட்டவட்டமான முடிவு இன்னும் காணப்படவில்லை. பலதிறப்பட்ட அறிஞர்கள் தத்தம் கருத்திற்கு ஏற்ப, மெய்ஞ்ஞானமும் விஞ்ஞானமும், விளங்கிவந்த சூழ்நிலைக்கு ஒத்தவண்ணம் இவ்வினாவிற்கு விடை கூறி வருகின்றனர்”[8] எனும் டாக்டர் கு. சீனிவாசனின் கூற்றால் இதை அறியலாம்.

கிறித்தவர்களின் வேதாகமம் இறைவன் உலகத்தைப் படைத்து, பின் ஒவ்வொருநாளும் பற்பல உயிரினங்களையும் உருவாக்கினார் என்கிறது. இதனை “ஆறுநாட்களில் கடவுள் உலகத்தையும் உலகிலுள்ள உயிருள்ளவையனைத்தையும் படைத்ததாகக் (யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் வேதமான பைபில் நூல்) கூறுகிறது. செடிகளை மூன்றாம் நாளும், மீனையும் பறவைகளையும் ஐந்தாம்நாளும், விலங்குகளை ஆறாம் நாளும், மனிதனை கடைசியாகக் கடவுள் படைத்தாரென்று அந்நூல் கூறுகிறது”[9] என்கிறார் ஏ.ஐ. ஓபாரின். அறிவியலாளர்கள் உயிரிகள் உருவாக்குவார் ஒருவருமின்றி இயற்கையாகவே உருவாயின என்பதை நிறுவுகின்றனர்.

பூமியில் வாழும் வைரஸ் போன்ற சிற்றுயிரிகள் முதல், டைனோசர், யானை மற்றும் மனிதனாகிய உயர்ந்த உயிரினம் வரை உருவாக இயற்கை தொடர்ச்சியான மாற்றங்களைப் பெற்றும் பல்லாயிரம் கோடியாண்டுகள் தொடர்செயல்பாட்டையும் பெற்றுவந்துள்ளது. இவ்விடயத்தில் இயற்கையின் செயல்பாடு கற்பனைக்கும், அறிவியலால் அளவிடற்கும் அப்பாற்பட்டதென்றால் அது மிகையாகாது. இதை “பூமியின் மேற்பரப்பிலோ, அதன் வாயுமண்டலத்திலோ, முதன் முதலில் எளிய உயிர்க்கூறுகள் தோன்றின. அந்த எளிய கூறுகளிலிருந்து, இயற்கை கோடிக்கணக்கான ஆண்டுகள் உழைத்து மனிதர்களைப் போன்ற சிக்கலான ஜீவராசிகளைத் தோற்றுவித்திருக்கிறது”[10] எனும் ஜார்ஜ் கேமாவின் கூற்று உறுதிசெய்கின்றது.

பூமியில் முதன் முதலில் முழுமையான உயிரினம் தோன்றுவதற்குமுன் அமினோ அமிலங்கள் சேர்ந்து உருவான புரோட்டீன்களுள் உயிரித் தோற்றத்தத்தின் அடிப்படைத் தொடக்கமாகும். இதனை “கடல்நீரில் கரைந்திருந்த அமினோ அமிலங்கள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு ஏற்பட்ட சாதாரன புரோட்டீன்கள்தான் அந்தக் காலத்து உயிர்வடிவங்கள்”[11] எனும் அறிவியலார் கூற்றால் உணரலாம். இன்று காணப்படும் பல்வகைப்பட்ட உயிரினங்கள் யாவும் தொடக்கத்தில் ஒருசெல் உயிரியிலிருந்தே வந்தன என்பது அறிவியலார் கருத்து. “உலகம் தோன்றி ஏறக்குறைய அறுபதுகோடி ஆண்டுகளுக்குப்பின்னர் ஒரு செல் உயிரினமான நீலப்பச்சைப்பாசி தோன்றியது. இது கடலிலேயே தோன்றியது. தாவரம், விலங்குத் தன்மைகளை இது கொண்டிருந்தது. உலகின் முதல் உயிரினமான இது கடலில் தோன்றியமையால் உலகில் முதல், உயிர்

தோன்றிய இடம் கடல் என்பது அறிஞர்கள் முடிவு"[12] என முனைவா் மகிழேந்தி பலரது கருத்துகளை மேற்கோள் காட்டியுள்ளார். பல்வேறு யுகங்களில், பலகோடி ஆண்டுகளில் உயிரினங்களின் தோற்றமும் அவற்றின் பரிணாம வளர்ச்சியும் படிப்படியாக நடைபெற்று வந்துள்ளது. கடலில் வாழ்ந்து வந்த உயிரினங்கள் மெல்ல மெல்ல நிலத்தில் வாழும் தன்மையை அடைந்து நிலப்பரப்பில் பரவ பலகோடி ஆண்டுகள் எடுத்துக் கொண்டன. பத்து லட்சம் வருடங்களுக்கு முன்புதான் குரங்குமனிதன் தோன்றி குரங்கிற்கும் மனிதனுக்கும் இடையிலுள்ள இணைப்புச் சங்கிலியாக விளங்கினான் என விளக்குகிறாா"[13] ஏ.ஐ. ஓபரின். இத்தகைய பரிணாம வளர்ச்சியை விளக்கியதில் 'சார்லஸ் டார்வின்' எனும் அறிவியலாளா் முதன்மையிடம் பெறுகிறார். இவரது பரிணாம வளர்ச்சிக்கொள்கையை அறிவியலாளர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். இவரே முதன்முதலில் மனிதன் குரங்களிருந்து தோன்றினான் என்பதை விளக்கினார். டார்வினது கொள்கையை நா. வானமாமலை அவர்கள் பின்வருமாறு விளக்கியுள்ளார். "நீர்ப் பாசியிலிருந்து, புழு பூச்சி முதலிய ஜீவ ராசிகள் அனைத்தும் பரிணாம நியதிப்படி தோன்றி இறுதியில் குரங்கு இனம் தோன்றியது. அந்தக் குரங்கின் மூதாதையான ஒரு பிரிவின் காலக்கிராம வளர்ச்சிதான் மனிதன்."[14] இன்றுவரை டார்வினது கொள்கையை அறிவியலாளர்கள் போற்றி வருகின்றனர். உயிரினங்களின் பரிணாம வளர்ச்சி நிலையை முனைவா் மகிழேந்தி பின்வரும் விளக்கப்படம் மூலம் விளக்கியுள்ளார்[15].

<u>விலங்கின வளர்ச்சி நிலை</u>

ஒரு செல் உயிரி
↓
மெல்லுடலிகள்
↓
குழியுடலிகள்
↓
மீன்கள்
↓
இருவாழ்விகள்
↓
ஊர்வன
↓
பறவைகள்
↓
பாலூட்டிகள்

<u>தாவரவின வளர்ச்சி நிலை</u>

ஒரு செல் உயிரி
↓
பாசியினங்கள்
↓
வேரில்லாத் தாவரங்கள்
↓
வேருள்ள தாவரங்கள்
↓
பூவாத் தாவரங்கள்
↓
பூக்கும் தாவரங்கள்

பூமியை அனைத்து வகையிலும் ஆளும் தன்மையுடன் விளங்கிவரும் மனித இனத்திற்கு முன்பே மனிதர்களுக்கு மூதாதையர்களாகவும் பூமி மீது உரிமையுடையவைகளாகவும் விளங்கி வருவன எவை என்று பார்த்தால் ஆல்கே, அமீபா, பாக்டீரியா விலங்கினங்கள் என மனிதன் ஒழிந்த பிற உயிரினங்களே ஆகும்.

இயற்கைக்கு அனைத்து உயிரினங்களும் சம மதிப்புடையவை. இயற்கைக்கு இது கீழான உயிர், இது மேலான உயிர் என்ற பாகுபாடு கிடையாது. அனைத்துமே இப்பூமியின் மிக இன்றியமையாக் கருப்பொருள்களே. கருப்பொருள்கள் யாவும் தத்தமது பங்கான செயல்பாட்டை இயற்கைக்கு ஆற்றி வருகின்றன. அவ்வகையில் இயற்கையின் கருப்பொருள்களுள் அறிவுச்ச நிலைக்கருப்பொருளான மனிதனும் தனது பங்கை ஆற்றிவருகின்றான்.

தொடக்கால மனிதன் தான் வாழ்ந்துவரும் நிலத்துடனும், தனது சூழலில் விளங்கிவரும் இயற்கையுடனும் நெருங்கிய தொடர்புகொண்டிருந்தான். இத்தொடர்பினை மனிதன் தனது செயல்பாடுகளில் பல வகையில் வெளிப்படுத்தியுள்ளான். தனது சடங்குகள், இலக்கியங்கள், பிற கலைவடிவங்கள் என பல வகைகளில் அவன் வெளிப்படுத்தியுள்ளான். இதில் தமிழ் இலக்கியங்கள் சிறப்பிடம் பெறுகின்றன. தமிழ்ப் புலவர்கள் இயற்கையுடன் கொண்டிருந்த உறவு அவர்கள் பாடிய தன்னுனர்ச்சிப் பாடல்களிலும் இயற்கையையே பெரும்பான்மையும் பாடியுள்ளமையே இதற்குச் சான்று. மனிதனும் இயற்கையும், பிற உயிரினங்களும் ஒன்றுக்கொன்று பிரிக்கவியலாதவை என்பதை விளக்குவதே தொல்காப்பியரின் கருப்பொருள் சிந்தனையாகும்.

**நிலமும் இலக்கியப் பதிவுகளும்**

நிலம் என்பது உயிரின வாழ்க்கைக்கு அடிப்படையாகும். நிலமும் அதனையடுத்து காலமும் உயிரின வாழ்க்கைக்கு ஆதாரமாக விளங்குகின்றன. உயிருள்ளன, உயிரற்றன என அனைத்திற்கும் அடிப்படையாதாரம் நிலம். அதனாலேயே நிலத்தை முதலில் வைத்து காலத்தை இரண்டாவதாக வைத்து ‘‘முதற்பொருள்’’ எனச் சுட்டினார் தொல்காப்பியர்.

‘‘எல்லா உயிரினங்களுக்கும் நிலைத்த தாய்மடி
நிலம் அல்லவா? அனைத்துயிர்க்கும் முன்தோன்றிய
மூத்த பொருளும் நிலம் அல்லவா?’’[16]

எனும் சிற்பி பாலசுப்பிரமணியத்தின் கேள்வி இங்கு நோக்கத்தக்கது.

தொல்காப்பியரின் இவ்வகைப்பாட்டிற்கு வேராக அமைந்தது பழந்தமிழரின் இயற்கை பற்றிய அறிவாகும். பழந்தமிழரின் இயற்கை அறிவும் அது பற்றிய அவர்களது இலக்கியப் பதிவுகளுமே தொல்காப்பியரை முதற்பொருளெனும் இலக்கணம் வகுக்கச் செய்தது.

பழந்தமிழர், பழந்தமிழ் நிலம், பழந்தமிழ் நிலத்து இயற்கை இவையாவும் ஒன்றுக்கொன்று பின்னிப்பிணைந்திருந்தமையாலேயே தமிழ்நிலத்துத் தோன்றிய பழமையான இலக்கியங்களில் இயற்கையின் கூறுகள் நுட்பமாகப் பதிவு

செய்யப்பட்டுள்ளன. அவ்வாறு புலவர்களால் பதிவு செய்யப்பட்டனயாவும் மக்களாலும் அறியமுடிந்தனவாக அமைந்துள்ளன. ‘‘இயற்கையுடன் அடிக்கடி தொடர்பு கொள்ளும் மக்களுக்கு மட்டுமே இயற்கைமீது நேசத்தைப் பிறப்பிக்க முடியும். இயற்கையைப் பாராட்டுவதிலும், அதன்மீது நேசம் கொள்வதிலும் மக்களும் கவிஞர்களும் ஒருவர்மீது ஒருவர் செல்வாக்குச் செலுத்தியுள்ளனர்’’[17] என்கிறார் தனிநாயக அடிகள். மக்களுக்கும் இயற்கைக்கும் உண்டான உறவு அவர்களை இயற்கை பற்றி நுட்பமாக அறியச் செய்திருந்ததுடன் ‘இயற்கையை நுட்பமாகப் பதிவுசெய்தல்’ என்பது இலக்கிய விதியாகவே கடைபிடிக்கப்பட்டிருந்த போக்கை சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. இதன் காரணமாக மனித உணர்வினைப் பதிவு செய்யும் தன்னுணர்ச்சிப் பாடல்களில் கூட இயற்கைக்குப் பெருமிடம் ஒதுக்கப்பட்டிருப்பதை உணரலாம். ‘‘சங்ககாலத்தில் கவிஞருக்கு நுட்பமான, துல்லியமான இயற்கை பற்றிய அறிவு தேவையென விதிக்கப்பட்டிருந்ததால், அக்காலக் கவிதை இயற்கைக்கு மிக விசுவாசமாக இருப்பதைக் காண்கிறோம்’’[18] எனும் கூற்றால் இதை உணரலாம். மேலும் ‘‘இந்தக் கவிதைகளில் தீவிர மனித உணர்வுகள் ஒருசில அடிகளிலேயே குறிப்பாக உணர்த்தப்பட்டாலும், இந்த உணர்வுகளுக்குப் பொருத்தமான நிலத் தோற்றங்களும் இயற்கைச் சூழல்களுமே விரிவாகப் படைக்கப்படுகின்றன’’[19] எனும் கூற்றும் இதை உறுதிசெய்யும். பண்டைத் தமிழ் இலக்கியங்களில் நிலம், மனிதன், பிற உயிரினங்கள் ஆகிய கூறுகள் அதிகம் இடம் பெற்றதற்கான காரணம், நிலமும், நிலத்தின் சாயலான இயற்கையும் மனித வாழ்வில் நீங்காத இடம்பிடித்திருந்தமையைக் காட்டுகின்றது. நிலமும் நிலக்கூறுகளுமே மனித வாழ்வியலைத் தீர்மானிப்பவையாக இருந்தன. இதை ‘‘சங்கப் பாடல்கள் மொழியின் வழியே இயற்கைச் சூழலில் வாழ்ந்து மக்களை வெளியுடனும் காலத்துடனும் ஒருங்கிணைக்கும் பணியை நுட்பமாகச் செய்துள்ளது… பண்டைத் தமிழரின் வாழ்க்கை இயற்கையோடு இயைந்ததாக அமைந்திருந்தது’’[20] எனும் கூற்று உறுதிசெய்யும்.

**திணையும் நிலப்பகுப்பும்**

இயற்கையுடன் ஒன்றிக் கலந்திருந்த மனித வாழ்க்கை, இயற்கையை இலக்கியப்பதிவாக மட்டுமல்லாது, அதனடிப்படையிலான சிறப்புமிக்க திணையிலக்கியம் உருவாகவும் காரணமாக அமைந்தது. இயற்கையின் அங்கமான மனிதன் தனது சூழலின் அனைத்துப் பொருட்கள், அவற்றிற்கிடையே நிலவும் உறவுமுறை, தனது சூழலில் அவற்றின் தாக்கம் ஆகியவற்றை அறிந்திருந்ததே திணையிலக்கியத்தின் வெளிப்பாட்டிற்கு அடித்தளம் எனலாம்.

திணை இலக்கியங்கள் மனித உணர்வு மற்றும் இயற்கையின் கூட்டு வெளிப்பாடாகும். இத்திணை இலக்கியங்கள் மனிதனால் படைக்கப்பட்டு மனித வாழ்வின் ஒழுகலாறுகளைக் காட்டுகின்றன. மனித ஒழுகலாறுகள் இயற்கையைப் பின்னணியாகக் கொண்டு அதன் மூலமே விளக்கம் பெறுகின்றன. இதனாலேயே திணை இலக்கியங்களில் இயற்கை மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ளது. இது மரபாகவே வளர்ந்து வந்துள்ளது.

“சங்க அகத்திணைப் பாடல்களில் இயற்கை பெரிய அளவில் ஊடாடியுள்ளது. சங்கத் திணை மரபு என்பது முழுக்க இயற்கையுடன் ஒருங்கிணைந்தது ஆகும். பரந்துபட்ட நிலத்தின்மீதும், நிலத்திற்கே உரிய இயற்கைப் பொருட்கள் மீதும் மனித உணர்ச்சிகளை ஏற்றி, நிலத்தை மனிதமயமாக்கியது”[21] எனும் கூற்று இதனை மெய்ப்பிக்கும்.

திணை எனும் சொல் பல பொருட்களைக் கொண்டது. இது நிலத்தைச் சுட்டும் அதே வேளையில் ஒழுக்கத்தையும் குறிக்கும். திணை குறித்த ஆய்வும் தொடர்ந்து நடந்துகொண்டே தான் இருக்கின்றது. “திணை எனும் சொல்லிற்குச் சங்க இலக்கியத் திறனாய்வாளர்கள் பலரும் பற்பல விளக்கங்களைத் தந்துள்ளனர். திணைக்கு விளக்கம் தரவந்த கார்த்திகேசு சிவத்தம்பி “திணை என்பது அடிப்படையில் நிலம், நிலத்துள் வாழும் மக்கள் குழுமம் அவர்களது ஒழுக்கம் என்ற கருத்தினையே தரும். திணை என்பது பொதுப்படையாக ஒழுகலாற்றைக் குறிக்கின்ற ஒரு சொல்லாக இருக்கிறது”[22] என்கிறார். ‘திணை’ என்பது நிலத்தை குறிக்கும். “மண் திணிந்த நிலன்-திணையெனப்பட்டது”[23] என்கிறார் தமிழண்ணல். “ ‘திணை’ என்பது முதற்பொருளான நிலத்தையும் மக்களின் நடவடிக்கைகளையும் குறிக்கும்”[24] என்கிறார் டாக்டர். எஸ். ஸ்ரீகுமார். “திணை என்னும் பெயர் முதலில் நிலத்தைக் குறிக்கப் பயன்பட்டிருக்கக் கூடும். பிறகு அதன்பொருள் குடி, ஒழுக்கம், நிலத்தையே பெரிதும் இடமாகக் கொண்டு வழங்கும் செய்யுள் ஆகியவற்றைக் குறிக்க மாறியிருக்கலாம்”[25] என விளக்கமளிக்கிறார் தமிழண்ணல். வெ.மு. ஷாஜகான்கனி திணை என்பது ‘நாகரிகத்தைக் குறிக்கிறது’ எனத் துணிகிறார். மேலும் அவர் திணை என்பது முதலில் நிலத்தைக் குறித்து, பின் அந்நில மக்களின் ஒழுகலாற்றைக் குறித்தது எனவும் சுட்டிச் செல்கின்றார்.[26] சங்க இலக்கியத்தில் பயின்றுவந்துள்ள இடங்களுக்கேற்ப திணை எனும் சொல் நிலம், குடி, திண்ணை, ஒழுக்கம், இல், இருப்பிடம், பூமி, குலம் என்ற பொருளில் வந்துள்ளதை உரையாசிரியர்களின் வழி அறியமுடிகின்றது. பல்வேறு அகராதிகள் மற்றும் நிகண்டுகளிலும் மேற்கூறிய பொருள்களே பயின்று வந்துள்ளன. மேற்கண்ட திறனாய்வாளர்களின் கூற்று, சங்க இலக்கியங்கள், அகராதி, நிகண்டுகள் ஆகியவற்றின் வழி திணை என்பது நிலம், நிலத்தில் வாழ்ந்த மக்களின் ஒழுகலாற்றைக் குறித்தமைவதை அறியமுடிகின்றது. பல அறிஞர்களின் கருத்தின் அடிப்படையில் ‘நிலம்’ எனும் நிலையிலிருந்து, நிலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்வியலுக்குத் திணை என்ற சொல் இடம் பெயர்ந்துள்ளமையை அறியமுடிகின்றது.

திணை என்பதற்கு அடிப்படை ‘நிலம்’ என்பது மேற்கூறிய சான்றுகளின் வழி அறியமுடிகின்றது. உயிரினங்களின் வாழ்விற்கு அடிப்படையான நிலமே திணை இலக்கியத்திற்கும் அடிப்படையானது. இது மனிதனுக்கும் நிலத்திற்கும் உள்ள உறவின் வெளிப்பாடாகும். இங்கு நிலம் என்பதை மண், அதன்கண் உள்ள உயிரி, உயிரல் பொருட்கள் அனைத்தின் கூட்டாக அமைந்த ஒற்றைப் பொருளாகக் கொள்ள வேண்டும்.

“திணை இலக்கியமாவது நிலமும், பொழுதும் இயற்கையைப் பின்னணியாகக் கொண்ட மனித வாழ்வினைப் புனைவதாகும். நிலச்சாயல், உயிரினச்சாயல், மனிதச் சாயல் போன்றவை ஓவியமாய் படிந்து கிடக்கும்”[27] எனும் டாக்டர் எஸ். ஸ்ரீகுமாரின் கருத்து இங்கு நோக்கத்தக்கது. திணை இலக்கியம் மனிதனின் படைப்பாக அவனைப் பற்றியதாக அமைந்த போதிலும் அதில் நிலச்சாயலும், பிற உயிரினச் சாயலும் இடம்பெற்றதற்கான காரணம் மனிதன் நிலத்தையும், நிலத்தில் நிலவும் இயற்கைச் சூழலையும் சார்ந்து வாழும் விலங்கினமாக விளங்குவதேயாகும். இவையாவும் திணை இலக்கியத்தில் அமையப்பெற்ற நிலப்பகுப்பின் வாயிலாக வெளிப்படுகின்றன.

‘நிலப்பகுப்பு’ என்பது தமிழர்களின் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் நிலப்பாகுபாட்டைக் குறிக்கின்றது. நிலத்தைத் தமிழன் எவ்வித அறிவும் இன்றி பகுத்துவிடவில்லை. தமிழ் நிலத்தைப் பண்டைத் தமிழன் நன்கு ஆய்ந்தறிந்திருந்தான். அவனது இயற்கையுடன் இயைந்த வாழ்வு, நெருங்கிய தொடர்பு அவனுக்கு நிலப்பகுப்பிற்கான அறிவினை வழங்கின. இயற்கையைப் புரிந்துகொண்ட மனிதசக்தியின் வெளிப்பாடுதான் ஐந்நிலப்பகுப்பு.

குரங்கிலிருந்து தோன்றிய மனிதன் காடு மேடுடென்று சுற்றித் திரிந்து, சமூகமாக வாழத்தலைப்பட்டு வாழத்தொடங்கி, சிந்திக்கத் தொடங்கி, பரந்து விரிந்து கிடக்கும் நிலத்தைப் பயன்படுத்தும் அறிவுபெற்று, நிலத்தை உற்றுநோக்கித் தெளிந்தே நிலப்பகுப்பினைச் செய்திருப்பான் என்று எண்ணத் தோன்றுகின்றது. பரந்துபட்ட நிலத்தை மனிதன் பகுத்ததுடன் தனது படைப்பிலும் அதனை வெளிப்படுத்தினான். இந்நிலப்பகுப்பு மனிதனது படைப்பில் இடம்பெறக் காரணம் அது அவனது வாழ்விடமாக, வாழ்வியலாக அமைந்திருந்ததாகும். பண்டைத் தமிழர்களின் வாழ்வியற் கூறும், நிலவியல் கூறும் ஒன்றுடன் ஒன்று பின்னிப்பிணைந்து ஒன்றியைந்தியங்கியதைத் திணை இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. தமிழ் மக்களின் நிலம் பற்றிய தேடல், புரிதல், அறிவு ஆகியவை பகுக்கப்பட்ட நிலத்தின் சாயலாகத் திணை இலக்கியத்தில் காட்சி தருகின்றன. இதனை “சங்கப் பாடல்களில் நுட்பமாக வினையாற்றுவது இயற்கை. அதேவேளையில் இயற்கை பற்றிய புரிதல் முயற்சி தொடர்ந்து நடைபெறுவதனால், மனிதர்களுடைய தேடுதல் இன்றளவும் தொடர்கின்றது. இயற்கை மீது ஆளுகை செலுத்த முயன்ற மனித ஆளுமையின் விளைவுதான் நிலம் பற்றிய பிரக்ஞை. கண்ணெதிரே விரிந்து பரந்திருக்கும் நிலம், எல்லையற்றுத் திசைகளெங்கும் விரிந்து கொண்டே போவது பண்டைய மனிதர்களுக்கு அச்சத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும். இயற்கையைத் தொகுத்து, வகுத்து அடையாளப்படுத்த முயலும்போது, நிலம் முதன்மையாகக் கொள்ளப்பட்டது. மலை எனில் குறிஞ்சி, காடு எனில் முல்லை, வயல் எனில் மருதம், கடல் எனில் நெய்தல், மலையும் காடும் திரிந்த வறண்ட பகுதி பாலை எனவும் பெயரிட்டுக் குறிக்கும்போது, பரந்த நிலவெளியானது, பண்டைத் தமிழர்களின் புரிதலுக்குள் அடங்கியது”[28] எனும் ந. முருகேச பாண்டியனின் கூற்று இதை மெய்ப்பிக்கும்.

நிலத்தைப் பகுத்தறிந்த மனிதன் அந்நிலத்தில் உள்ள பொருட்களனைத்தையும் பகுத்தறிந்திருந்தான். நிலத்தின் தன்மைக்கேற்ப நிலத்தினை வேறுபடுத்தி, பெயர் சுட்டி வழங்கிய தமிழ்மக்கள், நிலத்தில் காணப்படும் உயிரினங்களின் தனித்தன்மையை உணர்ந்து அவற்றை அவை வாழும் நிலத்தின் அடிப்படையில் வகைப்படுத்தியுள்ளனர். அவ்வகைப்பாடு கருப்பொருள் வரிசை என்று சுட்டப்படுகின்றது. இக்கருப்பொருள் வரிசை ஒரு குறிப்பிட்ட சூழல் மண்டலத்தில் காணப்படும் அனைத்துவகை உயிரினங்களையும் சுட்டுவதாக அமைந்துள்ளது.

**கருப்பொருள்**

பல்வேறுபட்ட சூழலில் வாழ்ந்த தமிழ் மக்கள் தாம் வாழ்ந்த இயற்கைச் சூழலின் இயக்கத்தையும், அதன் உட்பொருட்களையும் உணர்ந்திருந்ததின் வெளிப்பாடே ஒவ்வொரு நிலத்திற்கும் உண்டான கருப்பொருள் வரிசையாக வெளிப்பட்டுள்ளது. கருப்பொருள் வரிசையினைக் காண்பதற்கு முன் கருப்பொருள் எனும் சொல்பற்றிய விளக்கத்தினை அறிந்து கொள்வது தேவையாகிறது.

‘கருப்பொருள்’ என்பதை ‘ஒரு இயற்கைச் சூழலில் அமைந்துள்ள பொருட்கள்’ எனச் விரிக்கலாம். ‘கருப்பொருள்’ என்பதற்கு இலக்கண ஆசிரியர்களும், உரையாசிரியர்களும் உருவாக்கியுள்ள கருத்தாக்கம் இவ்வாறுதான் பொருள்கொள்ள வைக்கின்றது. இதனடிப்படையில் பார்க்கும் பொழுது முன்னர் சுட்டியவாறு, ‘உள்ளிருக்கும்பொருள்’, ‘காணப்படும் பொருள்’, ‘உள்ளடங்கியிருக்கும் பொருள்’ எனும் விளக்கங்கள் சரியானதாகவே அமைகின்றது. இவையாவும் ‘கருப்பொருள்’ என்னும் கலைச்சொல்லிற்கான பொருண்மையாக அமைகின்றன எனினும் ‘கருப்பொருள்’ எனும் சொல்லினை ஆய்வதும் அவசியம். கருப்பொருள் எனும் கலைச்சொல் வடிவத்தைப் பொருண்மை அடிப்படையில் ஆய்வதே சிறந்தது. அதுவே சரியான விளக்கத்தினை அளிக்கவல்லது.

கருப்பொருள் = கரு + பொருள். கருவாகிய பொருள், கருக்கொண்ட பொருள் என விரிக்கலாம். ‘கருப்பொருள்’ எனும் கலைச்சொல் நிலத்துடன் தொடர்பு கொண்டது. நிலத்தில் உள்ள பொருட்களைக் குறிப்பது என்பதை இங்கு எண்ணவேண்டும். அதன் அடிப்படையில் நிலத்தில் கருவாகிய பொருள், நிலத்தில் கருக்கொண்ட பொருள் என விரிக்கலாம். ஒரு நிலத்தில் கருக்கொண்டு அல்லது ஒரு நிலத்தில் கருவாகி வெளிப்பட்ட பொருள் என இதனை மேலும் விரிக்கலாம். இவ்வாறு கருப்பொருள் எனும் சொல்லினை விரிக்கும் பொழுது ஒரு நிலத்தில் தோன்றிக் காணப்படும்பொருள் எனும் விளக்கத்தினைப் பெறமுடிகின்றது.

‘கரு’ என்பதற்குக் கழகத்தமிழ் அகராதி தரும் சொற்பொருள் விளக்கம் இங்கு நோக்கத்தக்கது. ‘‘கரு-**சினை**; பீள்; சூல்; வயா; **கருப்பம்**; கறுப்பு; குப்பைமேடு; **முட்டைக்கரு**; **பிறப்பு**; குழந்தை; குட்டி; அச்சுக்கரு; நிமித்தகாரணம்; **உட்பொருள்**;

அடிப்படை; இயற்கையறிவு; கருநிறம்; சுக்கிலம்; **பிறப்பிடம்**; பிறவி; **வித்தின் கரு**; கருவம்; கருத்து; புத்தி; பரமாணுசரீரம்; அட்டகருமக்கரு; ஆயுதத்தின் பல்; ஓரூர்; கம்மக்கரு; **கருப்பொருள்**; காரணம்; நடு; நிறம்; பிள்ளை; பெருமை; முட்டை; மேடு; மேன்மை; யோசனை; கருமை''[29] என்ற பொருள்களை அது சுட்டுகின்றது. இவற்றுள் சினை, சூல், கருப்பம், முட்டைக்கரு, பிறப்பு, பிறப்பிடம், வித்தின் கரு ஆகிய பொருண்மைகள் மேற்சொன்ன கருப்பொருள் வரியுடன் ஒத்தமைவதை உணரலாம். 'உட்பொருள்' என்பது முன்னரே விளக்கப்பட்டதையும் உணரலாம்.

'பொருள்' என்னும் சொல்லிற்குக் கழகத் தமிழ் அகராதி ''அருத்தாபத்தி; உடைமை; உண்மை; குணம்; சொற்பொருள்; தலைமை; பணம்; தத்துவம்; கடவுள்; வீடுபேறு; நூற்பயன்; நான்கில் ஒன்று; பலபண்டம்; பிள்ளை; பொன்; உண்மைக் கருத்து; காரியம்; மெய்மை; அறிவு; கொள்கை; பயன்; தந்திரம்; உறுதி; அகமும் புறமுமாகிய திணைப்பொருள்; பொருள்நூல்; உபமேயம்; காரியம்; தருமம்; தன்மை''[30] எனப் பொருளுரைக்கின்றது. இதில் சுட்டப்பட்டுள்ள 'பலபண்டம்' எனும் சொல் கருப்பொருள் விளக்கத்திற்குத் தேவையானது. பல பண்டம் என்பதில் பண்டம் எனும் சொல் பொருட்களைக் குறிப்பதாகும். பல பண்டம் என்பதைப் பல்வகைப் பண்டம் என விரிக்கலாம்.

கழகத்தமிழ் அகராதியின் வழி 'கரு' என்ற சொல்லிற்குப் பெறப்பட்ட சினை, சூல், கருப்பம், பிறப்பிடம், என்ற சொற்களையும், 'பொருள்' எனும் சொல்லிற்குப் பெறப்பட்ட 'பலபண்டம்' எனும் சொல்லையும் இணைத்துப் பார்க்கும்பொழுது கருவாகிய பல்வகைப் பொருட்கள் என்றும் பிறப்பிடத்தில் உள்ள பல்வகைப் பொருட்கள் எனவும் பொருள் கொள்ளலாம். இதனடிப்படையில் நிலத்தில் அடங்கியுள்ள உட்பொருட்களே கருப்பொருட்கள் என்பது தெளிவாகின்றது.

கருப்பொருள் என்பதற்கு விளக்கம் கூறவந்த தமிழ் இலக்கணப் பேரகராதி ''முதற்பொருளாகிய நிலத்தையும் காலத்தையும் ஒட்டி முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை என்னும் ஐவகை நிலத்தும் தோன்றும் பொருள்''[31] என விளக்கியுள்ளது. யாழ்ப்பாண அகராதி ''அவ்வவ் நிலத்திலுற்பத்திப்பொருள்''[32] எனக் கூறுகின்றது. இவ்விரு விளக்கங்களும் 'கருப்பொருள் என்பது நிலத்தில் தோன்றும் பொருட்கள்' என்பதை விளக்குகின்றன.

ந. சுப்பு ரெட்டியர் ''முதற்பொருளிலிருந்து தோன்றுவது கருப்பொருள். அ∴து இடத்திலும் காலத்திலும் தோன்றும்''[33] எனச் சுட்டுகின்றார். ''கருப்பொருள் என்பது முதற்பொருளான நிலத்தையும், பொழுதையும் அடிப்படையாகக் கொண்டு பிறக்கும் பொருள்களாகும்''[34] எனக் கூறுகின்றார் அறிஞர் எல்.கே. அக்னிபுத்ரன். கருப்பொருட்களை ''முதற்பொருட்கள் தோன்றும் பொருள்கள்''[35] என்கிறார் இளம்பூரணர். ''கருப்பொருள் என்பது

முதற்பொருள் வழியாகக் கருக்கொண்ட பொருள்''[36] என்கிறார் புலவர் இரா. இளங்குமரனார்.

மேற்கண்ட அகராதிகளின் வழி பெறப்பட்ட தகவல்களானும், அறிஞர்களின் கருத்துக்களானும் கருப்பொருள் என்பது முதற்பொருளில் முதன்மையானதான நிலத்தின்கண், காலச்சூழலின் துணையுடன் தோன்றும், அமைந்துள்ள பொருட்களாகும் என்பது தெளிவாகின்றது. இலக்கண நூல்கள் இதன் அடிப்படையிலேயே கருப்பொருள் வரிசையினைப் பகுத்துள்ளன.

**கருப்பொருள் வரிசை**

நிலத்தின்கண் அமையப்பெற்ற கருப்பொருள் வகைகளை இன்னின்ன என்று வரிசைப்படுத்தப்பட்ட நிலையில் நாம் அறியும்படிக்கு கிடைக்கும் முதல்நூல் தொல்காப்பியமாகும். தொல்காப்பியருக்கு முன்பே கருப்பொருள் எனும் கருத்தாக்கம் உருப்பெற்று வளர்ந்திருந்த நிலையை தொல்காப்பியரது நூற்பாவே நமக்கு உணர்த்துகின்றது. தொல்காப்பியத்திற்கு முன்பிருந்த நூற்கள் நமக்குக் கிடைக்காததால் தொல்காப்பியமே கருப்பொருள் வரிசையைச் சுட்டும் முதல் நூலாக விளங்குகின்றது.

தொல்காப்பியர் முடிந்த முடிபாக கருப்பொருள் என்பது இன்னின்ன பொருட்கள் என்று வரையறை செய்யவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இதனை,

''தெய்வம் உணாவே மா மரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப''[37]

எனும் தொல்காப்பிய நூற்பாவான் அறியலாம். தொல்காப்பியரின் இந்நூற்பா நமக்கு உணர்த்துவது என்னையெனின் இவை சில முதன்மையான கருப்பொருள் வரிசை என்பதாம். மேலும் அவற்றுடன் பிறவும் கருப்பொருட்களாக வரத் தகுதியுடையவை என்கிறார். அவர் சுட்டும் சில முதன்மைக் கருப்பொருட்களை வரிசைப்படுத்துவோமெனின் 1. தெய்வம், 2. உணவு, 3. விலங்கு, 4. மரம், 5. பறவை, 6.பறை, 7. தொழில், 8. யாழின் பகுதி எனும் பண் எனும் எட்டுக் கருப்பொருட்களாக வரிசைப்படுத்தலாம். மேலும் இவ்வெட்டனுடன் மட்டும் கருப்பொருள் வரிசை நின்று விடுவதன்று. தொல்காப்பியரின் கருத்துப்படி கருப்பொருள் வரிசையானது நீண்டுகொண்டே செல்வது. அதனாலேயே 'அவ்வகை பிறவும்' எனத் தொல்காப்பியர் சுட்டியுள்ளார். இதற்கு விளக்கம் கூறும் இளம்பூரணர் ''அத் தன்மைய பிறவும் கருப்பொருள் என்று கூறுப''[38] என்கிறார். இதையே நச்சினார்க்கினியர் ''அவை போல்வன பிறவுங் கருவென்று கூறுவர் ஆசிரியர்''[39] என விளக்குகின்றார். தமிழண்ணல் ''இவையும் இவை போல்வன பிறவும் ஒரு நிலத்திற்குரிய கருப்பொருட்கள் ஆகும்''[40] என்கிறார். இவ்வுரையாசிரியர்கள் 'அவ்வகை பிறவும்' என்பதற்குக் கொடுக்கும் விளக்கத்தின் வழி கருப்பொருள் வரிசை 'நீண்டுகொண்டு செல்வது' என்பது உறுதிப்படுகின்றது. மேலும் தொல்காப்பியர் கருப்பொருட்களின்

வகைகளையே சுட்டுகின்றார். அதாவது உணவு வகை, மாவகை, மரவகை எனப் பல பொருட்களின் வகையையே சுட்டிச் செல்கிறார். இது உரையாசிரியர்களின் உரையால் வெளிப்படுகின்றது.

தொல்காப்பியக் கருப்பொருள் நூற்பாவிற்கு உரைவகுத்த இளம்பூரணர், தொல்காப்பியர் சுட்டியுள்ள எட்டுக் கருப்பொருள்களுடன் ''பிறவும்'' என்பதன் காரணமாக பூ, நீர் ஆகிய இருகருப்பொருட்களைச் சேர்த்து பத்துக் கருப்பொருட்களை வரிசைப்படுத்தியுள்ளார். மேலும் அவர் அவற்றுடன் ''பிறவும் இந்நிகரன கொள்க... பிறவும் அன்ன''[41] என கருப்பொருட்கள் மேலும் நீட்சிக்குரியன என்பதைச் சுட்டுகின்றார்.

நச்சினார்க்கினியர் தொல்காப்பியர் சுட்டும் கருப்பொருள்களுடன் பூ, நீர், ஊர் என மூன்று கருப்பொருள்களைச் சேர்ந்து பதினொரு கருப்பொருள்களை வரிசைப்படுத்துகிறார். மேலும் அவர் மக்கள் பெயரையும், தலைமக்கள் பெயரையும் கொள்ள வேண்டும் என்கிறார்.[42] அவ்வகையில் அவர் பதின்மூன்று கருப்பொருள்களைச் சுட்டுகின்றார்.

தமிழண்ணல், தொல்காப்பியர் சுட்டியுள்ள எட்டுக் கருப்பொருட்களை விளக்கி ''பிற - பூ, நீர்நிலை, ஊர்ப்பெயர் எனப் பலவாறு விரிப்பர்''[43] என விளக்குகிறார். இவர் 'பிற' எனும் வரிசையில் மேலும் மூன்று பொருட்களைச் சேர்த்துள்ளார்.

இறையனார் அகப்பொருள் உரையில் நக்கீரர் தொல்காப்பியரின் எட்டுக் கருப்பொருளுடன், பிறவுமென்பதின் கீழ் தலைமகன், தலைமகள், நீர், ஊர், பூ, மக்கள் எனும் ஆறு பொருட்களைச் சேர்த்துச் சுட்டுகிறார்.[44] இவ்வாறு நக்கீரர் குறிப்பிடும் கருப்பொருட்களுடன் தொல்காப்பியர் குறிப்பிடும் கருப்பொருட்களையும் சேர்த்தால் பதினான்கு என கருப்பொருள் வரிசை நீள்கின்றது.

தொல்காப்பியத்திற்குப் பின்பு தோன்றிய பல அகப்பொருள் இலக்கண நூல்களும் கருப்பொருள் பற்றி விளக்கியுள்ளன. அவையும் கருப்பொருள் எண்ணிக்கையில் மாறுபடுகின்றன. தமிழ்நெறி விளக்கம் எனும் நூல்,

''தெய்வ மானிடஞ் செய்தி யுணவோ
டெய்திய விசைவிலங் கினையன பிறவும்
பொய்தீர் கருவெனப் புகன்றனர் கொளலே''[45]

எனக் கருப்பொருட்களை வரிசைப்படுத்தியுள்ளது. தெய்வம், மக்கள், தொழில், உணவு, இசை, வலங்கு என ஆறு கருப்பொருட்களை வரிசைப்படுத்தி இதற்கு இணையான பிறவும் கருப்பொருளாக வரும் என விளக்கியுள்ளது.

புத்தமித்திரனார் இயற்றிய வீரசோழியம் கருப்பொருள்கள் இவ்வளவு என வரையறுத்துச் சொல்லவில்லை. தெய்வம், மக்கள், தொழில், உணவு, நீர், விலங்கு, பண், பறவை, பூ என நிலங்களுக்குரிய கருப்பொருள்களை ஐந்து நூற்பாக்களில் சுட்டியுள்ளது.[46] இவர் ஒன்பது கருப்பொருள் வகையைச் சுட்டிச்செல்கிறார்.

அகப்பொருள் விளக்கத்துள் நாற்கவிராசநம்பி கருப்பொருள்கள் இத்துணை என வரையறுத்துச் சொல்கிறார். அவர் கருப்பொருட்களின் எண்ணிக்கையைப் பதினான்கு என அறுதியிட்டுச் சொல்கிறார். இதனை,

''ஆரணங் குயர்ந்தோ ரல்லோர் புள்விலங்
கூர்நீர் பூமர முணாப்பறை யாழ்பண்
தொழிலெனக் கருவீ ரெழுவகைத் தாகும்''[47]

எனும் நூற்பாவான் அறியலாம். தெய்வம், உயர்ந்தோர், அல்லோர், புள், விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணா, பறை, யாழ், பண், தொழில் எனும் பதினான்கு கருப்பொருட்களை அவர் வரிசைப்படுத்தியுள்ளார்.

மாறன் அகப்பொருள் இயற்றிய திருக்குருகைப்பெருமாள் கவிராயரும் நம்பியாசிரியரைப் போன்றே கருப்பொருட்களைப் பதினான்கு என வரையறுத்துள்ளார்.

''அணங்குயர்ந் தவரிழந் தவர்புள் விலங்கூர்
பூமர நீர்துப்பு வீயாழ் பண்பறை
யேமுறு செய்தியொ டீரே ழென்ப''[48]

எனும் நூற்பாவான் இதை அறியலாம். தெய்வம், உயர்ந்தோர், இழிந்தவர், புள், விலங்கு, ஊர், பூ, மரம், நீர், துப்பு, யாழ், பண், பறை, செய்தி எனும் பதினான்கைச் சுட்டியுள்ளார்.

இலக்கண விளக்கம் எனும் நூலில் வைத்தியநாததேசிகர், நம்பியகப்பொருள் மற்றும் மாறனகப்பொருள் போன்று கருப்பொருள் பதினான்கு என எண்ணிக்கை சுட்டி மேற்கூறிய இருவர் கூறும் கருப்பொருள் வரிசையையே கூறியுள்ளார்.[49] தொன்னூல் விளக்கத்தில் வீரமாமுனிவரும் கருப்பொருள்களை மேற்கூறிய வரிசைப்படி பதினான்கு என்கிறார்.[50] முத்துவீர உபாத்தியாயரால் இயற்றப்பட்ட முத்துவீரியமும் பதினான்கு என எண்ணிக்கை சுட்டிக் கருப்பொருளை வரிசைப்படுத்தியுள்ளது.[51]

சுவாமிக் கவிராயரால் இயற்றப்பட்ட ''சுவாமிநாதம்'' கருப்பொருள் வரிசையை நீட்டித்துரைக்கும் வகையில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இந்நூல் நம்பியகப்பொருள், மாறன் அகப்பொருள், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம் ஆகிய நூற்களைப் போன்று பதினான்கு கருப்பொருள்களைச் சுட்டுவதுடன் பிறவும் கருப்பொருளுள் சேரும் எனச் சுட்டுகின்றது.

''சொற்றதெய்வம் உயர்ந்தோர் அல்லோர் விலங்கூர்நீர்புட்
பகுத்தமரம் பூ உணவு பறை யாழ்பண் தொழிலாம்
பதினான்கும் பிறவுமேகருப் பொருளாக் குகவே''[52]

எனும் நூற்பா இதனை விளக்குகின்றது. 1. தெய்வம், 2. உயர்ந்தோர், 3. அல்லோர், 4. விலங்கு, 5. ஊர், 6. நீர், 7. புள், 8. மரம், 9. பூ, 10. உணவு, 11. பறை, 12. யாழ், 13. பண், 14. தொழில் எனப் பதினான்கும் பிறவும் சேர்ந்தது கருப்பொருளாகும் என்பது இதனால் விளங்குகின்றது.

தொல்காப்பியர் ‘அவ்வகை பிறவும்’ எனச் சுட்டியதை அடிப்படையாகக் கொண்டு சில கருப்பொருட்களை, அதாவது பூ, நீர், ஊர் போன்ற கருப்பொருட்களைப் பிற்கால இலக்கண ஆசிரியர்கள் சேர்த்துக் கருப்பொருள் வரிசையை நீளச் செய்தனர். மேலும் தொல்காப்பியருக்குப் பின் கருப்பொருள் பற்றிப் பேசும் இறையனார் அகப்பொருளுரை, தமிழ்நெறி விளக்கம் ஆகிய நூல்களில் சுட்டப்பட்ட ‘‘மக்கள்’’ எனும் கருப்பொருளை அவற்றிற்குப் பின்னர் தோன்றிய நூற்கள் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என இருவகைக் கருப்பொருட்களாக வகைப்படுத்தியுள்ளன. நம்பியகப்பொருள் தொடங்கியே கருப்பொருட்கள் பதினான்கு என வகைப்படுத்தப்பட்டுள்ளன. முத்துவீரியம், தொன்னூல் விளக்கம் ஆகிய இரு நூற்கள் பிற நூல்களில் இடம் பெறாத ‘‘குடி’’ என்பதைக் கருப்பொருள் வரிசையில் சுட்டியுள்ளன. இவ்விரு நூற்களும் மக்களாகிய ‘தலைவன் தலைவியைப்’ பிரிக்காது ‘செல்வர்’ என ஒரே பொருளாகச் சுட்டியுள்ளதால் அவற்றின் கருப்பொருள்வரிசை பதினான்காகவே உள்ளது. இவற்றில் மக்களைப் பகுத்து இருகூறாக்கி வரிசையைக் கணக்கிட்டால் இவ்விரு நூற்களின் கருப்பொருள் வரிசை எண்ணிக்கை பதினைந்தாக உயரும் என்பது குறிப்பிடத்தக்கது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய சுவாமிநாதம் தனக்கு முன் உள்ள அகப்பொருள் இலக்கண நூல்களில் சுட்டப்பட்டது போல் கருப்பொருள் எண்ணிக்கையைப் பதினான்கு எனச் சுட்டினும் தொல்காப்பியர் ‘‘அவ்வகைப் பிறவும்’’ என்பது போல் இப்பதினான்கினும் கருப்பொருள் வரிசை மிகுந்து செல்லும் என்பதை ‘பதினான்கும் பிறவுமே’ என்ற தொடரால் குறிப்பிடுகிறது.

கருப்பொருள் வரிசை என்பது இலக்கண ஆசிரியர்கள் மற்றும் உரையாசிரியர்களின் வழிநின்று காணும் பொழுது அவை நிலத்தில் உள்ள அனைத்தையும் சுட்டுவதாய் நீண்டு செல்லக் கூடியது என்பது புலனாகின்றது. அவ்வகையில் உரையாசிரியர்கள் கருப்பொருளை விரித்துரைத்துள்ளனர்.

கருப்பொருள் வரிசைக்கு அடுத்ததாக அதன்கண் இடம்பெறும் பொருட்களின் எண்ணிக்கையும் அதாவது தாவரங்களின், விலங்கினங்களின் எண்ணிக்கையும் நீண்டு கொண்டு செல்வதையும் அவை அறுதியிட்டுக் கூறப்படாதனவுமாக அமைவதையும் காணமுடிகின்றது. தொல்காப்பியரைப் பொறுத்தமட்டில் அவர் கருப்பொருட்கள் இன்னின்ன என வகைப்படுத்தனாரே தவிர அவை இன்னின்ன இவ்வளவு எனச் சுட்டவில்லை. தொல்காப்பிய உரைகாரர்களே மா எனின் இன்னின்ன, மரமெனின் இன்னின்ன என விளக்கினர். அவ்வகையில் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் போன்றோர் கருப்பொருளில் சுட்டப்படும் மாவகை இவையிவை மரவகையிவையிவை எனச் சுட்டியுள்ளனர். இவையாவும் இயற்கை அமைப்பால் உண்டான தனித்தனிச் சூழலால் அமையப்பெற்ற நில அமைப்பிற்குண்டான உயிர், உயிரற்ற, உயிர்சார் பொருட்களின் தொகுப்பாகும். இதில் சுட்டப்படும், உணவு, பூ போன்றவை பெரும்பான்மையும் தாவரப்பகுப்பில் அடங்குவன. மீன் போன்ற விலங்கினமும் உணவுப் பகுப்பில் சுட்டப்படுகின்றன. செடி, கொடிகள், புற்பூண்டு

போன்றவற்றை மரம், பூ ஆகிய கருப்பொருள் வரிசையில் அடக்கிக் காணமுடியும். தொல்காப்பிய உரையாசிரியர் இளம்பூரணர் ஒவ்வொரு நிலத்திற்கும் தனித்தனியாகக் கருப்பொருட்களை விளக்கியுள்ளார். முல்லை நிலத்திற்கு விலங்காக மான், முயலைச் சுட்டுகிறார்; குறிஞ்சி நிலத்திற்கு விலங்காக யானை, புலி, பன்றி, கரடி என நான்கு விலங்கினங்களைச் சுட்டுகிறார்; பாலைக்கு வலியழிந்த யானை, வலியழிந்த புலி, வலியழிந்த செந்நாய் ஆகியவற்றைச் சுட்டுகிறார். மருதத்திற்கு எருமை, நீர்நாய் ஆகிய இரண்டைக் கூறுகிறார்; நெய்தலுக்கு கராவும், சுறாவுமாகிய இரண்டையும் விலங்காகச் சுட்டுகிறார். இவ்வாறே நச்சினார்க்கினயரும் விலங்கினங்களைச் சுட்டுகின்றார். இவ்வாறே ஒவ்வொரு கருப்பொருள் வரிசைக்கும் வெவ்வேறு வகையான வெவ்வேறு எண்ணிக்கையிலான பொருட்களை உரையாசிரியர்கள் சுட்டுகின்றனர்.

தொல்காப்பியத்திற்குப் பின்னர் தோன்றிய இலக்கண நூல்களான வீரசோழியம், அகப்பொருள் விளக்கம், முத்து வீரியம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம் ஆகியவற்றில் ஆசிரியரே கருப்பொருட்கள் இன்னின்ன எனச் சுட்டியுள்ளனர். அவர்களும் கருப்பொருள் வரிசைப் பொருட்களை வெவ்வேறு எண்ணிக்கையில் சுட்டியுள்ளனர். இது ஒவ்வொரு நிலத்தில் காணப்படும் இன வகையிலான உயிரினங்களின் இருப்பின் அடிப்படையில் சுட்டப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. சுவாமிநாதத்தின் ஆசிரியர் கருப்பொருள் வரிசையைப் பதினான்கிற்கும் மிகுந்து வரும் எனக்கூறியதுடன், கருப்பொருள் வரிசைப் பொருட்களையும் பிற ஆசிரியர்களைவிட மிகுதியாகச் சுட்டியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. உதாரணமாக குறிஞ்சித்திணைக்குரிய விலங்கினங்களைச் சுட்டும்பொழுது இறையனார் அகப்பொருள் உரை புலி பன்றி யானை என மூன்று விலங்கினங்களைச் சுட்டுகின்றது. அகப்பொருள் விளக்கம், மறப்பலி, கரடி, யானை, சிங்கம் என நான்கினைச் சுட்டுகின்றது. தொன்னூல் விளக்கமும் இன்நான்கையே சுட்டுகின்றது. சுவாமிநாதம் புலி, கரடி, யானை, முயல், மான், பன்றி, உடும்பு, மலையாடு, சிங்கம், அசுணம், கவரி, நாவி எனப் பன்னிரண்டு விலங்கிணங்களைச் சுட்டுகின்றது. இந்நூல் ஒவ்வொரு கருப்பொருள் வரிசையுள் அடங்கும் பொருட்களின் எண்ணிக்கையை மிகுத்துச் சொல்கின்றது. சுவாமிநாதத்தின் இக்கருப்பொருள்பகுப்பு ஒரு நிலத்திலுள்ள ஒவ்வொரு உயிரினமும் அது சார்ந்து உள்ளனவும் என எவை எவை உள்ளனவோ அவை அனைத்தும் கருப்பொருட்கள் அல்லது அவையனைத்தையும் கருப்பொருட்களாக ஏற்றுக்கொள்ளலாம் என்பதை விளக்குகின்றது. இது தொல்காப்பியர் சுட்டிய ‘‘அவ்வகை பிறவும்’’ என்பதை அடியொற்றி எழுந்த கருப்பொருள் விரி என்பதை உணரலாம்.

புலவர் குழந்தை தமது நூலில் பதினொரு கருப்பொருள் வரிசையைச் சுட்டி அவற்றில் அடங்கும் பொருட்களையும் பல்வேறு எண்ணிக்கையில் சுட்டுகின்றார். மேலும் அவர் ‘‘அவ்வந் நிலத்திற்குரிய மக்களும் கருப்பொருளே யாவர். ஈண்டுக் காட்டப்பட்டுள்ளவை போக வேறு விலங்கு, பறவை, மரம் முதலிய அந்நிலத்தில் இருக்குமேனும், இவை சிறப்புடையவை எனக்கொள்க. மற்றவையும் கருப்பொருளாதற் குரியவையே’’[53] எனச் சுட்டுகின்றார். க.ஜவகர் கருப்பொருட்களை ‘‘முதற்பொருளாகிய நில

அமைப்பில் வரலாற்றுக்காலச் சூழலில் நிகழ்பவை, தோன்றுபவை என்று விரித்துக் கொள்ளலாம்… நிலத்தில் உள்ள இயற்கைப் பொருட்கள், உற்பத்திப் பொருட்கள், தொழில், வாணிபம், சமயம், அரசியல் சூழல் என்று கருப்பொருள்களைச் சொல்லலாம்''[54] என்று விளக்குகிறார். ஒரு குறிப்பிட்ட நிலத்தின் இயல்பாகத் தோன்றிய உயரினம் வேறு நிலப்பகுதியில் காணப்படுவது செயற்கையானதாகும் என்பதை "மலைநாட்டில் இருக்கும் பொருள்வேறு சம வெளிகளில் காணும் பொருள்வேறு, மலைப்பகுதியில் காணும் பொருள்கள்வேறு மலைப்பகுதியில் காணும் விளங்குகளையும் பறவைகளையும் சாதாரணமாகக் கடலையொட்டிய பகுதிகளில் காண்பது அரிது. அப்பகுதியிலுள்ள மக்கள் அவற்றை வீட்டில் வைத்து வளர்க்கலாமேயன்றி இயற்கையில் அங்கு காணப்பெறா''[55] என்கிறார் ந. சுப்புரெட்டியார்.

மேற்கண்ட அறிஞர்களின் கருத்துகளின் அடிப்படையில் புவியியல் அமைப்பின் அடிப்படையிலும் காலவளர்ச்சியின் அடிப்படையிலும் நிலத்தில் தோற்றம் பெறும் அனைத்தும் கருப்பொருட்களாகும் என்பது தெளிவாகின்றது.

**பல்லுயிரியியம் (Biodiversity)**

உலகில் காணப்படும் எண்ணற்ற உயிரினங்களின் கூட்டுத்தொகுதியைப் பற்றி விளக்குவதே பல்லுயிரியியம் எனப்படும். பல்லுயிரிப்பன்மயம், பல்லுயிரிப்பரவல், உயிரினப்பன்மயம், பல்லுயிரிப்பரவல் பன்மயம், உயிரினப் பல்வகைமை எனப் பல சொற்களால் 'பல்லுயிரியியம்' சுட்டப்படுகின்றது. இது சூழலியல் (Ecology) துறையின் மிக இன்றியமையாக் கூறாக அமைகின்றது.

பல்லுயிரியியத்தைச் சூழலியலின் மையம் எனக் கூறலாம். உயிரினங்கள், அவற்றின்வகை, அவற்றிற்கிடையேயான தொடர்பு, அவற்றின் சூழலில் உள்ள பொருட்களுடனான தொடர்பு, சூழல் மாற்றங்கள், உயிரினப் பாதிப்புகள் என உயிரி, உயிரல் பொருட்கள் அனைத்துக்குமான ஒட்டுமொத்தத் தொடர்பைப் பேசுவது சூழலியல். அதன் ஒரு கூறான பல்லுயிரியியம் பல்வகை உயிரினங்கள், வகைப்பாடுகள், சூழல் தொடர்பு ஆகியன பற்றி விளங்குகின்றது. இதில் உயிரினங்கள், உயிரினவகைகள் இன்றியமையாவிடம் பெறுகின்றன.

உயிரினப் பன்மயம் எனும் சொல்லின் தோற்றம்பற்றி 'உயிரியல் பன்மயம்' (Biological Diversity) என்ற சொல்லினை முதன் முதலில் 'தாமஸ் லவ் ஜாய்' (Thomas Love Joy-1980) என்பவரும், உயிரினப் பன்மயம் (Biodiversity) என்ற வார்த்தையினை பூச்சியியல் வல்லுனரான (Entamologist) E.O. வில்சன் என்பவரும் 1986-ஆம் ஆண்டிலும் உருவாக்கினார்கள்''[56] என முனைவர் C. சேதுராமன் கூறுகின்றார்.

பல்லுயிரியியம் என்பதைப் பல்வேறு அறிஞர்கள் விளக்கியுள்ளனர். சூழயியல் தொடர்பான மாநாடுகள், அமைப்புகள் என பலநிலைகளில் பல்லுயிரியியத்திதற்கான வரையறைகள் தோன்றியுள்ளன.

1992 ஆம் ஆண்டில் நடைபெற்ற ரியோ புவி உச்சிமாநாடு பின்வரும் வரையறையை ஏற்றுள்ளது. "நிலத்தில் வாழும், கடல் வாழ் மற்றும் பிற நீர்நிலைகளில் வாழும் சூழ்நிலை மண்டலங்கள், சூழ்நிலைத் தொகுதிகளில் உள்ள உயிரினங்களிடையே காணப்படுகின்ற வேறுபாடுகள், உயிரினப் பல்வகைமை எனப்படும்"[57]

உலக வனவிலங்கு நிதியம் 1989 ஆம் ஆண்டு "பல மில்லியன் வகையான தாவரங்கள், விலங்குகள், நுண்ணுயிர்கள், அவைகள் பெற்றுள்ள ஜீன்கள், உயிர்வாழ சுற்றுச்சூழலில் அவை உருவாக்கும் சிக்கலான சூழ்நிலை மண்டலங்கள் ஆகியவற்றை உள்ளடக்கியதே உயிரினப் பல்வகைமை எனப்படுகின்றது"[58] என வரையறை கூறியுள்ளது.

"உயிரினப் பல்வகைமை என்பது பூமியிலுள்ள உயிரினங்களுக்கிடையே காணப்படும் வேறுபாடுகளின் அளவு அல்லது வீச்சு ஆகும். உயிரினங்கள் வேறுபாடுகளின் அடிப்படையில் பகுத்தறியப்பட்டுள்ள உயிரின வகைகளின் எண்ணிக்கையைச் சுட்டிக் காட்டுகிறது. இது சிற்றினத்திற்குள் மற்றும் சிற்றினங்களுக்கிடையே காணப்படும் பல்வகைமையை விளக்குகிறது"[59] என விளக்கியுள்ளார் த. சம்பத்குமார்.

"பூமியில் வாழும் அண்ட சராசரங்கள் (Biomes) அனைத்தும் சுற்றுச்சூழலை நாளுக்குநாள் எதிர்த்துப் போராடிய வண்ணம் உள்ளன. இவ்வுயிரினங்கள் அனைத்தும் ஒட்டுமொத்தமாக உயிரினப் பல்வகைமை என அழைக்கப்படுகிறது"[60] என விளக்கியுள்ளார் ப. சந்திரசேகரன்.

டாக்டர் சுசிலா அப்பாத்துரை "உயிரியப் பல்வகைமை என்பது உயிரினங்களின் எண்ணிக்கை, வகை மற்றும் வேறுபாடுகளைப் பற்றிக் குறிப்பிடுகிறது"[61] என விளக்கமளிக்கிறார்.

"உயிரினப்பன்மயம் என்பது நிலம் (Terrestial) கடல் (Marine) நன்னீர் என அனைத்துச் சூழ்நலை மண்டலங்களில் வாழும் உயிரினங்களில் காணப்படும் வேற்றுமை மற்றம் அவை அங்கத்தினர்களாக உள்ள சூழ்நிலை மண்டலங்களின் (Ecological Complexes) வேறுபட்ட தன்மை எனப்பொருள் கொள்ளலாம்"[62] எனப் பொருளுரைக்கிறார் B.S. சபீனா.

பல்லுயிரியியம் என்பதற்கு மேற்கண்ட வரையரைகள் மற்றும் விளக்கங்களில் இடம் பெறும் கூறுகளைப் பின்வருமாறு சுட்டலாம்.

- நிலம், கடல், பிற நீர்நிலைகளில் வாழும் உயிரினங்களைச் சுட்டுகின்றது.
- உயிரினங்களுக்கிடையே காணப்படும் வேறுபாடுகளை உள்ளடக்கியது.
- உயிரின வகைகளின் எண்ணிக்கையைச் சுட்டுகின்றது.
- ஒட்டு மொத்த சூழல்மண்டலங்களில் காணப்படும் உயிரினங்கள் அனைத்தும் உயிரினப் பல்வகைமையில் அடங்குகின்றன.
- உயிரினங்கள் வாழ்கின்ற சூழலின் தன்மையைச் சுட்டுகின்றது.

- உயிரினங்கள் தாம் வாழ்கின்ற சூழலுடன் கொண்டுள்ள தொடர்பு.

மேற்கண்ட கூறுகளின் அடிப்படையில் பல்லுயரியம் என்பது அனைத்து வகை வாழிடங்களில் காணப்படும் அனைத்துவகை உயிரினங்கள், அவற்றின் எண்ணிக்கை, அவற்றிடையே காணப்படும் வேறுபாடுகள், அவை வாழும் இடங்களின் தன்மை, அவை தம் சூழலுடன் கொண்டுள்ள தொடர்பு ஆகியவற்றைப் பற்றி அமைவதாகும். இப்பல்லுயிரியியம் முழுக்க முழுக்க உயிரினங்களை மையமாகக் கொண்டமைகின்றது.

**கருப்பொருளும் பல்லுயிரியியமும்**

கருப்பொருள் என்னும் கருத்தாக்கம் தமிழ் மண்ணில் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு தோன்றியதாகும். இது நிலம், அந்நிலத்தில் காணப்படும் உயிர் மற்றும் உயிர்சார் பொருட்களைச் சுட்டுவதாக அமைகின்றது.

பல்லுயிரியியம் என்பதைச் சுட்டும் "Biodiversity" எனும் சொல் மிகவும் பிற்காலத்தே மேற்கத்திய நாட்டு சூழலியல் அறிஞர்களால் சுட்டப்பட்டது. இது உயிரி, உயிரற்றவை, வாழிடம் போன்றவற்றைச் சுட்டும் சூழலியலின் முக்கிய கூறாக அமைகின்றது.

கருப்பொருள் என்பது மனித உணர்வுகளைச் சூழல் பொருட்களைக் கொண்டு வெளிப்படுத்தும் திணைப் பகுப்புள் அடங்குகின்றது.

பல்லுயிரியியம் என்பது உயிரினங்கள் அவற்றின் வேறுபாடுகள், அவற்றிற்கும் அவை வாழும் சூழல் தொகுப்பிற்கும் உண்டான தொடர்பையும் அதன் அடிப்படையிலான தன்மைகளையும் சுட்டுகிறது. இது இயற்கை அதன் கூறுகள், அதன் இயக்கம் ஆகியவற்றைச் சுட்டும் சூழலியலின் வழி வந்தது.

கருப்பொருளும் இயற்கையாக அமையப்பெற்ற நிலவமைப்பு அதன்கண் வாழும் உயிரினங்கள், அவற்றின் இயக்கம் ஆகியவற்றின் அடிப்படையில் உண்டான கருத்தாக்கமாகவுள்ளது. இது முழுக்க முழுக்க இயற்கையியலுடன் நெருங்கியதாக இயற்கை சூழல் தன்மையைச் சுட்டுவதாக அமைகின்றது. இது நிலவேறுபாடு மற்றும் தட்பவெப்பநிலையால் அமையப்பெற்ற உயிரினங்களை வகைப்படுத்துவதாய் அமைந்துள்ளது. இது இயற்கையைப் புரிந்துகொண்ட இயற்கையுடன் நெருங்கி வாழ்ந்த மனிதசமுதாயத்தின் வெளிப்பாடாகும். அம்மனித சமுதாயத்தின் சூழலியல் அறிவின் வெளிப்பாடே கருப்பொருள் பற்றி அறிவாகும். இதனை "இக்கருப்பொருட்பாகுபாடு பண்டைத் தமிழரின் சூழியல் உணர்வை வெளிப்படுத்துகின்றன… பண்டைத் தமிழர்கள் இயற்கையோடு ஒன்றிய வாழ்வினர் என்பதைக் கருப்பொருட்கள் மெயப்பிக்கின்றன"[63] எனும் கூற்றுகள் உறுதிசெய்யும்.

பன்முகத் தன்மை கொண்ட, தமிழக நிலச் சூழலில் வாழ்ந்த உயிரினங்களை வகைப்படுத்துவதாகக் கருப்பொருள் அமைகின்றது. இக்கருப்பொருள் வரிசை

தொடக்ககாலம் முதல் விரிக்கப்பட்டு வந்துள்ளதையும், அது மேலும் பல இயற்கைக் கூறுகளையும் தன்னகத்தே ஏற்கவல்லது என்பதையும் “தமிழக நிலப்பரப்பில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் பல்வேறு உயிரினங்கள் இருத்தல் என்பது, சூழலின் பன்முகத்தன்மையைக் காட்டுகின்றது. அன்றைய தமிழக நிலமானது, பல்லுயிர்ப் பெருக்கத்திற்கு ஏற்ற வகையில் வளமாக இருந்ததனை அறிய முடிகின்றது”[64] எனும் கூற்று மெய்ப்பிக்கும்.

மேற்கண்ட கருத்துகளின் அடிப்படையில் பார்க்கும்பொழுது கருப்பொருள், பல்லுயிரியியம் ஆகிய இரு கூறுகளுமே இயற்கையியலை அடிப்படையாகக் கொண்டே தோற்றம் பெற்றுள்ளன. நில அடிப்படையிலான உயிரின வகையைக் கருப்பொருள் வரிசைப்படுத்துகின்றது. உயிரினங்களின் வகையை வைத்துக்கொண்டு நிலச் சூழலை, அவற்றிற்கிடைப்பட்ட தொடர்பை ஆய்கின்றது பல்லுயிரியியம். எனவே இலக்கிய ஆக்கத்தில் சுட்டப்படும் கருப்பொருள் வரிசை, சூழலியல் காப்பிற்குச் சொல்லப்பட்ட பல்லுயிரியியத்துடன் ஒத்தமையும் தன்மையைக் கொண்டு கருப்பொருள் வரிசையையும் பல்லுயிரியியக் கருத்தாக்கத்தையும் இணைத்துச் சூழலியல் தொடர்பான ஆய்விற்கு உட்படுத்தலாம்.

**தொகுப்புரை**

- உலகம் தோன்றி அதன்கண் பல்வேறுபட்ட உயிரினங்கள் தோன்றி தற்போதைய நிலையை அடைவது வரை இயற்கை தொடர்ச்சியாகப் பலகோடி ஆண்டுகள் இயங்கி வந்துள்ளது. உலக உயிரினங்கள் யாவும் தனது பரிணாம வளர்ச்சியின்படி பல்லாயிரம் ஆண்டுகளின் பின்னணியில் தனது முழு வளர்ச்சியை அடைந்துள்ளது விளக்கப்பட்டுள்ளது.
- உலகில் தோற்றம் பெற்றுள்ள உயிரினங்களுள் பிற இயற்கைக் கூறுகளைப் பகுத்து இனம்காணும் அறிவின் தன்மையின் அடிப்படையில் மனித இனம் ஓங்கி நிற்கின்றது.
- மனித இனத்தின் அறிவு வெளிப்பாட்டின் ஒரு கூறான இலக்கியங்களில் தன் வாழ்க்கைக்கு அடிப்படையான இயற்கைக் கூறுகளைப் பதிவு செய்துள்ளது. இயற்கைப் பதிவு நிலத்திற்கு நிலம் வேறுபட்டுக் காணப்படுகின்றது. இயற்கையுடன் ஒன்றி வாழ்ந்த தமிழினம் தனது பண்டைய இலக்கியங்களில் இயற்கையை நுட்பமாகப் பதிவு செய்துள்ளது.
- பண்டைத் தமிழர்களின் இயற்கை மீதிருந்த நுட்பமான அறிவு அவர்களிடமிருந்து திணையிலக்கியம் தோன்றக் காரணமாக அமைந்தது.
- பழந்தமிழர், பழந்தமிழ் நிலம், பழந்தமிழ் நிலத்து இயற்கை இவையாவும் ஒன்றுக்கொன்று பின்னிப் பிணைந்திருந்தமையாலேயே தமிழ்நிலத்து தோன்றிய தொன்மை வாய்ந்த இலக்கியங்களில் இயற்கையின் கூறுகள் நுட்பமாகப் பதிவுசெய்யப்பட்டுள்ளன. புலவர்களால் பதிவு செய்யப்பட்டன யாவும் மக்களாலும் அறிய முடிந்தனவாக அமைந்துள்ளன.

- பண்டைத் தமிழ் இலக்கியங்களில் நிலம், மனிதன், பிற உயிரினங்கள் ஆகிய கூறுகள் அதிகம் இடம்பெற்றதற்கான காரணம் நிலமும் நிலத்தின் சாயலான இயற்கையும் மனித வாழ்வில் நீங்காதிடம் பிடித்திருந்தமையாலாகும்.
- சங்க இலக்கியங்கள் நிலத்தில் காணப்பட்ட பல்வேறுபட்ட கூறுகளையும் கருப்பொருள் என்ற அடிப்படையில் பதிவு செய்துள்ளதைக் காணமுடிகின்றது.
- ஒரு குறிப்பிட்ட நில அமைப்பில் காணப்படும் அனைத்து வகைப்பட்ட உயிரி, உயிரற்ற அனைத்துப் பொருட்களும் கருப்பொருட்களாகும்.
- கருப்பொருள் என்பது ஒரு நிலத்தில் உள்ளடங்கியிருக்கும் பொருள், ஒரு நிலத்தில் கருக்கொண்ட பொருள் எனும் அடிப்படைப் பொருண்மையைத் தருவதாக அமைந்துள்ளது.
- தமிழ்மொழியின் முதல் நூலாகக் கருதப்படும் தொல்காப்பியம் கருப்பொருள் வரிசையில் அடங்கும் பொருட்களை முடிந்த முடிபாக அறுதியிட்டு எண்ணிக்கை கூறவில்லை. தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், யாழ் என்பவற்றை எடுத்துக் கூறி அவை போன்ற பிறவும் கருப்பொருள் வரிசையில் அடங்கும் எனச் சுட்டியுள்ளது.
- தொல்காப்பியத்திற்குப் பின்வந்த இலக்கண நூல்களின் அடிப்படையிலும், உரையாசிரியர்களின் உரைவழியும், இலக்கியத் திறனாய்வாளர்களின் கூற்றுக்களின் அடிப்படையிலும் கருப்பொருள் வரிசையும், கருப்பொருள் வரிசையில் அடங்கும் பொருட்களும் நீண்டு கொண்டே போகும் என்பது விளக்கப்பட்டுள்ளது. இதனால் உலகில் காணப்படும் அனைத்துவகை உயிரினங்களையும் கருப்பொருள் வரிசையில் அடக்கவியலும் என்பது அறியவருகின்றது.
- சூழலியலில் அமையப்பெற்ற பல்லுயிரியியம் எனும் கருத்தாக்கம் உலகில் காணப்படும் எண்ணற்ற உயிரினங்களின் கூட்டுத் தொகையைக் குறிப்பதாக அமைகின்றது.
- பல்லுயிரியியம் என்பது அனைத்து வகை வாழிடங்களில் காணப்படும் அனைத்துவகை உயிரினங்கள், அவற்றின் எண்ணிக்கை, அவற்றிற்கிடையே காணப்படும் வேறுபாடுகள், அவை வாழும் இடங்களின் தன்மை, அவற்றின் சூழல் தொடர்பு ஆகியவற்றைப் பற்றி விளக்குவதாக அமைகின்றது.
- கருப்பொருள் என்பது நிலத்தின்கண் காணப்படும் உயிரி, உயிரிசார் பொருட்களை விளக்குவதாக அமைகின்றது. பல்லுயிரியியம் உலகின்கண் காணப்படும் உயிரினங்கள் அவற்றின் சூழல் தொடர்பு ஆகியவற்றை விளக்குவதாக அமைகின்றது. கருப்பொருளில் நிலத்தின்கண் காணப்படும் அனைத்துவகை உயிரினங்களையும் வகைப்படுத்திக் காட்டுவது பல்லுயிரியியத்தின் உயிரினக் கணக்கீட்டுடன் ஒத்தமைகின்றது. இயற்கையியலை அடிப்படையாகக் கொண்ட கருப்பொருள் வரிசை, பல்லுயிரியியத்தைச் சூழலியல் நோக்கில் இணைத்து நோக்கவியலும்.

## சான்றெண் விளக்கம்


1. தி. ஜானகிராமன் (மொழி), பூமி எனும் கோள், ப.1
2. மேலது, ப.2
3. பரிசுத்த வேதாகமம், ப. 1
4. மெய்கண்டார், சிவஞானபோதம், நூ.எ.1
5. மகாவித்துவான். சி. அருணை வடிவேலு முதலியார், சிவஞான போதத் திருநெறியுரை, ப.55
6. முனைவர் மகிழேந்தி, சுற்றுச்சூழிலியல் நோக்கில் சங்கத் தமிழகம், ப.21
7. டாக்டர் எம்.ஆர்.விஜயகுமார், பிரபஞ்சம் மூலமும் தோற்றமும், ப.30
8. டாக்டர் கு. சீனிவாசன், தாவரம்-வாழ்வும் வரலாறும், ப.1
9. நா. வானமாமலை (மொழி), உயிரின் தோற்றம், ப.4
10. தி. ஜானகிராமன் (மொழி), பூமி எனும் கோள், ப.22
11. மேலது, ப.224
12. முனைவர் மகிழேந்தி, சுற்றுச்சூழிலியல் நோக்கில் சங்கத் தமிழகம், ப.21
13. நா. வானமாமலை (மொழி), உயிரின் தோற்றம், ப.79
14. மேலது, ப.2
15. முனைவர் மகிழேந்தி, சுற்றுச்சூழிலியல் நோக்கில் சங்கத் தமிழகம், ப.22
16. பா.ச. அரிபாபு (தொகு), திணைமரபும் நவீனமும், ப.105
17. க. பூரணச்சந்திரன் (மொழி), நில அமைப்பும் தமிழ்க் கவிதையும் ப.21
18. மேலது, ப. 41
19. மேலது, ப. XII
20. ந. முருகேசபாண்டியன், உங்கள் நூலகம் (இதழ்), மார்ச் 2016, ப.11
21. ந. முருகேசபாண்டியன், உயிர்மை (இதழ்), மே, 2012, ப. 55
22. கார்த்திகேசு சிவத்தம்பி, சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும், ப.45
23. தமிழண்ணல், தொல்காப்பிய இலக்கிய இயல், ப.15
24. டாக்டர். எஸ்.ஸ்ரீகுமார், தமிழில் திணைக் கோட்பாடு, ப.1
25. தமிழண்ணல், சங்கமரபு, ப.315
26. முனைவர் வெ.மு. ஷாஜகான் கனி, திணைவரலாறு, பக். 28,30.
27. டாக்டர். எஸ்.ஸ்ரீகுமார், தமிழில் திணைக் கோட்பாடு, ப.3
28. ந. முருகேசபாண்டியன், உயிர்மை (இதழ்), மே. 2012, ப. 55
29. கழகத்தமிழ் அகராதி, ப. 236
30. மேலது, ப.717
31. பண்டித வித்வான் தி.வே. கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி, ப.204.
32. சந்திரசேகரப் பண்டிதர், யாழ்ப்பாண அகராதி -1, ப.231
33. டாக்டர். ந. சுப்பு ரெட்டியர், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.16
34. அறிஞர் எல்.கே. அக்னிபுத்ரன், புதிய நோக்கில் தொல்காப்பியம், ப.40

35. இளம்பூரணர் (உரை), இளம்பூரணம், பொருளதிகாரம், ப.18
36. புலவர் இரா. இளங்குமரனார் (பதி), தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்கினியம், ப.28
37. தொல்காப்பியம், அகத்திணையியல், நூ.எ.20
38. இளம்பூரணர், இளம்பூரணம், பொருளதிகாரம், ப.எ.18
39. நச்சினார்கினியர் (உரை) தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியம், முதல்பகுதி, ப.205
40. தமிழண்ணல் (உரை), தொல்காப்பியம், பொருளதிகாரம், தொகுதி-1, ப.39
41. இளம்பூரணர் (உரை), இளம்பூரணம், தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், புறத்திணையியல், ப.18.
42. நச்சினார்கிணியர் (உரை), தொல்காப்பியம், பொருளதிகாரம் நச்சினார்க்கினியம், முதல்பகுதி, ப.206
43. தமிழண்ணல் (உரை), தொல்காப்பியம், பொருளதிகாரம், தொகுதி-1, ப.40
44. நக்கீரர் (உரை), இறையனார் அகப்பொருள், ப.17
45. டாக்டர். உ.வே.சாமிநாதன் (உரை), தமிழ்நெறி விளக்கம், நூ.எ.6
46. புத்தமித்திரனார், வீரசோழியம், பொருளதிகாரம், ப.91
47. நாற்கவிராசநம்பி, அகப்பொருள் விளக்கம், நூ.19
48. திருக்குருகைப் பெருமாள் கவிராயர், மாறன் அகப்பொருள், நூ.எ.23
49. வைத்தியநாத தேசிகர், இலக்கண விளக்கம், பொருளதிகாரம், நூ.எ.387
50. வீரமாமுனிவர், தொன்னூல் விளக்கம், பொருளதிகாரம், நூ.எ.175
51. முத்துவீர உபாத்தியாயர், முத்துவீரியம், பொருளதிகாரம், நூ.எ.32.
52. சுவாமிக் கவிராயர், சுவாமிநாதம், நூ. 73
53. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.69
54. க. ஜவகர், திணைக்கோட்பாடும் தமிழ்க் கவிதையியலும், ப.66
55. டாக்டர் ந. சுப்பு ரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.12
56. முனைவர் சி.சேதுராமன், சூழலியல் கல்வி. ப.61
57. த. சம்பத்குமார், சுற்றுச்சூழல் கல்வி, ப.173
58. மேலது, ப.173
59. மேலது, பக்.173,174
60. ப. சந்திரசேகரன், சுற்றுச்சூழல் அறிவியல், ப.311
61. டாக்டர் சுசிலா அப்பாதுரை, சுற்றுச்சூழல் கல்வி, ப.80
62. B.S. சபினா, சுற்றுச்சூழல் கல்வி, ப.44
63. முனைவர் கி.இராசா, தொல்காப்பியம் பொருளுரை பொருளதிகாரம் (பகுதி-க),ப.10
64. ந. முருகேசபாண்டியன், உங்கள் நூலகம் (இதழ்), மார்ச் 2016, ப.14

## இயல் - 2

## பல்லுயிரி வகைமை

உலகம் உயிரி மற்றும் உயிரல் பொருட்களின் தொகுதியால் நிறைந்தது. இவ்விரு பகுப்பினுள் ஓயாத இயக்கத்தை உடையன உயிரிப்பொருட்கள். உலகத்தின் இயக்கம் என்பது உயிரிகளின் இயக்கமாகவே அமைகின்றது. உலக இயக்கத்தினை இயற்கை எனச் சுட்டலாம். இயற்கையானது உலகப் பொருட்களைப் பெருக்கியும், சுருக்கியும், ஆக்கியும், அளித்தும், அழித்தும் வருகின்றது. ஆனால் இவையாவும் இயற்கையின் நியதிக்குட்பட்டு நிகழ்வதே சிறப்புடையதாகும். அவ்வாறன்றி இயற்கையாக அல்லாமல் செயற்கையான ஆக்கலோ அழித்தலோ நிகழுமாயின் அது உலகப் பொருட்கள் அனைத்தையும் பாதிப்பிற்குள்ளாக்கிவிடும். அவ்வகையில் முதலில் சிக்கலுக்குள்ளாவது உயிரிப்பொருட்களாகவே அமையும். உயிரிப் பொருட்களின் அழிவு உலகையே வெறுமையாக்கி வெற்றிடமாக்கிவிடும். இத்தகைய சிறப்பிற்குரிய உயிரிப்பொருட்கள் தத்தமக்குள் பல்வேறுபட்ட தனித்தன்மைகளைக் கொண்டமைந்துள்ளன. இத்தனித்தன்மையானது உயிரிகள் ஒவ்வொன்றையும் தனித்தனியே இனம்பிரித்துக்காணும் வகையில் அமைந்துள்ளது. தனித்தனியாக இனம்பிரித்துக்காணும் ஒவ்வொரு உயிரித்தொகுப்பும் ஒவ்வொரு உயிரினமாக வகைப்படுத்தப்படுகின்றன. அவ்வகையில் உலகில் காணப்படும் அனைத்து உயிரினங்களும் பல்வேறுபட்ட உயிரினத் தொகுப்புகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவ்வகைப்பாடுகளில் அறிவினடிப்படையில் சிறப்பிடம் பெற்று உலகையாண்டுவரும் மனித இனமும் அடங்குகின்றது. மனித இனமே தன்னைப்போல் இயற்கையில் காணப்படும் பிற உயிரினங்களை வகைப்படுத்திப் பட்டியலிடுகிறது. மனிதனது உயிரின வகைப்பாடு அவனது பல்வேறுபட்ட படைப்புகளிலும் பதிவு செய்யப்பட்டு வருகின்றது. சிற்பம், ஓவியம், மொழி, எழுத்து, மொழியானும் எழுத்தானும் இயன்ற இலக்கியம் எனப் பல்வேறுபட்ட மனிதப் படைப்புகளிலும் உயிரினங்கள் காட்டப்படுகின்றன. இயற்கையோடியைந்த வாழ்வியலைத் தம்மகத்தே கொண்ட பண்டைத் தமிழ் மக்களின் எண்ணங்களைப் பதிவு செய்யும் வகையில் அமைந்த சங்க இலக்கியங்களும் பல்வேறுபட்ட உயிரினவகைமைகளைத் தன்னகத்தே கொண்டமைந்துள்ளன. பண்டைத் தமிழ்மக்களின் பல்லுயிரி வகைமை குறித்த அறிவினைச் சங்கப்பாக்களில் காணக்கிடக்கின்ற பல்வகை உயிரினங்களையும் வரிசைப்படுத்துவதன் வாயிலாக அறியவியலும். அவ்வகையில் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்ற மனிதன் ஒழிந்த பல்வேறுபட்ட உயிரினங்களை வகைப்படுத்தி அறிவதாக இவ்வியல் அமைகின்றது.

**உயிரினங்கள்**

உலகின்கண் தோற்றம் பெற்ற உயிரினங்கள் பற்பல தோன்றிய உயிரினங்கள் அனைத்தும் தத்தம் இயல்பினடிப்படையில் இயங்கிவருகின்றன. இவ்வுயிரினங்களுள் சிறப்புப் பெற்ற உயிரினமாக மனித இனம் விளங்குகின்றது. இம் மனித இனமே பிற உயிரினங்களைப் பகுத்தும் தொகுத்தும் அறிந்து வருகின்றது. தொகுத்தும் பகுத்தும்

அறியவல்ல உயிரினமாக விளங்குவதனாலேயே மனித இனம் சிறப்புப் பெற்று விளங்கிவருகின்றது. மனிதன் உயிரினங்களைத் தொகுத்தும் பகுத்தும் அறிந்துகொள்ளத் தொடங்குவதற்கு முன்பே பல உயிரினங்கள் அழிந்திருக்கலாம். அத்தகைய உயிரினங்களை அவற்றின் புதைபடிவங்களைக் கொண்டு ஆராய்ந்து தெரிந்துகொண்டான். இவ்வாறு எண்ணற்ற உயிரினங்களின் தொகுப்பாக இப்புவி அமைந்துள்ளது.

புவி தோன்றியவுடனேயே உயிரினங்கள் தோன்றிவிடவில்லை. பூமிப்பந்து தோன்றி அது உயிரினங்கள் வாழ்வதற்கு ஏற்ற கோளமாகத் தன்னை நிலைப்படுத்திக் கொள்ள பலகோடி ஆண்டுகள் பிடித்திருக்கும் என்கின்றனர் புவியியலாளர்கள். உயிரினங்கள் வாழ்வதற்கு ஏற்ற நிலையினை அடைந்து அதன்கண் உயிரிக் கூறுகள் தோன்றி அவற்றிலிருந்து உயிரினங்கள் படிப்படியாக பரிணாமவளர்ச்சியின் அடிப்படையில் தோற்றம் பெற பலகோடி ஆண்டுகள் கழிந்தன என உயிரியிலாளர்கள் கூறுகின்றனர். “உயிரினங்கள் ஒரே நாளில் பொம்மை போல் செய்து வைக்கப்பட்டவையல்ல. அவ்வற்றின் தோற்றம் என்பது காலப்போக்கில் ஏற்பட்ட நிகழ்வாகும். உயிர்கள் தோன்றிய விதம் இயற்கைக்குப் புறம்பான சக்திகளினால் அல்ல எளிமையான பௌதீக, இரசாயன விதிகளால்தான்”[1] எனும் அரிஸ்டாட்டிலின் கருத்து இதனை உறுதிப்படுத்தும். இவ்வாறு இயற்கையின் விதிகளுக்குட்பட்டு எண்ணிலடங்கா உயிரினங்கள் தோன்றியுள்ளன. அவற்றை இயற்கையியலாளர்கள் இனங்கண்டு வெளிப்படுத்தி வருகின்றனர். தேடத்தேடப் பல்வேறு வகை உயிரினங்கள் அறியப்படுவதாக அவர்கள் கூறுகின்றனர் “இயற்கையின் அற்புதமே தினந்தோறும் புதுப்புது விலங்குகள், பூச்சிகள், தாவரங்கள் எனத் தேடிக்கொண்டிருப்பவர்களின் கண்களுக்குப் புலப்பட்டுக் கொண்டேயிருப்பது தான்”[2] எனும் கூற்று இதனைத் தெளிவுபடுத்தும்.

### உயிரினத் தொகை

உலக அளவில் இவ்வளவு வகை உயிரினங்கள் வாழ்கின்றன என அறுதியிட்டுக் கூறுவது இயலாததாகும். புதுப்புது உயிரின வகை தொடர்ந்து கண்டு பிடிக்கப்படுகின்றன என முன்னர் கண்டோம். அவ்வாறு இருக்கும் நிலையில் உலக உயிரினங்கள் இவ்வளவுதான் என முடிந்தமுடிபாக கூறுவது அறிவுடைமை ஆகாது. இனங்காணப்பட்ட உயிரினங்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் உத்தேசமாகவே உயிரினத்தொகை சொல்லப்பட்டுவருகின்றது. ஆகஸ்ட் இரண்டாயிரத்துப் பதினொன்று அன்று தரவேற்றம் செய்யப்பட்ட ஓர் இணைய வலைப்பக்கம் இதுவரை எண்பத்தேழு இலட்சம் உயிரினங்கள் கணக்கிடப்பட்டுள்ளதாகக் கூறுகின்றது. இந்த மதிப்பீடும் முடிந்த முடிவு இல்லை என அவ்வலைப்பக்கம் தெரிவிக்கின்றது. இதனை “நாம் வாழும் பூமியில் இன்னும் எவ்வளவு உயிரினங்கள் உள்ளன என்ற கேள்விக்கு விடைதேடும் பணியில் விஞ்ஞானிகள் காலங்காலமாக ஈடுபட்டு வந்ததன் பயனாக தற்போது உலகில் 87 லட்சம் உயிரினங்கள் இருப்பது கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இந்த எண்ணிக்கை ஒரு

உத்தேச மதிப்பீடுதான்''[3] எனும் கூற்று விளக்கும். இந்தியத் தத்துவ மரபில் சுட்டப்பட்டுவரும் ''எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதம்'' எனும் கருத்து இங்கு சிந்திக்கத்தக்கதாகும். இது எண்பத்துநான்கு இலட்சம் உயிரினங்கள் உலகில் உள்ளன எனக் குறிக்கின்றது. இது கருத்தியல் அடிப்படையில் பன்னெடுங்காலமாக வழங்கிவரும் வழக்காகும். கருத்தியல் அடிப்படையிலும் சரி அறிவியல் அடிப்படையிலும் சரி உலகில் காணப்படும் உயிரினத் தொகையின் ஒட்டுமொத்த எண்ணிக்கை என்பது இன்னும் சரிவரக் கணக்கிடப்படாததாகவும் தொடர்ந்து கணக்கிடப்பட்டு வருவதாகவும் இருக்கின்றது.

**பல்லுயிரி வகைமை**

பல்லுயிரி எனும் சொல் பல்வேறுபட்ட உயிரினங்களையும் சுட்டுகின்றது. பல்லுயிரி வகைமை என்பது பல்வேறுபட்ட உயிரினங்களையும் வகைப்படுத்திக் காண்பதாக அமைகின்றது. Biodiversity எனும் சூழலியல் கலைச் சொல்லிற்கு இணையாக உருவாக்கம் பெற்ற சொல் 'பல்லுயிரியியம்' என்பதாகும். தமிழ் இலக்கிய, இலக்கண உலகில் சுட்டப்பட்டுவரும் கருப்பொருள் வரிசையின் ஒரு கூறான 'உயிரிக்கருப்பொருட்களைச்' சுட்டுவதாக அல்லது அதன்கண் அடக்கிக் காண்பதாக 'பல்லுயிரியம்' எனும் கருத்தாக்கம் அமைவதை முன்னைய இயல் விளக்கியுள்ளது. எவ்வாறு 'பல்லுயிரியியம்' எனும் கருத்தாக்கம் தமிழுலகிற்கு புதியதன்றோ அதே போல் 'பல்லுயிரியியம்' எனும் சொல்லும் தமிழுலகிற்குப் புதியதன்று. இச்சொல் 'பல்லுயிர்' எனும் சொல்லை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டதாகும். இதனை நல்லதொரு தமிழாக்கத்திற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். ஆங்கிலத்தில் உருப்பெற்ற கருத்தாக்கத்திற்குத் தமிழாக்கமாகத் தமிழ்மரபில் பன்னெடுங்காலமாக வழங்கிவந்த சொல்லைக் கொண்டு மொழியாக்கம் செய்திருப்பது சிறப்பிற்குரியது. ''பல்லுயிர்'' என்ற சொல் எப்பொழுதிருந்து தமிழகத்தில் வழங்கிவருகின்றதென்பதை அறிய இயலாது. ஆனால் அச்சொல் ''திருக்குறளில்'' பயின்றுவருவதைக் கொண்டு அதன் பழமையை அறியலாம்.

> ''பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
> தொகுத்தவற்றுள் எல்லாம் தலை''[4]

எனும் குறட்பா இதனைத் தெளிவுறுத்தும். இக்குறட்பாவிற்குத் தமிழண்ணல் கூறிய விளக்கம் முழுக்க முழுக்க பல்லுயிரியியத்தின் மையத்தை, காப்பைக் காட்டுவதாக அமைவதைத் ''தனது உடைமையைப் பசித்தோர்க்குப் பகுத்துக்கொடுத்துத் தானும் உண்டு, இவ்வாறு உலகிலுள்ள பலவகை உயிர்களையும் சாவாது பாதுகாத்தல், அறநூலுடையார் தொகுத்தவற்றுளெல்லாம் தலையாய அறமாகும்''[5] எனும் கருத்து வெளிப்படுத்துகின்றது. பல்லுயிரியியம் குறித்த சிந்தனை தமிழ்மண்ணுக்குப் புதியதன்று

என்பதையும் இத்திருக்குறள் பறைசாற்றுகின்றது. பல்லுயிரிய மேம்பாடு பற்றிய சிந்தனையை முன்வைப்பதில் தமிழ்மக்களே உலகளவில் முன்னிற்கின்றனர் என்றால் அது மிகையாகாது. தொல்காப்பியரின் கருப்பொருள் வரிசையும் திருவள்ளுவரின் பல்லுயிர் ஓம்பலும் பண்டைத்தமிழ் மக்களின் பல்லுயிரியியக் கோட்பாட்டை நமக்குச் சுட்டுகின்றன.

பூமியில் காணப்படும் அனைத்துவகை உயிரினங்களையும் பல்லுயிரியம் சுட்டுகின்றது. ‘‘இன்றைய நாள்வரை புவியில் கண்டுபிடிக்கப்பட்டு பெயரிடப்பட்ட சுமார் 8 மில்லியன் அதாவது 80 இலட்சம் உயிரினங்களும் இன்னும் கண்டறியப்படாத, பெயரிடப்படாத தாவர விலங்கினங்களும், நம்முடன் வாழும் வளர்ப்பு விலங்குகளுடன் சேர்ந்த சூழல் அமைப்பே பல்லுயிரியமாகும்’’[6] எனும் பல்லுயிரியியம் குறித்த ச. முகமது அலியின் சுருக்கமான விளக்கம் இங்கு கவனிக்கத்தக்கது. இதுவரை கண்டு பிடிக்கப்பட்ட உயிரினங்கள் இன்னும் கண்டுபிடிக்கப்பட வேண்டிய உயிரினங்கள் அனைத்தையுமே பல்லுயிரியியம் உள்ளடக்கியுள்ளதை இதன் மூலம் தெளியலாம். ச. முகமது அலி இவ்விளக்கத்தினைக் கூறும் முறை கவனிக்கத்தக்கது. முதலில் கணக்கிடப்பட்ட உயிரினங்களைக் கூறி அதன்பின் ‘இன்னும் கண்டறியப்படாத, பெயரிடப்படாத’ என விரிக்கிறார். இது தொல்காப்பிய கருப்பொருள் வரிசையின், ‘அவ்வகை பிறவும்’ எனும் தொடருடன் நெருங்கியமைவதை உணரலாம்.

பண்டைத் தமிழ்மக்கள் இயற்கையுடன் இணைந்த வாழ்க்கை வாழ்ந்ததன் காரணமாக இயற்கையின் நிலவியல் சார்ந்த கருப்பொருட்களைத் தெளிவாக அறிந்திருந்தனர். அவ்வறிவின் அடிப்படையில் பல்வேறு உயிரினங்களையும் வகைப்படுத்தி அறிந்திருந்தனர். மா, மரம், புள் என வகைப்படுத்தி வரிசைப்படுத்திய தொல்காப்பியர் அவ்வுயிரினங்களை அவ்வவற்றின் அறிதிறனின் அடிப்படையில் வரிசைப்படுத்தி வகைப்படுத்திக் காட்டியுள்ளது பண்டைத் தமிழ்ச்சமுதாயத்தின் உயிரினநுட்ப அறிவைக் காட்டுவதாக அமைகின்றது. அவர்கள் எவ்வாறு உயிரினங்களை நுணுகி ஆராய்ந்திருந்தனர் என்பதைத் தொல்காப்பியத்தின் வாயிலாக அறியமுடிகின்றது. இதனை,

‘‘ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே’’[7]

என்னும் நூற்பா காட்டுகின்றது. இந்நூற்பா உலக உயிரினங்களை ஓரறிவு முதல் ஆறறிவு உயிரிகளாக வகைப்படுத்தி உரைக்கின்றது. இந்நூற்பாவிற்கான இளம்பூரணரின் உரை இங்கு நோக்கத்தக்கது. ‘‘உலகத்துப் பல்லுயிரையும் அறியும் வகையாற் கூறப்படுதலை

உணர்த்துதல் நுதலிற்று”[8] என அவர் இந்நூற்பா கூறப்பட்டதன் காரணத்தை விளக்குகின்றார். ‘உலகத்துப் பல்லுயிரையும்’ என்றதனான் உலகின்கண் உள்ள உயிரினங்கள் அனைத்தையும் என்பது பெறப்படுகின்றது. இங்கு அவர் ‘பல்லுயிர்’ என்னும் பதத்தை எடுத்தாண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. ‘பல்லுயிர்’ என்பது உலகத்தில் உள்ள அனைத்து உயிர்களையும் குறிப்பதாக அமைவதும் குறிப்பிடத்தக்கது. தொல்காப்பியரது நூற்பாவானும் அதற்கான இளம்பூரணரின் விளக்கத்தானும் உணர்த்தப்படுவது யாதெனின் பண்டைத் தமிழ்ச் சான்றோரிடத்து உலகின்கண் உள்ள ஒட்டுமொத்த உயிரினங்களைப்பற்றிய நுட்பமான அறிவும் அவர்கள் அவற்றை இன்னின்னவகை என வகைப்படுத்தி அறிந்திருந்தனர் என்பதுமாம். இத்தகையதொரு அறிவுச் செயல்பாடு தொல்காப்பியர் காலத்திற்கு முன்பிருந்தே நிகழ்ந்து வந்தது என்பதை “நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே” எனும் தொல்காப்பியர் கூற்று பறைசாற்றுகின்றது. இது தொல்காப்பியருக்கு முன்பிருந்த பண்டைத் தமிழ்மக்களின் பல்லுயிரின அறிவிற்குச் சான்றாகும்.

தொல்காப்பியர் பல்லுயிரிகளை ஒன்றுமுதல் ஆறு வகையான அறிவுடைய உயிர்களாக வகைப்படுத்தியதுடன் அவ்வகைக்குள் இன்னின்ன உயிரினங்கள் அடங்கும் என சுட்டிக்காட்டியிருப்பது பல்லுயிரின ஆய்வின் ஆழத்தைக் காட்டுவதாக அமைகின்றது.

“நந்தும் முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே”[9]

எனும் நூற்பா இதைத் தெளிவிக்கும். சங்கு, நத்தை போன்ற சிறு உயிரினங்களையும் அறிவின் அடிப்படையில் பகுத்து வகைப்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கது. இத்தகைய ஆய்வு பிற்காலங்களில் நிகழ்ந்ததாக அறிதற்கில்லை என்பது குறிப்பிடத்தக்கது. தொல்காப்பியத்திற்குப் பின் வந்த இலக்கண நூல்கள் தொல்காப்பியத்தினை அடியொற்றி அதன் கருத்துகளையே எடுத்துக் கூறுவனவாக அமைந்திருப்பது கண்கூடு. தொல்காப்பிய கருத்துகளை மேலாய்வுக் களத்தில் சிந்தித்ததாகத் தெரியவில்லை. ஆனால் தமிழ் இலக்கிய உலகில் உயிர்ப்பகுப்பு பற்றிய கருத்துகள் இடம்பெறாமல் இல்லை.

உயிர்ப்பிறப்பு பற்றி விளக்கவந்த மணிவாசகர் பல உயிரினவகைகளை இருவகைத் தொகுப்பினுள் அடக்கிக்காட்டுகிறார்.

“புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்தி ளைத்தேன்”[10]

புல், பூண்டு, புழு, மரம், பல மிருகங்கள், பறவைகள், பாம்புகள், கல், மனிதராய், பேய், பூதக்கூட்டங்கள், அசுரர், முனிவர், வானவர் எனப் படைக்கப்பட்ட அசையாப் பொருள், அசையும் பொருள் எனும் இரு கூறுகளாக பகுத்துக்காணும் உயிர்ப்பகுப்பு சைவ சமயத்தாரிடம் இருந்ததை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. உயிரினங்களில் இடப்பெயர்வின்றி நிலையாக நிற்கும் பொருட்களைத் **தாவரம்** என்றும், இயங்கியற் பொருட்களைச் **சங்கமம்** என்றும் இருபகுப்பாகக் கூறப்படுவதைக் காணலாம்.

தமிழ்ச் சிந்தனை மரபில் உயிரினங்கள் நான்கு முறைமைகளில் பிறக்கும் தன்மையுடையன எனும் கருத்து நிலவுகிறது. முட்டையிலிருந்து பிறப்பவை, வேர்வையில் பிறப்பவை, விதையில் பிறப்பவை, கருப்பையில் பிறப்பவை எனும் நான்கு முறைமைகளில் ஏழு வகையான பிறவிகள் உண்டென்பர். தாவரங்கள், ஊர்வன, அமரர்கள், நீர்வாழ்வன, பறவைகள், நான்குகால்களை உடைய விலங்குகள், மானிடர்கள் எனம் ஏழுவகையான பிறவிகளில் எட்டு இலட்சம் வகையினவாகிய உயிரினங்கள் உலகில் தோன்றி அழிவதாகப் பிறப்புவகை பற்றிய சிந்தனை தமிழ் தத்துவமரபில் நிலைத்திருக்கின்றது. இதனை

''தோற்றியிடும் அண்டசங்கள் சுவேதசங்கள் பாரில்
துதைந்துவரும் உற்பீசம் சராயுசங்கள்
ஊற்றமிகு தாபரங்கள் பத்தொன்பது என்றும்
ஊர்வ பதினைந்து அமரர் பதினொன் றோடு உலவா
மாற்றருநீர் உறைவனநற் பறவைகள் நாற்கால்
மன்னியிடும் பப்பத்து மானுடர் ஒன்பதின்மர்
ஏற்றிஒரு தொகை அதனில் இயம்புவர்கள் யோனி
எண்பத்து நான்கு நூறாயிரம் என்று எடுத்தே''[11]

எனும் சிவப்பிரகாசப் பாடல் நமக்கு உணர்த்தும். இதில் கூறப்படும் அண்டசம், சுவேதசம், உற்பீசம், சராயுசம் என்பன முறையே முட்டையில் பிறப்பன, வேர்வையில் பிறப்பன, விதையில் பிறப்பன, கருப்பையில் பிறப்பன எனப் பொருள்படும். இப்பாடலின் வழி உயிரினங்களைத் தாவரங்கள், ஊர்வன, அமரர், நீர்வாழ்வன, பறவைகள், விலங்குகள், மனிதர் என வகைப்படுத்தியிருப்பதை அறியமுடிகிறது. இதில் கூறப்பட்ட ''அமரர்'' எனும் வகையினை ஒழித்து மற்றவை அறிவியலின் அடிப்படையிலும் ஏற்றுக்கொள்ளும் தன்மையில் அமைந்திருப்பதை உணரலாம். இப்பகுப்பினுள் ஒவ்வொரு பகுப்பினுள்ளும் பல்வேறு வகை உயிரினங்களைச் சுட்டுவதை ''தாபரங்கள் பத்தொண்பது, ஊர்ப பதினைந்து'' எனும் தொடர்கள் காட்டுகின்றன. சித்தர்களின் நெறியிலும் மேற்கூறப்பட்டவாறான கருத்தியல் காணப்படுகின்றது. இதனை

''ஊர்வ பதினொன்றாம் ஒன்பது மானுடம்
நீர்பறவை நாற்காலோர் பப்பத்துச் - சீரிய
பந்தமாந் தேவர் பதினா லயன்படைத்த

அந்தமில் சீர்த்தாவரநா லைந்து"[12]

எனும் வெண்பா உணர்த்தும். இப்பாடல் உயிரினங்களின் வகையினை எண்ணிக்கை அளவில் சுட்டுவதைக் காணமுடிகிறது. ஊர்வன பதினொரு இலட்சம், மானுடர் ஒன்பது இலட்சம். நீர்வாழ் உயிரினங்கள் பத்து இலட்சம், பறவையினங்கள் பத்து இலட்சம், நான்குகாலுடைய விலங்கினங்கள் பத்து இலட்சம், தேவர்கள் பதினான்கு இலட்சம், தாவரங்கள் இருபது இலட்சம் என உலகில் மொத்தம் எண்பத்து நான்கு இலட்சம் உயிரின வகைகள் காணப்படுவதாக மேற்கண்டபாடல் காட்டுகின்றது.

உயிரினங்களை இனம்கண்டு வகைப்படுத்தும் பாங்கு தமிழ்ச் சிந்தனைமரபில் இருந்து வந்துள்ளது என்பதைத் தொல்காப்பியர் தொடங்கி, மணிவாசகர், உமாபதிசிவனார், போன்ற அறிஞர்களின் பாடல்களின் மூலமும் அறியமுடிகின்றது.

**பல்லுயிரியத்தின் வகைகள்**

உலகில் காணப்படும் அனைத்துவகை வாழிடங்களிலும் வாழ்கின்ற அனைத்துவகை உயிரினங்களையும் குறிப்பதே பல்லுயிரியியம் ஆகும். சூழலியலாளர்கள் பல்லுயிரியத்தின் பல்வேறு வகைகளுள் இன்றியமையாதனவாக மூன்று வகை உயிர்ப்பன்மைய வகையினைச் சுட்டுகின்றனர். அவை பின்வருமாறு3.

1. மரபியற் பல்வகைமை (Genetic Diversity)
2. சிற்றினப் பல்வகைமை (Species Diversity)
3. சூழ்நிலைப் பல்வகைமை (Ecosystem Diversity)

ஒரே வகை உயிரினத்தில் காணப்படும் பல்வேறு வகை உயிரினங்களை மரபியற் பல்வகைமை சுட்டுகின்றது. பூனை வகையில் இடம்பெறுகின்ற பல்வேறுவகைப் பூனையினங்களை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். சங்கப் பாடல்களில் வருகின்ற கடம்ப மரத்தின் வகையாகச் சுட்டப்படுகின்ற கடம்பு, வெண்கடம்பு, செங்கடம்பு மரங்களை நாம் பிரித்தறிய முடிகின்றது. ஒரே வகை உயிரினத்தில் குறிப்பிட்ட மரபணு மாற்றத்தால் ஏற்படும் வேறுபாடு அவ்வுயிரினத்தில் மாறுபட்ட மற்றொன்றை உருவாக்குவது அல்லது பரிணமிப்பது மரபியற் பல்வகைமையுள் அடங்கும். இதில் அனைத்துவகை உயிரினங்களும் அடங்கும். மரபணுவினை வைத்து வகைப்படுத்துவதாக மரபியற் பல்வகைமை அமைகிறது.

சிற்றினப் பல்வகைமை என்பது ஒரு குறிப்பிட்ட இடத்தில் வாழும் சிற்றினங்களைக் குறிப்பதாக அமைகின்றது. எலி, கரப்பான் பூச்சி, தவளை என குறிப்பிட்ட சூழலில் காணப்படும் சிறு உயிரினங்களைக் குறிப்பதாக அமைகின்றது.

சூழ்நிலைப் பல்வகைமை என்பது ஒரு குறிப்பிட்ட சூழலில் வாழும் உயிரினங்கள் அச்சூழலில் காணப்படும் வளம் ஆகியவற்றைக் குறிக்கின்றது. பல்வேறுபட்ட வாழிடங்களில் அமையப்பெற்ற தாவரங்கள், விலங்குகள், நுண்ணுயிர்கள் என உயிர்கள்

வாழ்வதற்கான இயற்கைக் கூறுகள் அவற்றை அடிப்படையாகக் கொண்டு வாழும் உயிரினங்கள் என இருவகைக் கூறுகளையும் உள்ளடக்கியது சூழலியற் பல்வகைமை. தமிழ் இலக்கியங்களில் இடம்பெறும் நிலம், அதன் கருப்பொருட்கள் என இருவகைக் கூறுகளும் சூழலியற் பல்வகைமையுடன் ஒன்றியமையக்கூடியது எனலாம்.

**சங்க அகப்பாடல்களில் பல்லுயிரி வகைமை**

சங்க அகப்பாடல்களில் பல்வேறுபட்ட உயிரினங்கள் இடம்பெறுகின்றன. உயிரினங்களை மட்டும் வகைப்படுத்திக் காணும்பொழுது தொல்காப்பியரின் கருப்பொருள் பகுப்பு, அறிவடிப்படைப்பகுப்பு என இருநிலைகளில் வகைப்படுத்திக் காணவியலும். அறிவினடிப்படைப் பகுப்பின் அடிப்படையில் வகைப்படுத்த முற்படுவோமாயின் சங்க அகப்பாடல்களில் காணப்படும் அனைத்து உயிரினங்களையும் அவற்றின் அறிதற்திறனை இனம் காண அவற்றை முழுமையான ஆய்வக ஆய்விற்கு உட்படுத்தித் தெளிய நீண்டகாலப் பேராய்வினை நிகழ்த்த வேண்டிவரும். எனவே அறிவடிப்படைப் பகுப்பினை விடுத்து தொல்காப்பியரின் கருப்பொருள் வரிசைமுறை அடிப்படையில் வகைப்படுத்துவதே இவண் சிறந்ததாய் அமையும் என்பது ஆய்வாளர் கருத்து. இம்முறையே சூழலியலின் பல்லுயிரியத்துடன் ஒன்றிய ஆய்வு முறையாய் அமையும். அவ்வகையில் தொல்காப்பிய உயிரிக்கருப்பொருள் வரிசையில் அடங்கும் 'மா மரம் புள்' எனும் வரிசை அமைப்பில் சங்க அகப்பாடல்களில் பல்லுயிரி வகைமையினை ஆராயலாம். தொல்காப்பியரின் கூற்றுப்படி விலங்கு புள் இருண்டிற்கும் மையமாக மரம் அமைந்திருப்பது எண்ணற்பாலது. மனிதனின் உணர்வுடன் தொடர்புடைய உலகப்பொருட்களை வரிசைப்படுத்தும்பொழுது அவனது சூழலுடன் தொடர்புடைய உயிரிகளை அவர் வரிசைப்படுத்துகிறார். அவ்வரிசையில் மாவின் வாழ்க்கைக்கும், புள்ளின் வாழ்க்கைக்கும் அடிப்படையாக அமைந்த தாவரங்களைக் குறிக்கும் 'மரம் எனும் பதம் மையப்படுத்தப்பட்டுள்ளது என்பது ஆய்வாளரின் சிந்தனையாக அமைகின்றது. மனிதர்க்கும் ஏனைய உயிரினங்களுக்கும் தாவரங்கள் என்பவை இன்றியமையாப் பொருளாக அமைகின்றதை உணரலாம். இயற்கையின் அமைவுமுறையும் அவ்வகையிலேயே அமைந்துள்ளது. உலகில் முதன்முதலில் தோன்றியவை தாவரங்களே. தாவரங்களே தமக்குப்பின்னர் உருப்பெற்ற பிற உயிரினங்களுக்கு உணவளித்தன என்பது இயற்கையியலின் கூற்றாக அமைகின்றது. அதன் சிறப்புக்கருதியே விலங்கின வகையில் அடங்கக்கூடிய புள்ளினத்தை மாவைக் கூறி பின் மரத்தைக் கூறி அதன்பின் நிறுத்தியுள்ளார் எனலாம். மாவிற்கும் புள்ளிற்கும் இடையேயான தொடர்பினைத் தொல்காப்பியர் அறியாதவரல்லர். மாவும் புள்ளும் நிலைக்க மரமே நிலை என்பதனாலேயே தொல்காப்பியர் இவ்வாறு வரிசைப்படுத்துகின்றார். இவ்வரிசையின் அடிப்படையில் தாவரம், விலங்குகள், பறவைகள் என உயிரிகளை வகைப்படுத்தலாம். இது சூழலியல் கோட்பாட்டிற்குப் பொருந்துவதாகவும் அமைகின்றது.

**தாவரங்கள்**

தாவரங்களைப் பொதுவாக நிலையுயிரிகள் எனலாம். காரணம் தாவரங்கள் எங்கும் இடப்பெயர்வு செய்யாமல் ஓரே இடத்தில் நிலைத்திருப்பதுதான். உலக உயிரினத்

தொகுதிகளில் தாவரங்களுக்கேயான தனிச்சிறப்பு அவை தன்னிச்சையாக வாழும் இயல்புடையனவாகும். அஃதாவது உயிரினங்களுள் தாவரங்களே தமக்குவேண்டிய உணவினைத் தாங்களே தயாரித்துக் கொள்கின்றன. பிற உயிரினங்கள் அனைத்தும் தாவரங்களைச் சார்ந்து வாழ்கின்றன. ஊனுண்ணியான விலங்குகள் தமது உணவிற்காக பிற விலங்கினங்களைச் சார்ந்துள்ளன எனினும் அவை உண்ணும் விலங்கினங்கள் தம் உணவிற்காகத் தாவரங்களைச் சார்ந்துள்ளதை அறியலாம். அவ்வகையில் ஊனுண்ணிகளுக்கும் வாழ்வியல் அடிப்படையாக இருப்பது தாவரங்கள் ஆகும். இவ்வடிப்படையில் நோக்கும் பொழுது உயிரின வரிசையில் முதற்கண் நிற்பது தாவரங்கள் எனலாம். தாவரங்கள் சூழலியலின் முதன்மையான பொருளாக அமைகின்றன. காரணம் தாவரங்கள் பிற உயிரினங்களுக்கு உணவைத் தருவதுடன் அவற்றின் வாழிடத் தேவையையும் பூர்த்தி செய்வதாக உள்ளதுதான். சங்க இலக்கியங்களைப் பொருத்தமட்டில் பண்டைத் தமிழ்மக்கள் தாவரங்கள் குறித்து அதிகமாக அறிந்திருந்ததுடன் அவற்றுடன் நல்லுறவையும் பேணியுள்ளனர். மற்ற பிற உயிரினப் பதிவுகளைக் காட்டிலும் தாவரவகைப் பதிவுகள் மிகுந்து காணப்படுவது குறிப்பிடத்தக்கது. மேலும் பண்டைத் தமிழ்மக்கள் தாவரங்களின் ஒவ்வொரு அமைப்பையும் தனித்தனியாகக் கூர்ந்து நோக்கி அறிந்திருந்ததைச் சங்கப் பாடல் பதிவுகளால் அறியலாம். இது தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இருந்துவந்த நிலையாகும். தொல்காப்பியத்தில் இதற்கான சான்றுகளைக் காணமுடிகின்றது. தொல்காப்பியர் புல், மரம் இரண்டையும் வேறுபடுத்திக் காட்டுவதுடன் புல்லின் உறுப்புகளை,

“தோடே மடலே ஓலை என்றா
ஏடே இதழே பாளை என்றா
ஈர்க்கே குலையே நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர்”[13]

எனவும் மரத்தின் உறுப்புகளை,

“இலையே முறியே தளிரே தோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனையே உள்ளுறுத் தனையவை யெல்லாம்
மரனொடு வரூஉங் கிளவி என்ப”[14]

எனவும் சுட்டுவதைக் காணலாம். ‘சொல்லினர் புலவர்’,‘என்ப’ எனும் சொற்கள் தொல்காப்பியருக்கு முன்னமே உயிரியல் பற்றி அறிவு தமிழ் மண்ணில் நிலைபெற்றிருந்ததைக் காட்டுகின்றன. உயிரினம் அவ்வுயிரினத்தின் உறுப்புகளைக் கூர்ந்து நோக்கி வகைப்படுத்திய தமிழ்ச்சான்றோரின் அறிவு போற்றக்குரியது. இவ்வாறு தாவரங்களை அடிமரம், இலை, பூ, கிளை, மகரந்தத்துகள் என நுணுகி அறிந்து பதிவு செய்துள்ளதைச் சங்கப்பாடல்களின் மூலம் அறியமுடிகின்றது. சங்க அகப்பாடல்களைப்

பொறுத்தமட்டில் அவற்றில் காணப்படும் தாவர உயிரிகளை அவற்றை வாழிடச்சூழலின் அடிப்படையில் நிலத்தாவரம், நீர்த்தாவரம் என வகைப்படுத்தலாம். அவற்றின் தன்மையின் அடிப்படையில் மரம், செடி, கொடி, புல் என்று இனம் பிரித்துக் காணும் வகையில் பல்வேறுபட்ட தாவரங்களைப் பற்றிய குறிப்புகளைக் காணமுடிகின்றது.

**மரங்கள்**

சங்க அகப்பாடல்களில் பல்வேறுபட்ட மரவகைகள் சுட்டப்பட்டுள்ளன. மரங்கள் பொதுவாக மற்ற தாவரவகை உயிரிகளைக் காட்டிலும் பெரியனவாக வளர்வன. பலவகைகளைத் தன்னகத்தே கொண்டன. மரங்களில் சில சிறிய அளவிலேயே வளர்கின்றன. அவற்றைச் சிறுமரங்கள் எனச் சுட்டுகின்றோம். அவ்வகையில் சங்க அகப்பாடல்களில் பெருமரங்கள், சிறுமரங்களை உள்ளடக்கிய பல பதிவுகள் காணப்படுகின்றன. முற்பதிற்கும் மேற்பட்ட மரவகைகள் சுட்டப்பட்டுள்ளன. அவற்றைப் பின்வருமாறு அறியலாம்.

**அகில்**

சங்க அகப்பாடல்களில் அகில் என்ற பெயர் நேரடியாக காணப்படுகின்றது. அகில் நறுமணப் பொருளாகத் தமிழ்மக்களால் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்தநிலையில் மற்றொரு நறுமணப்பொருளான சந்தனத்துடன் சேர்த்தே பதிவுசெய்யப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. ஐங்குநுறூறு இதனைப் ‘பூழில்’ எனவும் குறிஞ்சிப்பாட்டு ‘காழ்வை’ எனவும் சுட்டுவதை உரையாசிரியர்களின் உரைவழி அறியமுடிகின்றது.

“............................ சாரல்

அகில்சுடு கானவன் உவல்சுடு கமழ்புகை”[15]

“சாந்த மரத்த பூழி லெழுபுகை”[16]

“ஆரம் காழ்வை கடியிரும் பென்னை”[17]

“குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்”[18]

எனும் பாடலடிகளால் அகில் மலைப்பகுதியில் காணப்படும் மரம் என்பதை உணரலாம். சாந்தம், ஆரம் எனும் சொற்கள் சந்தனத்தை சுட்டுவனவாகும். சந்தனமும் அகிலும் சேர்ந்தே வருதை மேற்கண்ட பாடலடிகளில் காணலாம். இது பெருமரமாக வளரக்கூடியதாகும்.

**அசோகமரம்**

அசோகமரம் அசோகம், செயலை, பிண்டி என்ற பெயர்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. குறிஞ்சித்திணைப் பாடல்களில் பெரும்பான்மையும் சுட்டப்படுவதால் இது மலைப்பகுதியில் காணப்படும் மரவகை என்பது விளங்குகின்றது. இதனை,

“மணிகெழு நெடுவரை அணிபெற நிவந்த

செயலை அந்தளிர் அன்ன”[19]

“வயலையஞ் சிலம்பின் றலையது

செயலையம் பகைத்தழை”[20]

எனும் பாடலடிகளால் அறியலாம். தீயின் நிறம் போன்ற சிவந்த நிறம் கொண்ட பூங்குழைகளையும், அரக்கு ஊட்டியது போன்ற தளிரையும் உயர்ந்த கிளைகளையும் பெற்றுக் காணப்படுவதை,

“எரியவிர் உருவின் அங்குழைச் செயலை”[21]

“ஊட்டி அன்ன ஒண்தளிர்ச் செயலை

ஓங்குசினைத் தொடுத்த ஊசல்”[22]

ஆகிய பாடலடிகளின் வாயிலாக உணரலாம். உயர்ந்தோங்கிய கிளையில் ஊசல் கட்டி ஆடும் தன்மை சுட்டப்படுவதிலிருந்து இது வலுவான கிளைகளைக் கொண்டது எனத் தெரிகின்றது. இன்று வலுவில்லாத தொங்கிய நிலையில் கிளைகள் காணப்படும் மரத்தினை ‘அசோகு’ எனக் குறிக்கும் நிலை சங்க அகப்பாடல் செய்திகளுக்கு முரணாக அமைவதைக் காணமுடிகின்றது. தற்காலத்தில் அசோகு என்று சுட்டப்படும் மரம் நெட்டிலிங்க மரமாகும். இதனை, “இதனுடைய ஆங்கிலப்பெயர் அசோகமரம் (ASOKA Tree) என்பதாகும். இவற்றையறியாத இற்றைநாளைய விரிவிலா அறிவினர் எல்லாம் போலியால்தியா லாஞ்சிபோலியா என்ற நெட்டிலிங்கமரத்தை அசோகு என்று தவறாகக் கூறிப்பரப்பிவருவதோடன்றி, களஞ்சியங்களிலும் எழுதியுள்ளனர்”[23] எனும் கு.சீநிவாசன் கருத்தால் அறியலாம். சிவந்த மலர்க்கொத்துகளுடன் சிவந்த தளிர்களைக் கொண்ட கிளைபரப்பிய மரமே அசோக மரமாகும். இதனை சராக்கா இண்டிகா என தாவரநூலோர் சுட்டுவர்.

**அத்தி**

சங்க அகப்பாடல்களில் அத்தி மரத்தினது பழம் சுட்டப்படுகின்றது. இங்கு அத்தி என்பது அதவம் எனச் சுட்டப்பட்டுள்ளதை உரையாசிரியர்களின் உரைவழி அறிய முடிகின்றது. அத்திப் பழம் மென்மையானதும், சிவந்தநிறமுடையதும்,

“அதவத் தீங்கனி அன்ன செம்முக”[24]

“ஆற்றய லெழுந்த வெண்கோட் டதவத்

தெழுகுளிறு மிதித்த வொருபழம் போல”[25]

எனும் பாடலடிகளில் காட்டப்படுகின்றது. அத்திமரம் நீர்ப்பாங்கான நிலைகளில் வளரும் தன்மையுடையதென்பது ஆற்றின் அருகில் இருக்கும் நிலையில் சுட்டப்படுவதால் அறியவருகின்றது.

**ஆர் - ஆத்தி**

ஆத்திமரம் தற்காலத்தில் காட்டாத்தி, அத்தி, மந்தாரை என்ற பெயர்களில் குறிக்கப்படுகின்றது. சங்க அகப்பாடல்களில் இது ஆர், ஆத்தி என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளதை,

''அடும்பமர் ஆத்தி நெடுங்கொடி அவரை''[26]

''அம்புகொண் டறுத்த ஆர்நார் உரிவையிற்''[27]

எனும் பாடலடிகளால் அறியலாம். இது சிறுமரவகையைச் சேர்ந்ததாகும்.

**ஆலமரம்**

ஆலமரம் தற்காலத்தும் எளிமையாக அறிந்துகொள்ளும், அனைவராலாலும் தெரிந்திருக்ககூடியதுமான மரமாக உள்ளது. சங்க அகப்பாடல்களில் ஆலமரத்தின் விழுது, காய், பொறியையுடைய அதன் அடிமரம் ஆகியன காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. இதன் விழுது 'வீழ்'[28] என்று சுட்டப்படுள்ளது. இது பெரிய மரமாக வளர்ந்திருப்பதைக் காணலாம். பழைமையான மரங்கள் சில பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

**இருப்பை மரம்**

இருப்பை எனும் மரம் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இருப்பை என்பது மரம் என்பதை ''வளிபொரு நெடுஞ்சினை''[29]. ''கருங்கோட்டு இருப்பை'',[30] ''ஓங்குசினை இருப்பை'',[31] ''பொகுட்டரை இருப்பை''[32] என்ற தொடர்கள் காட்டுகின்றன. சங்க அகப்பாடல்களில் இதன் வெண்மை நிறமான பூ மிகுதியாகச் சுட்டப்பட்டுள்ளது.

**இலவம்**

இலவமரம் உயர்ந்து நீண்ட கிளைபரப்பி வளரும் பெரிய மரமாகும். இது இலவு, இலவம் என்ற பெயர்களில் சுட்டப்படுகின்றது. சங்ககாலத்தில் சுட்டப்படுவதும் தற்காலத்தில் சுட்டப்படுவதும் ஒன்றாகவே இருப்பது குறிப்பிடத்தக்கது. இலவமரத்தின் பூவினை, ''எரிப்பூ''[33] என ஐங்குறுநூறு சுட்டுகின்றது. எரிப்பூ என்பது தீயழலின் சிவந்த நிறத்தைச் சுட்டுவதாகும். இதனை நடராசன் அவர்கள் 'எரிப்பூ என்பது சிவப்புநிறப்பூ என்பதாகும்'[34] என விளக்கியுள்ளார். இலவமரம் இலைகளை உதிர்த்த நிலையில் பூக்கள் நிறைந்து காணப்படும். இத்தன்மை,

''இலையில மலர்ந்த வோங்குநிலை யிலவம்''[35]

''இலையில மலர்ந்த முகையில் இலவம்''[36]

எனும் சங்க அகப்பாடல்களில் சுட்டப்படுவதைக் காணலாம். இது இலவமரத்தின் குணம் என்பதை ''இலையில்லாமலிருக்கும் வெறுங்கிளையில் சிவந்த பூக்கள் தோன்றுவது இலவமரத்தின் முக்கிய குணமாகும்''[37] என்கிறார் பி.எல்.சாமி. சில பாடல்களில்

இலவமரத்தின் முட்கள் குறிப்பிடப்படுகின்றன. இம்மரம் வறட்சியான பகுதிகளிலும் காணப்படும். சங்க அகப்பாடல்களில் பாலைத்தினைப் பாடல்களில் குறிப்பிடப்படுள்ளது.

**இற்றிமரம்**

இற்றி எனப்படும் குறுகிய மரம் காட்டப்படுகின்றது. இம்மரம் புல்லிய நீண்ட விழுதைக் கொண்டமைந்துள்ளது. இதன் விழுதை ‘‘நெடுவீழ்’’[38] என்றும் ‘‘புல்வீழ்’’[39] என்றும் சங்க அகப்பாடல்கள் குறிக்கின்றன. இது பொலிவற்ற கிளைகளையும் குறுகிய அடியையையும் கொண்ட மரம் என்பதை,

‘‘.................. புல்லென் உலவைக்

குறுங்கால் இற்றி’’[40]

எனும் அகநானூற்றுப் பாடல் காட்டுகின்றது. இது மலையில் உள்ள கல்லின் மீது வெள்ளிய வேரைப் படரவிட்டு நின்றதைக் குறுந்தொகை நூற்றாறாவது பாடல் காட்டுகின்றது.

**ஈத்தமரம்**

ஈத்தமரம் சங்க அகப்பாடல்களில் ‘ஈந்து’ என்ற பெயரில் சுட்டப்படுகின்றது. ஈத்தமரத்தின் காய்கள் முதலில் பசிய நிறத்தில் தோன்றிப்பின் செம்மை நிறமடைகின்றன. பின் செந்நிறக்காய்கள் கனிந்து கருமைநிறமடைகின்றன. இதனை நற்றிணை,

‘‘பைங்காய் நல்லிடம் ஒரீஇய செங்காய்க்

கருங்களி ஈந்தின் வெண்புறக் களரி’’[41]

எனும் பாடலடிகளில் காட்டுகின்றது. ஈந்த மரம் வெள்ளிய புறத்தை உடையது என்பதையும் இப்பாடலடிகள் சுட்டுகின்றன. இம்மரம் பாலை மற்றும் குறிஞ்சிப்பகுதியில் காணப்படுவதை சங்க அகப்பாடல் பதிவுகள் காட்டுகின்றன.

**உகாய் மரம்**

உகாய் மரம் குறுகிய அடிமரத்தினை உடையது. இதனை ‘‘புல்லரை யுகாஅய்’’[42] என்றும் ‘‘புன்கா லுகாஅய்’’[43] என்றும் குறுந்தொகை சுட்டியுள்ளது. உகாய் மரத்தின் கனியானது காசினை ஒத்ததாக காணப்படுவது சுட்டப்பட்டுள்ளது. இதன்காய் சிறியதாக இருக்கும் என்பது ‘புன்காய்’ எனும் நற்றிணை அறுபத்தாறாம் பாடல் சொல்லாட்சியால் விளங்கும்.

**உடைமரம்**

சங்க அகப்பாடல்களுள் உடை என்னும் சொல் நற்றிணை இருநூற்று எண்பத்தாறாம் பாடலில் பயின்று வருகின்றது. உரையாசிரியர்கள் இதனை உடைமரம் என விளக்கியுள்ளனர். சங்க இலக்கியத் தாவரங்களை வகைப்படுத்திக்காட்டிய கு.சீநிவாசன் அவர்கள் தமது உடை மரம் பற்றிய விளக்கத்தில் மேற்காட்டிய நற்றிணைப்

பாடல் காட்டப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. உடை மரம் பற்றி கு.சீநிவாசன் ‘‘உடை என்பது சிறுமரம். கிளைகளில் உள்ள இலைக்கணுவில் எல்லாம் நீண்ட இரு முட்கள் இருக்கும். இதன் இலை மிகச்சிறியது; இதன் முள்ளைச் ‘சுரையுடை வால்முள்’ என்று கூறுவர்’’[44] என விளக்கியுள்ளார்.

**ஓமைமரம்**

ஓமை என்னும் மரங்கள் நிறைந்து காடாகக் காட்சியளித்ததை ‘ஓமையம் பெருங்காடு’ என குறுந்தொகை குறித்துள்ளது[45] பாங்கர் என்பதும் இம்மரத்தைக் குறிப்பதாக கு.சீநிவாசன் குறிப்பிடுகின்றார்.[46] யானை ஓமைமரத்தைக் குத்திச் சிதைத்ததை,

‘‘பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை’’[47]

எனும் நற்றிணைப் பாடலடியால் அறியலாம். சங்க அகப்பாடல்கள் பலவற்றில் ஓமை மரத்தின் அடிமரம், கிளை, அதன் வாழிடம் ஆகியன காட்டப்படுள்ளன.

**கள்ளி**

கள்ளி எனும் தாவர இனத்தில் பலவகை உண்டு. அவற்றுள் சிலவே சிறு மரம்போல் கிளைகிளையாக உயர்ந்து வளரும் தன்மை கொண்டன. களர் நிலங்களிலும் கள்ளி வளரும் தன்மை கொண்டது. கவை போன்ற குறுகிய முள்ளினைக் கொண்டது. இதனை,

‘‘கவைமுட் கள்ளிக் காய்விடு கடுநொடி’’[48]

‘‘குண்டைக் கோட்ட குறுமுள் கள்ளி’’[49]

‘‘கள்ளியம் பறந்தலைக் களர்தொறுங் குழீஇ’’[50]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. பல்வகைக் கள்ளி வகைகளில் சங்க அகப்பாடல்கள் எவ்வகைக் கள்ளியைக் காட்டுகின்றனவென்ற தெளிவு கிடைக்கப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**காஞ்சிமரம்**

நீர்ப்பாங்கான இடங்களில் வளரும் இயல்புடையது காஞ்சிமரம். இவ்வாறான சூழலில் காஞ்சிமரங்கள் காணப்பட்டதை,

‘‘கழனியம் படப்பைக் காஞ்சி யூர’’[51]

‘‘தாதார் காஞ்சித் தண்பொழில் அகழ்யாறு’’[52]

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. காஞ்சிமரப்பூவின் தாது நிறைந்ததன்மை குறுகிய அடிமரம் போன்றவை பாடல்களில் காட்டப்படுகின்றன.

**காயா**

காயா என்பதை ‘குற்றுச்செடி’ என்கிறார் கு.சீநிவாசன்[53].இதனை மரம் என்கிறார் மா. இராசமாணிக்கனார்.[54]காயா குறுகிய கிளைகளை உடையது என்பதை,

‘‘பன்மலர்க் காயாங் குறுஞ்சினை கஞலக்’’[55]

எனும் பாடலடி காட்டுகின்றது. காயா நீல நிறப் பூக்களைக் கொண்டது. இது மணியுடன் ஒப்பிட்டுக் காட்டப்படுகின்றது. காயாவைப் பற்றி இரா.காஞ்சனா அவர்கள் ‘‘நிலையியல் உயிர்நூலார் கருத்துப்படி காயா மெமிசிலான் எடுல் (Memecylon edule) எனும் குறுமரமாகும்’’[56] எனச் சுட்டுகின்றார். மேலும் அவர் ‘‘காயா இலங்கையிலும் இந்தியாவின் கிழக்கு மேற்குக் கரையிலும் அதிகமாக வளரும் குத்துச்செடி சில இடங்களில் குறுமரமாகவும் காணப்படும்’’[57] எனவும் கூறுகின்றார். உரையாசிரியர்கள் இதனை மரம் என்றும் செடி என்று இருவேறு நிலையில் பொருளுரைக்கின்றனர். இவற்றின் அடிப்படையில் நோக்கும்பொழுதுகாயா என்பது குற்றுச்செடியாக வளர்வதும் சில இடங்களில் மரம்போல் தழைத்து குறுமரமாகக் காட்சிதரும் என்பதும் விளங்குகின்றது.

**குமிழம்**

குமிழத்தை புதர்ச்செடி என்றும் சிறுமரம் என்றும் கொள்ளலாம். இது சிறிய மரமாக இருத்தலின் மான் தீண்டியவுடன் கனிகள் உதிரும் தன்மையுடன் அமைந்திருப்பதை,

‘‘உழைமான் அம்பிணை தீண்டலின் இழைமகள்
பொன்செய் காசின் ஒண்பழந் தாஅங்
குமிழ்தலை மயங்கிய குறும்பல் அத்தம்’’[58]

எனும் நற்றிணைப் பாடலடிகள் கூறுகின்றன. பெரிய மரமாக இருப்பின் இவ்வாறு நிகழ்தற்கில்லை. இதன் கனிகளின் மூக்கு வளைந்திருப்பதை,

‘‘அத்தக் குமிழின் கொடுமூக்கு வளைகனி’’[59]

எனும் பாடலடி காட்டுகின்றது. சங்க அகப்பாடல்களில் இது குமிழ் என்று சுட்டப்படுகின்றது. இது மலைப்பாங்கான பகுதிகளில் காணப்படும்.

**குரவமரம்**

குரவமரம் தற்காலத்தில் குருந்தமரம் எனச் சுட்டப்படுகின்றது. சங்க இலக்கியத்தின் குரவம், குருந்து, குரா, குரவு, என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது. இது சிறுமரமாகவளரும் இயல்புடையது. குராமரம் குறுகியது என்பதை,

‘‘குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ’’[60]

எனும் பாடலடி காட்டுகின்றது. குறிஞ்சிப்பாட்டில் குரவம் குருந்து இரண்டும் தனித்தனியே சுட்டப்பட்டுள்ளதை,

''பயினி வானி பல்லிணர்க் குரவம்''[61]

''மயிருங் குருந்தும் வேங்கையும் பிறவும்''[62]

எனும் பாடலடிகளால் உணரலாம். இதனால் குரவையும் குருந்தும் வேறுவேறு எனக் கபிலர் கொண்டது விளங்கும். மா.இராசமாணிக்கனாரும் குரவம் குருந்து இரண்டையும் தனித்தனியே விளக்குகின்றார்.[63] இதனால் இவ்விரண்டும் வேறுவேறு என உணரலாம். கு.சீநிவாசன் அவர்கள் இரண்டையும் ஒன்றாகக் காட்டுவது மயக்கத்தைக் தருகின்றது[64] இது ஆராயற்பாலது.

**கொன்றை**

கொன்றை மரத்தை பல சங்க அகப்பாடல்கள் குறித்துள்ளன. கொன்றையின் மலர்கள் பொன்நிறத்தில் காணப்படும். மேலும் இதன் பூக்கள் மேலிருந்து கீழாகச் சரம் போன்ற குழையில் தொங்கும் தன்மையுடையன. இதனை,

''பொன்வீக் கொன்றையொடு''[65]

''................ தூங்கிணர்க் கொன்றை''[66]

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன. தொங்கும் இணரை ''தூங்கிணர்' என்றது குறிஞ்சிப்பாட்டு. கொன்றையின் பழம் தனித்த வடிவமைப்புடையது கரிய நிறத்தில் குழல் போன்ற வடிவமைப்பில் காணப்படும். இதனை,

''கொன்றை யஞ்சினைக் குழற்பழங் கொழுதி''[67]

எனும் அகநானூற்றுப்பாடல் காட்டுகின்றது. இப்பழத்தின் அமைப்பு மேலும் பல பாடல்களில் சுட்டப்படுவதை சங்க அகப்பாடல்களில் காணமுடிகின்றது.

**கோங்கம்**

கோங்கமரம் சங்க அகப்பாடல்களில் கோங்கம், கோங்கு என்ற பெயர்களில் சுட்டப்படுகின்றது. சங்க அகப்பாடல்களில் கோங்கு பற்றிக் காணப்படும் செய்திகளில் பெரும்பான்மையும் இதன் பென்னிறப்பூ, அதன்முகை, குழை, பூவிதழ்கள் ஆகியன காட்டப்படுள்ளன[68] இது பற்றிக் காட்டப்படும் சில பாடல்களில் பூ மட்டுமே காட்டப்படுவதன் மூலம் இப்பூவின் சிறப்பினை உணரலாம்.

**சந்தனமரம்**

சந்தன மரத்தை சங்க அகப்பாடல்கள் ஆரம், சாந்தம், சாந்து என்ற பெயர்களில் குறிக்கின்றன. இது மலைப்பகுதியில் காணப்படுவதாக சுட்டப்படுகின்றது. சந்தனமரம் சுட்டப்படும் பாடல்கள் பெரும்பான்மையும் குறிஞ்சித் திணையில் அமைந்துள்ளன.

“சாந்துதலைக் கொண்ட ஓங்குபெருஞ் சாரல்”[69]

“பெருமலை விடரகம் நீடிய சிறியிலைச்

சாந்த மென்சினை தீண்டி”[70]

“சூருடை யடுக்கத் தாரங் கடுப்ப”[71]

எனும் பாடலடிகளில் சாந்து, சாந்தம், ஆரம் என்ற பெயர்களில் சந்தனமரம் சுட்டப்படுவதைக்காணலாம். இது நன்கு உயர்ந்து வளரும் தன்மையுடையது. பிற தாவரங்களின் வேர்களுடன் இணையும்படியாக வேர்பரப்பி, அவற்றிடமிருந்து தனக்குத் தேவையானதை உரிஞ்சி வாழும் ஒட்டுண்ணி மரமாக இது அமைகின்றது.

**செருந்தி**

செருந்தி மரத்தின் பூ, இலை போன்றவை சங்க அகப்பாடல்களில் விளக்கப்படுகின்றன. இது சிறுமர வகையைச் சேர்ந்தது எனலாம். சங்க அகப்பாடல்களில் இது பெரும்பான்மையும் நெய்தற்திணையில் சுட்டப்படுவதால் இது நெய்தல் நிலத் தாவரம் எனத்துணியலாம். இதன் இலையினைப் “பாசிலைச் செருந்தி”[72] என ஐங்குறுநூறு சுட்டுகின்றது. இம்மரம் “பழுப்பு நிறமான பட்டையையும் செம்பழுப்பு நிறமான மரத்தையும் உடையது”[73] என்கிறார் கு.சீநிவாசன்.

**ஞாழல்**

சங்க அகப்பாடல்களில் ஞாழல் பற்றிய பாடல்கள் யாவும் நெய்தல் திணையில் அமைந்துள்ளன. மேலும் இது கடற்கரையில் அலைதொடுமளவிற்கும், மணல் பரப்பிலும், கழிமுகச் சோலையிலும் இருப்பது காட்டப்பட்டுள்ளது. இதனால்,‘ஞாழல்’ கடற்கரைப் பகுதியில் காணப்படும் தாவரம் என்பது விளங்குகின்றது.

“கொழுநிழல் ஞாழல் முதிரிணர் கொண்டு”[74]

“செவ்வீ ஞாழல் கருங்கோட் டிருஞ்சினை”[75]

எனும் பாடலடிகளில் ‘கொழுநிழல் ஞாழல்’, ‘ஞாழல்கருங்கோடு’ எனும் தொடர்களில் கொழுவிய நிழலை உடைய ஞாழல் என்றும் கரிய கோட்டினை உடைய ஞாழல் என்றும் சுட்டப்பட்டுகின்றது. இதன்வழி ஞாழல் கொழுநிழலைத் தருமளவிற்கு பெரிய அளவுடையது என்பதும் கரிய கிளையை உடையது என்பதும் இது மரத்தின் அமைப்புடையது என்பதும் விளங்குகின்றது. ‘ஞாழல் ஓங்குசினை’[76] என்பதும் இதனைக் காட்டுகின்றது. இதனால் ‘ஞாழல்’ மரவகை என்பதைத் துணியலாம். இதன் பூக்கள் பல சங்க அகப்பாடல்களில் சுட்டப்படுகின்றது.

**ஞெமை**

ஞெமை என்ற மரம் பற்றி சில சங்க அகப்பாடல்களில் பதிவாகியுள்ளன. ஞெமை என்பது மரவகை என்பதை,

“மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து

அலந்தலை ஞெமையத்து இருந்த குடிஞை”[77]

“………………….. சேணோங்கு

அலந்தலை ஞெமையத்து”[78]

எனும் பாடலடிகளில் காணலாம். மரங்கள் நிறைந்த காட்டுப் பகுதியில் காய்ந்த ஞெமையின் மீது பேராந்தை இருப்பது காட்டப்படுகின்றது. மேலும் ‘சேணோங்கு அலந்தலை ஞெமை’ எனும் தொடர் ‘உயர்ந்த காய்ந்த ஞெமை’ எனப் பொருள்படுகின்றது. சேணோங்கு எனும் சொல் ஞெமை மரம் உயர்ந்து காணப்பட்டதைக் குறிக்கின்றது. இதனால் இது மரவகை என்பது தெளிவாகின்றது.

**தாழை**

தாழம்பூ இதனைச் சிறுமர வரிசையில் அடக்கலாம். புதர்போன்று அடர்ந்து காணப்படும். இதனைச் சங்க அகப்பாடல்கள் ‘தாழை’, ‘கைதை’ என்ற பெயர்களில் சுட்டுகின்றன. தாழையின் இலையானது முட்களை உடையதாகும். இவ்வமைப்பு “முள்ளிலைத் தாழை”[79] என்று சுட்டப்படுகின்றது. மேலும் இது சுரவின் கோட்டோடு ஒப்பிட்டுக் காட்டப்படுகின்றது. தாழை மரத்தில் விழுதுகள் காணப்படும் இது “வீழ்த்தாழை”[80] என்றும் “வீழ்தாழ் தாழை”[81] என்றும் குறிக்கப்படுகின்றது. தாழையின் பூ, மடல், வளைந்த அடிமரம், என தாழை மரத்தின் அமைவு பல பாடல்களில் தெளிவுறக் காட்டப்பட்டுள்ளன.

**தில்லை**

தில்லை என்பது கழிமுகப் பகுதிகளில் காணப்படும் மரவகை ஆகும். இம்மரங்கள் தனித்த காடுபோன்று பெருகிக் காணப்படும். பெருமரமாக அல்லாமல் சிறிய மரமாக வளரும் தன்மையுடையது. இம்மரம் முண்டகம் எனச் சுட்டப்படும் கழிமுள்ளியுடன் சேர்ந்து காணப்பட்டதையும், இது ஊருக்கு வேலியாய் அமைந்ததையும்,

“மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்”[82]

“தில்லைவேலி இவ்வூர்”[83]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. இம்மரம் எப்போதும் பசுமையாகக் காணப்படும் என்கின்றனர் தாவர நூலோர்.

**தேக்கு**

தேக்கு மரம் உயர்ந்து உறுதித்தன்மையுடன் வளரக்கூடியது. இதன் இலை அகன்று பெரியதாகக் காணப்படும். இதனை “தேக்கின் அகலிலை”[84] என அகநானூறு சுட்டுகின்றது. இத்தகைய அகன்ற இலையை மனிதன் முதன்முதலில் உணவிட்டு உண்ணப் பயன்படுத்தினான் என்பதை “நம் முன்னோர்கள் உண்ணுங்கலங்களாக இலைகளைப் பயன்படுத்தி கொண்டனர். தேக்கு இலைதான் முதலில் உண்கலமாகப்

பயன்பட்டது. பின்பு வாழை இலை, தாமரை இலை, ஆலிலைகளைத் தைத்தும் பயன்படுத்தினர்''[85] எனும் கூற்றால் அறியலாம். தேக்குமரம் மலைப்பகுதியில் நிறைந்து காணப்படுவதை ''தேக்கமல் அடுக்கத்து''[86] எனும் தொடர் காட்டுகின்றது. இன்று தனித்து தோட்டங்களிலும் தேக்கு வளர்க்கப்படுகிறது.

**நரந்தம்**

நரந்தம் என்பது நாரத்தையைச் சுட்டுகின்றதென்பதை உரையாசிரியர்களின் உரைவழி உணரமுடிகின்றது. கபிலர் தமது குறிஞ்சிப்பாட்டின் பூக்களின் தொகுப்பில்,

''நரந்தம் நாகம் நள்ளிருள் நாறி''[87]

என நரந்தத்தைக் குறிப்பிடுகின்றார். இதன் பூக்களின் மணம் மகளிர் தம் கூந்தலில் மணப்பதாகச் சில சங்க அகப்பாடல்கள் காணப்படுகின்றன.

**நாவல்**

நாவல் மரம் உயர்ந்து கிளைத்து வளரும் பெருமரமாகும். இதன் கனி கருமை நிறத்தில் காணப்படும். சங்க அகப்பாடல்களில் நாவல் மரம் பற்றிய பதிவுகளை

''பொங்குதிரை பொருத வார்மண லடைகரைப்
புன்கால் நாவற் பொதிப்பற இருங்கனி''[88]

''அகலிலை நாவல் உண்டுறை உதிர்த்த''[89]

போன்ற பாடல்களில் காணமுடிகின்றது. கடற்கரைப் பகுதியில் நாவல் மரம் காணப்பட்டதை இப்பாடல்கள் காட்டுகின்றன.

**நுணாமரம்**

நுணாமரம் பல்வேறு இடங்களில் பல பெயர்களில் சுட்டப்படுகின்றது. நுணா என்றும், மஞ்சணத்தி எனறும், கொங்குநாட்டின் சில பகுதிகளில் சாயமரம் என்றும் சுட்டப்படுகின்றது. சங்க அகப்பாடல்களில்,

''கருங்கா ணுணவங் கமழும் பொழுதே''[90]

''கருங்கால் நுணவின் பெருஞ்சினை வான்பூ''[91]

என்ற பாடலடிகளில் சுட்டப்படுள்ளது. இது நீண்டுயர்ந்து வளராத சிறுமரமயினும் நல்லநிழல் கொடுக்குமளவிற்கு உயர்ந்து வளரும் தன்மையுடையது.

**நெல்லி**

நெல்லி பற்றிய பல சங்க இலக்கியப்பாடல் பதிவுகள் காணப்படுகின்றன. இது நெல்லி என்ற பெயரிலேயே சுட்டப்பட்டுள்ளது. பொதுவாக நெல்லியில் சிறுநெல்லி, பெருநெல்லி என்ற இருவகையினைக் காண்கிறோம். பெருநெல்லியை மலைநெல்லி என்றும் சொல்வதுண்டு. இவ்விருவகைப்பட்ட நெல்லியும் சங்க அகப்பாடல்களில்

காட்டப்படுள்ளன. பெருநெல்லியின் இலை மிகவும் நுண்ணியதாக இருக்கும். இதனை "நுண்ணிலை"[92] என அகநானூறு குறிக்கின்றது. இது கசப்புச் சுவையுடன் இருக்கும். சிறு நெல்லி புளிப்புச் சுவையுடையதாக இருக்கும். இதனை "நெல்லி யம்புளி"[93] "நெல்லி அம்புளித் திரள்காய்"[94] எனும் குறிப்புகளால் உணரலாம்.

**நொச்சி**

நொச்சி புதர்ச்செடி போன்று வளரும் எனினும் இது கிளைபரப்பி மரம் போன்று காட்சிதரும். இதனைச் சிறுமரமெனக் கூறலாம் என்கிறார் கு.சீநிவாசன்.[95] நற்றிணையில் நொச்சியானது மரமாகவே காட்டப்படுவதை,

"மனைமர நொச்சி மீமிசை மாச்சினை"[96]

எனும் பாடலடியால் உணரலாம். இது இல்லங்களுக்கருகில் இருந்ததையும் இதன் இலைகள் மயிலின் அடிபோன்று கூட்டிலையாக இருந்ததையும் பாடல்கள் காட்டுகின்றன.

**பலா**

பலா பற்றிய பதிவுகள் பல சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றன. இவற்றில் பலா மரத்தின் இலை, வேரில் பலாப்பழம் தொங்கும் நிலை, விழுதில் பலாப்பழம்,தொங்கும் நிலை, பலாச்சுளை, மலைப்பகுதியில் பலாமரம் வளர்தல் போன்ற செய்திகள் அடங்குகின்றன. ஆசினிப்பலா என்று அழைக்கப்படுகின்ற ஒருவகை மரம் சங்க அகப்பாடல்களில் ஆசினி என்ற பெயரில் சுட்டப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. இதனை,

"குடக்காய் ஆசினிப் படப்பை"[97]

"நெடுங்கால் ஆசினி ஒடுங்காட் டும்பர்"[98]

எனும் பாடலடிகளால் அறியலாம். 'நெடுங்கால் ஆசினி' என்பதற்கு ந.மு வேங்கடசாமி நாட்டார் 'நீண்ட அடியையுடைய ஈரப்பலா மரம்' என உரை கூறுகின்றார். இதனால் இது பலாவின் வகையினதாகிய மரம் என்பது விளங்குகின்றது.

**பனைமரம்**

பனைமரம் என்பது பெண்ணை, பனை என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது. பனை மரத்தின் கரிய நிறம், கருக்குடைய அதன் மடல் தோடுடன் கூடிய குரும்பை ஆகியன சுட்டப்படுவதை,

'மையிரும் பனைமிசை"[99]

"பனைத்தலைக் கருக்குடை நெடுமடல்"[100]

"பெருமடற் பெண்ணைப் பிணர்தோட்டுப் பைங்குரும்பை"[101]

எனும் பாடலடிகளின் வாயிலாக அறியலாம். பனை பற்றிய பதிவுகள் சங்க அகப்பாடல்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**பாதிரி**

பாதிரி மரம் பெருமரமாக வளரக்கூடியது. சங்க அகப்பாடல்களில் பாதிரி மரத்தின் பூ மட்டுமே சுட்டப்பட்டுள்ளது. மரத்தின் பிற கூறுகள் பற்றிய பதிவுகள் இடம்பெறவில்லை. பாதிரியின் மலர்களில் ‘‘அகவிதழ்களின் அடிப்புற இதழ்கள் இரண்டும் சற்றுத் தாழ்வாகவுத் மேற்புற இதழ்கள் மூன்றும் சற்று நீண்டு நிலையாகவும் அமைந்திருக்கும்’’[102] என்கிறார் கு.சீநிவாசன். குறுந்தொகை இவ்வமைப்பையுடைய பாதிரி மலரை ‘கூன் மலர்’[103] எனச் சுட்டுவதைக் காணமுடிகிறது.

**புன்கு**

சங்க அகப்பாடல்களில் புன்கு எனச் சுட்டப்படும் மரம் தற்காலத்தில் புன்கமரம் எனச் சுட்டப்படுகின்றது. புன்க மரத்தின் பூக்கள் பொரியை ஒத்திருத்தலான் இது ‘‘பொரிப்பூம் புன்கு’’[104] எனச் சில பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**புன்னை**

புன்னை என்பது நெய்தல் நிலத்தின் கடற்கரைப் பகுதியில் காணப்படும் மரம் என்பதை சங்க அகப்பாடல்களின் வழி அறிய முடிகின்றது. புன்னை பற்றிய பதிவுகள் அகப்பாடல்களில் மிகுந்து காணப்படுகின்றன. ‘‘நெடுஞ்சினைப் புன்னை’’[105] என்னும் தொடர் இது மரம் என்பதைக் காட்டுகின்றது. புன்னையின் கிளைகள் கருமை நிறத்தில் இருக்கும் என்பதை ‘‘கருங்கோட்டுப் புன்னை’’[106] எனும் குறிப்பால் உணரலாம். புன்னையின் பூ, அது வளரும் மணற்பகுதி ஆகியன காட்டப்படுள்ளன.

**மராமரம்**

மராமரம் தற்பொழுது கடம்பமரம் எனச் சுட்டப்படுகின்றது. இது வெண்கடம்பு, செங்கடம்பு என இருவகையாகக் காணப்படுகின்றது. வெண்கடம்பின் பூக்கள் வெண்மை நிறத்திலும் செங்கடம்பின் பூக்கள் செம்மை நிறத்திலும் காணப்படும் . இது மராம், கடம்பு என்ற இரு பெயர்களிலும் சுட்டப்படுகின்றது. இதனை,

‘‘நெறியயல் மராஅம் ஏறி’’[107]

‘‘திறிலைக் கடம்பின் திரளரை வளைஇ’’[108]

எனும் பாடலடிகளால் அறியலாம். இதன் இருவகையையும் பிரித்தறியுமாறான பதிவுகள் சங்க அகப்பாடல்களில் இடம் பெறவில்லை.

**மருதமரம்**

மருதமரம் நீர்வளம் நிறைந்த பகுதியான மருதநிலப்பகுதிகளில் வளரும் இயல்புடையது. மருதத்திணை இம்மரத்தின் பெயராலேயே பெயர்பெற்றது. ‘‘கரைசேர் மருத மேறி’’[109], ‘‘துறையணி மருது’’[110] ஆகிய தொடர்கள் மருதமரம் ஆற்றங்கரைப் பகுதியில் காணப்பட்டதைக் காட்டுகின்றன. மருதமரம் எனத் தற்காலத்தில் ‘அர்ச்சுன மரம்’ என்ற

மரத்தைச் சுட்டுவதாகவும். இது அழகற்றதாகவும், தற்காலத்தில் 'பூ மருது'எனச் சுட்டப்படும் மரமே சங்ககாலத்தில் சுட்டப்பட்ட மருதமரம் என பி.எல்.சாமி.நிறுவியுள்ளார்.[111]

**மாமரம்**

சங்க அகப்பாடல்களில் மாமரம் மா, கொக்கு, தேகொக்கு என்ற பெயர்களில் வழங்கப்பட்டுள்ளது. இதனை,

> ''கரும்பு குணிலா மாங்கனி யுதிர்க்கும்''[112]
>
> ''உறுவளி தூக்கும் உயர்சினை மாவின்''[113]
>
> ''துணர்த்தேக் கொக்கின் றீம்பழம் கதூஉம்''[114]

எனும் பாடல்களால் அறியலாம். மாங்கனி, மா என்பன தற்காலத்திலும் வழக்கில் வழங்கிவருதல் காரணமாக எளிதில் விளங்கக்கூடியனவாக உள்ளன. கொக்கு மாவினைக் குறிக்கிறதென்பதை உரை நூல்களின் வழியும் அகராதிகளின் வழியும் அறியமுடிகின்றது. தேக்கொக்கு என்று பயின்றுவரும் சொல்லை நாம் தேமா,தேமாங்காய், தோமாங்கனி என்பவற்றோடு பொருத்திப் பார்க்கும் பொழுது தேக்கொக்கு மாவினைக் குறிப்பதை அறியவியலும்.

**முருக்கமரம்**

முருக்கம் என்றொரு மரம் சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. கவிர் எனச் சுட்டப்படும் மரத்தையும் 'முருக்கம்' என உரையாசிரியர்கள் சுட்டுகின்றனர். ஆனால் முருக்கமரமும் கவிரும் வேறு வேறு என்பதை 'தற்காலம் முருக்கு என்பது முருக்கமரம் என்றும் கவிர் முள்முருங்கை என்றும் கூறப்படுகிறது.'[115] எனும் கருத்தால் அறியலாம் முருக்கமரம் செம்மை நிறப் பூக்களைக் கொண்டது என்பதைச் சில சங்க அகப் பாடல்கள் காட்டுகின்றன.[116.] கவிர் எனச் சுட்டப்படும் முள்முருங்கையின் பூ சேவலின் கொண்டைபோன்று அமைந்ததை அகநானூறு காட்டுகின்றது.[117]

**யாமரம்**

யா என்ற மரம் பற்றிய பதிவுகள் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றன. இம்மரம் பற்றிய பதிவுகள் பாலைத்திணைப் பாடல்களில் காணப்படுவதால் வறண்ட குறிஞ்சி மற்றும் முல்லையாகிய பாலை நிலங்களில் இது வாழும் தன்மையுடையது என்பது விளங்கும். யாமரம் யானையுடன் தொடர்புடையதாக அகப்பாடல்கள் அமைகின்றன. வறட்சிக் காலங்களில் யானை தன் பசிபோக்க இதன் கிளையை உடைத்தும், பட்டையை உரித்துத் தின்பதும் காட்டப்படுகின்றது. மரத்தின் அகக்காலாகிய வயிரம் பாய்ந்த பகுதியையும் தன் கொம்பால் குத்தி பசியாறும் யானையை,

> ''பொத்தில் காழ வத்த யாஅத்துப்
> பொறியரை முழுமுத லுருவக் குத்தி

மறங்கெழு தடக்கையின் வாங்கி யுயங்குநடைச்

சிறுகட் பெருநிரை யுறுபசி தீர்க்கும்

தடமருப் பியானை''[118]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. யாமரம் சுட்டப்படும் பதிவுகளில் பெரும்பான்மையும் யானை அதனை உண்பதாகச் சுட்டப்படுவதால் வறட்சிக்காலங்களில் யாமரம் யானைகளுக்கு விரும்பத்தக்க உணவாக விளங்கியதை உணரமுடிகின்றது.

**வழை**

சுரபுன்னை எனக் குறிக்கப்படும் ஒருவகை மரத்தை சங்க அகப்பாடல்கள் 'வழை' எனக் குறிப்பதைப் பார்க்க முடிகின்றது. இம்மரம் மலைச் சாரலில் வளர்ந்திருந்தை பல சங்க அக இலக்கியங்கள் காட்டுகின்றன. இதற்கு உதாரணமாக,

''............ வழையம லடுக்கத்து''[119]

''வழைவளர் சாரல்''[120]

எனும் பாடலடிகளைக் காட்டலாம். இது அடர்ந்த காட்டின் ஆற்றங்கரைப் பகுதிகளிலும் காணப்படும் என்பர்.

**வேலமரம்**

பல்லுயிரியச் சூழலில் ஒரு குறிப்பிட்ட சூழலுக்குப் பொருந்தாத உயிரினம் அக்குறிப்பிட்ட சூழலில் வாழுமாயின் அது வேண்டாத சில சூழல்சிதைவினை ஏற்படுத்தும். இதற்கு உதாரணமாகச் சீமைக்கருவேல் என்ற மரத்தினைச் சுட்டலாம். இன்று சீமைக்கருவேல் என்பது எது என்று அறியாதோர் நம் நாட்டு மரமான வேலா மரத்தையும் அச்சத்துடன் பார்க்கின்றனர். ஆனால் வேலமரம் பற்றிய பதிவு சங்க அகப்பாடலில் காணப்படுவது கொண்டு நாம் வேலமரம் பற்றிய அச்சத்தை நீக்கிக் கொள்ளலாம். வேலமரம் சங்க அகப்பாடல்களில் வேலம், உலவை என்ற பெயர்களில் சுட்டப்படுவதை,

''சிள்வீடு கறங்கும் சிறியிலை வேலத்

தூழுறு விளைநெற் றுதிர''[121]

''இலையொழித் துலறிய புன்தலை யுலவை

வலைவலந் தனைய வாசல் பலவுடன்

சிலம்பி சூழ்ந்த புலங்கெடு வைப்பின்''[122]

எனும் பாடலடிகளில் காணலாம். இன்றும் சிறிய இலையுடன் காணப்படும வேல மரங்கள் நிறைந்த பகுதிகளில் சிள்வீடு எனும் பூச்சி சத்தமிடுவதையும், காய்த்த வேல மரங்களில் சிலந்தி போன்ற பூச்சிகள் காணப்படுவதைக் காணமுடியும். வேலமரம் எனும் மரவகையுள்

கருவேல், வெள்ளைவேல் என்ற இருவகையினைக் காணமுடியும். சங்க அகப்பாடல்களில் இதன் வகை அறியுமாறில்லை.

**வேறு சில மரவகைகள்**

மேற்கூறப்பட்ட மரவகைகளுடன் நாம் நன்கு அறிந்த மரவகைகளான வாகை, வேம்பு, வேங்கை, முருங்கை, தென்னை, பாலை மரம், வெட்பாலை என்னும் குடசம் போன்ற மரங்களும் சங்க அகப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன. மேலும் விளாமரம், வஞ்சிமரம், மோரோடம் என்று சுட்டப்பட்ட கருங்காலி மரம், கூவிளம் எனும் வில்வம், இல்லமரம், செண்பகம், இரத்தி என்னும் இலந்தைமரம் ஆகிய மரங்கள் பற்றிய பதிவுகளும் காணப்படுகின்றன.

மரவகைகளைப் பொறுத்தமட்டில் சங்க அகப்பாடல்களில் அதன் இலை, பூ, அடிமரம், பட்டை, காய், கனி, என பல்வகை உறுப்புகளும் விளக்கிச் சுட்டப்பட்டள்ளதன் மூலம் நாம் இது இன்ன வகை மரம் என அறிந்து கொள்ள முடிகின்றது. இது பண்டைத் தமிழ் மக்கள் மரங்களை நன்கு உற்றுநோக்கி அறிந்திருந்த முறையை நமக்குக் காட்டுகிறது. எனினும் சில மரங்கள் பற்றிய பதிவுகள் இக்காலத்து மக்களாகிய நமக்கு போதுமான விளக்கத்தைத் தரவில்லை எனலாம். காரணம் அதிகப்படியான விளக்கங்கள் இன்றி அதன் மலர் மற்றும் சிறுகுறிப்புகள் மூலம் சுட்டப்படுவதாகும். இது மரம் பற்றிய மரபார்ந்த அறிவிலிருந்து விடுபட்ட மக்களாகிய நமக்கு மட்டுமே மயக்கதைத் தருகின்றது. முக்காலத்து மக்கள் சிறுகுறிப்பைக் கொண்டே இது இன்னவைக மரம் என உணர்ந்திருக்கலாம்.

**செடிகள்**

தாவரவகையினுள் ஒன்றாகிய செடிவகைகளை நாம் மிகுதியாகக் காணமுடிகின்றது. மரங்களைப் போன்றே செடிகளும் அனைத்து இடங்களிலும் பரவியிருக்கக் காணமுடிகின்றது. சங்க அகப்பாடல்களில் காணப்படும் செடியினங்கள் இங்கு விளக்கப்படுகின்றன. நுட்பமான செய்திகள் அடங்கிய பதிவுகளின் அடிப்படையில் சில செடிகள் விளக்கமாகவும் ஏனையவற்றின் பெயரை மட்டும் சுட்டும் அளவிலும் இப்பகுதி அமைகின்றது.

**உளுந்து**

நாம் உணவுப் பொருளுள் ஒன்றாகிய உளுந்து சங்க அகப்பாடலில் சுட்டப்படுள்ளது. உளுந்தினை நுட்பமாக நோக்கி அதன் காய்களில் காணப்படும் சிறு மயிர் போன்ற அமைப்பினை நற்றிணை,

"இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்தின்"[123]

எனும் பாடலடியால் காட்டுகின்றது. நாம் உழுந்தங்காயைப் பார்க்கும்பொழுது அதன் மேற்புறத்தில் மிகவும் நுட்பமாக இம் மயிர்போன்ற அமைப்பு காணப்படும். இதனை

'மயிர்க்காய்' என நுட்பமாகச் சுட்டியிருப்பது பண்டைத் தமிழரின் இயற்கையைக் கவனிக்கும் பாங்கை விளக்குகின்றது.

**சேம்பு**

சேம்பு எனும் பெயருடைய அகன்ற இலைகளைக் கொண்ட செடி குறிக்கப்படுகின்றது. இச் செடியின் பெரிய அளவினதாகிய இலை தனித்துச் சுட்டிக்காட்டப் படுகின்றது. இவ்விலை களிற்றின் செவி போன்று அகலமான இலை என்பதை,

"சிலம்பிற் சேம்பி னலங்கல் வள்ளிலை

பெருங்களிற்றுச் செவியின் மான"[124]

எனும் குறுந்தொகைப் பாடலடிகளால் அறியலாம். இன்று இவ்வாறு அகன்ற தோற்றம் கொண்ட ஒருவகை இலை "சேமையிலை' என்று கொங்குநாட்டுப் பகுதியில் சுட்டப்படுகின்றது. இவ்விலை மலைப்பாங்கான பகுதிகள், நீர்நிலைகள் என பல இடங்களிலும் காணப்படுகின்றது. சங்க அகப்பாடல்களிலும் குறிஞ்சி, மரும், பாலை எனப் பலவகையான நிலங்களிலும் இது சுட்டப்பட்டுள்ளது. இதனடிப்படையில் பார்க்கும் பொழுது சேம்பு என்பது தற்காலத்தில் சுட்டப்படும் சேமையாக இருக்கலாம்.

**பயறு**

பயறு எனும் சொல் சங்க அகப்பாடல்களில் செடியைக் குறிப்பதாக வருவதை 'பாசிலை அமன்ற பயறு'[125] எனும் தொடர் மூலம் அறியலாம். தற்காலத்தில் பயறு என்னும் சொல் நாம் உணவில் சேர்க்கும் பொருளான பச்சைப்பயிரைக் குறிப்பதைக் காண்கிறோம். இதன் அடிப்படையில் சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் பயறு பச்சைப்பயிறு செடியைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

**பித்திகம்**

பித்திகம் எனச் சுட்டப்படும் மலரினை உரையாசிரியர்கள் 'பிச்சிப்பூ' என்று சுட்டுகின்றனர். இது மழைக்காலங்களில் நன்கு தழைத்து வளரும் இயல்புடையது போலும். இத்தன்மை சங்க அகப்பாடல்களில் 'மாரிப் பித்திகம்'[126] எனும் தொடர் கொண்டு உணர்த்தப்படுவதைக் காணலாம்.

**பிடவம்**

பிடவம் எனும் செடி புதரின்கண் வளர்ந்திருந்ததை அகநானூறு 'குறும்புதல் பிடவம்'[127] எனச் சுட்டுகின்றது. இது புதரில் காணப்படுவதால் கொடி அல்லது செடியாக இருக்க வாய்ப்புள்ளது. இதனை கு.சீநிவாசன் அவர்கள் வலிய புதர்ச்செடி என்று சுட்டியுள்ளார்.[128] இது இலைகளைச் சுத்தமாக உதிர்த்த நிலையில் பூக்கள் பூத்துக் காணப்படும் என்பதை நற்றிணை இருநூற்றி நாற்பத்திரண்டாம் பாடல் காட்டுகின்றது.

**முள்ளிச்செடி**

முள்ளி என்னும் செடி மருதநிலப் பகுதிகளிலும் நெய்தல் நிலப்பகுதிகளிலும் வளரும் இயல்புடையது. இதனை 'முண்டகம்' என்ற பெயரிலும் சங்க இலக்கியம் சுட்டுவதை உரை நூற்களின்வழி அறியமுடிகின்றது. இது நீர் முள்ளி என்றும் முள்ளி என்றும் இருவகையாகக் கூறப்பட்டுள்ளது. தில்லை மரங்களுடன் சேர்ந்து கழி முள்ளி வளர்ந்திருந்ததை கலித்தை நூற்றுமுப்பத்து மூன்றாம் பாடல் காட்டுகின்றது.

**வேறுசில செடிவகைகள்**

சங்க அகப்பாடல்கள் நாம் நன்கு அறிந்துள்ள செடியினங்களான பருத்தி, எருக்கு, வாழை, எள், ஆவிரை என்னும் ஆவரஞ்செடி, இஞ்சி, மஞ்சள், நாணல், ஏனல் எனச் சுட்டப்படும் தினை, வரகு, வேழம் என்னும் பேய்க்கரும்பு, நெருஞ்சிச்செடி, அரலிச்செடி, நெல்லஞ்செடி, பூளைச்செடி, குறிஞ்சி, வெட்சி ஆகியன இன்னது என்று விளங்கிக் கொள்ளவியலாத மரல் செடி, கரந்தை ஆகிய செடிகளையும் சுட்டியுள்ளன. செடியினங்கள், அவற்றின் முள், இலை, தண்டு, வோர்ப்பகுதி, பூ ஆகியன சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

**கொடி வகைகள்**

கொடிகள் நிலத்திலிருந்து மேல்நோக்கி உறுதித் தன்மையுடன் நிற்காமல் நிலப்பரப்பில் படர்ந்தும், மரம் செடிகளின் மீது பற்றிப் படர்ந்தும் காணப்படும் தாவர வகையாகும். நாம் நமது சுற்றுப் புறங்களில் பல்வேறுபட்ட கொடிவகைகளைக், காண்கிறோம். நமது இல்லத்தில் வளர்க்கும் பூக்கள், உணவுப் பொருட்கள் எனும் பயன்பாட்டின் அடிப்படையிலான கொடிகளை நன்கு அறிந்து கொண்டு அவை இன்னின்ன என்று பெயர் குறிப்பிட்டுத் தெளிவாகச் சுட்டுகின்றோம். ஆனால் நம்மைச் சுற்றியுள்ள பிற கொடிகளைக் குறித்து நாம் எவ்விதக் கவலையும் கொள்வதில்லை. அவற்றின் பெயரைக்கூட அறிந்து கொள்வதில்லை. இந்நிலையால் நமது பழமையான இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ள கொடிவகைகளை அறிந்து கொள்ளும் அறிவையும் இழந்து விட்டோம். இந்நிலையில் சங்க அகப்பாடல்களில் காணப்படும் குறிப்புகளைக் கொண்டு இங்கு சில கொடிகள் விளக்கப்படுகின்றன.

**அடும்பு**

அடும்பு கடற்கரை மணற்பரப்பில் காணப்படும் கொடிவகையாகும். பசிய நிறமுடைய அடும்பு கடற்கரை மணல் மேட்டில் படர்ந்து கிடப்பதைப் பல சங்க அகப்பாடல்கள் காட்டுகின்றன. இதனை,

> "இருங்கழி பொருத ஈர வெண்மணல்
> மாக்கொடி அடும்பின் மாயிதழ்"[129]

எனும் பாடலடியால் உணரலாம். இதனை அடப்பங்கொடி, குதிரைக் குளம்புக்கொடி என்ற பெயர்களில் சுட்டுவர். இருபிளவுபட்ட இதன் இலையை 'மானடி யன்ன கவட்டிலை யடும்பு'[130] என குறுந்தொகை சுட்டுகின்றது.

**ஈங்கை**

ஈங்கை என்பதற்கு உரையாசிரியர்கள் 'இண்டங்கொடி' என உரைகூறுகின்றனர். கு.சீநிவாசன் அவர்களும் தமது நூலில் ஈங்கையை இண்டை, இண்டங்கொடி எனச் சுட்டுவதைக் காணமுடிகின்றது.[131] ஆனால் நற்றிணைப் பாடல்,

> "……….. இண்டிவர் ஈங்கைய சுரனே"[132]

என இன்டு, ஈங்கை இரண்டையும் ஒரு சேரச் சுட்டியுள்ளது நமக்கு மயக்கத்தைத் தருவதாக உள்ளது. மேலும்,'இண்டிவர்' என (இவர் - கொடி) இரண்டங்கொடி எனத் தனித்து கொடி என்பதுபட இப்பாடல் சுட்டுகின்றது. இவ்வடிக்கு பின்னத்தூர் நாராயணசாமி "இண்டங் கொடியுடனே ஒருசேரப் படர்கின்ற ஈங்கையையுடையவாகும்"[133] என உரை கூறுகின்றார். இவற்றின் அடிப்படையில் நோக்கும் பொழுது இண்டங்கொடி,ஈங்கை இரண்டும் வேறுவேறாக இருக்கலாம் எனத் தோன்றுகின்றது. சங்க அகப்பாடல்களில் ஈங்கை முள்ளுடன் காணப்படுதல், புதரில் காணப்படுதல் ஆகியன காட்டப்படுகின்றன.

**கருவிளை**

இன்று சங்குப்பூ என்று ஒருவகைக் கொடிப் பூவை அழைக்கின்றோம். இப்பூ மணிபோன்று நீல நிறத்தில் இருப்பின் அது 'கருவிளை' என்றும், வெண்மை நிறத்தில் பூக்கும் கொடியை 'செருவிளை' என்றும் சுட்டுவர். இவ்விருவகைப் பூக்களையும்

> "எருவை செருவிளை மணிப்பூங் கருவிளை"[134]

எனக் குறிஞ்சிப்பாட்டு சுட்டுகின்றது. இவற்றைக் கருங்காக்கணம் வெண்காக்கணம் என்றும் சுட்டுவர்.

**கூதாளங்கொடி**

கூதாளி, கூதாளம் எனச் சில பாடல்களில் வரும் தாவரம் கொடிவகையைச் சேர்ந்தது என்பதை அகநானூறு கூறுவதை,

> "கூதள மூதிலைக் கெடிநிரைத் தூங்க"[135]

எனும் பாடலடியால் அறியலாம். இது வெண்கூதாளம் எனவும் சுட்டப்பட்டுள்ளது. மக்கள் இதனை தாளிக்கொடி, வெண்டாளி எனவும் சுட்டுவர்.

**மிளகு**

மிளகுக்கொடி கறி என்றும் மிளகு என்றும் சில பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. இது குறிஞ்சி நிலத்தின் மலைப்பக்கங்களில் வளர்வது சுட்டப்பட்டுள்ளது. பாறைமீது மிளகுப் பழங்கள் உதிர்ந்துகிடப்பதை 'பழமிள குக்க பாறை''[136] எனும் குறிஞ்சிப்பாட்டடியால் அறியலாம். மிளகு சங்க அகப்பாடல்களில் பெரும்பான்மையும் 'கறி' என்ற பெயரில் சுட்டப்படுவதைக் காணமுடிகின்றது.

**வேறுசில கொடிவகைகள்**

மேற்கூறப்பட்ட கொடிவகைகளன்றி வேறு சில கொடிவகைகள் சங்க அகப்பாடல்களில் விளக்கமாகவும், குறிப்பாகவும் சுட்டப்பட்டுள்ளன. முல்லைக் கொடி பற்றி பல பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. இது முல்லை, மௌவல், தளவம், புனலி என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது. இதே போல் மல்லிகைக்கொடியும் குளவி, அதிரல் என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது. பகன்றை, பிரம்பு, காந்தள், வயலைக்கொடி, வள்ளிக்கொடி, வேழம் எனப்படும் கொடி, அவரைக்கொடி, நறைக்கொடி, பீர்க்கங்கொடி, முசுண்டைக் கொடி, பாகற்கொடி ஆகிய கொடிவகைகள் சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளன. இவற்றில் பல தற்காலப் பெயரில் அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது. சில இன்னது என்று தெளிவுற அறியுமாறில்லை சிலவற்றை அறிஞர்களின் கருத்துக்களின் துணைகொண்டு அறியமுடிகின்றதெனலாம்.

**புல்வகை**

சங்க அகப்பாடல்களில் காணப்படும் புல்வகைகளுள் அடங்குவனவாக மூங்கில், கரும்பு, அறுகம்புல், பைஞ்சாய்க்கோரை ஆகியன சுட்டப்பட்டுள்ளன. மூங்கில் மரம் போன்று நீண்டு வளரும் தன்மையுடையதாயினும் தாவரவியலாளர் இதனைப் புல்லினத்தைச் சேர்ந்ததாகவே காட்டுகின்றனர். இம்மூங்கிலானது மூங்கில், வேய், கழை, வேரல், அமை, முந்தூழ், வெதிர், வயிர், வரை, காம்பு, பனை எனப் பல பெயர்களில் பல பாடல்களில் சுட்டப்படுள்ளது. இவற்றுள் உந்தூழ் அல்லது முந்தூழ் என்பது பெருமூங்கில் எனச் சுட்டப்படுகின்றது. வேரல் என்பது சிறுமூங்கில் எனச் சுட்டப்படுகின்றது. கரும்பு தவரவியலாளர் கூற்றுப்படி புல் வகையைச் சேர்ந்தது என்பதை ''கரும்பு தாவரவியலுள் ஒருவகையான 'புல்' எனப்படும்''[137] எனும் கு.சீநிவாசன் கருத்தால் அறியலாம். சங்க அகப்பாடல்களில் கரும்பின் கணு கழை எனச் சுட்டப்படுவதைக் காணமுடிகின்றது. கரும்பின் பூ பல பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. அறுகம்புல் அறுகை, பதவு என்ற பெயர்களில் சுட்டப்பட்டள்ளது. எருவை, சாய், பஞ்சாய், பைஞ்சாய் எனச் சுட்டப்படும் இடங்களில் உரையாசிரியர்கள் பைஞ்சாய்க்கோரை என உரைகூறியுள்ளனர். தற்காலத்தில் கோரைப்புல் எனச்சுட்டப்படுவது இப்பைஞ்சாய்க் கோரையாக இருக்கலாம். சங்க அகப்பாடல்களில் புல்வகை பற்றிய பதிவுகள் மற்ற தாவரவகைகளான மரம், செடி, கொடி ஆகியனவற்றைக் காட்டிலும் மிகக் குறைவாக உள்ளதெனலாம்.

**நீர்த்தாவரங்கள்**

தாவரங்களுள் நீரின்கண் வாழும் நீர்த்தாவரங்கள் நீரில் வாழுதற்கேற்ற தகவமைப்பினைப் பெற்றவை. சாதாரணமாக நீர்நிலைக்கண் சிறியது முதல் பெரியது வரை எண்ணற்ற தாவரங்களைக் காண்கிறோம். அவையாவும், நீர்த்தாவரங்கள் ஆகும். நீர்த்தாவர வரிசையில் சங்க அகப்பாடல்களில் ஆம்பல், குவளை, தாமரை, பாசி, வள்ளைக்கொடி ஆகியன இடம்பெற்றுள்ளன.

நீர்நிலைக் கண் காணப்படும் அல்லிமலர்தான் சங்க இலக்கியத்தில் ஆம்பல் எனச் சுட்டப்பட்டுள்ளது. சங்க அகப்பாடலில் ஆம்பல் காணப்படும் இடங்களாக வயல், பழனம், பொய்கை ஆகியன சுட்டப்பட்டுள்ளன. நெய்தல், குவளை, ஆகியனவும் ஆம்பல் இனத்தைச் சேர்ந்தவை என்பதை ''நெய்தல் எனப்படும் கருங்குவளையும் கழுநீர் எனப்படும் செங்குவளையும் ஆம்பல் இனத்தைச் சார்ந்தவை''138 எனும் கு.சீநிவாசன் கருத்தால் அறியலாம். ஆம்பல் மலரின் தண்டு துளையையுடையது என்பதை நற்றிணை,

''நீர்வளர் ஆம்பல் தூம்புடைத் திரள்கால்''[139]

எனும் பாடலடியால் காட்டுகின்றது. ஆம்பலின் இலை யானையின் செவிபோன்று அகலமாக இருப்பதை சங்கஅகப்பாடல்கள் பதிவு செய்துள்ளன. வெள்ளை மற்றும் செந்நிறத்தில் ஆம்பற் பூக்கள் காணப்படுகின்றன.

**குவளை, நெய்தல்**

குவளையும் நெய்தலும் ஓரினத் தாவரம் எனினும் இரண்டும் வேறுறோனது என்பதுபடத் தோன்றும் பதிவுகள் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றன. பட்டினப்பாலையில் வரும்,

''மாயிதழ்க் குவளையொடு நெய்தலும் மயங்கி''[140]

எனும் அடி குவளையும் நெய்தலும் வேறுவேறு எனக் காட்டுகின்றது. சங்க அகப்பாடல்களில் குவளை மலர் பெரும்பான்மையும் நன்னீர் வாழிடங்களான பொய்கை, சுனை, குளம் போன்றவற்றில் காணப்படுவது காட்டப்படுகின்றது. நெய்தல் மலர் பெரும்பான்மையும் நெய்தல் நில நீர் வாழிடங்களான கழிமுகம் மற்றும் உப்பங்கழிகளில் காணப்படுவது காட்டப்படுகின்றது. நன்னீர் வாழிடங்களில் நெய்தல் திணைமயக்கமாகக் காட்டப்பட்டுள்ளது. நீலம் எனும் பெயரில் சங்க அகப்பாடல்களில் கருங்குவளை மலர் சுட்டப்படுகின்றது. நெய்தல் பூ கடற்கைரைப் பகுதித் தாவரமாகக் காட்டப்படுகின்றது.

**தாமரை**

சங்க அகப்பாடல்களில் தாமரை மலரானது, தாமரை, முளரி என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது. தாமரை மலர் பற்றிய பதிவுகள் பல பாடல்களில் காணப்படுகின்றன. தாமரை கொடி போன்று கிழங்கிலிருந்து முளைத்து வரும் தகவலை,

“நிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கின்

கழைகண் டன்ன தூம்புடைத் திரள்கால்

களிற்றுச்செவி யன்ன பாசடை மருங்கில்

கழுநிவந் தன்ன கொழுமுகை”[141]

எனும் அகநானூற்று அடிகள் தெளிவுறக் காட்டுகின்றன. நிலம் பகுப்படையுமாறு உள்ளிறங்கிய வேரிலிருந்து தோன்றிய கிழங்கிலிருந்து மூங்கிலைப் போன்று உள்ளீடற்ற தண்டில், களிற்றின் செவி போன்ற பரந்த இலையுடன் தாமரை மொட்டு உயர்ந்து தோன்றியது என்று தாமரை கொடியின் அமைப்பினை படம் வரைந்து பாகம் குறித்தது போல் காட்டுவது போன்ற விளக்கம் அறிவியல் அடிப்படையில் அமைந்துள்ளது என்றால் அது மிகையாகாது. இதுபோன்றே பல பாடல்களில் தாமரைப்பூ, அதன் இலை ஆகியன செம்மையுற விளக்கிக் காட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**வள்ளைக்கொடி**

வள்ளைக்கொடி என்னும் நீர்க்கொடி பற்றிய பதிவுகள் அகநானூற்றில் காணப்படுகின்றது. நீர்கொடிகளுக்கே உரித்தான உட்டுளையுடைய தண்டுப்பகுதியை வள்ளைக்கொடி பெற்றிருப்பதை,

“அந்தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி”[142]

எனும் அகநானூற்றுப் பாடலடி காட்டுகின்றது. இது மருத்தத்திணைக்கண் மட்டுமே சுட்டப்பட்டிருப்பதால் இது மருதநிலத்து நன்னீர்த் தாவரம் என்பது விளங்குகின்றது.

**பாசி**

நீர் நிலைக்கண் பாசிகள் காணப்படுவது இயல்பு. இதனைத் தற்காலத்தில் ‘பாசம்’ என மக்கள் வழங்குகின்றனர். இது தாவர வகையில் அடங்கும் உயிரினமாகும். சங்க அகப்பாடல்களில் பாசி என்ற பெயர் தற்காலத்தில் நீரில் காணப்படும் பாசியைக் குறிப்பதாக வருகின்றது இதனை,

“............................ கான் யாற்றுக்

கலங்கும் பாசி நீரலைக் கலாவ”[143]

“ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க

பாசி”[144]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. இப்பாடலடிகளில் ஆறு மற்றும் கிணற்றில் காணப்படும் பாசி சுட்டப்பட்டுள்ளது.

சங்க அகப்பாடல்களில் நீர் வாழ்தாவர வகைகளாக ஆம்பல், குவளை, நெய்தல், தாமரை, வள்ளை, பாசி ஆகியவற்றை பட்டியலிட முடிகின்றது. இத்தாவரங்கள் பற்றிய

பதிவுகள் நுட்பமான அறிவுடன் பதிசெய்யப்பட்டுள்ளதை இப்பகுப்பில் காட்டப்படும் பாடலடிகளால் உணரமுடிகின்றது.

சங்க அகப்பாடல்களில் காணப்படும் தாவரவகைப் பதிவுகள் தாவரப்பல்லுயிரியத்தை நிலத் தாவரப் பல்லுயிரியம், நீர்த்தாவரப் பல்லுயிரியம் எனப்பகுத்துக் காண வகைசெய்கின்றது. நிலத்தில் காணப்படும் தாவர வகைகளை மரம், செடி, கொடி, புல் எனப் பட்டியலிடலாம் என்பதை மேற்கண்ட தாவரப்பகுப்பின் அடிப்படையிலான பதிவுகள் மூலம் உணரலாம். சங்க அகப்பாடல்களில் காணப்படும் தாவரம், அவற்றின் உடற்கூறு பற்றிய பதிவுகள் அத்தாவரங்கள் இன்னின்ன என்று அறியத்துணை செய்வதுடன், பண்டைத் தமிழ் மக்கள் மற்றும் சான்றோர்கள் தாவரங்களை அடையாளப்படுத்துவதற்கான உள்வாங்கலை நமக்குக் காட்டுவதாக அமைகின்றது. அவற்றில் இடம்பெறும் தாவர உயிரிகளை தற்காலத்து மக்களாகிய நம்மால் சரிவர அறிந்து உறுதி செய்ய இயலவில்லை என்பது தாவரம் பற்றிய மரபார்ந்த அறிவு அற்றுவிட்டது என்பதையும் இயற்கைப் பொருள்களிலிருந்து நாம் விலகிவிட்ட தன்மையையும் காட்டுவதாக அமைகின்றது.

**விலங்குகள்**

உலகளவில் பல்வேறுபட்ட விலங்கினங்கள் வாழ்கின்றன. அனைத்து விலங்குகளும் தாம்வாழும் சூழல்மண்டலத்தில் தத்தமக்குரிய பணியை ஆற்றுகின்றன. சூழல் மண்டலத்தில் காணப்படும் ஒவ்வொரு விலங்கினமும் வேறுபாடற்ற சமமதிப்புடையதாக அமைகின்றன. ஒரு குறிப்பிட்ட விலங்கின் அழிவு அதன் சூழலை பாதிப்பதாக அமையும். நாம் தற்பொழுது வீட்டு விலங்குகள் காட்டுவிலங்குகள் என வகைப்படுத்தி அறிகின்றோம். ஆனால் நாம் இன்று வீட்டில் வைத்து வளர்த்துவரும் அனைத்து விலங்கினங்களும் தொடக்கத்தில் காட்டிலேயே வாழ்ந்து வந்தன. அதனடிப்படையில் பார்க்கும் பொழுது அனைத்து விலங்குகளும் வனவிலங்குகளே ஆகும். விலங்கினத்தில் அடங்கும் மனிதனும் தொடக்கத்தில் காட்டிலேயே வாழ்ந்தான் என்பது இங்கு சிந்திக்கத்தக்கது. விலங்குகள் தங்கள் உணவுத் தேவைக்காக தாவரங்களையும், தம்மைப்போன்ற பிற விலங்குகளையும் சார்ந்துள்ளன. தமது உணவின் அடிப்படையில் தாவர உண்ணி, ஊன் உண்ணி, அனைத்துண்ணி என வகைப்படுத்தப்பட்டுள்ளன. “விலங்கு எனப்படுபவை, இடம் பெயரக் கூடியவை; தாமே உணவு தயாரிக்க முடியாதவை; வளர்ச்சி வரம்புடையவை”[145] எனும் மூர்த்தி அவர்களது கருத்து விலங்கினத்தின் தன்மையை விளக்கும். விலங்குகள் காட்டில் வாழ்ந்தாலும் நமது வீட்டில் வாழ்ந்தாலும் நிலத்தில் வாழும் பொதுத்தன்மையன. நிலத்தில் வாழும் விலங்குகளை விடுத்து நீரில் வாழும் விலங்குகளையும் நாம் பகுத்துக் காணலாம். அவ்வகையில் சங்க அகப்பாடல்களில் காணப்படும் விலங்குகளை நிலவிலங்குகள் நீர்விலங்குகள் என இருவகையாகப் பகுத்து விளக்கலாம்

**நிலவிலங்கு**

தமது வாழ்வைப் பெரும்பான்மையும் நிலத்தை மையமாகக் கொண்டு வாழும் விலங்குகள் நிலவிலங்குகள் ஆகும். தாகம், உடலைக்குளிர்வித்தல் என்ற நிலையில்

மட்டும் நீரை நாடுவனவாக இவ்விலங்குகள் அமையும். உணவுத் தேவை, உறைவிடம், இனப்பெருக்கம் என வாழ்வின் இன்றியமையாக் கூறுகள் யாவற்றையும் நிலத்தைக் கொண்டே நிலவிலங்குகள் பூர்த்தி செய்து கொள்கின்றன. உலகில் பல்வேறுபட்ட நிலவிலங்குகள் வாழ்ந்து வருகின்றன. சங்க அகப்பாடல்களில் பல விலங்கினங்கள் சுட்டப்பட்டுள்ளன.

**அணில்**

அணில்களைக் காண நாம் காட்டிற்கோ விலங்குகாட்சி சாலைக்கோ செல்லவேண்டியதில்லை. மனிதர்களின் இருப்பிடங்களுக்கு அருகிலேயே அணில்களும் வாழ்வதைக் காணமுடிகின்றது. தமிழகத்தில் அணில், மலை அணில், நரை அணில் என மூன்றுவகை அணில்கள் இருப்பதை ச. முகமது அலியின் விளக்கத்தால் அறியமுடிகின்றது.[146] நாம் நமது குடியிருப்புப் பகுதியருகில் காணப்படும் முதுகில் வரிகளை உடைய அணில் வகையில் ஐந்து வரிகளை உடைய அணில்கள் வட இந்தியாவிலும், மூன்று வரிகளையுடைய அணில்கள் தென்னிந்தியாவிலும் காணப்படுவதாக அவர் கூறுகின்றார். சங்க அகப்பாடல்களில் அணில், வெளில் எனும் இருபெயர்களில் அணில் சுட்டப்படுகின்றது.

''அத்த நண்ணிய வங்குடிச் சீறூர்
மக்கள் போகிய வணிலாடு முன்றில் புலப்பில்''[147]
அணிற்பல் லன்ன கொங்குமுதிர் முண்டகத்து''[148]

எனும் இருபாடல்களில் அணில் என்ற பெயரே நேரடியாக வந்துள்ளது. அணில்கள் மக்கள் வாழிடங்களுக்கு அருகாமையிலும், வயல்பகுதி, காடு போன்ற இடங்களில் காணப்படும். மக்கள் வாழிடங்களில், மனைப்புறங்களில் இருப்பினும் அவை பூனை, நாய் போன்று மனிதர்களுடன் நெருங்கிவாழ்வதில்லை. மனித நடமாட்டம் குறைந்த பகுதிகளிலேயே காணப்படுகின்றன. ஒருவேளை தனக்கு எவ்வகையிலும் ஊறில்லாத, தனக்கான உணவு எளிதாகக் கிடைக்கின்ற சுமுகமான வாழிடமாக அமையின் மனிதர்களின் மனையிலும், மனைக்கருகிலும் அணில்கள் வாழ்வதை அருமையாகக் காணமுடிகின்றது. மனிதர்களிடமிருந்து விலகிவாழும் அணிலை குறுந்தொகையின் நாற்பத்தி ஒன்றாம் பாடல் நமக்குக் காட்டுகின்றது. பாலை நிலத்தில் அமைந்த சிறுகுடியாகிய ஊரில் அணில் விளையாடுகின்ற தனித்த வீட்டின் முன்றில் காட்சிப்படுத்தப்படுகின்றது. இது மக்கள் வாழிடங்களை ஒட்டி வாழ்கின்ற நாம் தற்காலத்தல் காணப்படும் மூன்றுவரியுடைய அணிலைக் குறிப்பதை உணரலாம். அணிலின் கூரிய பல்லானது முண்டகச் செடியின் முள்ளிற்கு உவமையாக்கப்பட்டுள்ளது. சங்க அகப்பாடல்களில் இவ்விரு கருத்துகளே அணில் என்ற நேரடிப் பெயரில் பயின்று வந்துள்ளது. வெளில் எனும் சொல்லிற்கு உரையாசிரியர்கள் அணில் என்ற பொருளையே குறிப்பிடுகினறனர். இது அகநானூற்றில் இரு இடங்களில் வருவதைக் காணமுடிகின்றது. வெளில் எனச் சுட்டப்படும் அணிலை

பி.எல்.சாமி ‘‘பெரிய அணில்’’ எனச் சுட்டுகின்றார். குறிஞ்சி நிலத்தில் பெரு மரங்களின் கிளைகளில் ஆடும் அணிலை,

‘‘ஏனலங் காவலர் ஆனா தார்த்தொறுங்

கிளிவிளி பயிற்றும் வெளிலாடு பெருஞ்சினை’’[149]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. காடாகப் பரந்த நீண்ட மரங்களையுடைய சோலையில் மூங்கில்களையுடைய அகன்ற இடத்தில் விளையாடும் அணிலை,

‘‘காடுகால் யாத்த நீடுமரச் சோலை

விழைவெளில் ஆடுங் கழைவளர் நனந்தலை’’[150]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. இவை மலைப்பகுதிகளில் மரங்கள் உயர்ந்த காட்டுபகுதிகளில் காணப்படும் அணிலைக் குறிப்பதாகக் கூறுகின்றார் பி.எல்.சாமி. இதனை ‘‘இது பெரிய அணில், அடர்ந்த காடுகளில் உயர்ந்த கிளைகளில் உச்சியில் வாழ்வது. இந்த அணில் கருமை நிறமானது’’ எனும் அவரது கூற்று உணர்த்தும். இத்தகைய கரிய நிறமுடைய பெரிய அணில்களை இன்று வெள்ளியங்கிரி மலை போன்ற மலைப்பகுதிக் காடுகளில் காணமுடிகிறது.

**ஆ**

தற்காலத்தில் ‘‘மாடு’’ எனச் சுட்டும் மாட்டினத்தை சங்க அகப்பாடல்கள் ‘ஆ’ எனச் சுட்டுகின்றன. முல்லை நிலப் பகுதிகளில் பசுக்கள் மிகுதியாக இருந்ததைச் சங்கப்பாடல்களின் வழி அறியமுடிகின்றது. ஆன், நிரை, கறவை என்ற பெயர்களிலும் ஆவானது குறிக்கப்படுவதை அறிய முடிகின்றது. ஆவில் ஆணானது எருது, பகடு என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது. இதனை

‘‘கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சல்’’[151]

‘‘கணநிரை மணியி னார்க்கும்’’[152]

‘‘கறவைப் பல்லினம் புறவுதொ றுகளக்’’[153]

‘‘பதவுமேயல் அருந்தி மதவுநடை நல்லான்’’[154]

‘‘நல்லெருது நடைவளம் வைத்தென உழவர்’’[155]

‘‘அரிகால் போழ்ந்த தெரிபகட் டுழவர்’’[156]

எனும் பாடலடிகள் மூலம் அறியலாம். உழவிற்கு, சிறந்த எருதே தேர்வு செய்யப்பட்டு பயன்படுத்தப்பட்டது என்பதை ‘‘தெரி பகட்டுழவர்’’ எனும் தொடர் காட்டுகின்றது. சிவந்த நிறமுடைய ஆவானது சேதா எனச் சுட்டப்பட்டது. இதனை,

‘‘சிலம்பன் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா’’[157]

‘‘சேதா எடுத்த செந்நிலக் குரூஉத்துகள்’’[158]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. கரிய நிறமுடைய ஆவினைக் ‘‘காரி’’[159] என்றும் சிவந்தநிறமுடைய ஆவினை ‘‘சேய்’’[160] என்றும் சுட்டப்பட்டதைக் கலித்தொகை வாயிலாக அறியமுடிகின்றது. வெள்ளை நிற மாடு வெள்ளை எனச் சுட்டப்படுவதையும்

காணமுடிகின்றது. இன்றும் கரியநிறமுடைய மாட்டைக் காரிமாடு என்றும் செம்மை நிறமுடைய மாட்டை ‘‘செவலைமாடு’’ என்றும் சுட்டுவதைக் கொங்குநாட்டுப் பகுதிகளில் கேட்கமுடியும். இன்று தமிழகத்தின் மண்சார்ந்த மரபுமாடுகள் இனம்குன்றிக் காணப்படுவதும் அதைக் காக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுவதையும் நாம் காண்கிறோம். இவ்வினங்கள் சங்ககாலம் தொட்டு இன்று வரை இருந்து வருகின்றன. மேற்கொண்டு இவற்றைப் பாதுகாப்பது தற்காலத் தலைமுறையின் கருத்தியலை அடிப்படையாகக் கொண்டது.

**ஆடு**

ஆடு வளர்ப்புயிரினமாக வளர்க்கப்பட்டு வருகின்றது. சங்ககாலம் முதலே ஆடுகள் வளர்ப்புயிரியாக இருந்து வந்ததைச் சங்கப்பாடல்களின் வழி அறியமுடிகின்றது. சங்க அகப்பாடல்களில் ஆடு எனும் விலங்கினம் ஆடு, மறி, வெள்ளை, துரு, புருவை, மேழகம், ஏழகம், எனும் சொற்களால் குறிக்கப்பட்டுள்ளது. ‘ஆடு’ என்பது ஆட்டினத்தின் பொதுப் பெயராக அமைந்துள்ளது. சில இடங்களில் ஆடு என்பது பொதுவாக ‘‘வெள்ளாட்டினைச்’’ சுட்டுவதாகவும் அறியமுடிகின்றது. ‘மறி’ என்பது ஆட்டினத்தின் இளமைப் பெயராக அமையும் என்பதைத் தொல்காப்பிய மரபியல் நூற்பாவான் அறியலாம்.[161] வெள்ளாடு, செம்மறியாடு, குரும்பாடு என்பன தமிழ்நாட்டில் காணப்படும் ஆட்டினங்களாகும். கொங்கு நாட்டுப்பகுதிகளில் செம்மறியாடு, செம்பிளியாடு எனச் சுட்டப்படுகின்றது. பொதுவாக வெள்ளாடு, செம்மறியாடு என இரண்டுவகை ஆடுகளே மிகுதியாக வளர்க்கப்படுகின்றன. குரும்பாடு செம்மறியாட்டை ஒத்ததாகக் காணப்படுகின்றது. உணவு அடிப்படையில் வெள்ளாடு இலை, தழைகளையும் செம்மறியாடு புல் வகைகளையும் விரும்பி உண்பவைகளாக அமைகின்றன. ‘துரு துருவாடு’ துருவை என்ற சொற்கள் செம்மறியாட்டைக் (Sheep) குறித்து வழங்கின’’[162] என்கிறார் பி.எல்.சாமி. முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆடு மேய்க்கும் இனக்குழு மக்கள் ‘இடையர்’ எனக் குறிப்பிடப்படுவதை சங்க இலக்கியக்கியங்களின் வழி அறிய முடிகின்றது. பால் மற்றும் இறைச்சிக்காக ஆடுகள் வளர்க்கப்பட்டதை அறிய முடிகின்றது. இதனை,

> ‘‘பறியுடைக் கையர் மறியினத் தொழியப்
> பாலொடு வந்து கூழொடு பெயரும்
> யாடுடை யிடைமகன்’’[163]

எனும் குறுந்தொகைப் பாடலடிகளால் உணரலாம். இங்கு ஆட்டின் பாலை இடைமகன் உணவாகப் பண்டமாற்றியதை அறியமுடிகின்றது. ஆட்டின் குட்டிகளாகிய மறியினம் இன்றி ஆடுகளை மட்டும் மேய்ச்சலுக்கு ஓட்டி வந்ததை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. ஆடுகளைத் தெய்வங்களுக்குப் பலியிடும் வழக்கம் தற்காலத்திலும் இருந்துவருகின்றது. சங்க காலத்தில் ஆட்டின் குட்டிகளைப் பலியிட்ட செய்தியை சங்க அகப்பாடல்களில் காண முடிகின்றது.

''வெறியென உணர்த்த உள்ளமொடு மறியறுத்த
அன்னை அயரும் முருகு''[164]

''மறிக்குர லறுத்துத் தினைப்பிரம் பிரீஇச்''[165]

''மறிகொலைப் படுத்தல் வேண்டி''[166]

எனும் பாடலடிகள் மறியாகிய ஆட்டினைப் பலியிட்டதைக் காட்டுகின்றன. வெண்மை நிறமுடைய வெள்ளாடு வெள்ளை எனச் சுட்டப்பட்டது. கருமை கலந்த நிறங்களிலும் வெள்ளாடுகள் இருக்கின்றன. எனினும் பெரும்பகுதி வெள்ளையும், முழுமையும் வெள்ளையும் என பல வகையில் வெள்ளாடுகளைக் காணமுடிகின்றது.

''உள்ளில் வயிற்ற வெள்ளை வெண்மறி''[167]

எனும் பாடலடியில் வெள்ளாடு வெள்ளை எனச் சுட்டப்படுகின்றது. இங்கு வெள்ளாட்டின் குட்டி வேறு நிறக் கலப்பின்றி முழுமையும் வெண்மை நிறமாகவிருந்ததை ''வெண்மறி'' எனும் பதம் காட்டுகின்றது. ஆட்டின் ஆண்பாலினை கிடாய் என்று வழங்குவது வழக்கமாகும். நிமிர்ந்த கொம்பினையும் தொங்கிய காதினையும் உடைய ஆட்டினை

''நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்''[168]

எனும் அகநானூற்றுப் பாடலடி காட்டுகின்றது. ''வெள்ளாட்டினை வெள்ளை என்று கூறுவர்''[169] எனும் உ.வே.சா. வின் கருத்து இங்கு எண்ணற்பாலது. செம்மறியாட்டினைப் பெருங்கூட்டமாக வைத்திருப்பர். ஒருவரே அதிகப்படியான எண்ணிக்கையில் வெள்ளாட்டினை வைத்து மேய்ப்பது கடினம். ஆனால் செம்மறியாட்டினை அதிக அளவில் மேய்க்க முடியும். மேலும் மூன்று நான்குபோர் சேர்ந்து நூற்றுக் கணக்கில் செம்மறியாட்டினை மேய்ப்பதை இன்றும் காண முடிகின்றது. செம்மறியாட்டின் பெருங் கூட்டத்தினைத் ''தோடு'' எனச் சுட்டுகின்றது சங்க இலக்கியம். இவ்வாறு கூட்டாகவும், தனியாகவும் சுட்டப்படும் செம்மறியாட்டினை,

''ஆடுதலைத் துருவின் தோடுதலைப் பெயர்க்கும்''[170]
மறுத்துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்''[171]

''சிறுதலைத் துருவின் பழுப்புறு விளைதயிர்''[172]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. சிறிய மயிரினையும் நெடிய கொம்பினையும் உடைய ஆட்டுக் கிடாயினை,

''செந்நிலப் புறவின் புன்மயிர்ப் புருவை
பாடின் தெண்மணித் தோடுதலைப் பெயர''[173]

''வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினுங்
குருஉமயிர்ப் புருவை''[174]

ஆகிய பாடலடிகள் காட்டுகின்றன. கூட்டமாகப் பெயர்வதையும், திரண்ட வலிய கொம்பினையும் உடைய கிடாயையும் (தகர்) குறிப்பதனால் ''புருவை'' எனும் சொல்

செம்மறியாட்டினைக் குறிப்பதை உணரலாம். ‘‘மேழகம்’’[175], ‘‘ஏழகம்’’[176] எனும் பெயர்களிலும் ஆடுகள் சுட்டப்படுகின்றன. இவை எவ்வகை ஆடுகளைக் குறிக்கின்றன எனத் தெளிவில்லை. உரைகளில் துருவாடு எனக் குறிக்கிப்படுகிறது. ‘‘ஏழகம் மேழகம் என்பன ஆட்டுக்கிடாய் என்னும் ஒரு பொருளன’’[177] என்கிறார் பொ.வே. சோமசுந்தரனார். ஆனால் பாடலில் ‘மேழகத் தகர்’, ‘ஏழகத் தகர்’ என ஆட்டின் ஆண்பாலைக் குறிக்கும் ‘‘தகர்’’ எனும் சொல் வந்தே ‘‘கிடாய்’’ என்பதை நேரடியாக உணர்த்துகின்றது. எனவே மேழகம், ஏழகம் என்பவை ஆட்டின் ஆண் பெண் இரு பாலுக்கும் பொதுவாகவே அமைந்துள்ளது எனலாம்.

**ஆமான்**

ஆமான் என்பது வனவிலங்குகளுள் ஒன்றாகும். சங்க அகப்பாடல்களில் இவ்விலங்கு ஆமான், வரையா என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது. இவை மலைப்பகுதிக் காடுகளில் காணப்படுகின்றன. ஆமானைத் தற்காலத்தில் ‘‘காட்டெருமை’’ எனத் தவறுதலாகச் சுட்டுவர். உண்மையில் காட்டெருமை வேறு ஆமான் வேறு. சங்க அகப்பாடல்களில் வரும் ஆமான் என்ற சொல்லிற்கு உரையரிசிரியர்கள் ‘காட்டுப்பசு’ என உரைகூறுகின்றனர். ஆங்கிலத்தில் ‘‘Gaur, Indian Gaur, Bison’’ என்ற பெயர்களில் சுட்டப்படுகின்றது. இது கரிய நிறமுடைய பசுவைப் போன்றது. ‘‘ஆபோன்று, பசுமாட்டைப்போன்று இன்றும் காட்டில் காணப்படும் விலங்கை விலங்கு நூலார் ‘‘The Bison’’ என்பர். இது மாட்டினத்தைச் (Oxen) சார்ந்த காட்டில் வாழும் மாடு (Wild Oxen) என்பர். உரையாசிரியர்களும் காட்டுப்பசு, காட்டு எருது, காட்டா என்று பொருள் கூறியிருப்பதைக் காணலாம்’’[178] என்கிறார் பி.எல். சாமி. உலக அளவில் இந்திய வகை ஆமான் என்பதைப் பிரித்துக்காட்ட ‘‘Indian Bison’’ எனவும் விலங்கியலாளர் சுட்டுகின்றனர். காட்டுமாடு பற்றி விளக்கமளித்த மா. கிருஷ்ணன் ‘‘இவைகளைக் ‘காட்டுப்பசு’, ‘காட்டா’, ‘காட்டான்’, ‘கடமா’ என்றும் குறிப்பதுண்டு’’[179] என்கிறார். ‘கடமா’ என்பதை காட்டுமாடாகக் கூறியிருப்பது தவறாகும். கடமா என்பது மானினத்தைச் சேர்ந்த விலங்காகும். ‘‘கலைமா (Deer) இனத்தைச் சேர்ந்த வேறொருவகை மான் கடமா என்பதாகும்[180] எனும் பி.எல். சாமியின் கூற்றால் இதனை அறியலாம்.

காட்டுப் பசுவானது கருமை நிறமுடைய பெருத்த உடலினையும், வளைந்த கொம்பினையும், உயர்ந்த திமிலையும் முழங்காலுக்குக் கீழ் வெண்மை நிறத்தினையும் கொண்டதாகும்.

‘‘தடங்கோட் டாமான் மடங்கல் மாநிரைக்
குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தெனத்’’[181]

‘‘அமர்க்க ணாமா னஞ்செவிக் குழவி’’[182]

''மடக்கண் ஆமான் மாதிரத்து அலறத்

தடக்கோட்டு ஆமான் அண்ணல் ஏறு''[183]

''புழற்கோட் டாமான் புகல்வியம்''[184]

ஆமானின் கொம்பு வளைந்து இருப்பதை ''தடங்கோடு'' என சங்க அகப்பாடல்கள் காட்டுகின்றன. ஆமானின் கொம்பு உள்ளீடற்று இருக்கக் கூடியது. இதனை பொள்ளலாக குறிஞ்சிப்பாட்டு ''புழற்கோடு'' எனக் குறிப்பிடுகின்றது. ஆமானைப் புலி வேட்டையாட்டுதல் மலைப்பகுதியில் வாழ்தல் என ஆமானினைப்பற்றித் தாம் உணர்ந்தவற்றைக் கவிஞர்கள் தம் பாடல்களில் தெளிவுறப் பதிவு செய்துள்ளனர்.

**ஆளி**

ஆளி எனும் விலங்கு கற்பனை விலங்காகவே பார்க்கப்படுகின்றது. கோவிற் சிற்பங்களில் சிங்கத்தின் உடலுடனும் யானையிலும் சற்று மாறுபட்ட முகத்துடனும் ஆளி காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. இதனை யாளி என்று சுட்டுவர். பெரும்பான்மையான கோயில்களில் யாளியின் சிற்பத்தினை எளிதாகக் காணமுடிகிறது. பேருடல் கொண்ட யானையுடன் போரிடும்படியாக அச்சிற்பங்கள் காட்சி தருகின்றன. யானையினும் வலிமை மிகுந்த விலங்கினமாக ஆளி காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. இலக்கியங்களிலும் ஆளி பற்றிய சில குறிப்புகள் காணப்படுகின்றன. இவ்விலங்கு வாழ்ந்ததற்கான வேறெந்த அடையாளங்களும் இல்லை. ஒரு காலத்தில் வாழ்ந்து பின்பு அவ்வினம் முற்றாக அழிந்திருக்கலாம். ஆனால் அதற்கான எவ்வகைச் சான்றும் இன்றுவரை கிடைக்கவில்லை. ஆளியின் எவ்வகைத் தொல்படிவும் கிடைக்கவில்லை. யாளியைப் பற்றிய கதையாடல்கள் யாவும் அது கற்பனையான விலங்கு எனும் தோற்றத்தையே உருவாக்குகின்றன. சூழலியலாளர்களும் யாளி என ஒரு விலங்கு வாழ்ந்ததில்லை, அது கற்பனையாகக் கூறப்படும் விலங்கு எனச் சுட்டுகின்றனர்.

ஆளி எனும் விலங்கு தற்காலத்தில் ''யாளி'' என்று வழங்கப்படுகின்றது. சங்க அகப்பாடல்களில் யாளி பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன. அவற்றில் ''ஆளி'' என்ற பெயரிலேயே இவ்விலங்கு சுட்டப்பட்டுள்ளது. யாளியின் உருவமைப்பைப் பற்றிய விளக்கம் ஏதுமில்லை. யானையைத் தாக்குவது, யானை யாளிக்கு அஞ்சுவது போன்ற செய்திகள் காணப்படுகின்றன.

''நனந்தலைக் கானத் தாளி யஞ்சி

இனந்தலைத் தரூஉ மெறுழ்கிளார் முன்பின்''[185]

எனும் அகநானூற்றுப் பாடலடிகளின் வாயிலாக யானைகள் காட்டகத்தே உள்ள யாளிக்கு அஞ்சி தன் இனத்தை அழைத்துக் கூட்டமாக்கிக் கொள்கிறது என்பது விளக்கப்படுகிறது. தம்மைத் தாக்கவல்ல தம்மைக் காட்டிலும் வலிமை மிக்க பெரிய விலங்கிற்கு அஞ்சி கூட்டமாகக் கூடி அதனை எதிர்க்கும் தன்மையும், சிறிய விலங்குகள் கூட்டமாகக் கூடி இரையை வீழ்த்துவம் விலங்கினங்களின் பண்பாகும். புலிக்கு அஞ்சிய காட்டுப்பசு

கூட்டமாகக் கூடி புலியை விரட்டுவதும் செந்நாய்கள் ஒன்று சேர்ந்து தன் இரையை வீழ்த்துவதும் இதற்குச் சான்றாகும். மேற்கண்ட அகநானூற்றுப் பாடலடிகளில் யானை யாளிக்கு அஞ்சி கூட்டமாகக் கூடுவது காட்டப்படுகின்றது. இதனால் ஆளி யானையினும் வலிய விலங்கு என்பதும் யானைகள் ஒன்று கூடி அதனை எதிர்த்திருக்கின்றன என்பதும் விளங்குகின்றது. மேலும் குறிஞ்சித்திணைப் பாடலான இப்பாடலில் பரந்தகாட்டில் யானைகள் யாளிக்கு அஞ்சுவதாக காட்டப்பட்டுகின்றது. அதன்படி மலைப்பகுதியில் காணப்படும் அடர்ந்த பரந்தகாட்டில் யாளிகள் வாழ்ந்திருக்கலாம். இத்தகைய செய்திகளின்படி ஒரு மிகப்பெரிய வலிய விலங்கினத்தின் இயல்பான தோற்றமே நமக்குக் கிடைக்கிறது. யானையத் தாக்கி வருத்தும் யாளியின் காட்சியை,

''வாள்வரி நடுங்கப் புகல்வந்து ஆளி
உயர்நுதல் யானைப் புகர்முகத் தொற்றி
வெண்கோடு புயக்குந் தண்கமழ் சோலைப்
பெருவரை அடுக்கத்து''[186]

''ஆளி நன்மான் அணங்குடை யொருத்தல்
மீளி வேழத்து நெடுந்தகை புலம்ப
ஏந்தல் வெண்கோடு வாங்கிக் குருத்தருந்தும்''[187]

எனும் பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன. யானையைப் புலி தாக்குவது பல சங்கப்பாடல்களில் கூறப்பட்டுள்ளது. யானையைத் தாக்கும் அளவிற்கு புலி வலிமை மிக்கது. அத்தகைய புலியே யாளியைக் கண்டு நடுங்குவதாகக் கூறப்படுகின்றது. யானையது பொறிகள் பொருந்திய முகத்தைத் தாக்கி அதன் வெண்மையான கோட்டினைப் பறிப்பதாகவும், அதன் குருத்தைத் திண்பதாகவும் மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. புலியையும் யானையையும் விட வலிமையான விலங்காயின் மேற்கண்ட பாடலில் கூறப்பட்ட தகவல்களும் இயல்பானதே. இது யாளியின் வலிமையினைக் காட்டும் விதமாகக் கூறப்பட்டுள்ளது எனலாம். நாம் காணாத ஒரு வலிமைமிக்க விலங்கு யானையை வீழ்த்தும் வல்லாண்மையுடன் அமைந்திருந்தது என்பதை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. இக்கருத்திற்குச் சற்று மாறுபட்ட கருத்தினை நற்றிணையில் காணமுடிகின்றது. புலியால் கொல்லப்பட்ட களிற்றிணை ஆளியானது இரையாக இழுத்துச் செல்வதை,

''அருவி ஆர்க்கும் பெருவரை அடுக்கத்து
ஆளி நன்மான் வேட்டெழு கோளுகிர்ப்
பூம்பொறி உழுவை தொலைச்சிய வைந்நுதி
ஏந்துவெண் கோட்டு வயக்களிறு இழுக்குந்
துன்னருங் கானம்''[188]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. யானையினும் வலிய விலங்கான யாளி புலியால் கொல்லப்பட்ட யானையை தான் நேரடியாகக் கொல்லாமல் இரையாக இழுத்துச் செல்வது

சற்று யாளியை நரியைப் போன்ற மற்ற விலங்குகளால் கைவிடப்பட்ட எஞ்சிய உணவினை உண்ணும் சாதாரண விலங்காகக் காட்டுவதாக உள்ளது. மேற்கண்ட பாடலில் பெரிய மலையின்கண் அமைந்த கானகத்தில் யாளி வாழ்வதாகக் காட்டப்படுகின்றது. சங்க அகப்பாடல்களைப் பொருத்தமட்டில் ஆளி என்பது யானையினை அழிக்கக் கூடிய வலிமையுடைய விலங்காக காட்சிப்படுத்தப்படுகிறது. மலைப்பகுதிக் காட்டில் வாழ்வதாகக் காட்டப்படுகின்றது. பிற்காலத்தில் யாளி என்ற பெயரில் நமக்கு உணர்த்தப்பட்ட யானை முகம் சிங்கவுடல் கொண்ட விலங்குத் தோற்றத்தை நீக்கிவிட்டு வலிமையானதொரு விலங்கு என்ற நிலையில் காணும்பொழுது ஒரு வேளை யானையினும் வலிமையானதொரு விலங்கினமாக இது வாழ்ந்திருக்கக் கூடும் என எண்ணத் தோன்றுகின்றது. யாளியின் உடலமைப்பு பற்றிச் சங்கப்பாடல்களில் விளக்கப்படவில்லை. அது ஒரு வலிய விலங்கு என்பதுதான் காட்டப்பட்டுள்ளது. இப்படியொரு விலங்கு வாழந்து அழிந்திருக்கவும் வாய்ப்புண்டு. பி.எல்.சாமி சங்கத்தமிழர் யாளியைப் பற்றி அறிந்திருந்தனர் என்கிறார். சிலைவடிவமே யாளியை கற்பனை விலங்காக்கி விட்டது என்பதுபட யாளியின் வாழ்வை அவர் ஐயுறும் நிலையை ‘‘சிங்கத்தைப் பற்றிய விளக்கம் சங்க இலக்கியத்தில் கிடையாது. செவிவழிச் செய்தியாகச் சிங்கத்தைப் பற்றிக் கூறியதைக் காண்கிறோம். ஆனால் ஆளியைப் பற்றி விளக்கமாகக் கூறியிருப்பதால் சிங்கத்தைவிட ஆளியைப்பற்றிய செய்திகளை நன்கு தெரிந்திருந்தனர். பிற்காலத்தில் ஆளியினுருவம் கோயிற்சிலைகளில் காணப்படுகிறது. இஃது உண்மையான விலங்கைக் காட்டாது கலப்பான கற்பனை விலங்காக (Hybrid Animal) உள்ளது’’[189] எனும் அவரது கூற்றால் உணரலாம். எனினும் போதிய சான்றுகள் கிடைக்கப்பெறாமையான் ஆளியின் இருப்பு உறுதியற்றதாகவே உள்ளது. ஒருவேளை வரும் காலங்களில் ஆளியின் தொல்படிவு கிடைக்கப்பெறின் சங்க இலக்கியத்தின் ஆளிபற்றிய அடிகள் உயிர்நடையிடும். தற்பொழுது சூழலியலாளர்களும் பிறரும் ஆளியைக் கற்பனை விலங்காகவே கூறுகின்றனர்.

**எருமை**

மனிதர்களின் வளர்ப்பு விலங்கினங்களுள் ஒன்றாக எருமை இருந்து வருகின்றது. எருமைகள் நீர்வளம் நிறைந்த பகுதிகளிலேயே காணப்படுகின்றன. சங்க அகப்பாடல்களில் நீர்வளம் நிறைந்த வயலும் வயல் சார்ந்த மருதநிலத்திலேயே பெரும்பான்மையும் இடம்பெற்றிருக்கின்றன. கருமை நிறமும் பெருத்த உடலும் தடித்த கொம்பையும் எருமைகள் கொண்டுள்ளன. நாம் வளர்க்கும் எருமைகள்யாவும் காட்டெருமையிலிருந்து வந்ததாகக் கூறப்படுகிறது ‘‘சேரிகளில் இடையர் வளர்க்கும் சாதாரண எருமைகளும் முர்ரா எருமை, டில்லி எருமை போன்ற பெருங்காரெருமைகளும் எல்லாம் நமது காட்டெருமையினின்றும் பிறந்த வகைகளே[190] எனும் மா.கிருஷ்ணனின் கூற்று இதைத் தெளிவிக்கும். சங்க அகப்பாடல்களில் எருமையானது எருமை, காரான், மை எனும் பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது.

"தடமருப்பு எருமை மடநடைக் குழவி" [191]

"இருமருப் பெருமை யீன்றணிக் காரான்" [192]

"இரும்பியன் றன்ன கருங்கோட் டெருமை" [193]

"நகுவரப் பணைத்த திரிமருப் பெருமை
மயிர்க்கவின் கொண்ட மாத்தோல் இரும்புறம்" [194]

"கருந்தா ளெருமை" [195]

போன்ற சங்க அகப்பாடலடிகளில் 'எருமை' என்ற பெயர் வருவதைக் காணமுடிகின்றது. பெரிய வளைந்த கொம்பினை உடையது என்றும் இருப்பு முருக்கியது போல் கரிய கொம்பினை உடையது என்றும் மயிரால் அழகுபெற்ற கரிய தோலை உடையது என்று கரிய காலினை உடையது என்றும் எருமையது உடற்கூறுகள் இப்பாடலடிகளில் சுட்டப்பட்டுள்ளன. பல சங்க அகப்பாடல்களில் இவ்வாறு எருமையது உடற்கூறுகள் காட்டப்பட்டுள்ளன. எருமை 'காரான்' எனும் பெயரில் சுட்டப்படுவதை,

"இருமருப் பெருமை யீன்றணிக் காரான்" [196]

"பனிப்பவர் மேய்ந்த மாயிரு மருப்பின்
மலர்தலைக் காரான்" [197]

"சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்" [198]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. கருமை நிறமுடைய பெரிய கொம்பையும், சேற்றில் ஆடக்கூடியதுமாகிய காரான் என்பது எருமையையே உணர்த்துவதை அறியலாம்.

"வைகுபுலர் விடியல் மைபுலம் பரப்ப" [199]

எனும் பாடலடி எருமையை "மை" எனச் சுட்டுவதை உரையாசிரியர்களின் உரைவழி அறிய முடிகின்றது. எருமையின் நிறம்கருதி இப்பெயர் அதற்கு அமைந்திருக்கக்கூடும்.

**எலி**

நமது வீடுகளிலும் வயல், காட்டுப்பகுதிகளிலும் இயல்பாகக் காணப்படும் விலங்காக எலி அமைகின்றது. எலிகளுக்குத் தாயகம் ஆசியாவென்றும் உலகின் பிறகண்டங்களுக்கு கப்பல்கள் மூலம் பரப்பப்பட்டனவென்றும் விலங்குநூலறிஞர்கள் கூறுகின்றனர்.[200] அவர்கள் சுமார் ஐநூறு வகை எலிகள் கண்டறிந்து வகைப்படுத்தப்பட்டுள்ளதாக கூறுகின்றனர். பொதுவாக நமது வாழிடப்பகுதிகளில் காணப்படும் எலிகளை நம் முன்னோர் வீட்டெலி, வெள்ளெலி, கரம்பையெலி என வகைப்படுத்தி உள்ளனர். 'கரம்பையெலி என்பது கொங்குநாட்டு வழக்காகும். வீட்டெலியை விடுத்து மற்ற இருவகை எலிகளையும் உண்ணும் வழக்கம் நமது நாட்டுப்புறங்களில் இன்றும் காணப்படுகின்றது. வீட்டெலி உண்ணத்தகுந்ததாக நம்மக்களால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அதனைப் பொறி வைத்துப் பிடித்தாலும் கொன்று வெளியில் வீசிவிடுவது வழக்கமாக உள்ளது. மற்ற எலிவகைகளைத் தேடிச்சென்று அதன் வளைகளைத் தோண்டிப் பிடித்து உணவாக்கிக்கொள்கின்றனர்.

வெள்ளெலியானது கரும்புக்காடு, நெல்லங்காடு, வறட்சியான காட்டுப்பகுதிகளில் காணப்படுகின்றது. கரம்பையெலியானது களிமண்பாங்கான இடங்கள், வாழைக்காடு போன்ற பகுதிகளில் காணப்படுகின்றது. வெள்ளெலியைக் காட்டிலும் கரம்பபையெலி சற்று பெருத்த உடலமைப்பைக் கொண்டதாகக் கூறுகின்றனர். மேற்கூறப்பட்ட எலிகள் பெரும்பான்மையாக எளிதில் காண்பவையாக இருக்கின்றன. இவை தவிர சிறுத்த உடலமைப்பைக் கொண்ட சுண்டெலி, தன் வளையைச் சுற்றிலும் சிறுசிறு கற்களை அரண் போன்று வைத்துத் தன் வாழிடத்தை அமைத்துக் கொள்ளும் 'பாறை எலி' அல்லது 'கல்லெலி' எனும் எலிவகைகளையும் நாட்டுப்புற மக்கள் வகைப்படுத்திக் காட்டுகின்றனர். சிறுவர்களை அவர்களது உடலின் சிறுமை கருதி நண்டான், சுண்டான் எனச்செல்லமாக அழைப்பதுண்டு. சிறுத்த உடலே 'சுண்டான்' என அழைக்கக் காரணமாகின்றது. அவ்வகையில் மற்ற எலிகளைப்போல் பெரிய உடலமைப்பன்றி சிறுத்த உடலமைப்பைக் கொண்ட எலியைச் 'சுண்டெலி' எனச் சுட்டுகின்றனர். இது காட்டுப்பகுதிகளில் மட்டும் காணப்படுவதாகும். வீட்டுப்பகுதிகளில் இதனைக் காண்பது அரிதாகும். இதனைச் சுண்டெலி என்பது வீட்டில் வாழ்வது[201] என பி.எல்.சாமி தவறுதலாகக் கூறியது போல் தோன்றுகிறது. சங்க அகப்பாடல்களில் வீட்டெலி, வெள்ளெலி ஆகிய இருவகை எலிகள் தெளிவுறச் சுட்டப்பட்டுள்ளன. சங்கப் பாடல்களில் விலங்கினங்களை வகைப்படுத்திக் கூறும் பி.எல்.சாமி புறப்பாடல்களில் சுட்டப்படும் கரம்பை எலியையும் சேர்ந்து சங்க இலக்கியதில் மூன்று வகை எலிகள் சுட்டப்படுவதைக் காட்டுகிறார். இதனைச் 'சங்க இலக்கியத்தில் மூன்று வகை எலிகளைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன… இல் எலி, கரப்பை எலி, வெள்ளெலி என்ற மூன்று வகை எலிகள் கூறப்பட்டுள்ளன''[202] எனும் அவரது கூற்றால் அறியலாம். கொங்கு நாட்டு வழக்கான 'கரம்பை' எலியே 'கரப்பை' என சங்கப் பாடல்களில் பதிவாகி உள்ளது. இதனை,

''கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்திப்
புதுவர கரிகாற் கரப்பை பார்க்கும்''[203]

எனும் புறப்பாடலால் அறியலாம். இதனைப் பின்பற்றியே பி.எல்.சாமியும் 'கரப்பை' எனச் சுட்டியுள்ளார். சங்க அகப்பாடல்களில் இப்பெயர் இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. நாம் தற்காலத்தில் சுட்டும் 'வீட்டெலி' என்பது 'இல்லெலி' எனச் சங்க அகப்பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை,

''நள்ளிருள் யாமத் தில்லெலி பார்க்கும்
பிள்ளை வெருகிற் கல்கிரை யாகி''[204]

''இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை''[205]

எனும் பாடலடிகளால் அறியலாம். வெல்லெலி என்பது மேற்புறம் சாம்பல் நிறமும் வயிற்றின் அடிப்புறம் வெண்மைநிறமாய மயிர்களையும் உடையது. அத்தகைய வெள்ளெலியின் தோற்றத்தை,

‘‘குன்றி அன்ன கண்ண குரூஉமயிர்ப்
புன்தாள் வெள்எலி மோவாய் ஏற்றை’’[206]

எனும் அகநானூற்றுப் பாடலடிகள் காட்டுகின்றன. எலியின் கண்கள் நன்கு விளங்கித் தோன்றும் படியான தோற்றமுடையது. அத்தகைய கண்ணைக் குன்றிமணிக்கு ஒப்பிட்டிருப்பதைக் காட்டுகின்றது. எலியின் காலானது மிகவும் மெல்லிய குச்சி போன்றது அதனையே புன்தாள் எனச் சுட்டியுள்ளார் புலவர். நற்றிணையின் எண்பத்து மூன்றாம் பாடல் எலியின் சூட்டிறைச்சியைச் சுட்டுகின்றது. இது கூகைக்குத் தருவதாகக் தோழி கூறும்படி அமைந்துள்ளது. எனினும் கூகைக்குச் சூடான எலியிறைச்சி தேவையில்லை. அது ஓடும் எலியைப் பிடித்து அப்படியே உண்ணக்கூடிய பறவையாகும். மனிதனே எலியைச் சுட்டு உண்ணும் பழக்கமுடையவன். தான் உண்ணும் முறையிலேயே கூகைக்குத் தருவதாகக் கூறுவது மனிதன் எலியை உணவாக உண்பதைக் காட்டுகின்றது. உரையாசிரியர்கள் இப்பாடலில் சுட்டப்படும் எலி வெள்ளெலி எனக் கூறுகின்றனர். ஆனால் இதில் வெள்ளெலி என்பதைப் பாடலில் நேடியாக உணர்த்தப்படவில்லை. எனவே அது கரப்பை எலியாகவும் இருக்கலாம் என்பது ஆய்வாளர் கருத்து. மேற்காட்டிய பாடலடிகள் எலியினைக் காட்டுப் பூனையும், கூகையும் மனிதனும் உண்ணும் சூழலியலின் உணவுச் சங்கிலியுடன் பல்லுயிரித்தின் உயிரின வகைப்பாட்டையும் காட்டுவதாக அமைவதைக் காணமுடிகின்றது.

**ஒட்டகம்**

ஒட்டகம் தமிழகத்திற்கான மரபார்ந்த விலங்கன்று. வெளிநாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டதாகும். இது பாலைவனப் பகுதியில் போக்குவரத்திற்குப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. உலகளவில் ஒற்றைத்திமில் ஒட்டகம், இரட்டைத்திமில் ஒட்டகம் என இருவகை ஒட்டகங்கள் காணப்படுகின்றன. இந்தியப் பகுதிகளில் வாழ்பவை ஒற்றைத்திமில் ஒட்டகங்கள் ஆகும். சங்கநூற்களில் ஒன்றான அகநானூற்றில் ஒட்டகம் பற்றி செய்தி வருகின்றது. சங்க காலத்தில் தமிழ் நாட்டில் ஒட்டகம் வாழ்ந்ததாகத் தெரியவில்லை. ஒட்டகம் என்பது ஒரு விலங்கு என்ற தகவல் மட்டும் தெரிந்து அதுபற்றி முழுமையாக அறியாத நிலையில் தவறான தகவலுடன் அகநானூற்றுப் பாடல் பாடப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

‘‘குறும்பொறை யுணங்குந் ததர்வெள் என்பு
கடுங்கால் ஒட்டகத் தல்குபசி தீர்க்கும்
கல்நெடுங் கவலைய கானம் நீந்தி’’[207]

இப்பாடலில் பசியின் காரணமாக பாறையிடத்தே காயந்து கிடக்கும் வெள்ளிய எலும்புகளை ஒட்டகம் தின்று பசி ஆறுவதாகச் சுட்டப்படுகின்றது. ‘‘ஒட்டகம்’’ என்ற

விலங்கினத்தின் பெயரை தெளிவுறப் பதிவு செய்த ஆசிரியர் ஒட்டகம் தாவர உண்ணி என்பதறியாது எலும்பை உண்கிறது எனச்சுட்டுகிறார். இச்செய்தியினடிப்படையில் நோக்கும் பொழுது 'ஒட்டகம்' பற்றி அறியப்படாத நிலையில் தவறான தகவலின் அடிப்படையில் தமது தவறான கேள்வியறிவைக் கொண்டு ஆசிரியர் பாடிவிட்டார் எனத் தெரிகின்றது. தற்காலத்தும் தமிழகத்தில் ஒட்டகத்தைப் பார்ப்பது அரிதாகவே உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

**கரடி**

சங்க அகப்பாடல்களில் கரடியானது எண்கு, உளியம் என்னும் பெயர்களில் சுட்டப்படுகின்றது. தற்காலத்தில் இவ்வுயிரினம் கரடி என்ற பெயரிலேயே குறிக்கப்படுகின்றது. "கரடி என்ற பெயர் கரடு என்றதொரு வாழிடத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது"[208] என்கிறார் ச.முகமது அலி. இந்தியாவில் மொத்தம் நான்கு வகைக் கரடிகள் இருப்பதாகவும் தமிழல் நாம் கரடி என அழைக்கும் கரடி வகை "Sloth bear" என்னும் வகையினதென்றும் இந்தியாவெங்கிலும் காட்டுப் பகுதிகளில் இவ்வகைக் கரடிகள் வாழ்வதாகவும் கூறுகின்றார். கரடியின் உடல் முழுவதும் நீண்ட கரிய மயிர் இருக்கும். மூக்கும் தாடையும் வெண்மை நிறமாக இருக்கும். இதன் கால்களில் நீண்ட நகங்கள் இருக்கும். கரடிகள் இரவில் இரை தேடுவனவாகும்.

"கவிதலை எண்கின் பரூஉமயிர் ஏற்றை
இரைதேர் வேட்கையின் இரவிற் போகி"[209]

எனும் பாடலடிகள் கரடி தலையைக் கவிழ்த்த வண்ணம் இரவு நேரத்தில் இரைதேடித் திரியும் இயல்பை விளக்குவதாக அமைந்துள்ளன. கரடிகள் கூட்டமாக சுற்றித் திரியும் இயல்புடையன என விலங்கு நூலோர் கூறுகின்றனர். இத்தன்மையைச் சங்க அகப்பாடல்களிலும் காணமுடிகின்றது. இதனை,

"கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி
சிதலை செய்த செந்நிலைப் புற்றின்"[210]

"இருங்கிளை எண்கின் அழல்வாய் ஏற்றை
கருங்கோட்டு இருப்பை வெண்பூ முனையின்
பெருஞ்செம் புற்றின் இருத்தலை யிடக்கும்"[211]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. கூனிய முதுகுடைய எண்கின் தொகுதி எனவும் இருங்கிளை எண்கு எனவும் இப்பாடல்கள் சுட்டுவது கரடி கூட்டமாக இறைதேடும் தன்மையையே ஆகும். கரடிகள் கூட்டமாகத் திரியும் நிலை தற்காலத்தில் அருகிவிட்டது. "இக்காலத்தில் கரடிகள் மனிதரால் அழிக்கப்பட்டுக் கூட்டமாகக் காண அரிதாகிவிட்டது வருந்தத்தக்கது"[212] எனும் பி.எல்.சாமியின் கூற்று இதனைத் தெளிவிக்கும். மேலும் கரடிகள் இருப்பைப் பூக்களையும், கறையான் புற்றை உடைத்து கறையான்களையும் உண்பதை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. கரடியானது தன் நான்கு கால்களில் பெரிய

முன்கால்களை கைபோல் பயன்படுத்தக் கூடியது. அதன் கால்கள் யாவும் மயிர்த் தொகுதியால் நிறைந்திருக்கும் வளைந்த பெரிய விரல்களைக் கொண்டிருக்கும் தன்மைகளை,

"பெருங்கை எண்கின்"[213]

"மயிர்க்கால் எண்கின் ஈரினங்கவர"[214]

"கொடுவிரல் உளியம் கெண்டும்"[215]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. சங்க அகப்பாடல்களில் கரடிகளைப் பற்றிக் கூறப்படும் தகவல்கள் யாவும் கரடியின் தன்மைகளை தெளிவுடன் எடுத்துக் கூறுவனவாக உள்ளன. மேலும் அவை கரடியுடன் தொடர்புடைய இருப்பை மரம், கறையான் புற்று, கறையான், பாம்பு எனப் பல பல்லுயிரிய வகைமை அடங்கிய பல்லுயிரினத் தொகுப்பைக் காட்டுவதாக அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது. இது புலவர் கரடியைப் பற்றிக் கூற எண்ணி மட்டுமே எழுதியிருப்பினும் தற்காலத்து பல்லுயிரியச் சூழலைக் காட்டுவதாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**கழுதை**

கழுதை மனிதர்களால் வளர்ப்புயிரியாகப் பழக்கப்பட்டு அவர்களது தேவைக்காகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. மலைப் பகுதிகளில் கட்டுமானப் பொருட்கள் சுமத்தல், ஆற்றிலிருந்து மணல் சுமத்தல் எனப் பல்வகைப்பட்ட சுமை தூக்கும் பணிகளில் இது பயன்படுத்தப்பட்டாலும் சலவைத் தொழிலில் பயன்படுத்தப் படுவது தனித்த அடையாமாகப் பார்க்கப்படுகின்றது. நாகரீக மாற்றத்தின் காரணமாக இந்நிலையும் மாற்றமடைந்து வருவது குறிப்பிடத்தக்கது. சங்க அகப்பாடல்களில் 'கழுதை' எனும் உயிரினமானது 'கழுதை' என்ற தற்காலத்தில் குறிக்கப்படும் அதே பெயரில் குறிப்பிடப்படுகின்றது. இது அகநானூற்றில் மட்டுமே இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. சங்ககாலத்திலிருந்தே கழுதைகள் நிறை சுமக்கப் பயன்படுத்தப்பட்டு வந்திருப்பதைக் காணமுடிகின்றது. இதனை,

"பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய"[216]

"நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்
குறைக்குளம்பு உதைத்த கற்பிறழ் இயவின்"[217]

"நெடுஞ்செலிக் கழுதைக் குறுங்கால் ஏற்றைப்
புறநிறை பண்டத்துப் பொறையசாஅக் களைந்த"[218]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. கழுதைகளின் முதுகுப் பகுதியில் சுமைகளை வைத்துச் சுமக்க வைத்ததை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. சுமையுடன் நடந்து அதன் குளம்புகள் தேய்ந்ததை 'குறைக்குளம்பு' எனும் பதம் காட்டுகின்றது. நீண்ட செவியும் குறுகிய காலுமாகிய அதன் உடற்கூறுகள் சரியாகவே காட்டப்பட்டுள்ளன. மனிதனின் தேவைக்காகவே இவ்வுயிரி பயன்படுத்தப்பட்டுள்ளதை இதன் மூலம் அறியலாம்.

**காட்டெருமை**

காட்டெருமை காட்டில் வாழும் எருமையினமாகும். நம் வீட்டில் வளர்க்கும் எருமைகள் காட்டெருமைகளிலிருந்து வந்தவையே. காட்டெருமையை ஆங்கிலத்தில் Wild Buffalo, Water Buffalo எனச் சுட்டுகின்றனர். தற்பொழுது காட்டெருமைகள் தமிழகத்தில் இல்லை. தென்னிந்தியாவிலிருந்தே காட்டெருமைகள் அழிக்கப்பட்டு விட்டன. "காட்டெருமைகள் தென்னிந்தியாவிலிருந்து 1916களில் அழிக்கப்பட்டு விட்டன"[219] எனும் ச.முகமது அலியின் கூற்றால் இதை உணரலாம். நீர்ப்பாங்கான சதுப்புநிலக் காடுகளில் இவை கூட்டமாக வாழ்வன. தற்போது 'ஆமானை' காட்டெருமை எனத் தவறாகச் சுட்டுகின்றனர் மக்கள். சங்க அகப்பாடல்களில் காட்டெருமை நேரடியாகச் சுட்டப்படவில்லை என்றாலும் குறிப்பால் உணர்த்தப்படுகிறது.

"கறாஅ எருமைய காடிறந்தான் கொல்லோ"[220]

எனும் கலித்தொகை அடியில் 'கறாஅ எருமைய' எனும் பதம் 'கறக்கப்படாத எருமைய' என்று பொருள்படுகின்றது. 'கறாஅ எருமைய காடு' எனுமிடத்து கறக்கப்படாத எருமையை உடைய காடு எனப் பொருள்படுகின்றது. நம் வீட்டில் வளர்க்கப்படும் எருமைகள் பால் கறக்கப்படும் எருமைகளாகும். காட்டில் வாழும் காட்டெருமைகள் கன்றினால் உண்ணப்படுதலின்றி பிறரால் கறக்கப்படும் தன்மையனவன்று. மேலும் கறக்கப்படாத எருமையானது காட்டில் இருப்பதாகக் கூறப்படுகின்றது. சங்க அகப்பாடல்களில் வீட்டெருமைகள் மருதத்திணையின் பின்புலத்தில் தெளிவுறக்காட்டப்பட்டுள்ளன. இங்கு நெய்தற்கலியில் காட்டப்படும் "கறாஅ எருமை" காணப்படுவது நெய்தல் நிலத்தில் அமைந்த சதுப்புநிலக் காடாகவும் இருக்கலாம். சதுப்புநிலக் காடுகளில் காட்டெருமைகள் வாழும் என்பது இங்கு நினைவிற் கொள்ளத்தக்கது.

ஒரு வேளை மலை நிலத்துக் காட்டுப்பகுதியாக இருப்பினும் நீர் நிறைந்த காட்டுப்பகுதிகளில் இது வாழும் தன்மையுடையதென சூழலியலாளர்கள் கூறுகின்றதும் பொருத்தமாகவே உள்ளது. எனவே மேற்கண்ட பாடலடியில் காணப்படும் 'கறாஅ எருமை' காட்டெருமையைச் சுட்டுவதாகக் கொள்வதற்கு வாய்ப்புள்ளது எனலாம். "கறக்கப்படாத காட்டெருமைகளையுடையவாகிய காட்டைக் கடந்து போயினானோ?"[221] எனும் நச்சினார்க்கினியரின் கருத்து மேற்கண்ட கருத்திற்கு வலுச்சேர்ப்பதாக அமைவதையும் காணலாம்.

**குதிரை**

குதிரை மனிதனின் வளர்ப்பு உயிரினமாக அமைந்துள்ளது. உலகின் பல்வேறு பகுதிகளிலும் குதிரை காணப்படுகின்றது. இக்குதிரைகள் நான்காயிரம் ஆண்டுகட்கு முன்னர் வளர்ப்புப் பிராணிகளாக்கப்பட்டதாக ச. முகமது அலி கூறுகின்றார்.[222] குதிரை தமிழ் நாட்டின் மரபார்ந்த உயிரினமன்று. கடல் வழியாக இறக்குமதி செய்யப்பட்டது. குதிரைகள் கடல்வழியாக தமிழ் நாட்டிற்குக் கொண்டுவரப்பட்டதை,

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்"[223]

எனும் பட்டினப்பாலை அடியின் வாயிலாக அறியலாம். குதிரை எனும் உயிரினமானது. குதிரை, பரி, புரவி, கலிமா, வயமான், கடுமா என்னும் பெயர்களில் சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. சங்ககால மக்கள் குதிரையைத் தம் தேரில் பூட்டி தேரை இழுக்கப் பயன்படுத்தி வந்ததை அறிய முடிகின்றது. தேரினை இழுக்கும் வலிமையும் விரைவாக ஓடும் ஆற்றலும் கொண்ட விலங்காகையால் மனிதன் அதனைத் தேரிழுக்கப் பயன்படுத்தியிருப்பதைக் காண முடிகின்றது. இன்றும் குதிரைச் சவாரியாக அதன் முதுகில் ஏறி வலம் வருவதும் குதிரையை வண்டியில் பூட்டி விரைவாகப் பயணிப்பதும் இருந்து வருவதைக் கண்கூடாகப் பார்க்க முடிகின்றது.

"செறுவுறு குதிரையிற் பொங்கி"[224]

"விடுவிசைக் குதிரை விலங்குபரி முடுகக்"[225]

கடும்பரி நெடுந்தேர் கால்வல் புரவி"[226]

"விரியுளைக் கலிமான் தேரொடு"[227]

ஆகிய பாடலடிகள் குதிரையை குறித்து வந்துள்ளனவாகும். குதிரைகளைப் பண்டைத்தமிழர்கள் போருக்கும் பயன்படுத்தி இருப்பதை புறப்பாடல்களின் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது. தமிழகத்தின் வெளியிலிருந்து கடல்கடந்து கொண்டுவரப்பட்ட விலங்கினமாகிய குதிரை இன்று தமிழ்நாட்டின் உயிரினமாகவே வளர்ந்து வருகின்றது எனலாம்.

**குரங்கு**

காட்டுப்பகுதிகளில் எளிதில் காணப்படும் விலங்கினமாகக் குரங்குகள் காணப்படுகின்றன. காட்டுப்பகுதிகளுடன் சிற்சிறு மலைப்பகுதிகள், பெருமலைத்தொடர்களிலும் குரங்கினங்களைக் காணமுடியும். சங்க அகப்பாடல்களில் குரங்குகள் ஆண், பெண் என இருபாற் குரங்குகளை தனித்தனியே பிரித்துணரும்படியும் குரங்கினத்தின் பிரிவுகளை உணர்த்தும் வகையிலும் பாடல்கள் காணப்படுகின்றன. பொதுவாகப் பெண்குரங்கு மந்தி என்ற பெயரில் சுட்டப்படுகின்றது. ஆண் குரங்கு கலை, கடுவன் என்ற பெயர்களில் சுட்டப்படுகின்றது. மந்தி எனும் பெயர் குரங்கு வகையின் ஒன்றைச் சுட்டுவதாகவும் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. குரங்கினத்தைச் சுட்டும் "குரங்கு" என்ற பெரும் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றது.

"மந்திக் கணவன் கல்லாக் கடுவன்"[228]

"குரங்கின் றலைவன் குருமயிர்க் கடுவன்"[229]

"மந்திக் காதலன் முறிமேய் கடுவன்"[230]

எனும் ஐங்குறுநூற்றுப் பாடலடிகள் குரங்கினத்தின் ஆண்பாலை "கடுவன்" எனக் குறிப்பதும் பெண்பாலை 'மந்தி' எனக் குறிப்பிடுவதும் பண்டைத் தமிழ் மக்களின் பால்தன்மை கருதிய உயிரியற் பகுப்பிற்குச் சான்றாக அமைகின்றது எனலாம். மந்தி

எனும் சொல் 'செம்முக மந்தி' என வரும்பொழுது 'செம்முகக் குரங்கு வகையின் பெண்பாலை உணர்த்துவதாக அமைவது குறிப்பிடத்தக்கது. உலகளவில் இந்தியாவிலேயே குரங்கின வகைகள் அதிகமாகக் காணப்படுவதாகச் சூழலியலாளர்கள் கூறுகின்றனர். ச. முகமது அலி அவர்கள் ''ஒரு ஒப்பீட்டளவில் உலகிலேயே அதிக இனக் குரங்குகள் இந்தியாவில் காணப்படுகின்றன. 15 வகைக் குரங்கினங்களில் இருவகை தேவாங்குகள்' மற்றும் வாலில்லா குரங்கின் ஒருவகையும் (Hoo lock) இருப்பது பெருமைக்குரியது''[231] எனக் கூறுகின்றார். இது பல்லுயிரிய வளத்தில் இந்தியாவின் தனித்தன்மையைக் காட்டுவதாக உள்ளது. தமிழகத்தில் நான்குவகைக் குரங்கினங்கள் இருப்பதும் அந்நான்குவகைக் குரங்கினங்களும் சங்க இலக்கியத்தில் பதிவுசெய்யப்பட்டுள்ளன என்பதும் சங்க இலக்கியத்தின் வாயிலாகவும் ''இந்தியாவில் வாழும் குரங்கினத்தில் தமிழ் நாட்டிலே காணப்படும் நான்குவகைக் குரங்கினத்தைப் பற்றியும் சங்க நூல்களில் செய்திகளைக் காண்பது குறிப்பிடத்தக்கதாகும்''[232] எனும் பி.எல்.சாமி அவர்களின் கூற்றாலும் அறியமுடிகிறது. தற்காலத்துச் சூழலியலாளர்களும் மேற்கண்ட கருத்தை உறுதிசெய்கின்றனர். சங்க அகப்பாடல்களில் செம்முக மந்தி, முசு, ஊகம் என்ற மூவகைக் குரங்குகள் நேரடியாகக் கூறப்பட்டுள்ளன. நான்காவது வகையாக நீலகிரியில் காணப்படும் கருங்குரங்கை பி.எல்.சாமி தம் ஆய்வின் மூலம் தமது நூலில் நிறுவியுள்ளார். இது ஏற்புடையதாகவே உள்ளது. இவர் இக்குரங்கு வகையை ''நீலகிரி முசு'' எனச் சுட்டுகின்றார்.[233]

சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் செம்முக மந்தி மனிதர்களுடன் நெருங்கிப் பழகுவனவாக உள்ளது. இது சிலவிடங்களில் மக்கள் வாழும் பகுதிகளுக்கு அருகிலேயே வாழ்வதைக் காணமுடிகின்றது. மனிதர்கள் கொடுக்கும் உணவுப் பொருட்களை வாங்கி உண்பதையும் சில ரேநங்களில் நமது கையிலிருக்கும் பொருட்களைத் தானாகவே பறித்துச் செல்வதையும் காணமுடிகிறது. குரங்காட்டிகளிடம் காணப்படும் குரங்கு இவ்வகையைச் சேர்ந்ததே ஆகும்.

''அதவத் தீங்கணி அன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்க''[234]

எனும் நற்றிணைப் பாடலடிகள் செம்முக மந்தியின் தோற்றத்தை விளக்குகின்றன. அத்திப் பழத்தின் சிவந்த நிறத்துடன் பஞ்சுபோன்ற மயிரையும் உடையதாக இவ்வடிகள் காட்டுகின்றன. செம்முகக் குரங்கின் முகம் குளிர்காலத்தில் சிவந்தும் வெயில் காலத்தில் சற்று வெளுத்தும் காணப்படும் என்கின்றனர். குறிப்பாக தமது புணர்வுக் காலத்தில் அதன் செம்முகம் இயல்பினின்றும் சற்று சிவந்துகாணப்படும் என்கின்றனர் சூழலியலாளர்கள்.

''செம்முக மந்தி ஆளும் நாட''[235]

''............... துய்த்தலை மந்தி''[236]

“வட்டக் கழங்கில் தாஅய்த் துய்த்தலைச்

செம்முக மந்தி ஆடும்”[237]

எனும் பாடலடிகள் செம்முக மந்தியைச் சுட்டிக் காட்டுவதை உணரலாம். இச் செம்முக மந்திக்குக் கைவிரல்கள் கரிய நிறத்தில் காணப்படுவதை,

“கருவிரல் மந்திச் செம்முகப் பெருங்கிளை”[238]

“கருவிரன் மந்திக்கு விருவிருந்து அயரும்”[239]

“அருவி பாய்ந்த கருவிரல் மந்தி”[240]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. செம்முகக் குரங்கின் கைகள் கறுப்பு நிறமாக இருப்பதாகக் கூறியிருப்பது தற்காலத்தும் காணலாகும் இயல்பான பதிவாகும்.

கரிய முகமுடைய குரங்கினத்தைச் சங்க அகப்பாடல்களில் ‘முசு’ எனும் பெயரில் காணமுடிகின்றது. இத்தகைய முசுக் குரங்குகளை,

“மைபட் டன்ன மாமுக முசுக்கலை”[241]

“இன்முசுப் பெருங்கலை நன்மேயல் ஆரும்”[242]

“கருமுக முசுவின் கானத் தானே”[243]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. மைபூசியது போன்ற கரிய முகத்தை உடைய முசு என்பது முசுக்குரங்கை வேறுபடுத்திக் காட்டுவதாக அமைந்துள்ளது.

காடுகளின் அடர்ந்த இடங்களிலும், உயர்ந்த மலைகளிலும் குன்றுகளின் உச்சியிலும் காணப்படும் கரிய முகத்தையும் முகத்தைச் சுற்றியும் நரைத்தமயிரால் பிடரி அமைந்த ஒரு வகைக் குரங்கினத்தைச் சங்க அகப்பாடல்கள் “ஊகம்” எனச் சுட்டிக்காட்டி உள்ளன. நரைத்த மயிர் பொருந்திய முகத்துடன் கரிய விரலையும் கொண்ட குரங்கினமாகிய இதனை,

“இனமயி லகவு மரம்பயில் கானத்து

நரைமுக வூகம் பார்ப்பொடு பினப்பப்”[98]

“……………….. நீடுமயிர்க்

கடும்ப லூகக் கறைவிர லேற்றை”[244]

“வெருள்புடன் நோக்கி வயலறை யூகம்

இருடூங் கிறுவரை யூர்பிழி பாடும்”[246]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. ‘கறைவிரல்’ என்பது கரிய விரலைக் குறிக்கின்றது. இவ்வகைக் குரங்குகளின் விரல் கருமைநிறத்திலேயே உள்ளன. இதனை,

“கருவிர லூகம் பார்ப்போ டிரிய”[247]

எனும் மலைபடுகடாம் பாடலடி தெளிவிக்கும். குரங்கினத்தில் காணப்படும் வகைமைகளை விளக்கும் வகையில் அவற்றின் உருவ வேறுபாட்டினைத் தெளிவுறச் சங்க அகப்பாடல்கள்

எடுத்துக்காட்டியுள்ளமையை இதன் மூலம் நாம் அறியலாம். செம்முகக்குரங்கு, முசு, ஊகம் ஆகிய குரங்கினங்களுடன் நற்றிணையின் நூற்றிப்பத்தொன்பதாம் பாடலில் சுட்டப்படும் கருங்கலை என்பதை ''நீலகிரி முசு'' என பி.எல். சாமி தெளிவுபடுத்தும் குரங்கினத்துடன் நான்குவகைக் குரங்கினங்கள் சங்க அகப்பாடல்கள் காட்டுகின்றன. குரங்கு எனும் ஒரு உயிரின வகையின் உட்பிரிவுகளை சங்க அகப்பாடல்கள் பதிவு செய்திருப்பது பல்லுயிரியத்தின் உயிரி வகைப்பாடுகளை உணர்த்தும் வகையில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

**கோவேறு கழுதை**

கொங்கு நாட்டுக் கிராமப் பகுதிகளில் ''கோவறகழுதை'' என்ற சொல் வழக்கில் உண்டு. இச்சொல் 'கோவேறு கழுதை' யின் திரிபாக இருத்தல் வேண்டும். இச்சொல்லைப் பயன்படுத்தியவர்களிடம் இது பற்றிக் கேட்கும்பொழுது அவர்கள் சாதாரணக் கழுதையையே சுட்டுகின்றனர். இது காலங்காலமாகக் கோவேறு கழுதை என்ற சொல் மட்டும் கடத்தப்பட்டு வந்திருப்பதைக் காட்டுகின்றனர். ஒருவேளை இது பிற்காலத்தில் அவர்களின் அறிவுப் பரப்பிலிருந்து அழிந்துவிட்டதாகவும் கொள்ள இடமுன்டு. ஆனால் தெளிந்த அறிவுடையவர்கள் சரியாகக் கூறுவதையும் காணமுடிகின்றது. சங்க இலக்கியத்தில் கோவேறு கழுதை என்ற பெயர் இடம்பெறவில்லை. 'அத்திரி' எனச் சுட்டப்படும் பதத்திற்கு உரையாசிரியர்களின் விளக்கமும் அகராதிகளின் விளக்கமும் இதனைக் கோவேறு கழுதை என அடையாளப்படுத்துவதைக் காணமுடிகின்றது.

''கழிச்சேறு ஆடிய கணைக்கால் அத்திரி
குளம்பினுஞ் சேயிறா ஒடுங்கின''[248]

''கழிச்சுறா எறிந்த புட்டாள் அத்திரி
நெடுநீா் இருங்கழிப் பரிமெலிந் தசைஇ''[249]

''கொடுநுகம் நுழைந்த கணைக்கால் அத்திரி
வடிமணி நெடுந்தோ் பூண''[250]

எனும் பாடலடிகளின் மூலம் அத்திரியாகிய கோவேறு கழுதை தேரில் பூட்டப்பட்டு போக்குவரத்திற்குப் பயன்படுத்தப்பட்டிருப்பதை அறிய முடிகின்றது. கோவேறு கழுதை நெய்தல் நிலத்தின் உப்பங்கழிப் பகுதியில் இருந்ததாக அறிய முடிகின்றது. கோவேறு கழுதை ஆண் கழுதையும் பெண் குதிரையும் இணைந்து உருப்பெற்ற கலப்பின விலங்காக பி.எல்.சாமி கூறுகின்றாா்.[251] மேலும் இது கடல்வழியாக இறக்குமதியாயிருக்கலாம் என்கிறாா். ச.முகமது அலி அவா்கள் ''குதிரைக்கும், கழுதைக்கும் செயற்கையான கலப்பு உறவால் பிறப்பதே Mule என்ற கோவேறு கழுதைகள்''[252] என்கிறாா். கோவேறு கழுதை எனும் விலங்கு தமிழ் நிலத்தின் மரபின் வழியான விலங்கினமாக அன்றி பன்னெடுங்காலத்திற்கு முன்பே இறக்குமதி செய்யப்பட்ட விலங்கினம் என்பதை மேற்கூறிய கூற்றுகளால் அறியலாம்.

**சிங்கம்**

சங்க அகப்பாடல்களில் சிங்கமாகிய விலங்கு "அரிமா" என்ற பெயரில் சுட்டப்படுவதை உரையாசிரியர்களின் உரைவழி அறியமுடிகின்றது. உலக அளவில் இரண்டு வகை சிங்கங்கள் இருந்து வருகின்றன. ஒன்று ஆப்பிரிக்கச் சிங்கம் மற்றொன்று ஆசியச் சிங்கம். தமிழகத்தில் சிங்கங்கள் வாழ்ந்ததில்லை என்பதே விலங்கு நூலாரின் கருத்தாக அமைகின்றது. கர்நாடகத்திற்கு வடக்கிலிருந்தே சிங்கங்கள் இருந்ததாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இதனை "ஒரு காலத்தில் இந்தியாவின் வடபகுதி, மையப்பகுதி, ராஜஸ்தான் மற்றும் தெற்கே நர்மதை ஆறு வரை காணப்பட்ட இச்சிங்கம் தற்போது குஜராத்தில் உள்ள கிர் காடுகளில் மட்டும் காணப்படுகிறது."[253] எனும் கூற்றால் அறியலாம். "சிங்கம் தமிழ்நாட்டில் என்றும் இயற்கையில் வாழ்ந்த விலங்கு அன்று"[254] எனும் கருத்தும் இதனை உறுதி செய்யும். வலிமை மிக்க பெரிய உயிரினமான சிங்கத்தைப் பற்றிய விளக்கங்கள் எதுவும் சங்க இலக்கியத்தில் காணப்படாததைக் கொண்டும் இதனை உணர முடிகின்றது. யானை, புலி, மான், குரங்கு போன்ற விலங்குகளைப் பற்றி பற்பல விளக்கங்கள் இடம்பெற்றிருக்கின்றன. அவற்றில் கால்பாகம் அளவிற்குக்கூட வலிமையான பெரிய விலங்கினமான சிங்கம் குறிப்பிடப்படவில்லை.

"சுரும்பிமிர் அடுக்கம் புலம்பக் களிறட்டு
உரும்பில் உள்ளத்து அரிமா வழங்கும்"[255]

எனும் நற்றிணைப் பாடலில் சிங்கம் மலைப்பகுதியில் களிறைக் கொல்வதாகக் காட்டப்படுகின்றது. ஆனால் இயல்பில் சிங்கங்கள் அடர்ந்த வனங்களிலோ மலைப் பகுதிகளிலோ வாழ்வதில்லை. புலிதான் இத்தகைய சூழலில் வாழும் தன்மை கொண்டது. சிங்கம் புதர்கள் நிறைந்த வெட்டவெளிப் புதர்க்காடுகளில் வாழும் தன்மையுடையன. "ஒரு காலத்தில் இந்தியாவில் சிங்கங்கள் செழித்து வாழ்ந்தன. பிரம்மாண்டமான மரங்களும் கொடிகளும் செறிந்து இருண்ட மலைச்சாரல்களில் இவைகளுக்குப் பிரியம் இல்லை; சற்று வெளிப்பாங்கான காடுகளிலும் புதர் நிறைந்த இடங்களிலுமே இவை குடிகொள்ளும்"[256] எனும் மா.கிருஷ்ணனின் கூற்று இதனை உறுதிப்படுத்தும். இவ்வாறிருக்கையில் பல்வேறு விலங்கினங்களின் இயல்பினைத் தெளிவுறப் பதிவு செய்த சங்கப் பாடல்களில் மேற்கண்ட பாடலடிகள் காட்டும் முரணிய காட்சியானது, சிங்கம் பற்றி கண்டுணராத செய்திப் பதிவாகவே இருத்தல் வேண்டும் என்பது புலனாகின்றது.

"அரிமா னிடித்தன்ன அஞ்சிலை வல்வில்"[257]

எனும் கலித்தொகைப் பாடலடி சிங்கத்தின் தாக்குதல் வேகத்தினைச் சரியாகவே சுட்டியுள்ளது எனலாம். இதனைக் கேள்வி ஞானத்தாலோ அல்லது சிங்கத்தின் காட்சியையோ காண வாய்ப்புக் கிடைத்த புலவரின் பதிவாகக் கொள்வதற்கு இடமுண்டு.

"அரிமாவும் பரிமாவுங் களிறுங் கராமும்"[258]

எனும் பாடலடியானது பெயரளவில் மட்டுமே சிங்கத்தைக் காட்டுவதாக அமைகின்றது. இவைதவிற சிங்கத்தைப் பற்றிய பதிவுகள் சங்க அகப்பாடல்களில்

காணக்கிடைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. தற்காலச் சூழலியலாளர்கள் சிங்கம் தமிழகத்தில் வாழவே இல்லை என்கின்றனர். ஆனால் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பும் சிங்கம் தமிழகத்தில் இடம்பெறாத விலங்கினமா என்ற கேள்விக்கு விடையாக உறுதியாக வாழ்ந்திருக்கும் எனக் கூறும் அளவிற்கான பதிவுகள் சங்க அகப்பாடல்களில் இல்லை என்பதே உண்மை.

**செந்நாய்**

காட்டுப்பகுதிகளில் வாழும் சிவந்த நிறமுடைய வீட்டு நாயை ஒத்த தோற்றமுடைய விலங்கு செந்நாய் ஆகும். செந்நாய்கள் கூட்டமாக வாழும் இயல்புடையன. தன் இரையைக் கூட்டமாகச் சென்று சூழ்ந்து ஒற்றுமையுடன் தாக்கி அழிக்கவல்லது. அவ்வகையில் இது புலியைச் கூடத் தாக்கும் என்கின்றனர் விலங்குநூலார். சில வேளைகளில் புலி தனக்காக அடித்த இரையை அதனை விரட்டிவிட்டு செந்நாய்கள் தமக்கு உணவாக்கிக் கொள்வதும் உண்டு. இவற்றின் ஒற்றுமைக் குணம் வியக்கத்தக்கதாகும். பசியுடன் இருக்கும் காலங்களில் கூட்டமாக வெறியுடன் தாக்கும் செந்நாய்கள் பசி இல்லாக்காலங்களில் மான் கூட்டங்கள் அருகிலே இருப்பினும் அவற்றிற்கு ஊறு செய்யாது இயல்பாகத் திரியும் தன்மையுடையன. இக்காலங்களில் மான்களும் செந்நாயைப் பொருட்டாகக் கருதாது இயல்பாகத் திரிவதை விலங்கியலாளர்கள் கண்டுள்ளனர்.

''ஓய்பசிச் செந்நாய் உயங்குமரை தொலைச்சி''[259]

''வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சிற்''[260]

''வள்ளெயிற்றுச் செந்நாய் வயவுறு பிணவிற்குக்
கள்ளியங் கடத்திடைக் கேழல் பார்க்கும்''[261]

''மென்புனிற் றம்பிணைவு பசித்தெனப் பைங்கண்
செந்நாய் ஏற்றை கேழல் தாக்க''[262]

''பொன்வார்த் தன்ன வைவால் எயிற்றுச்
செந்நாய் வெரீஇய புகருழை ஒருத்தல்''[263]

கூரிய எயிறையுடைய செந்நாய், மான், பன்றி போன்ற விலங்குகளை வேட்டையாடும் தன்மையை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. சங்க அகப்பாடல்களில் செந்நாய் பற்றிய பதிவுகளில் அவை மானையும், பன்றியையும் வேட்டையாடும் காட்சியே மிகுதியும் காணப்படுகின்றது. இதற்குக் காரணம் இவ்விரு உயிரினங்களையே செந்நாய் மிகுதியும் விரும்பும் என்பதைச் சங்கப்புலவர்கள் அறிந்தமையே ஆகும். இதனைச் ''செந்நாய்கள் பெரும்பாலும் விரும்பி வேட்டையாடி உண்பது மான்களும் காட்டுப் பன்றிகளுமே என்று விலங்குநூலார் கூறுவர்''[264] எனும் கருத்தால் விளங்கும்.

**நரி**

சங்க அகப்பாடல்களில் நரியானது கணநரி, நரி, குறுநரி, ஓரி என்ற பெயர்களில் சுட்டப்படுகின்றது. பொதுவாக நரியினங்களில் நரி, குள்ளநரி என்ற இரு இனங்களைக் காணமுடியும் இவை காட்டுப்பகுதிகளிலும் கிராமங்களைச் சுற்றியுள்ள சிறிய காடுகளிலும் வயல் வெளிகளிலும் வசிக்கக் கூடியன. சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் நரி பற்றிய செய்திகள் அவற்றை இனம்பிரித்து அறியுமாறில்லை. குறுநரி என்று அடைகொடுத்துச் சுட்டப்பட்டிருப்பதால் அது குள்ளநரியைக் குறிக்கின்றதோ? என்ற ஐயம் எழுகின்றது. ஆனால் அவ்வையத்தைத் தெளிவிக்கும் வகையிலான விளக்கமான பதிவுகள் இல்லை எனலாம். கிராமப் புறங்களில் நரி என்று சுட்டுவது பெருநரியை எனலாம். அதனினும் வேறுபட்ட சிறிய நரியினத்தைக் குள்ளநரி எனச் சுட்டுவர். பொதுவாக 'நரி' என்னும் பதத்தை பெருநரியைச் சுட்டவே பயன்படுத்துகின்றனர். நரிகள் பெரும்பாலும் கூட்டமாகத் திரியும் இயல்புடையன. நரியின் இத்தகைய இயல்பினைக் கொண்டு 'கணநரி' என அகநானூறு சுட்டுவதை

"கணநரி இனனொடு குழீஇ நிணனருந்தும்"[265]

எனும் பாடலடியால் அறியலாம். பிற விலங்குகள் அடித்து உண்ட ஊனின் எஞ்சியவற்றைக் கூட்டமாகக் கூடி உண்ணும் இயல்புடையன. நரியின் இத்தகைய செயல்பாட்டை மேற்கண்ட பாடலடி தெளிவாகக் காட்டியுள்ளது. இக்காட்சி பிற சங்க இலக்கியங்களிலும் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. வயது முதிர்ந்த நரியானது இரையுண்ணும் தன்மையினைக் காட்டும் சங்க அகஇலக்கியப் பாடல்கள் நரியை "முதுநரி" எனச் சுட்டுவதை

"நிலலொடு கதிக்கும் நிணம்புரி முதுநரி
பச்சூன் கொள்ளை மாந்திவெய்து"[266]

"தொல்பசி முதுநரி வல்சி யாகும்"[267]

எனும் பாடலடிகளான் அறியலாம். ஊளையிடும் நரியைப் பட்டினப்பாலை,

"அழல்வா யோரி அஞ்சுவரக் கதிப்பவும்"[268]

என்னும் பாடலடியின் வாயிலாக 'ஓரி' எனச் சுட்டுகின்றது.

"ஊறுபசிக் குறுநரி குறுகல் செல்லாது"[269]

"ஏதில் குறுநரி"[270]

"குறுநரி உளம்புங் கூரிருள்"[271]

ஆகிய பாடலடிகள் நரியைக் "குறுநரி" எனச் சுட்டுவதைக் காணமுடிகின்றது. குள்ளநரிகள் இரவில் மட்டுமே இரைதேடும் இயல்புடையன. 'குறுநரி உளம்புங் கூரிருள்' எனும் அடியானது குள்ள நரியைக் குறிப்பதாகக் கொள்ளவும் வாய்ப்புண்டு. ஆனால் மனித நடமாட்டம் உள்ளபகுதிகளில் பெருநரியும் இரவிலேயே இரைதேடும் இயல்புடைமையான் குறுநரியைக் குள்ளநரி எனத் துணிதற்கில்லை. பெயர் தவிர நரியின் இனம்பற்றித்

தெளிவுற அறிதற்கான அவற்றின் உடற்கூறு பற்றியோ குள்ளநரி வளை பறித்து உறையும் தன்மை போன்ற வாழிடம் பற்றியோ தெளிவான பதிவுகள் சங்க அகப்பாடல்களில் இடம்பெறவில்லை.

**நாய்**

பன்னெடுங் காலந்தொட்டே நாய் மனிதனின் வளர்ப்பு விலங்கினமாக இருந்துவந்துள்ளதைச் சங்க அகப்பாடல்களின் வழி அறியமுடிகின்றது. மனிதனின் இல்லத்தின்கண் வளர்ப்புயிரியாகவும், வேட்டையின்பொழுது மனிதனுக்கு உதவுவதாகவும் நாய்கள் இருந்து வந்துள்ளன. சங்க அகப்பாடல்களில் நாய், ஞமலி, எகினம் என்ற பெயர்களில் நாய்கள் சுட்டப்படுகின்றன.

''கடுங்குரல் பம்பைக் கதநாய் வடுகர்''[272]

''முயல்வேட்டு எழுந்த முடுவிசைக் கதநாய்''[273]

''கொலைவெங் கொள்கையொடு நாயகப் படுப்ப
வலைவர்க் கமர்ந்த மடமான்''[274]

ஆகிய பாடலடிகளில் சினமிக்க நாய் காட்டப்படுகின்றது. இது வேட்டை நாயைக் காட்டுவதாக அமைவது முயலைப் பிடிப்பதாலும் மானைப் பிடித்தல் மற்றும் அம்மானை விலைவர் கைப்பற்றுதல் போன்ற செயல்களால் விளங்குகின்றது. தற்காலத்திலும் முயல்வேட்டைக்கு நாயைப் பயன்படுத்துவதைக் காண முடியும். ''காவலர் கடுகினும் கதநாய் குரைப்பினும்''[275] எனும் குறிஞ்சிப்பாட்டு அடி இரவு நேரத்தில் ஊரின்கண் நாய்கள் குரைப்பதைக் காட்டுகின்றது. இது மனைக்கண் உறையும் நாயின் வீடுகாவல் பண்பைக் காட்டுகின்றது. புழங்கப்படாத சிறிய திண்ணையில் குழி பறித்து குட்டிகளை ஈன்ற நாயினை,

''………… மெழுகாப் புன்திணைப்
பால்நாய் துன்னிய பறைக்கண் சிற்றில்''[276]

என்ற பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன. குட்டி ஈன்ற நாயின் தன்மையைச் சிறப்புற இவ்வடிகள் எடுத்துக்காட்டுவது குறிப்பிடத்தக்கது.

''மனைவாய் ஞமலி''[277]

''சேரி விலைமாறு கூறலின் மனைய
விளியறி ஞமலி குரைப்ப''[278]

''முளைவாள் எயிற்ற வள்ளுகிர் ஞமலி''[279]

''கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை''[280]

''கூரெயிற்று எகினம்''[281]

ஆகிய பாடலடிகளின் மூலம் நாய் தன்னை விளிப்பவர் மற்றும் பொதுவாக வேண்டியவரின் குரலை நினைவில் வைத்துக் கொள்ளும் தன்மையுடையது என்பதும் கூரிய பல்லினையும், வளைந்த காலினையும் உடையது என்பது விளக்கப்படுகின்றது.

**நாயா? கோநாயா?**

கோநாய் என்பது ஓநாயினைக்குறிப்பதாகும். ''சங்ககாலத்தில் கோநாய் (Wolf) என்று வழங்கிய சொல் மறைந்துபோய் ஓநாய் என்ற சொல் பிற்காலத்தில் வழங்கியதாகத் தெரிகின்றது.''[282] என்கிறார் பி.எல்.சாமி. கோநாய் என்ற பதம் சங்க அகப்பாடல்களில் இடம்பெறவில்லை. ஆனால் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களாகிய களவழி நாற்பது, பழமொழி நானூறு ஆகிய நூல்களில் ''கோநாய்'' எனும் சொல் பயின்று வருவதை

''குடர்கொண்டு வாங்குங் குறுநரி கந்தில்
தொடரொடு கோணாய் புரையு''[283]

''கோநா யினம்வெருவம் வெற்ப''[284]

எனும் பாடலடிகள் மூலம் அறியலாம். இவற்றில் கோணாய், கோநாய் என்ற பெயர்கள் நேரடியாக வருவதைக் காணலாம்.

''போகிய நாகப் போக்கருங் கவலைச்
சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்
சேறாடு இரும்புறம் நீறொடு சிவண
வெள்வசிப் படீஇயர் மொய்த்த வள்புஅழீஇக்
கோள்நாய் கொண்ட கொள்ளைக்
கானவர் பெயர்க்குஞ் சிறுகுடி யானே''[285]

எனும் நற்றிணைப் பாடலில் காணப்படும் ''கோள்நாய்'' என்ற பதத்திற்கு உரையாசிரியர்கள் 'நாய்' என்று பொருள் கூறுகின்றனர். சேற்றில் ஆடிய பன்றி கானவர் வைத்த சுருக்குவாரில் சிக்கிக்கொள்ள அதனை நாய் சென்று பற்ற அதனை விரட்டிவிட்டு பன்றியைக் கானவர் கைக்கொள்ளும் காட்சி காட்டப்படுகின்றது. மேற்கண்ட பாடலில் காணப்படும் 'கோள் நாய்' என்பதற்குப் பி.எல்.சாமி 'கோநாய்' என்று பொருள்கொள்வதே சரி என்றும், உரையாசிரியர் வீட்டு நாய் என்று பொருள் கொள்வது பொருத்தமற்றது என்றும் கூறுகின்றார்.[286] இங்கு 'கோள்நாய்' எனும் பதம் ஆராயத்தக்கது. கோநாய் எனும் பதம் இருக்க 'கோள்நாய்' என புலவர் பாடியிருப்பது ஏன்? என நோக்குதல் வேண்டும். கோநாய் கூட்டமாகக் கூடி வீழ்த்தும் பன்றி, மான் போன்ற இரைகளை அவை உண்டுவிடாமல் அவற்றை விரட்டிவிட்டு அவ்விலங்கைக் காட்டில்வாழும் மனிதர்கள் கவர்ந்து உண்ணும் வழக்கைக் கொண்டு அவர் 'கோள்நாயைக்' கோநாய் என்று உரைக்கின்றார். மனிதன் தனது வீட்டு நாயை வேட்டை நாயாகவும் பழக்கப்படுத்தி அவற்றை விலங்குகளைப் பிடிக்கப் பயன்படுத்துவதும் இங்கு எண்ணற்பாலது. தற்காலத்தும் இத்தன்மையினைச் சிலவிடங்களில் காணவியலும். வேட்டைக்குச் செல்லும் வேடர்கள் தம்முடன் பழக்கப்பட்ட வேட்டை நாயையும் அழைத்துச் செல்வது இயல்பு. இவ்வாறு நாயைப் பயன்படுத்தி மானைப்பிடித்த வேடரின் செயலை,

“கொலைவெங் கொள்கையொடு நாயகப் படுப்ப

வலைவர்க் கமர்ந்த மடமான் போல”[287]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. வேட்டை நாயைக் கொண்டு வேட்டையாடும் தன்மை சங்ககாலத்திலும் இருந்து வந்துள்ளதை இப்பாடலடிகள் எடுத்துக் காட்டகின்றன. மேலும் “கோள்நாய்” என்பதில் வரும் “கோள்” எனும் பதம் பல இடங்களில் விலங்கினத்திற்கு அடையாக வருவதையும் காண முடிகின்றது.

“கோடு துவையாக் கோள்வாய் நாயொடு

காடுதேர் நசைஇய வயமான் வேட்டு”[288]

என்ற பாடலடிகளும் வேட்டுவர் நாயுடன் வேட்டைக்குச் செல்வதைக் காட்டுகின்றது. இப்பாடலடியில் வரும் ‘கோள்’ எனும் சொல்லிற்கு உரையாசிரியர் ‘கௌவிக்கொள்ளும்’ நாய் என்றும் ‘கொலை’ என்றும் பொருள் கூறுகின்றார். அவ்வகையில் கௌவிக்கொள்ளும்வாய் உடைய நாய் என்றும் கொல்லவல்ல வாயையுடைய நாய் என்றும் பொருள் கொள்ள முடிகின்றது. ‘கோள்நாய்’ என்பது போன்றே “கோட்புலி”[289] எனும் பதம் குறுந்தொகையில் வருகின்றது. இதற் ஊ.வே.சா. அவர்கள் “கொலை செய்யும் புலி” என்று உரைகூறுகின்றார்.[290] மேலும்

“குறுங்கை யிரும்புலிக் கோள்வ லேற்றை”[291]

எனும் ஐங்குறுநூற்றுப் பாடலடியில் வரும் ‘கோள்’ எனும் பதமும் ‘கொலை செய்யவல்ல’ என்ற பொருளிலேயே வருகின்றது எனலாம். பொ.வே. சோமசுந்தரனார் “கோள் - உயிர்கோடல்”[292] என விளக்கமளிக்கின்றார். மேற்கண்ட விளக்கங்களின் அடிப்படையில் கோள் நாய் என்பது கொல்லவல்ல நாய் என்று பொருள் கொள்ளுதற்கிடமளிப்பதாகக் கொள்வதே சரியாக இருக்குமென்று தோன்றுகின்றது. கோநாயைக் குறிக்கப் புலவர் எண்ணியிருப்பின் அப்பெயரையே ஆசிரியர் பயன்படுத்தியிருப்பார் என்றே தோன்றுகின்றது. நாய் பன்றியைக் கொல்லுமோவெனின் வேட்டை நாய்கள் கொல்லும் திறம் பெற்றிருத்தல் கூடும். முயல் போன்ற விலங்குகளை தற்காலத்தில் நாய்கள் கொல்லுகின்றன. கவனிப்பற்ற தற்காலத்து நாட்டுநாய்களே கொல்லும் திறன் பெற்றிருக்கையில் முற்காலத்தில் வேட்டைக்காய்ப் பழக்கப்பட்ட வேட்டைநாய்கள் கொல்லவும் கூடும் எனலாம். வலிமை மிக்க நாட்டு நாயினங்கள் இன்றும் இருந்து வருவதை நாம் காணலாம் அவ்வகையில் நற்றிணையில் வரும் “கோள் நாய்” வேட்டை நாயைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

**பன்றி**

நாம் தற்காலத்தில் இருவகைப் பன்றிகளைக் காண்கிறோம். ஒன்று இறைச்சிக்காக வளர்க்கப்படும் வளர்ப்புப்பன்றி. மற்றொன்று மலை மற்றும் காட்டுப்பகுதிகளில் தானாக வளரும் காட்டுப்பன்றி. காட்டுப் பன்றிகளும் இறைச்சிக்காகப் பயன்படுத்தப்படும் எனினும் தற்காலத்தில் அது தடைசெய்யப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. சங்க அகப்பாடல்களில்

காட்டுப்பன்றியே குறிப்பிடப்பட்டுள்ளது. பன்றி, கேழல் என்ற பெயர்களில் இது சுட்டப்பட்டுள்ளது. பன்றிகள் கூட்டமாக வாழும் இயல்புடையன. காட்டுப் பன்றிகளுக்குத் தலையின் மேற்பக்கத்திலிருந்து முதுகுப் பகுதியின் பாதிவரை பிடரிமயிர் இருக்கும். பன்றியின் கண்கள் சிறிதாக அமைந்திருக்கும். இத்தகைய பன்றியின் உடற்கூறினை,

"எய்ம்முள் அன்ன பரூஉ மயிர் எருத்தின்
செய்ய்ம் மேவல் சிறுகட் பன்றி"[293]

"பிணர்ச்சுவல் பன்றி தோன்முலைப் பிணவொடு"[294]

"இரும்பனஞ் செறும்பின் அன்னப பரூஉமயிர்ச்
சிறுகட் பன்றி வருதிறம் பார்க்கும்"[295]

ஆகிய பாடலடிகள் காட்டுகின்றன. பன்றிக்குத் தனது வாயின் பக்கவாட்டில் மேல்நோக்கியவாறு கொம்பு போன்ற வெள்ளிய பற்கள் காணப்படும். இது தன் எதிரியை வீழ்த்த பயன்படக்கூடியதாகும். "அதி வேகமாய்த் தலையை வீசி ஒரே வீச்சில் தன் கொடிய பற்களால் பன்றி எதிரியைக் குத்திக் கிழித்துவிடும்."[296] எனும் கூற்று பன்றியின் வலிமையையும் பல்லின் பயன்பாட்டையும் உணர்த்தும். இத்தகைய கொம்புபோன்ற பல்லானது ஆண் பன்றிக்கு மட்டுமே காணப்படும். இப்பல்லினை சங்கஅகப் பாடல்கள் கோடு, மருப்பு என்ற பெயர்களில் சுட்டுவதை,

"இளம்பிறை யன்ன கோட்ட கேழல்"[297]

"வளைவென் மருப்பிற் கேழல்"[298]

"வயிரத்து அன்ன வையேந்து மருப்பின்
வெதிர்வேர் அன்ன பரூஉமயிர்ப் பன்றி"[299]

எனும் பாடலடிகளின் வாயிலாக அறியலாம். கேழல் எனும் சொல் ஆண்பன்றியைக் குறிப்பதாக அமைகின்றது. பன்றி தினைப்பயிரை உண்ணல், மலைப் பகுதியில் கிழங்கினை அகழ்ந்து உண்ணல் போன்ற செய்திகளும் செந்நாய் மற்றும் புலியால் தாக்கப்படுதல், கள்ளிகள் நிறைந்த காட்டுப்பகுதிகளில் வாழ்தல் எனப் பன்றி பற்றிய செய்திகள் காணப்படும் அகப்பாடல் பதிவுகள் பண்டையத் தமிழரின் பன்றியாகிய விலங்கினத்தைப் பற்றிய அறிவைக் காட்டுவதாக அமைகிறன்றன.

**புலி**

சங்க அகப்பாடல்களில் புலியானது உழுவை, வேங்கை என்ற பெயர்களிலும் குறிக்கப்பட்டுள்ளது. புலிகள் பூனையினத்தைச் சேர்ந்தவை என விலங்கு நூலறிஞர் கூறுவர். நாம் தற்போது 'புலி' எனச் சுட்டும் வரிப்புலியும் சிறுத்தை எனச்சுட்டும் பொறிப்புலியும் சங்க அகப்பாடல்களில் சுட்டப்படுகின்றன. சிறுத்தையைக் காட்டிலும் வரிப்புலியாகிய புலி பற்றிய பதிவுகளே மிகுதியும் காணப்படுகின்றன. புலியைச் சுட்டிவரும் பிணவு என்ற சொல் பெண் புலியையும், உழுவை என்ற சொல் ஆண்புலியையும் குறித்து வருவதைக் காணமுடிகின்றது.

"ஈருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய

இருங்களி றட்ட பெருஞ்சின உழுவை"[300]

எனும் பாடலடிகளால் இதனை அறியலாம். புலியின் பின்புறக் காலைவிட முன்புறக்கால் சற்று குறியது. இத்தகைய புலியின் உடற்கூறை "குறுங்கை" எனச் சங்க அகப்பாடல்கள் சுட்டுகின்றன. மேலும் புலியின் தோலில் காணப்படும் கருமைநிற வளைந்த வரியினைக் கொடுவரி என்றும், வாள் போல் வளைந்த வரியினை வாள்வரி என்றும் சுட்டுவதை,

"குறுங்கை யிரும்புலிக் கோள்வல் ஏற்றை"[301]

"குறுங்கை யிரும்புலி பொரூஉ நாட"[302]

"கொடுவரி யிரும்புலி காக்கும்"[303]

"கொடுவரி இரும்புலி தயங்க"[304]

"கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு"[305]

"ஆளியங்கு அரும்புழை ஒற்றி வாள்வரிக்

கடுங்கண் வயப்புலி ஒடுங்கும் நாடன்"[306]

எனும் பாடலடிகள் மூலம் அறியலாம். கொடுவரி, வாள்வரி என்ற பதங்கள் புலியை நன்கு இனம்காணச் செய்கின்றன. புலியானது மலை மற்றும் அடர்ந்த காட்டுப்பகுதியில் வாழக்கூடியது. மலைப் பிளப்புகளிலும், பாறைச் சந்துகளிலும், மலைக் குகைகளிலும் புலியானது தங்கும் என்பதை விலங்குநூலார் கூறுகின்றனர். இதனை "புலி வெயிலின் கடுமையைத் தாங்கக் கூடியதன்று என விலங்கு நூலார் கூறுவர். அதனால் பகற்காலத்தில் புலி பெரும்பாலும் கற்குகைகளிலும் புதர் நிறைந்த கற்பிளப்புகளிலும் பதுங்கிக்கிடக்குமென்பர்"[307] எனும் கூற்று தெளிவிக்கும். இவ்வாறு தங்கியிருந்த புலியின் தோற்றத்தை,

"விடரளைப் பள்ளி வேங்கை"[308]

"கல்லளைச் செறிந்த வள்ளுகிர்ப் பிணவின்"[309]

"அளைச்செறி உழுவையும்"[310]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. இது புலியின் இயல்பினைக் காட்டுவதாக அமைகின்றது. விலங்கு நூலார் குறிப்பிடும் புலியின் இயல்புகளைச் சங்க அக இலக்கியங்கள் தெளிவாகக் காட்டுகின்றன. புலியானது யானையின குட்டியினை உணவாகக் கொள்ளக் கூடியது. சில நேரங்களில் யானையினையும் தாக்கவல்லது. இத்தன்மையானது சற்று மிகைப்படுத்தப்பட்டு பெரும் யானைகளுடன் மோதுவதாக பல பாடல்களில் காட்டப்படுகின்றது. புலியைச் சிறப்பித்துக்கூற அது இரையினை வலப்பக்கமாக வீழ்த்தும் எனும் கற்பனைச் செய்தியும் காணப்படுகின்றது. சங்க இலக்கியத்தில் விலங்கின வகையில் 'யானை'யை அடுத்து அதிக இடங்களில் சுட்டப்படுவதாக புலி அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**பொறிப்புலி**

பொறிப்புலி என்பது சிறுத்தையைக் குறிக்கின்றது. சிறுத்தை என்னும் பெயர் சங்க இலக்கியத்தில் இன்மையானும் இதைச் சுட்டும்பாடல்களில் 'பொறி' எனும் அடையுடன் 'பூம்பொறி உழுவை', 'புலிப்பொறி', எனச் சுட்டுப்படுவதாலும் அதனடிப்படையில் இங்கு 'பொறிப்புலி' எனச் சுட்டப்படுகின்றது. பொறி என்பது புள்ளிகளைக் குறிப்பிடுகின்றது. புலி பூனை இனத்தைச் சேர்ந்த விலங்காகும். பொறிப்புலி எனும் பொழுது புள்ளியை உடைய புலி எனும் நிலையில் பூனை இனத்தைச் சேர்ந்த புள்ளிகளையுடைய இருவகை விலங்கினங்களை கருத்தில்கொள்ள வேண்டி வருகின்றது. ஒன்று சிறுத்தைப்புலி. மற்றொன்று சிவிங்கிப்புலி. இவ்விரண்டுவகை விலங்கினமும் தமிழகத்தில் இருந்ததாகக் கூறப்படுகின்றது. சிறுத்தைப் புலி இன்றளவும் வாழ்ந்து வருகின்றது. சிவிங்கிப்புலி அழிந்துவிட்டது. சிவிங்கிப்புலியினத்தின் அழிவைப்பற்றி "Cheetah என்ற சிவிங்கிப்புலி 1940களில் இந்தியாவிலிருந்து முற்றாகவும் அழிந்துவிட்டதாகக் கருதப்படுகிறது."[311] எனும் ச. முகமது அலியின் கருத்து தெளிவுபடுத்தும். சங்க அகப்பாடல்களில் கூறப்படும் 'பொறிப்புலி' சிறுத்தைப் புலியா? அல்லது சிவிங்கிப்புலியா? என அறியுமாறில்லை. சிறுத்தைப் புலியின் உடலில் உள்ள பொறியானது கருப்பு வளையத்தினுள் மஞ்சள்நிற வட்டவடிவப் புள்ளிகள் இருப்பது போன்று இருக்கும். சிவிங்கிப் புலியின் உடலில் முழுமையான கரும் புள்ளிகள் இருக்கும். மா. கிருஷ்ணன் சிவிங்கிப் புலிக்கும் சிறுத்தைப் புலிக்கும் உள்ள வேறுபாட்டினை குறிப்பிடும்போது "சிறுத்தை வகை மிருகங்களைப் போல் வேட்டைச் சிவிங்கியால் கால் நகங்களை முழுவதும் உள்ளிழுக்க முடியாது; அறைகுறையாகவே உள்ளிழுக்க முடியும். சிறுத்தை போல் நடுவெளி கொண்ட புள்ளி வட்டங்கள் கொண்டிராது; இதன் புள்ளிகள் நடுவெளியின்றிக் கருத்திருக்கும். மேலும், அளவில் ஒரு நடுத்தரச் சிறுத்தையை ஒத்திருக்கும் வேட்டைச் சிவிங்கி வயிறு குறுகிக் கால் மெலிந்திருக்கும்"[312] என விளக்குகின்றார். சங்க அகப்பாடல்களில்

"பூம்பொறி உழுவை தொலைச்சிய வைந்நுதி"[313]

"புலிப்பொறி அன்ன புள்ளியம் பொதும்பில்"[314]

"புலிப்பொறி வேங்கைப் பொன்னினர்"[315]

"புலிப்பொறி கடுப்பத் தோன்றலின்"[316]

"ஆய்பொறி உழுவை தாக்கிய"[317]

எனும் பாடலடிகள் பூம்பொறி உழுவை, புலிப்பொறி, ஆய்பொறி உழுவை எனச் சுட்டுவதை வரிப்புலியனின்றும் விலக்கி பொறிப்புலியாகிய சிறுத்தையைச் சுட்டுவதாகக் கொள்வதே சரியாக அமையும். இங்கு இருவகைப் பொறிப்புலிகளைத் தெளிவுற விளக்கப்படாமையும் கருத்தில் கொள்ளப்பட வேண்டும். உரையாசிரியர்கள் வரிப்புலியையும் பொறிப்புலியையும் வேறுபடுத்திக் காட்டாது உரைகூறியிருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

**மான்**

சங்க அகப்பாடல்களில் மான்கள் இரலை, நவ்வி, மரை, உழை, கடமா என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளன. இவ்வைந்து பெயர்களும் தனித்தனியாக ஐந்துவகைப்பட்ட மான் இனங்களைக் குறிப்பதை பி.எல்.சாமி தமது நூலில் விலங்குநூலறிஞர்களின் துணையுடன் விளக்கியுள்ளார். தற்காலச் சூழலியிலாளர்களும் இவ்வகைப்பாட்டினை ஏற்றுக்கொள்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. சங்க அகப்பாடல்களில் இரலைமானே மானினங்களில் மிகுதியும் சுட்டப்படும் மானினமாகக் காணப்படுகின்றது. இரலையினத்தை விலங்கியலாளர்கள் Black Buck என்றும் Antilope என்றும் ஆங்கிலத்தில் சுட்டுகின்றனர்.

இரலைமானானது அதன் கொம்பின் அமைப்பைக் கொண்டு தெளிவுற விளக்கப்படுகின்றது. இரலை மான்கள் திருகிய கொம்புகளை உடையன. இரலை மானின் கொம்புகள் உட்புறத்தில்பொள்ளலாக அன்றி உள்ளீடுடையதாக அமைந்திருக்கும். மற்ற மானின் கொம்புகள் உள்ளீடற்றதாக அமைந்திருக்கும். இவ்வகை மான்களின் கொம்புகள் விழுந்து பின்பு மீண்டும் முளைக்கும் தன்மையுடையதாக இருக்கும். இரலை மான்களின் கொம்புகள் ஒருமுறை முளைத்தால் எப்பொழுதும் விழாது என்பது இரலைமானின் தனினத்தன்மையைக் காட்டுவதாகும். இரலை மான்வகையில் ஆண் மானிற்கே கொம்புகள் உண்டு. சங்க அகப்பாடல்களில் இரலையினத்தின் ஆண்மானிற்கே இரலை என்ற பெயர் சுட்டப்பவதைக் காணமுடிகின்றது.

''............. கவைபொறுத் தன்ன
இருதிரி மருப்பின் அண்ணல் இரலை
செறியிலைப் பதவின் செங்கோல் மென்குரல்
மறியாடு மருங்கின் மடப்பிணை யருந்தி''[318]

எனும் அகநானூற்றுப் பாடலடிகள் இரலை மானின் கொம்பமைப்பை சிறப்புற விளக்குகின்றன. நாம் சாதாரணமாகக் கவை என்று சுட்டுவது இருபிளவுடையதாக இருக்கும். இரு பிளவுகள் ஒன்றையொன்று விலகிச் செல்லும். சில நேரங்களில் ஒரே நேராகவும் அமையும். இரலை மானின் தலையில் கவை பொருந்தியிருப்பதைப் போல இரண்டு கொம்புகள் இருப்பதும் அவை திரிந்திருப்பதும் காட்டப்படுகின்றன. இப்பாடலில் ஆண்மானே இரலை என்று சுட்டப்படுவதை ''அண்ணல் இரலை'' எனும் சொல் காட்டுகின்றது. பெண்மான் 'பிணை' எனச் சுட்டப்படுவதும் விளங்கும். இரலை மானின் தோற்றத்தை

''திரிமருப் பிரலை யண்ண ணல்லேறு''[319]

''இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்
பரலவல் அடைய இரலை தெறிப்ப''[320]

''கருங்கோட் டிரலை காமர் மடப்பினை''[321]

''திரிமருப் பிரலையொடு மடமா னுகள''[322]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. கரிய நிறமுடைய முறுக்குண்ட கொம்புகள் அதன் அமைப்பின் சிறப்புக்கருதியும் மற்ற மான் இனங்களிலிருந்து எளிதில் வேறுபடுத்திக்காட்டவும் மிகுதியும் சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இதன் கொம்பு முருக்குண்டு, வளைதலோ கிளைத்தலோ இன்று நேராக அமைந்திருப்பதை ‘‘நெறிகோட் டிரலை’’[323] என்ற பதம் காட்டுகின்றது. இரலை மானின் வயிற்றுப்பகுதி வெண்மை நிறம் கொண்டது. இரலையின் இத்தகைய உடற்கூறை

‘‘வெண்புறக் குடைய திரிமருப்பு இரலை’’[324]

எனும் அகநானூற்றுப் பாடலடிகள் காட்டுகின்றன. இவ்வாறு இரலையின் கொம்புகள் வலமாக முறுக்குண்டுள்ளது எனும் தவறான பதிவும் சங்க அகப்பாடல்களில் காணப்படும் நிலையில் இரலை பற்றிய பதிவு பெரும்பான்மையும் சரியாகவே அமைந்திருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

நவ்வி எனும் மான்வகை சங்க அகப்பாடல்களில் மிகக் குறைவான பாடல்களிலேயே சுட்டப்பட்டுள்ளன. அக இலக்கியங்கள் மட்டுமன்றி ஒட்டுமொத்தச் சங்க இலக்கியங்களிலும் நவ்வி பற்றிய பதிவுகள் குறைவாகவே உள்ளன. தமிழ்நாட்டுப் பகுதிகளில் இவ்வகை மானினம் குறைவாகக் காணப்பட்டமையே இதற்குக் காரணம் என்பதை ‘‘சங்க காலத்திலேயே நவ்விமான் தமிழ்நாட்டில் அரிதாகக் காணப்பட்டமையால் இதைப்பற்றிச் சங்க நூல்களில் சிலசெய்திகளே காணப்படுகின்றன’’[325] எனும் கூற்றால் அறியலாம்.

‘‘நௌவி நோன்குளம்பு அழுந்தென’’[326]

‘‘நவ்விநாண்மறி கவ்வி’’[327]

‘‘ஏறுடை இனத்த நாறுயிர் நவ்வி
வலைகாண் பிணையிற் போகி’’[328]

‘‘அருஞ்செல வாற்றா ஆரிடை ஞெரேரெனப்
பரந்துபடு பாயல் நவ்வி பட்டென’’[329]

போன்ற பாடலடிகள் நவ்வி மானினத்தைக் குறித்து வருவதைக் காணலாம். நவ்வி எனும் சொல் மறி, பிணை ஆகிய மானினத் தொடர்புடைய சொற்களுடன் வருவது நவ்வி என்பது மானினம் என்பதை உறுதி செய்கின்றது.

சங்க அகப்பாடல்களில் மரையா, மரையான், மரை எனச் சுட்டப்படும் விலங்கினம் மரையான் எனும் மான்வகையாகும். இது பசுவை ஒத்திருக்கும் விலங்காதலால் இதனை மரையா எனச் சுட்டினர். இதனை இந்தியில் ‘‘நீல்கை’’ (Nilgai) என்று அழைப்பதாக பி.எல்.சாமி குறிப்பிடுகின்றார்.[330]

‘‘மென்னடை மரையா துஞ்சும்’’[331]

‘‘மன்ற மரையா விரிய வேறட்டுச்
செங்க ணிரும்புலி குழுமு மதனால்’’[332]

''மரையா மரல்கவர மாரி வறப்ப''[333]

''துளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி''[334]

எனும் சங்க அகப்பாடலடிகள் மரையாவைச் சுட்டுகின்றன.

மரையான்கள் வறண்ட சமவெளி, மரங்கள் அடர்த்தியாக இல்லாத குன்றுப்பகுதிகளில் காணப்படுகின்றன. செந்நாய், புலி போன்றவற்றிற்கு உணவாகுதல், நெல்லி போன்ற காய்களை உண்ணுதல், மலைப்பகுதிகளில் திரிதல் போன்ற மரைய பற்றிய பல செய்திகள் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றன.

புள்ளிமான்களைப் பற்றிய பலசெய்திகள் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றன. இது உழை, கலைமான் என்ற பெயர்களில் சுட்டப்படுவதைக் காணலாம். இம்மான்கள் கிளைகளையுடைய கொம்புகளுடன் காணப்படுவதைச் சங்க அகப்பாடல்கள் காட்டுகின்றன. உடலில் புள்ளிகளையும் கவை போன்ற கொம்புகளையுடையதும், அக்கொம்புகள் உதிரும் தன்மையுடையதையும்

''இறுகுபுல் மேய்ந்த அறுகோட்டு முற்றல்
அள்ளல் ஆடிய புள்ளி வரிக்கலை''[335]

''கவைத்தலை முதுகலை காலி னொற்றி''[336]

''கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை
வறனுறல் அங்கோ டுதிர''[337]

''............... பொறிவரிக்
கலைமான் தலையின் முதன்முதல் கவர்த்த
கோடலங் கவட்ட''[338]

''வறன்மரத் தன்ன கவைமருப் பெழிற்கலை''[339]

போன்ற சங்க அகப்பாடலடிகள் காட்டுகின்றன. வறண்ட மரத்தை ஒத்த கவை போன்ற கொம்பினைச் சிறப்புறக் காட்சிப்படுத்தப்படுவதைக் காணலாம். அகநானூற்றில் வரும்,

''அறுமருப்பு ஒழித்த தலைய தோல்பொதி
மறுமருப் பிளங்கோ டதிரக் கூஉஞ்''[340]

எனும் பாடலடிகளில் வரும் ''தோல்பொதி மறுமருப்பு'' என்ற பதம் நுட்பமான பொருளைத் தருகின்றது. இது புள்ளிமானின் கொம்பானது முளைக்கும் போது தோலால் ஆனது போன்று மென்மையுடையது என்றும் தோலில் பொதிந்துள்ள கொம்பு என்றும் பொருள் தருகின்றது. இவ்விரு பொருண்மையும் சரியானதாகும். கொம்புகள் உதிராத இரலை மானின் கொம்பு மண்டையோட்டுடன் சேர்ந்து தோன்றி வளர்வதாகும். இதன் கொம்புகள் உதிர்வதில்லை. மாடு, ஆடு போன்றவற்றின் கொம்புகளும் இரலைமானின் கொம்பின் தன்மையை ஒத்ததே. இதனை ''மான்கொம்பு எலும்புப்பொருள் (Calcium bone) கிளைகளுடன் ஆண்டுக்கொருமுறை உதிரக் கூடியவை. மாடு, இரலை, ஆட்டுக்கொம்புகள்

கிளை பிரியாதவை. நகப்பொருளாலானவை (Keratin) உதிராதவை வளர்ந்து கொண்டே இருப்பவை என்றும் இரலையைச் சுட்டிக்காட்டி அதன் கொம்பை "மண்டையோட்டோடு வளரும் உறுதியான எலும்புப்பொருள்"[341] என்றும் ச. முகமது அலி கூறுகின்றார். மண்டையோட்டுடன் சேர்ந்து வளராமல், மண்டையோட்டை ஒட்டி உதிரும் தன்மையுடன் வளர்வதை தோல்பொதி மறுமருப்பு' என்ற தொடர் குறிக்கிறது எனலாம்.

"பெயினே விடுமான் உழையினம்"[342]

"ஊழ்ப்படு முதுகா யுழையினங் கவரும்"[343]

"உழைமான் அம்பிணை இனனிரிந் தோட"[344]

எனும் பாடலடிகளில் வரும் உழைமான் புள்ளி மானைக்குறிப்பதாகவே பி.எல். சாமி கூறுகின்றனர். இம்மான்கள் புலி, செந்நாய், சிறுத்தை போன்ற விலங்குகளுக்கு இரையாகும் தகவலும் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றன.

கடமான் என்றொரு மான்வகையும் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றது. கடமா, கடமை என்ற பெயர்களில் இம்மான் சுட்டப்பட்டுள்ளது. தற்காலத்திலும் கடமானைக் கிராமப்புறத்தில் உள்ளோர் வகைப்படுத்திக் காட்டுவது குறிப்பிடத்தக்கது.

"கல்லென் கானத்து கடமா வாட்டி"[345]

"கடமை மிடைந்த துடவையஞ் சிறுதினை"[346]

எனும் பாடலடிகளில் வரும் கடமா, கடமை எனும் கலைமானின் இனமாகிய கடமானைக் குறிப்பதாக பி.எல்.சாமி குறிப்பிடுகிறார்.[347] சங்க அகப்பாடல்களில் மான் வகையில் இரலைமான், நவ்வி, மரையா, புள்ளிமான், கடமான் ஆகிய ஐந்துவகை மான்கள் சுட்டப்பட்டுள்ளன. வகைசுட்டப்படாமல் பொதுவாக 'மான்' என்பதை பெயருடன் வரும் பாடல்களும் சங்க அகப்பாடல்களில் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

**முயல்**

முயல் எலி இனத்தைச் சேர்ந்த விலங்காகும். முயல் காட்டுப்பகுதி, வயற்பகுதி, மலைப்பகுதி எனப் பல இடங்களிலும் காணப்படும். ஊர்ப் புறங்களைச் சுற்றியுள்ள புதர்நிறைந்த பகுதிகளில் முயல் அதிகம் காணப்படும். "இவைகள் காடுகள், புதர்கள் அல்லது வளைகளில் அதிக நேரம் மறைந்து வாழ்பவை"[348] எனும் கூற்று முயல்களின் வாழ்விடத்தை விளக்குகின்றது. முயல்கள் இரவிலேயே இரைதேடி உண்ணும் என்பதை "இவை பகற்பொழுதில் புதர் மறைவில் பதுங்கியிருந்து சற்று இருட்டினதும் மேயப்புறப்படும்"[349] எனும் மா. கிருஷ்ணனின் கருத்தால் அறியலாம். சங்க அகப்பாடல்களில் முயல் பற்றிய விரிவான விளக்கம் ஏதுமில்லை. முயல் என்பது காட்டுப்பகுதியில் வாழ்வதும் அதனை மனிதர்கள் பிடிப்பதும் மட்டுமே கூறப்பட்டுள்ளது. இதனை,

"எல்லுமுய லெறிந்த வேட்டுவன்"[350]

"நறும்பூம் புறவி னொடுங்குமுய லிரியும்"[351]

"முயற்பறழ் உகளும் முல்லையம் புறவிற்"[352]

"மடிவீடு வீளை வெரீஇக் குறுமுயல்
மன்ற இரும்புதல் ஒளிக்கும்
புன்புல வைப்பினெஞ் சிறுநல் லூரே"[353]

எனும் பாடலடிகளால் அறியலாம். முயல் முல்லை நிலமாகிய காட்டுப்பகுதியில் இருப்பதை "புறவு" எனும் சொல்லால் காட்டியுள்ளனர். புறவு என்பது முல்லை நிலத்தின் காட்டுப்பகுதியாகும். அக்காட்டுப்பகுதியில் புதரில் ஒளிந்திருக்கும் தன்மையும் தெளிவுறச் சுட்டுப்படுகின்றது. புன்செயாகிய வயற்பகுதியில் உள்ள புதர்களில் முயல் ஒளிவதும் காட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**முளவுமான்**

முளவுமான் எனும் பெயர் தற்கால்தில் வழக்கில் இருப்பதாகத் தெரியவில்லை. முளவுமா,முளவுமான், முளமா ஆகிய பெயர்களுக்கு உரையாசிரியர்கள் முட்பன்றி என உரைகூறுகின்றனர். "முள்ளையுடைய விலங்கு முளவுமா என்றழைக்கப்பட்டது"[359] என்கிறார் பி.எல்.சாமி முள்ளம்பன்றி என பேச்சுவழக்கில் இதனைக் குறிப்பதுண்டு. முள்ளம்பன்றியின் முதுகுப் புறத்தில் முட்கள் இருக்கும், எதிரி விலங்குகளிடமிருந்தும் மனிதர்களிடமிருந்தும் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள இம்முட்கள் உதவுகின்றன. சங்க அகப்பாடல்களில் முளவுமாவின் உடற்கூறு பற்றி எதுவும் சுட்டவில்லை. இதன் பெயர் மட்டும் வருவதும் மனிதர்கள் முளவுமாவை வேட்டையாடுவதும் மட்டும் சுட்டப்பட்டுள்ளது. இதனை,

"கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை
தேங்கமழ் கதுப்பின் கொடிச்சி மகிழ்ந்து கொடு"[355]

"வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி
உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றெயொடு"[356]

"முளமா வல்சி யெயினர் தங்கை"[357]

"மூளவுமா தொலைச்சும் குன்ற நாட" [358]

எனும் சங்க அகப்பாடலடிகளின் மூலம் அறியலாம். சங்க காலத்தில் முட்பன்றியின் இறைச்சி பெரிதும் விரும்பி உண்ணப்பட்டது என்பதற்குச் சான்றாக இவ்வடிகள் அமைகின்றன. அகநானூற்றின் முந்நூற்றேழாவது பாடல் முள்ளம்பன்றியை 'எய்' எனச் சுட்டுவதை உரையாசிரியர்களின் வழி அறியமுடிகின்றது. சங்க அகப்பாடல்களில் பிற வினங்கினங்களை விலங்கினங்கல் பல உண்ணும் நிலை காட்டப்பட்ட நிலையில் முட்பன்றியை மனிதன் மட்டும் வேட்டையாடி உண்ணும்நிலை காட்டப்பட்டுள்ளது. முட்பன்றி எலியினத்தைச் சேர்ந்த விலங்காக விலங்குநூலறிஞர் கூறுவர்.

**யானை**

உலகளவில் இரண்டுவகை யானைகள் காணப்படுகின்றன. ஒன்று ஆப்பிரிக்கயானை. மற்றொன்று ஆசிய யானை. இந்தியாவில் காணப்படுவது ஆசிய வகை யானைகள் ஆகும். சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் யானைகள் ஆசிய யானைகள் எனலாம். நிலத்தில் காணப்படும் விலங்குகளில் மகிப்பெரிய உடலமைப்புக்கொண்ட விலங்கினம் யானையாகும். சங்க அகப்பாடல்களில் மிகுதியாகச் சுட்டப்பட்ட விலங்கினம் யானையே ஆகும். சங்க இலக்கியத்தில் ஆண் யானை களிறு, வேழம் என்றும் பெண்யானை பிடி என்றும் சுட்டப்பட்டுள்ளது. பொதுவாக யானை, குஞ்சரம், வாரணம், நாகம் எனும் பெயர்களில் சுட்டப்படுவதைக் காணமுடிகின்றது. யானை மனிதனால் பழக்கப்பட்டு அவனது சொல்படி கேட்டு அவனுக்கு அடங்கி நடக்கும் தன்மையினை இன்றளவும் காணமுடிகின்றது. சங்க அகப்பாடல்களில் பழக்கப்பட்ட யானை சுட்டபப்டடிருப்பினும் காட்டில் வாழும் யானைகளே மிகுதியும் சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. காட்டில் வாழும் யானையை நாம் காட்டுயானை எனச் சுட்டுவது போல் சங்க அகப்பாடல்களில் ‘‘கானயானை’’[359] எனச் சுட்டப்பட்டுள்ளதைக் காண முடிகின்றது. யானையின் கண், செவி, கால், தும்பிக்கை, மதநீர் ஒழுகும் தன்மை, குழுவாக இயங்கும் தன்மை, புலியைக் கொல்லும் தன்மை என யானையின் பல தன்மைகளும் சங்க அகப்பாடல்களில் விளக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. கரிய நிறமுடைய யானையின் நெற்றிப் பகுதியிலும் தும்பிக்கையிலும் வெண்மைநிறப் புள்ளிகள் அமைந்துள்ளதைக் காணமுடியும். இதனை

‘‘புகர்முக வேழம்’’[360]

‘‘சுரும்புணக் களித்த புகர்முக வேழம்’’[361]

‘‘பூம்பொறி யானைப் புகர்முகங் குறுகியும்’’[362]

எனும் பாடலடிகளான் அறியலாம். யானையின் சிறிய கண்ணையும் பெரிய கையாகிய துதிக்கையும், வெள்ளிய கொம்பையும், உரல் போன்ற காலினையும்,

‘‘சிறுகண் யானை நெடுங்கை நீட்டி’’[363]

‘‘இரும்பலி தொலைத்த பெருங்கை யானை’’[364]

‘‘தேம்படு கவுள சிறுகண் யானை’’[365]

‘‘ஏந்துகோட் டெழில்யானை’’[366]

‘‘வெண்கோட் டியானை’’[367]

‘‘ஏந்துவெண் கோட்டு வயக்களிறு’’[368]

‘‘உரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய’’[369]

போன்ற பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன. குழி தோண்டிப் புதிதாகப் பிடிக்கப்பட்ட பழக்கப்படாத யானையை,

‘‘குழியிற் கொண்ட மராஅ யானை’’[370]

என்ற பாடலடியானது சுட்டுகிறது. இது யானையைப் பிடிக்கும் முறையையும் காட்டுவதாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. யானை தனக்கு உணவாக மூங்கில் குருத்து, கரும்பு, ஓமைமரப்பட்டை போன்ற பல்வேறு பொருட்களை உண்ணுவதைச் சங்க அகப்படல்கள் காட்டுகின்றன. இவை யானையினத்தைப் பற்றித் தெளிவுற அறிந்திருந்த பண்டைத் தமிழ்க் கவிஞர்களின் சூழலியல் அறிவைக் காட்டுவதாக அமைகின்றன.

**வருடை**

வருடை என்பது வரையாட்டைக் குறிப்பிடுகின்றது. இது உயர்ந்த மலைப்பகுதிகளில் வாழும் ஆட்டினம் ஆகும். மலையின் மிக உயர்ந்த இடங்களில் தங்கியிருந்து மேய்ச்சலுக்காக மட்டும் மலையின் புள்வெளிப் பகுதிகளுக்கு இறங்கிவரும் தன்மையுடையது. சங்க அகப்பாடல்களில் இது ‘வருடை’ என்று சுட்டப்பட்டுள்ளது. உரையாசிரியர்கள் இதனை ‘மலையாடு’ என்று சுட்டுகின்றனர். வரையாடு குறித்து எம்.எஸ்.நாயர் அவர்கள் “இமையமலை வரையாட்டுடன் தொடர்புள்ள நீலகிரி வரையாடு தென்னிந்தியாவில் காணப்படும் ஒரே வகை மலைவெள்ளாடு ஆகும்”[371] எனக் கூறுவதைக் கொண்டும் உரையாசிரியர்களின் உரையின் அடிப்படையிலும் வருடை என்பது வரையாடு எனத் துணியலாம். “உலகின் மலையாட்டுப் பேரினங்கள் மனங்கவரத் தக்கவை. அதில் இந்தியாவில் வெள்ளாட்டு இனத்தின் ஒரே இனமாக தகர் (Tahr) என்ற மலையாடு திகழ்கிறது”[372] எனும் கூற்றும் இதனை உறுதிப்படுத்தும். சங்க அகப்பாடல்களில் வருடை எனும் பெயரில் சுட்டப்படும் விலங்கினத்தின் பதிவுகள் யாவும் வரையாட்டிற்குப் பொருத்தமாக உள்ளதை அறியமுடிகிறது. ஆட்டினத்தின் ஆண்பாலுக்குத் ‘தகர்’ என்ற பெயர் சுட்டப்படுவதை சங்க அகப் பாடல்களில் காணமுடிகின்றது. இத்தகர் என்ற பெயர் வருடைக்கும் சுட்டப்படுவது வருடை என்பது ஆட்டினம் என்பதைத் தெளிவுபடுத்துகின்றது.

“வேறுவே றினத்த வரைவாழ் வருடைக்
கோடுமுற் றிளந்தகர்”[373]

எனும் பாடலடிகளால் இதனை அறியலாம். தகர் என்பது ஆட்டினத்தைக் குறிப்பதுடன் ‘வரைவாழ் வருடை’ என்பது மலையில் வாழும் ஒரே ஆட்டினமான ‘வரையாட்டையே’ சுட்டுகின்றது எனவும் தெளியலாம். பட்டினப்பாலையில் “வரையாடு வருடைத் தோற்றம் போல”[374] எனும் அடியில் சுட்டப்படும் ‘வரையாடு’ என்ற பதத்திற்கு ‘வரையில் ஆடும் வருடை’ எனப் பொருள்கொள்ளாது ‘வரையாடாகிய வருடை’ என்றே பொருள் கொள்ள வேண்டும் என்கிறார் பி.எல்.சாமி.[375]

“கடும்பாட்டு வருடையொடு தாவன உகளும்
பெருவரை நீழல்”[376]

“செவ்வரைச் சேக்கை வருடை மான்மறி”[377]

“நெடுவரை மிசையது குறுங்கால் வருடை”[378]

"வருடைமான் குழவிய வளமலை நாடனை"[379]

"வழைவளர் சாரல் வருடை நன்மான்"[380]

எனும் பாடலடிகள் பெருவரை, செவ்வரைச் சேக்கை, நெடுவரை மிசை, வளமலை, சாரல் என வருடையானது உயர்ந்த மலையில் இருப்பது என்பதை விளக்குகிறது. இவ்வடிகளில் மான் எனச் சுட்டுவது விலங்கு என்ற பொருளிலேயே என்கிறார் பி.எல்.சாமி.[381] மேலும் அவர் வளர்ந்த வருடையாடு மானைப் போன்று நிறமொத்துக் காணப்படும் என்கிறார். வாருடையின் வாழிடமாகச் சுட்டப்படும் நெடுவரை மிசையில் மான்கள் வாழ்வதில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. வரையாடுகள் சிலநேரங்களில் தம்முள் சண்டையிட்டுக் கொள்ளும் இயல்புடையன. இதனை

"போருடை வருடையும்"[382]

எனும் நற்றிணைப் பாடலடி காட்டுகின்றது. சில புராண ஈடுபாடுள்ள உரையாசிரியர்கள் வருடை என்பதற்கு முறுகுப்புறத்தில் மேல்நோக்கி நான்கு கால்களை உடைய வருடை என உரை கூறியுள்ளனர். இது தவறானதாகும். சங்க அகப்பாடல்களில் எந்த ஒரு கற்பனையோ புனைவோ இன்றி மலையில் வாழும் வருடையின் இயல்பான தோற்றமே காட்டப்படுகின்றது என்பது குறிப்பிடத்தக்கது.

**வெருகு**

வெருகு என்பது காட்டுப் பூனையைக் குறிக்கின்றது. தனித்த காட்டுப் பகுதிகளிலும் ஊரைச் சுற்றியுள்ள காட்டுப்பகுதிகளிலும் காட்டுப் பூனைகள் வாழ்கின்றன. கிராமப் பகுதிகளின் காட்டுப்பகுதிகளில் காட்டுப் பூனைகளைக் காண இயலும். வீட்டின் வேலிப்பகுதிகளில் பதுங்கியிருந்து கோழிகளைப் பிடிப்பதை காட்டுப்பூனைகள் வாடிக்கையாகக் கொண்டிருக்கின்றன. தவிர செடிகொடிகள் அடர்ந்தும், புதர்கள் நிறைந்ததுமாகிய இடங்களில் மேயம் கோழிகளைப் பகல்வேளையிலேயே பிடிப்பதையும் அறியலாம்.

"நள்ளிருள் யாமத் தில்லெலி பார்க்கும்
பிள்ளை வெருகிற் கல்கிரை யாகி"[383]

"மனையுறை கோழிக் குறுங்காற் பேடை
வேலி வெருகின மாலை யுற்றெனப்
புகுமிட னறியாது தொகுப்புடன் குழீஇய"[384]

எனும் பாடலடிகளில் காட்டுப் பூனையானது எலியை உண்ணும் நோக்குடன் பார்ப்பதும், வீட்டின் வேலிக்கப்பாலிருந்து கோழிகளை நோக்கும் தன்மையும் காட்டப்பட்டுள்ளது. இக்காட்சிகளைத் தற்காலத்திலும் நாம் காணமுடியும்.

"குவியடி வெருகின் பைங்கண் ஏற்றை
ஊனசைப் பிணவின் உயங்குபசி களைஇயர்
தளிர்புரை கொடிற்றிற் செறிமயிர் எருத்திற்
கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ அன்ன

நெற்றிச் சேவல் அற்றம் பார்க்கும்''[385]

எனும் அகநானூற்றுப் பாடலடிகளில் கோழிச்சேவலைப் பற்றுவதற்கு சரியான நேரத்தை எதிர்நோக்கிக் காத்திருக்கும் வெருகு காட்டப்படுகின்றது. காட்டுப்பூனையின் பாதமானது விரிந்தமையாது குவிந்திருக்கும் தன்மையும் அதன் பசிய கண்ணும் சுட்டப்படுகின்றது. காட்டுப்பூனையின் உடற்கூறை அறிந்து கூறியிருப்பதை இப்பாடலடிகள் காட்டுகின்றன.

**வௌவால்**

சங்க அகப்பாடல்களில் வௌவால் என்பது 'வாவல்' எனச் சுட்டப்படுகின்றது. சங்க காலத்திய வாவல் என்ற சொல்லே தற்காலத்தில் வௌவால் என்று வழங்கிவருகின்றதெனலாம். வௌவால் பொதுவாக பறவை என்ற நோக்கிலேயே பொதுமக்களால் பார்க்கப்படுகின்றது. உயிரிநூற்படி வௌவால் விலங்கினத்தைச் சேர்ந்ததாகும். பறவைகளுக்கான பொதுவியல்புகளில் ஒன்றான முட்டையிட்டுக் குஞ்சுபொரிக்கும் தன்மையிலிருந்து மாறுபட்டு இது குட்டியிட்டுப் பால் கொடுக்கின்றது. பாலூட்டிகள் விலங்கினங்களாகச் சுட்டப்படுகின்றன. இதனால் வௌவால் விலங்கினம் என்பது தெளிவாகின்றது. இதனை ''வௌவால் விலங்குநூற்படி பறக்கும் விலங்காகக் கருதப்படும். வௌவால் முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பதில்லை குட்டியோடு வளர்க்கின்றது. ஆதலின் விலங்காகக் கருதப்படும்''[386] எனும் கருத்தால் உறுதிப்படுத்தலாம். சங்க அகப்பாடல்களில் வௌவால் சுட்டப்படுவதை,

''உள்ளூர் மாஅத்த முள்ளெயிற்று வாவல்
ஓங்கல் அஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்''[387]

''வாவலும் வயின்தொறும் பறக்கும்''[388]

''வைகுபனி உழந்த வாவல்''[389]

''தாஅ வஞ்சிறை நொப்பறை வாவல்
பழுமரம் படரும் பையுண் மாலை''[390]

''குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய
வாவ லுகக்கு மாலையு''[391]

''செல்லிய முயலிப் பாஅய சிறகர்
வாவ லுகக்கு மாலையாம் புலம்ப''[392]

ஆகிய பாடலடிகளின் வழி அறியலாம். 'முள்ளெயிற்று வாவல்' எனும் தொடர் முள்போன்ற பற்களை உடைய வாவல் என்றும், 'வாவல் வயின்தொறும் பறக்கும்' எனும் அடி வாவல் பறக்கும் என்றும் சுட்டுகின்றது. முள்போன்ற பல்லையுடைய வாவல் பறக்கும் என்பதைக் கொண்டு பறப்பவற்றில் கூரிய பல்லை உடையது வௌவால் என்பதை நாம் அறியாலம். இதனால் வௌவாலே வாவல் எனச் சுட்டப்பட்டுள்ளது தெளிவுற விளங்கும். மேலும் பழங்களை உண்பதற்காக மாலை நேரத்தில் செல்வது காட்டப்படுகின்றது. இவ்வாறு மாலை நேரத்தில் வௌவால்கள் தாம் தங்குமிடங்களை விட்டுச் செல்வதை,

“பசைபடு பச்சை நெய்தோய்த் தன்ன
சேயுயர் சினைய மாச்சிறைப் பறவை
பகலுறை முதுமரம் புலம்பப் போகி”[393]

எனும் அகநானூற்றுப் பாடலும் குறித்துள்ளது. வௌவாலின் பெரிய சிறகானது சற்று பிசுபிசுப்புத் தன்மையுடன் காணப்படும். இது இப்பாடலடிகளில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு சங்க அகப்பாடல்களில் வௌவாலின் இயல்பு மற்றும் உடற்கூறு ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன.

**நீர் விலங்குகள்**

நிலத்தில் உயிரினங்கள் வாழ்வது போன்று நீரிலும் உயிரினங்கள் வாழ்வது அனைவரும் அறிந்ததே. உலகில் நிலத்தின் பரப்பைக் காட்டிலும் நீரின் பரப்பே மிகுதி. அதன் அடிப்படையில் நீர் என்பது நிலத்தைக் காட்டிலும் பரந்துபட்ட வாழிடமாக அமைகின்றது. நீர் வாழிடம் என்பது பரந்துபட்ட கடற்பகுதி எனும் நிலையில் மட்டுமல்லாமல் நிலப்பகுதியில் அமையப்பெற்ற ஆறு, குளம், ஏரி, அணை போன்றவற்றையும் உள்ளடக்கியதாகவுள்ளது. உவர் நீர், நன்னீர் என்ற இருநிலைகளில் நீர்நிலைகளைப் பகுக்கலாம். கடல் உவர் நீரைக் கொண்டது. நிலப்பரப்பில் காணப்படும் ஆறு, குளம், குட்டை போன்றவை நன்நீரைக் கொண்டமைவன. இதன் அடிப்படையில் நீர் விலங்களை நன்னீர் விலங்குகள், உவர்நீர் விலங்குகள் எனப் பகுக்கலாம். நீர் விலங்குகள் என்றதும் நமக்கு முதலில் நினைவிற்கு வருவன மீனினம் எனலாம். ஆனால் நாம் அறியாத எண்ணற்ற உயிரினங்கள் நீரில்வாழ்கின்றன. சங்க அகப்பாடல்களில் நீர்வாழ் உயிரிகளான மீன்கள், நீர்நாய் பற்றிய தகவல்கள் காணப்படுகின்றன.

**மீன்கள்**

சங்க அகப்பாடல்களில் நன்னீரில் வாழும் மீன்கள் உவர்நீரில் வாழும் மீன்கள் என வாழிடப்பகுப்பின் அடிப்படையிலான இருவகை மீன்களும் சுட்டப்பட்டுள்ளன. அயிரை, ஆரல், இறால், கெளிறு, கெண்டை, கொழுமீன், சுறா, பனைமீன், வரால், வாளை ஆகிய மீனினங்கள் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றன. இம்மீனினங்களில் சில நன்னீர் உவர்நீர் என இருவகை நீரிலும் வாழும் தன்மையவாய் உள்ளன. இவை மட்டுமன்றி பொதுவாக மீனைக்குறிக்கும் வகையில் சங்க அகப்பாடலடிகள் இடம் பெற்றுள்ளன. ஒரு குறிப்பிட்ட மீனினத்தைச் சுட்டாமல் பொதுவாக மீன், மீனினம் என்றும் கயல் என்றும் சுட்டி இப்பாடலடிகள் அமைந்துள்ளன. இதனை,

“வாடப் பூவின் பொய்கை நாப்பன்
ஓடுமீன் வழியிற்”[394]

“ஆனாது அலைக்குங் கடல்மீன் அருந்தி”[395]

“பழனப் பனமீ னருந்த”[396]

“இனம் னிருங்கழி”[397]

“கடல்பா டழிய இனமீன் முகந்து”[398]

"நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய"[399]

"மீன்முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை"[400]

எனும் பாடலடிகளால் அறியாலாம். மீனினமானது கயல் எனச் சுட்டப்படுவதை,

"கயற்கணங் கலித்த பொய்கை ஊர" [401]

"கயலார் நாரை போர்விற் சேக்கும்"[402]

எனும் பாடலடிகளால் உணரலாம். மேற்கண்ட பாடலடிகளின் வாயிலாக கடல், கழிமுகம், பொய்கை ஆகிய இடங்களில் வாழும் தனித்த மீன்களையும் மீனினத் தொகுப்புகளையும் மீன், மீனினம், கயல், கயற்கணம் போன்ற சொற்களின் மூலமாக சங்க அகப்பாடல்கள் சுட்டுவதை அறியலாம்.

மீன் இனத்தின் வகைமை சுட்டாமல் பொதுவான பெயராகச் சுட்டும் முறைமையில் 'சிறுமீன்' என்ற பதம் அமைவதைக் காணமுடிகின்றது. இது உடலளவில் சிறுத்த தோற்றங்கொண்ட மீனைக் காட்டுவதாக அமைவதை

"உறுகழிச் சிறுமீன் முனையிற்"[403]

"நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்"[404]

"பூத்த மாஅத்தப் புலாலஞ் சிறுமீன்"[405]

"யறுகழிச் சிறுமீ னார மாந்தும்"[406]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. 'சினைய சிறுமீன்' என்னும் பதம் 'சினையை உடைய சிறுமீன்' எனப் பொருள்படுகின்றது. அதாவது சினையை உடைய ஈனுந்தன்மை வரப்பெற்ற சிறியமீன் என இதனை விளக்கலாம். முட்டை ஈனும் தன்மை வரப்பெற்ற சிறுமீன் என்பதால் முட்டையிடும் அளவிற்கு முதிர்ந்த சிறுமீன் என்பதை உணரலாம். இது சிறிய உடலமைப்பைக் கொண்ட தனித்த மீனினத்தைக் காட்டுவதாகத் தெரிகிறது. சிறுமீன் என்ற சொல்லைத் தவிர கழிமுகத்தில் வாழுந்தன்மை மற்றும் மருதநில நன்னீரில் வாழுந்தன்மை ஆகியன சுட்டப்பட்டுள்ளன. சரியாக இது எந்த மீனினம் என அறியுமாறில்லை.

**அயிரை மீன்**

அயிரை மீன் மிகச்சிறிய உருவமைப்பு கொண்டது. குளம், குட்டை, ஆறு போன்ற நன்னீர்நிலைகளில் இது காணப்படும். இம்மீனின் பெயர் நேரடியாகவே சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது.

"இருஞ்சேற்று அயிரை தேரிய தெண்கழிப்
பூவுடைக் குட்டந் துழவுத் துறைவன்"[407]

"அயிரை யாரிரைக் கணவந் தாங்குச்"[408]

"நாரை நிரைபெயர்ந் தயிரை யாரும்"[409]

"அயிரை பரந்த வந்தண் பழன" [410]

"இருங்கழி மருங்கி னயிரை யாரும்" [411]

எனும் பாடலடிகளில் அயிரை மீனானது கடல்பகுதியிலும், கழிமுகங்களிலும், மருதநிலத்தின் பழனத்திலும் காணப்பட்டதைப் பதிவு செய்கின்றன. இது நன்னீர்பகுதிகளிலும் சாதாரணமாகக் காணப்படும் மீனினமாகும். இது நன்னீர்ப் பகுதியில் இருப்பதை ஒரு பாடல் மட்டுமே பதிவு செய்துள்ளது குறிப்பிடத்தக்கது. ''அயிலை'' எனும் பெயரில் அகநானூறு இம்மீனைச் சுட்டுவதை

''குறுங்கண் அவ்வலைப் பயம்பா ராட்டிக்

கொழுங்கண் அயிலை பகுக்குந் துறைவன்''[412]

எனும் பாடலடியால் அறியாலம். சிறிய உருவைக் கொண்ட மீனாதலால் ''குறுங்கண்'' கொண்ட வலையைப் பயன்டுத்திப் பிடிக்கப்பட்டதை இப்பாடலடிகள் காட்டுகின்றன.

**ஆரல் மீன்**

கதிர் போன்ற கூரிய மூக்கினை உடைய ஆரல் மீனினை ''கதிர் மூக்கு ஆரல்'' [413] என அகநானூறு சுட்டுகின்றது.

''ஆர லருந்த வயிற்ற''[414]

''ஆர லார்கை யஞ்சிறைத் தொழுதி''[415]

எனும் பாடலடிகளும் ஆரல் மீனைச் சுட்டுகின்றன. சங்க அகப்பாடல்களில் நெய்தலாகிய உவர் நீர்ப் பகுதி மற்றும் மருதமாகிய நன்னீர்ப் பகுதி ஆகிய இரு இடங்களிலும் இம்மீன் இடம்பெறுகின்றது.

**இறால் மீன்**

சங்க அகப்பாடல்களில் இறால் மீன் இறா, இறவு, இறால் என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது. இறால் மீனின் நிறம், வடிவம், வாழிடம் போன்றவை தெளிவுறச் சுட்டப்பட்டுள்ளன. இறால் மீன்களின் வாழ்விடம் பெரும்பான்மையும் உவர்நீர் வாழிடமாகிய கடலாகும். நன்னீர்ப் பகுதிகளிலும் இறால் காணப்படுவதுண்டு. இதனை ''இறால் மீன்கள் பொதுவாக கடல் நீரில் வாழ்பவை. இவற்றில் தனிச் சிறப்பான ஒருவகை நன்னீரிலும் வாழும்''[416] எனும் கருத்து தெளிவிக்கும். சங்க அகப்பாடல்களில் கடல், கழிமுகம், மருதம் மற்றும் குறிஞ்சி நிலத்தின் நன்னீர்ப் பகுதிகளில் வாழும் இறால் மீன்கள் சுட்டப்பட்டுள்ளன. பெரும்பான்மையும் கடற்பகுதி இறாமீன்கள் சுட்டப்பட்டுள்ளன. மருத நிலத்தில் வாழும் இறால் மீனை அகநானூற்றின் தொன்னூற்றாறு, இருநூற்று எண்பத்தாறாம் பாடல்களும் குறிஞ்சி நிலத்தின் இறாமீனை அகநானூற்றின் நூற்றைம்பத்திரண்டாம் பாடலும் காட்டுகின்றன. இறாலானது வளைந்த முதுகுப்புறத்தினையும் வளைந்த கால்களையும் கொண்ட உருவமைப்பைக் கொண்டது. இத்தன்மையினை முடங்கிறா, முடக்கால் இறவு எனச் சங்க அகப்பாடல்கள் சுட்டுவதை

''முடிவலை முகந்த முடங்கிறா''[417]

''முடங்குபுற இறவின் மோவாய் ஏற்றை''[418]

''முடக்கா லிறவின் முடங்குபுறப் பெருங்கிளை''[419]

''முடங்குபுற இறவோ டினமீன் செறிக்கும்''[420]

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன. இறால் மீனின் தலையானது மெல்லியதாக முன்பாக நீட்டியதுபோல் இருப்பது ‘‘துய்த்தலை’’[421] எனச் சுட்டப்பட்டுள்ளது. இவை இறாமீனின் பொதுவான உடலமைப்பினைக் காட்டுவதாக அமைந்துள்ளது. சிவந்த நிறமுடைய இறால் மீனை

‘‘சேயிறா வெறிந்த சிறுவெண் காக்கை’’[422]

‘‘பெருஞ்சேய் இறவின் துய்த்தலை’’[423]

‘‘பெருங்கடல் பரப்பில் சேயிறால் நடுங்க’’[424]

எனும் அடிகள் சேயிறா என்றும் சேய் இறா என்றும் சுட்டுகின்றன. வெள்ளை நிறமுடைய இறாமீனை

‘‘சிறுவெள் இறவின் குப்பை யன்ன’’[425]

‘‘வெள்இறாக் கனவும் நள்ளென் யாமத்து’’[426]

எனும் அகநானூற்றடிகள் ‘வெள் இறா’ எனச் சுட்டுகின்றன. சிவந்த நிறமுடைய இறால் மீன் வெண்மை நிறமுடைய இறால் மீன் என நிற அடிப்படையிலான இருவகை இறால் இனங்கள் சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளன.

சங்க அகப்பாடல்களின் வழி கடல்பகுதிகளிலும், கழிமுகங்களிலும், பொய்கைகளிலும் வாழும் இறாமீன்கள் சுட்டப்பட்டுள்ளதையும், நிறத்தின் அடிப்படையிலான இருவகை இனங்களையும் அறிய முடிகின்றது.

**கெளிற்று மீன்**

கெளிற்று மீன் என்பது தற்காலத்தில் கெளுத்திமீன் எனச் சுட்டப்படுகின்றது. சங்க அகப்பாடல்களில் கெளிறு, கெடிறு என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது.

‘‘முள்ளெயிற்று பான்மக ளின்கெடிறு சொரிந்த’’[427]

‘‘இருங்கழி யினக்கெடி றாருத் துறைவ’’[428]

‘‘சினைக்கெளிற் றார்கைய’’[429]

எனும் பாடலடிகளால் இதனை அறியாலம். கெளுத்தி மீன்கள் பெரும்பான்மையும் நன்னீரில் வாழக்கூடியனவாகும். கழிமுகப் பகுதிகளிலும் இம்மீன்கள் காணப்பட்டதை ஐங்குறுநூறு பதிவு செய்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**கெண்டை மீன்**

கெண்டைமீன் என்பது நன்னீரில் வாழும் மீன்வகையாகும். ஆறு, குளம், குட்டை, ஏரிகளில் காணப்படும். மருத நிலத்தின் ஆழமான குளத்தில் கெண்டை மீன் காணப்படுவதை,

‘‘குண்டுநீ ரிலஞ்சிக் கெண்டை கதூஉம்
தண்டுறை யூரன்’’ [430]

எனும் குறுந்தொகைப்பாடலடி காட்டுகின்றது.

‘‘குருகுகொளக் குளித்த கெண்டையயல’’[431]

"கெண்டை பாய்தர வவிழ்ந்த"[432]

எனும் பாடலடிகள் கெண்டை மீனினைச் சுட்டியமைவதைக் காணமுடியும். தற்காலத்தில் மீன்வகைகளில் சுட்டப்படும் கட்லா, ரோகு, மிர்கால் ஆகியவை இக்கெண்டை மீன் இனங்களே ஆகும். மேலும் வெள்ளிக்கெண்டை, புற்கெண்டை போன்றவை வெளிநாட்டிலிருந்து கொண்டுவரப்பெற்ற கெண்டைமீன் வகைகளாகும்.

**கொழுமீன்**

சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் 'கொழுமீன்' என்ற பதத்திற்கு உரையாசிரியர்கள் சில இடங்களில் கொழுத்த மீன் என்றும் கொழுவிய மீன் என்றும் மீனின் உடல் வளர்ச்சியின் காரணப்பற்றி உடல் பெருக்கமுற்ற மீனைப் பொதுவாகக் குறிக்கும் வகையில் விளக்கம் கூறியுள்ளனர். ஆனால் "கொழுமீன்" என்பது தனித்த ஒரு மீன் வகை என்பதை,

"அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்" [433]

எனும் அகநானூற்றுப் பாடலடிகள் விளக்குகின்றன.

'கொழுமீன்தடி' என்பது 'கொழுமீனின் கருவாடு' என்று பொருள் படும். மீன் உயிருடன் இருக்கும் பொழுதோ அல்லது பிடத்த உடனோ அதன் சதைப்பற்று கருதி கொழுமீன் எனலாம். ஆனால் மீன் கருவாடாகிய பின்பு சதைப்பற்று சுத்தமாக சுண்டி வறண்டு போய் காணப்படும். அந்த நிலையில் அதனை 'கொழுமீன்' என சதைப்பற்று காரணமாகச் சுட்டுவது இயலாததாகும். அவ்வகையில் சதைப்பற்று வறண்டு கருவாடாகிய தடியைச் சுட்டும் போது 'கொழுமீன் தடி' எனச் சுட்டுவது மீனினத்தின் தனியொரு வகையாகிய கொழுமீனின் கருவாட்டை என்பது விளங்குகிறது. எனவே கொழுமீன் என்பது தனியொரு மீன் வகையே எனத் துணியலாம். கொழுமீனின் தலையில் நிணம் நிறைந்த இருக்கும் என்பது,

"நெய்த் தலைக் கொழுமீன்" [434]

எனும் நற்றினையடியால் அறிவருகின்றது. சங்க அகப்பாடல்களில் கொழுமீன் பற்றிய செய்திகள் யாவும் நெய்தல் திணையில் வருவதால் கொழுமீன் கடலில் வாழும் மீன் வகை என்பது தெளிவாகின்றது.

**சுறா மீன்**

சுறா மீன் என்பது கடற்பகுதியில் வாழும் மீனினமாகும். சுறா மீன்கள் பெரிய உடலமைப்பினைக் கொண்டவை. இவை சிறிய மீன்கள் மற்றும் பிற கடல்வாழ் உயிரினங்களை உணவாக உண்பவை. சங்க அகப்பாடல்களில் சுறா மீனானது சுறா, சுறவு, கோட்டு மீன் என்ற பெயர்களில் வழங்கப்படுகின்றது.

"கோட்சுறா வழங்கும் வாட்கேழ் இருங்கழி" [435]

"வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி" [436]

"கொடுந்திமிற் பரதவர் கோட்டும் னெறிய" [437]

எனும் பாடலடிகள் சுறாமீனானது கழிமுகத்தில் இருத்தல், பரதவர் அதனைப் பிடித்தல் போன்ற செய்திகளைக் காட்டுகின்றது. சுறா மீனானது தன்னைப் பிடிக்க பரதவர் விரித்த வலையைக் கிழித்த காட்சியை,

"கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை" [438]

"கோட்சுறா எறிந்தெனச் சுருங்கிய நரம்பின்
வலையுந் தூண்டிலும்" [439]

எனும் சங்க அகஇலக்கியப் பாடலடிகள் காட்டுகின்றன. சங்க அகப்பாடல்களில் மீன் இனங்களில் சுறா மீன் மிகுதியும் பேசப்பட்டுள்ளது. மனிதர்களைத் தாக்குதல், பிற உயிரினங்களைத் தாக்குதல் போன்ற செய்திகளும் காட்டப்பட்டுள்ளன.

**பெருமீன்**

சங்க அகப்பாடல்கள் சிலவற்றில் 'பெருமீன்' எனும் பதம் சுட்டப்பட்டுள்ளது. இதற்குச் சில உரையாசிரியர்கள் பெரிய மீன் என்று பொருளுரைத்துள்ளனர். ஆனால் இது கூறப்பட்டுள்ள விதம் பற்றியும் இதனைப் பரதவர் பிடிக்கும் முறைமை பற்றியும் 'பெருமீன்' என்பது திமிங்கிலத்தைச் சுட்டுகிறது என நிறுவுகிறார் பி.எல். சாமி[440]. சங்க அகப்பாடல்களில் பரதவர்கள் பெருமீனைப் கயிற்றின் நுனியில் கட்டப்பட்ட எறியுளியைக் கொண்டு தாக்கிப் பிடிக்கும் முறைமை சுட்டிக்காட்டப்படுகின்றது. இது திமிங்கலத்தைப் பிடிக்கும் முறையாகும். தற்காலத்தில் இம்முறையிலேயே திமிங்கிலம் பிடிக்கப்பட்டு வருவதாகக் கூறுகின்றனர். திமிங்கலம் பிடிக்கப்படும்பொழுது அதன் குருதியால் கடலே மாறுபடுவதாகவும் சுட்டப்பட்டுள்ளது. இதனை

"குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்
எறியுளி பொருத ஏமுறு பெருமீன்
புண்ணுமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட" [441]

"கயிறுகடை யாத்த கடுநடை எறிஉளித்
திண்திமில் பரதவர் ஒண்சுடர் கொளீஇ
நடுநாள் வேட்டம் போகி வைகறைக்
கடல்மீன் தந்து" [442]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. நெய்தல் நில மக்கள் பெருமீனாகிய திமிங்கிலத்தை வேட்டையாடிய விதத்தையும். பண்டைய தமிழ் மக்கள் இதனை உணவாக உண்டனர் என்பதையும் இதனால் அறியமுடிகிறது.

**வரால் மீன்**

வரால் மீன் எனப்படும் ஒரு வகை மீனினம் சங்க அக நூல்களான ஐங்குறுநூற்றிலும், அகநானூற்றிலும் சுட்டப்பட்டுள்ளது. இதனை,

"வரால் செரிந்த வட்டியுண் மனையோள்" [443]

"பகுவாய் வராஅல் பல்வரி இரும்போத்து" [444]

"நாள்துறைப் பட்ட மோட்டிரு வராஅல்" [445]

“தான்புன லடைகரைப் படுத்த வராஅல்” [446]

எனும் பாடலடிகளால் உணரலாம். மேற்கண்ட பாடலடிகள் யாவும் மருதத் திணைப் பாடல்களாக அமைந்திருப்பது, வரால் மீனினம் நன்னீரில் வாழ்வது என்பதைக் காட்டுகின்றது. “இது நன்னீரில் வாழும் மீன்”[447] எனும் இராசமாணிக்கனாரின் கூற்று இதனை உறுதிப்படுத்துகிறது.

**வாளை மீன்**

மீனினங்களுள் ஒன்றாய வாளைமீன் பற்றிய பதிவுகள் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றன. இதனை,

“இருஞ்சுவல் வாளை பிறழும் ஊர” [448]

“கணைக்கோட்டு வாளை” [449]

“வாளை வெண்போத்து உணீஇய நாரைதன்” [450]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. வாளை மீனானது நீர்நாய்க்கு உணவாகும் தன்மையினை,

“அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்

“வாளை நாளிரை பெறுஉ மூரன்” [451]

“பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்

வாளை நாளிரை பெறுஉ மூர” [452]

எனும் பாடலடிகளால் அறியலாம். வாளை மீனானது மருதத் திணையில் மருத நிலத்தின் பின்புலத்திலேயே சுட்டப்பட்டுள்ளது.

“அறல்வார் நெடுங்கயத்து அருநிலை கலங்க

மாலிருள் நடுநாள் போகித் தன் ஐயர்

காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு” [453]

எனும் அகநாநூற்று அடியில் நெடுங்கயத்தில் இருளில் சென்று ஐயர் தந்த வாளை என வரும் செய்தி கடலில் பிடிக்கப்பட்டதாக இருக்குமோ? எனத் தோன்றுகிறது. வாளை மீன் கடலிலும் காணப்படும் என்பதால் அவ்வாறும் இருக்கக்கூடும். இப்பாலடி தவிர மற்ற அனைத்துப் பாடல்களிலும் ஐயத்திற்குகிடமின்றி குளம், பழனம் என நன்னீர் மீனாகவே வாளை காட்டப்பட்டுள்ளது.

**நீர் நாய்**

சங்க அகப்பாடல்களில் நீர்நாய் பற்றிய செய்தி தெளிவுறக் காட்டப்பட்டுள்ளது. நீர்நாய் ஆறு, ஏரி, குளம், கழிமுகப்பகுதிகளில் வாழும் இயல்புடையது. மீன், நத்தை, நண்டு, மற்ற நீர் விலங்குகளை உண்ணும்.

“பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்

வாளை நாளிரை பெறூஉ மூர”[454]

“அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்”[455]

“பொய்கை நீர்நாய் புலவுநாறு இரும்போத்து”[456]

எனும் பாடலடிகளில் பொய்கையில் நீர்நாய் இருந்தது சுட்டப்பட்டுள்ளது. நீர்நாயின் முதுகில் மயிற்கற்றை வரி போன்று இருப்பது வரிப்புற நீர்நாய் எனும் தொடர் காட்டுகின்றது. தமிழ்நாட்டின் ஈரோடு மாவட்டம் கொடிவேரி பவானியாற்றுப் பகுதிகளில் இருபது வருடங்களுக்கு முன்னர் நீர்நாயைக் காண முடிந்தது என்றும் தற்போது காணமுடிவதில்லை எனக் கூறுகின்றனர். அப்பகுதியினர் நீர்நாயை 'மீனாய்' எனச் சுட்டுகின்றனர்.

**ஊர்வன**

ஊர்வன வகையைச் சேர்ந்த உயிரினங்கள் இருபது கோடி ஆண்டுகட்கு முன்பு தோன்றியதாக உயிர்நூல் வல்லுநர்கள் கூறுகின்றனர். கால்கள் இன்றி உடலின் அடிப்பகுதியில் உள்ள செதில்களைக் கொண்டு நகர்வனவும் கால்கள் இருந்தும் மற்ற விலங்கினங்களைப் போன்று எழுந்த நடவாமல் தன் உடலின் அடிப்பகுதி நிலத்தில் படும்படி நடப்பனவும் ஊர்வன எனும் உயிர்ப்பகுப்பினுள் அடங்குகின்றன. விலங்குநூல் வல்லுநர்களின் கூற்றுப்படி ஊர்வன வகை உயிரினங்கள் குளிர்ந்த இரத்தைத்தை உடையனவாகும். தங்கள் உடலைச் சூடாக வைத்துக்கொள்ள சூரிய வெப்பத்தை நாடுகின்றன. ''ஊர்வன எனும் பகுப்பினுள் பலவகையான உயிரினங்கள் அடங்குகின்றன. ஊர்வன இனத்திலே மொத்தம் ஏழாயிரம் வகையான உயிரினங்கள் காணப்படுகின்றன''[457] என்கின்றார் ஆர்.வி. பதி. ''பாம்பு, பல்லி, ஓணான், முதலை, ஆமை, உடும்பு முதலானவை இப்பிரிவில் அடங்கியுள்ளன''[458] என்கிறார் ச. முகமது அலி. சங்க அகப்பாடல்களில் ஆமை, உடும்பு, ஓந்தி, பல்லி, பாம்பு, முதலை ஆகிய ஊர்வன வகை உயிரினங்கள் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம்.

**ஆமை**

ஆமைகளைப் பொதுவாக கடல் ஆமைகள் என்றும் நில ஆமைகள் என்றும் பகுக்கலாம். இவ்விரு பகுப்புகளில் உள்ளினப் பகுப்பாக பல ஆமையினங்கள் காணப்படுகின்றன. நில ஆமைகளில் இருந்தே கடல் ஆமைகள் தோன்றியதாகக் கூறுவர். கடலாமைகள் மெசோசோயிக் (Mesozoic - நீர்நில வாழ்விகளும், பாலூட்டிகளும் பெருகிய காலத்திற்கு இடைப்பட்ட ஊர்வன வகைகள் பெருகிய காலம்) காலத்தின் இறுதிப் பகுதியில் நில ஆமைகளில் இருந்து தோன்றியதாகக் கருதப்படுகிறது''[459] எனும் கூற்றால் இதனை அறியலாம். உயிர்நூல் வல்லுநர்கள் ஆமைகளை மூன்று வகையாகப் பிரிக்கின்றனர். இதனை ''ஆமை இனத்தின் அடிப்படையில் மூன்று வகைகள் உள்ளன. முதல் வகை ஆமைகள் டார்ட்டாய்ஸ் (Tortoises) என்று அழைக்கப்படுகின்றன. முழுக்க முழுக்க நிலத்தில் வாழும் ஆமைகள் டார்ட்டாய்ஸ் என்று அழைக்கப்படுகின்றன. இவை குடிக்க மற்றும் குளிக்க மட்டுமே நீரை நாடும் தன்மை படைத்தவை. இரண்டாவது வகை டர்ட்டில்ஸ் (Turtles) என்று அழைக்கப்படுகின்றன. வாழ்நாளில் பெரும்பாலும் நீரில் மட்டுமே வாழும் ஆமைகள் டர்டிலஸ் என்றும் அடைக்கப்படுகின்றன. மூன்றாவது வகை டெர்ராபின் (Terrapin) என்று அழைக்கப்படுகின்றன. இவ்வகை ஆமைகள் சற்றே

உப்புத்தன்மை மிக்க நீரில் அல்லது கடற்கரை ஓரங்களில் வாழும் தன்மை படைத்தவை''[460] எனும் கூற்றுகள் இதனை விளக்கும். டார்ட்டில்ஸ் எனப்படும் ஆமை வகையில் கடல் ஆமை மற்றும் நன்னீர் ஆமை ஆகிய இருவகை ஆமைகளும் அடங்கும். இவ்விருவகை ஆமைகளுமே சங்க அக இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளன. மகிழேந்தி சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள ஆமைகளைக் கடலாமை, நன்னீர் ஆமை, சருகாமை அல்லது வயலாமை என வகைப்படுத்துகின்றார்.[461] இவர் கூறும் சருகாமை அல்லது வயலாமை என்பது நில ஆமையைக் குறிப்பதாகத் தோன்றுகிறது. சங்க அகப்பாடல்களில் ஆமையின் வாழும் சூழல், வாழ்வியல் நிலை போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன. சில கற்பனைச் செய்திகளும் இதில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

''பழன யாமைப் பாசறைப் புறத்து''[462]

''தீம்பெரும் பொய்கை யாமை''[463]

''வயலாமைப் புழுக்குண்டும்''[464]

போன்ற பாடலடிகளில் வரும் 'பழனயாமை', 'பொய்கை யாமை', 'வயலாமை' ஆகிய சொற்கள் ஆமைகளின் வாழிடங்களைக் கொண்டு பெயர் சுட்டப்பட்டதைக் காணமுடிகின்றது. பழனம், பொய்கை ஆகியவை நன்னீர் நிறைந்த நீர் நிலைகளாகும். எனவே பழனயாமை, பொய்கை ஆமை ஆகியவை நன்னீர் ஆமைகளைச் சுட்டுகின்றன என்பது தெளிவுறத் தெரிகிறது. வயலாமை என்பது வயலின்கண் காணப்படும் ஆமையாதலால் இது நில ஆமையா? அல்லது நன்னீர் ஆமையா? என்பது தெளியுமாறில்லை. வயலின் கண்ணும் நன்னீர் இருக்குமெனினும் தொடர்ந்து பொய்கை போன்றே நீர் தேங்கியே இருக்கும் என்பது உறுதியில்லை. இத்தகைய சூழலில் நில ஆமையும் வாழ்தல் கூடும். எனவே ''வயலாமை'' என்பது தேவையான போது நீர்நிலைக்குச் செல்லும் நிலஆமையைச் சுட்டுவதாகவும் கொள்ளலாம். மேலும் 'வயலாமைப் புழுக்குண்டும்' எனும் பட்டினப்பாலை அடியானது ஆமையின் இறைச்சியை மனிதர்கள் வேகவைத்து உண்டதைச் சுட்டுகின்றது. இன்றும் ஆமை உணவுப்பொருளாக உண்ணப்பட்டு வருகின்றது.

''அம்பணத் தன்ன யாமை யேறிச்
செம்பி னன்ன பார்ப்புப் பலதுஞ்சும்''[465]

''தீம்பெரும் பொய்கை யாமை யிளம்பார்ப்புத்
தாய்முக நோக்கி வளர்ந்திசி னாஅங்கு''[466]

எனும் பாடலடிகளில் ஆமை தன் குஞ்சுகளாகிய பார்ப்புகளுடன் இருப்பது போன்ற காட்சி காட்டப்படுகின்றது. பொதுவாக ஆமைகள் முட்டையிட்டு அடைகாத்து குஞ்சு பொறித்து பாதுகாத்து வளர்ப்பது கிடையாது. நில ஆமை, நன்னீர் ஆமை, கடலாமை, போன்ற ஆமையினங்கள் குழியைத் தோண்டி அதன்கண் முட்டையிட்டுக் குழியை மூடிவிடும். பின் தக்க காலத்தில் முட்டைகள் தானாகப்பொறித்து குஞ்சுகள் வெளியே வரும். இதனை நில ஆமையினங்களில் ஒன்றாகிய நட்சத்திர ஆமையின் இனப்பெருக்க நிலையை ''பெண்

நட்சத்திர ஆமையானது ஒரு குழியைத் தோண்டி அதனுள் ஐந்து முதல் ஏழு முட்டைகள் வரை இட்டு அந்தக் குழியை மண்ணைக் கொண்டு மூடிவிடுகின்றன. இவை ஒரு வருடத்தில் மூன்று முதல் அதிகபட்சமாக ஒன்பது தடவைகள் வரை முட்டையிடுகின்றன. ஆமைகளின் முட்டைகள் கடினமான ஓட்டை உடையதாகக் காணப்படுகின்றன. இவை இருபத்தைந்து முதல் நாற்பத்தி ஐந்து கிராம்கள் எடையுடையவை. நூற்றுப்பத்து நாட்கள் கழித்து ஓட்டை உடைத்துக்கொண்டு குட்டி ஆமைகள் வெளியில் வருகின்றன''[467] எனும் கூற்றால் அறியலாம். ஆமைகளின் இனப்பெருக்க முறை இவ்வாறு இருக்கும்பொழுது மேற்கண்ட ஐங்குறுநூற்றுப் பாடலடிகளில் சுட்டப்படும் காட்சியானது புலவரின் கற்பனையாக இருக்கக்கூடும் என்றே எண்ணத் தோன்றுகின்றது. ஒரு வேளை நீர்வளம் சிறந்திருந்த காலத்தில் பல குந்து ஆமைகளுடன் பெரிய ஆமைகளும் நீர்நிலைகளில் சேர்ந்து உலவியது கொண்டு இவ்வாறு மிகைப்படுத்திக் கூறியிருக்கலாம். அல்லது சங்க காலத்தில் குஞ்சுகளைப்பேணும் ஆமையினம் இருந்திருக்கவும் வாய்ப்புள்ளது எனலாம். கடல் ஆமையானது முட்டையிடுவது பற்றி ஆர்.வி. பதி ''கடல் ஆமைகள் கடற்கரைக்கு வந்து முட்டையிட்ட பின்னர் அதை மணலால் மூடிவிட்டு கடலுக்குள் சென்றுவிடும். இவை தாங்கள் இட்ட முட்டைகளைப் பற்றியோ பின்னர் பிறக்கும் குட்டிகளைப் பற்றியோ கவலைப்படுவதில்லை. முட்டையிடுவதோடு இவற்றின் பணி முடிந்துவிடுகிறது''[468] என்று கூறுகின்றார். இதற்கு மாறான, புலவரால் மிகைப்படுத்தப்பட்ட காட்சியை அகநானூற்றின் பாடலில் காணமுடிகின்றது. கடலாமையானது கடற்கரையில் அடும்பங்கொடிகளைச் சிதைத்து வெள்ளிய மணலை ஒதுக்கி மறைவாக முட்டைகளை இட்டுப் புதைக்கின்றது. அம்முட்டைகளிலிருந்து பார்ப்புகள் வெளிவரும்வரை ஆண் ஆமை பாதுகாத்திருப்பதாக அப்பாடல் கூறுகிறது. இதனை,

''அடும்புகொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்
குப்பை வெண்மணல் பக்கஞ் சேர்த்தி
நிறைச்சூழ் யாமை மறைந்தீன்று புதைத்த
கோட்டுவட் டுருவின் புலவுநாறு முட்டைப்
பார்ப்பிட னாகும் அளவைப் பகுவாய்க்
கணவ னோம்புங் கானலஞ் சேர்ப்பன்''[469]

எனும் பாடலடிகளால் அறியலாம். இப்பாடலில் பெண் ஆமை முட்டையிடும் தன்மை இயல்பு மாறாது தெளிவுறச்சுட்டப்பட்டுள்ளது. கணவனாகிய ஆண் ஆமை காப்பது என்பது மட்டும் மிகைப்படுத்தப்பட்டுள்ளது எனலாம். நகங்களற்ற கடல் ஆமையிலிருந்து வேறுபட்ட வலிய நகங்களை உடைய நில ஆமை அல்லது நன்னீர் ஆமையை ''வள்ளுகிர் யாமை''[470] எனும் அகநானூற்றுத் தொடர் காட்டுகிறது. ஆமையானது முட்டைகளை மணலுள் இட்டுச் சென்றபின் தானாகப் பொறியும் குஞ்சுகள் தன்னைத்தான் பாதுகாத்து பல ஊனுண்ணும் பறவைகளினின்றும் தப்பி வருந்திப் பின் கடலுள் சேரும். அதுபோல காதலர் தாய் ஆமை முட்டையை புதைத்துச் சென்றது போல் தன்னிடம் காதலை

ஏற்படுத்திச் சென்று விட்டார். இந்நிலையில் ‘‘என்னை நானே காப்பாற்றிக் கொள்ளவேண்டியவளாக உள்ளேன்’’ எனத் தலைவி கூறும் விதமாக அமைந்த,

‘‘யாவது மறிகிலர் கழறு வோரே
தாயின் முட்டை போலவுட் கிடந்து
சாயி னல்லது பிறிதெவ னுடைத்தோ
யாமைப் பார்பி னன்ன
காமங் காதலர் கையற விடினே’’ [471]

எனும் இப்பாடலில் தாயில்லாத முட்டை மணலுள் கிடந்து அதனுள் உள்ள குஞ்சுகள் தானாக வருத்தி வெளிவருவது சுட்டுப்படுகின்றது. இது ஆமையினத்தின் வாழ்வியற் சுழற்சியை நன்கறிந்திருந்த அறிவார்ந்த பதிவாக அமைந்துள்ளது எனலாம். உரையாசிரியர்கள் ஆமைக்குஞ்சுகளின் பிறப்பின் தன்மையை அறியாது ‘தாயில்லாத முட்டை கிடந்தபடியே அழியும்’ எனத் தவறான பொருள்கொண்டுள்ளனர். இதனை ‘தாய் இல்லாத முட்டை பயனின்றி அழிவது போல’[472] என்ற உரையாலும், ‘‘தாயில்லாத முட்டை அத்தாயால் இடப்படும் அடுத்தடுத்த பாதுகாத்தலை யொழிந்தமையின் குஞ்சாம் பயனைப் பெறாதது போல’’[473] என்ற உ.வே.சா.வின் உரையாலும் அறியலாம். ஆமைகள் இடும் அனைத்து முட்டைகளும் குஞ்சுகளாகப் பொறிக்காவிடினும் குஞ்சு பொறித்து வெளிவரும் அனைத்து குஞ்சுகளும் தாயில்லாத முட்டையிலிருந்து வெளிவரும் குஞ்சுகளே ஆகும். எனவே தாயில்லாத முட்டைகள் அழிந்துபடும் என்பது சரியான கருத்தாக அமையாது. ஆமையின் தாயில்லாத முட்டைகளே சாகாது குஞ்சாக வெளிவருகின்றன என்பதே உண்மை. அவ்வாறிருக்க மேற்கண்ட பாடலில் உள்ள ‘‘சாயின்’’ என்னும் சொல்லிற்கு வருந்துதல் எனும் பொருள்கொள்ளாது ‘‘அழிதல்’’ அல்லது ‘‘சாதல்’’ எனும் பொருள் கொண்டமையால் உரையாசிரியர்கள் மாறுபட்ட பொருளுரைத்தனர் எனலாம். கழகத் தமிழ் அகராதியானது ‘சாய்தல்’ எனும் சொல்லிற்கு ‘‘அசைதல்; அழித்தல்; தளர்தல்; வருந்துதல்; வற்றுதல்; இறத்தல்; திரும்புதல்; நுண்மை நடுநிலைமை திரும்புதல்; சார்தல்; சயனித்தல்; தோற்றோடுதல்; திரண்டு செல்லுதல்’’ [474] எனப் பொருளுரைக்கின்றது. மேற்கண்ட பாடலில் காணப்படும் ‘சாயின் அல்லது’ எனும் தொடரிற்கு ‘வருந்துதல் அல்லது’ என்று பொருள் கொள்வதே ஏற்புடையதாக அமையும். அவ்வாறு பொருள் கொண்டு என்னை இடித்துரைப்போர்க்கு என்ன தெரியும்? தாயில்லாத முட்டை போல மணலுள் கிடந்து குஞ்சுகள் தானே முயன்று வருத்தி வெளிவந்து கடலுள் சேர்வதல்லாமல் வேறு என்ன செய்ய இயலும்? தாயின்றி தானாக கடல்சேரும் ஆமைப் பார்ப்பு போல, நானும் என்னை நானே தேற்றிக் கொள்ளும் நிலையிலுள்ளேன் எனப் பொருள் கொள்ளலாம்.

சங்க அகப் பாடல்களில் நன்னீர் ஆமை, கடல் ஆமை அவை வாழும் இடம், முட்டையிடும் தன்மை ஆகியன சில மிகைப்படுத்தல்களுக்கிடையே இயற்கையில் உள்ளவாறு தெளிவுறக் காட்டப்பட்டுள்ளன.

**உடும்பு**

உடும்பு வகைகளில் நீர் உடும்பு, பாலைவன உடும்பு எனப் பலவகைகள் காணப்படுகின்றன. சங்க அகப்பாடல்களில் உடும்பு பற்றி அதிகப்படியான விளக்கங்கள் ஏதுமில்லை. நற்றிணையில் வேட்டுவர்கள் உடும்பை உணவிற்காகப் பிடித்த செய்தி வருகின்றது. இதனை,

''உடும்பு கொரீஇ வரிநுணல் அகழ்ந்து
நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி
எல்லுமுய லெறிந்த வேட்டுவன்'' [475]

எனும் பாடலடிகளால் உணரலாம். நாயால் பிடிக்கப்பட்ட உடும்பினைச் சமைத்துண்ட செய்தியை

''ஞமலி தந்த மனவுச் சூல் உடும்பின்
வறைகால் யாத்தது வயின்தொறும் பெறுகுவீர்'' [476]

எனும் பெரும்பாணாற்றுப்படை அடிகளாலும் அறிய முடிகின்றது. சங்க அகப்பாடல்களில் உடும்பு வேட்டையாடப்படும் தகவலை அன்றி வேறு விரிவான தகவல் காணக்கிடைக்கவில்லை.

**ஓந்தி**

ஓந்தி என்பது பச்சோந்தியைக் குறிப்பதாகத் தெரிகின்றது. பச்சோந்திகள் பல்லி இனத்தைச் சேர்ந்தவையாகும். ஓந்தியாகிய பச்சோந்தி சங்க அகப்பாடல்களில் ''ஓதி'' என இடைக்குறையாகச் சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இதனை

''வேனில் ஓதிப் பாடுநடை வழலை'' [477]

''வேதின வெரிநி னோதி முதுபோத்
தாறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்தும்''[478]

''வைவால் ஓதி மையணல் ஏய்ப்ப'' [479]

எனும் பாடலடிகளால் உணரலாம். ஓந்தி நிமித்தம் பார்க்கப் பயன்பட்டது என்பதைக் குறுந்தொகை காட்டியுள்ளது. ஓதி எனச் சுட்டப்பட்டுள்ள ஓந்தி பச்சோந்திதான் என்பதை ''வேனில் ஓதி நிறம்பெயர் முதுபோத்து''[480] எனும் நற்றிணையடியானது உறுதிசெய்கின்றது. வேனில் காலத்தில் நிறம் மாறிமாறித் தோன்றுகின்ற ஓந்தியின் முதிய ஆண் என்பது இவ்வடியால் விளங்குகின்றது. எனவே தன் உடலின் நிறத்தைச் சூழலுக்கு ஏற்றாற்போல் மாற்றிக்கொள்ளும் பச்சோந்திதான் ''ஓதி'' எனச் சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது என்பது தெளிவாகிறது.

**பல்லி**

உலகம் முழுவதிலும் பல்வேறு வகைப்பட்ட பல்லியினங்கள் காணப்படுகின்றன. நாம் இயல்பாக இருவகைப் பல்லிகளை நமது சுற்றுப்புறத்தில் காண்கிறோம். ஒன்று நமது வீட்டில் காணப்படும் பல்லி. மற்றொன்று வீட்டைச் சுற்றியுள்ள மரங்களில் காணப்படுவது.

இதனை மரப்பல்லி என்று சுட்டுகின்றோம். சங்க அகப்பாடல்களில் நமது இல்லத்தின் சுவரின்கண் காணப்படும் பல்லி சுட்டப்படுவதை

‘‘............... நெடுஞ்சுவர்ப் பல்லி’’[481]

‘‘உயர்புகழ் நல்லில் ஒண்சுவர்ப் பொருந்தி
நயவகு குரல பல்லி’’[482]

‘‘............ மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன’’[483]

எனும் பாடலடிகளால் அறியலாம். காட்டுப்பகுதியில் காணப்படும் பல்லியை

‘‘செங்காற் பல்லி தன்றுணை பயிரும்
அங்காற் கள்ளியங் காடிறந் தோரே’’[484]

எனும் குறுந்தொகைப் பாடலடிகள் காட்டுகின்றன. இதில் செவ்விய காலையுடைய பல்லி கள்ளிநிறைந்த வறண்ட காட்டில் இருப்பதாகக் காட்டப்படுகின்றது. அகநானூற்றின் நூற்றைப்பத்தொன்றாவது பாடல் கள்ளியின் அடிப்பகுதியில் தங்கியிருந்த பல்லியைச் சுட்டுகின்றது. பிளந்த வாயை உடைய பல்லி ‘‘பகுவாய்ப் பல்லி’’[485] எனும் தொடர் காட்டுகின்றது. வீட்டில் வாழும் பல்லி காட்டில் வாழும் பல்லி ஆகிய இருவகைப் பல்லிகளும் சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளன. இவ்விருவகைப் பல்லிகளையும் நிமித்தம் காணும் நம்பிக்கையில் மக்கள் பார்த்ததையும் காணமுடிகின்றது.

**பாம்பு**

சங்க அகப்பாடல்களில் பாம்பானது பாம்பு, அரவம், அரவு, நாகம் என்ற பெயர்களில் சுட்டப்படுவதைக் காணமுடிகின்றது. பாம்புகள் புற்றில் தங்குதல் வலையில் தங்குதல் போன்ற செய்திகள் காணப்படுகின்றன. தற்காலத்தில் நாகப்பாம்பு எனச் சுட்டுவதை பண்டைய தமிழர்கள் ‘‘நல்லரா’’ எனச் சுட்டியுள்ளனர். நல்லபாம்பு என நாகப்பாம்பினைக் குறிக்கும் வழக்கமும் தற்காலத்தில் இருப்பது குறிப்பிடத்தக்கது. ‘‘நாகப்பாம்பு’’ என அழைப்பது தமிழ் மரபானது அல்ல. இப்பாம்பின் தூய தமிழ்ப்பெயர் நல்ல பாம்பு என்பதே’’[486] எனும் கூற்று இதனைத் தெளிவிக்கும். நாகம் எனச் சுட்டும் வழக்கம் பண்டைய தமிழ் மக்களிடம் இருந்துவந்துள்ளதை சங்க அகப்பாடல்களின் மூலம் அறிய முடிகின்றது. இதனை

‘‘.............நாகத்து
ஆணங்குடை யருந்தலை உடலி வலனேர்பு’’ [487]

‘‘திருமணி உமிழ்ந்த நாகம்’’[488]

எனும் பாடலடிகளால் அறியாலம். பல இடங்களில் பாம்பு மணியை உமிழ்வதாகச் சுட்டப்படுகின்றது. இது இயற்கைக்கு மாறான செய்தியாகவே உயிர்நூல் வல்லுநர்களால் கூறப்படுகின்றது. நாகம் நல்லரா எனச் சுட்டப்படுவதை

‘‘நல்லராக் கதுவி யாங்கு’’ [489]

“நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த”[490]

எனும் பாடலடிகளால் உணரலாம். பொதுவான பெயரான பாம்பு, அரவம் என்ற பெயர்களில் பாம்பு சுட்டப்படுவதை

“……………..இரைதேர் அரவமும்” [491]

“அரவாழ் புற்றம் ஒழிய” [492]

“பாம்புறை புற்றம்” [493]

எனும் பாடலடிகளால் அறியலாம். பசிய நிறமுடைய பச்சைப் பாம்பினை “சினைப்பசும் பாம்பின்”[494] எனும் பாடலடி காட்டுகின்றது. சங்க அகப்பாடல்களில் நாகப்பாம்பு, பச்சைப் பாம்பு ஆகிய இருவகைப் பாம்புகள் தெளிவுறக் காட்டப்படுகின்றன. பல பாடல்களில் பாம்பு, அரவு, அரவம் போன்ற பாம்பினைக் குறிக்கும் பொதுவான பெயர்கள் காணப்படுகின்றன. பாம்பு மணியை உமிழும் எனும் அறிவியலுக்குப் புறம்பான கருத்தையும் சங்க அகப்பாடல்களில் காணமுடிகின்றது.

**முதலை**

தற்காலத்தில் முதலைகள் ஆறுகள், கழிமுகப் பகுதிகள், சதுப்புநிலக் காடுகளில் காணப்படுகின்றன. முதலைகளில் ஒரு வகையான உப்பு நீர் முதலைகள் கடலுக்குள் நீண்ட தொலைவு செல்லக் கூடியதாகும்.

“ஒடுங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழங்கும்
கொடுந்தாள் முதலையும் இடங்கரும் கராமும்”[495]

எனும் பாடலடிகளில் காணப்படும் முதலை, இடங்கர், கராம் ஆகிய மூன்றும் முதலையினத்தின் வகைகள் என உரையாசிரியர்களால் சுட்டப்படுகின்றன. தற்போது முதலையினத்தைப் பொதுவாகக் குறிக்க ‘முதலை’ எனும் சொல் சுட்டப்படும் நிலையில் இடங்கர், கராம் ஆகிய முதலையினங்கள் எவையென அறியுமாறில்லை. கராம் எனும் முதலை வகை பொய்கையிலும் காட்டாற்றிலும் காணப்பட்டதை

“கருங்கற் கான்யாற்று அருஞ்சுழி வழங்குங்
கராஅம் பேணாய் இரவரின்” [496]

“கராஅங் கலித்த கண்ணகன் பொய்கை” [497]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. இடங்கர் பற்றி விரிவான தகவல் எதுவும் காணப்படவில்லை. “இது முதலையின் சாதி விசேடம். இது புடைப்பட்ட கரிய ஆழத்திடத்துப் போதற்கரிய கழியிடத்தே திரிவது”[498] என இடங்கர் பற்றி மா. இராசமாணிக்கனார் கூறுகின்றார். முதலையின் வளைந்த தாளானது 'கொடுந்தாள்’ எனச் சுட்டப்படுகின்றது. முட்டையிட்டுக் குஞ்சு பொறித்த முதலையானது தனது வாய்க்குள் அமைந்த பைபோன்ற அமைப்பினுள் குஞ்சுகளை வைத்து பாதுகாப்பான இடத்தில் கொண்டுவிடும் என்கிறார் ஆர்.வி.பதி.[499] அலிகேட்டர் எனும் முதலை வகையானது

சிலநேரங்களில் குட்டி முதலைகளைப் பிடித்துத்தின்னும் குணம் கொண்டதாகச் சுட்டப்படுகின்றது. குட்டிகளைத் தின்னும் முதலையை

"பிள்ளை தின்னு முதலை"[500]

"தன் பார்ப்புத் தின்னு மன்பின் முதலையொடு"[501]

ஆகிய பாடலடிகள் காட்டுகின்றன. குட்டியைத் தின்னும் அலிகேட்டர் முதலையானது அமெரிக்க மற்றும் சீனா ஆகிய நாடுகளிலேயே காணப்படுகின்றன. ஒரு வேளை தன் குஞ்சுகளையே உண்ணும் முதலை தமிழகத்திலும் வாழ்ந்திருக்கலாம் என்பதை இது காட்டுகின்றது. அல்லது முட்டையிலிருந்து வெளிவந்த குஞ்சுகளை ஆபத்துக் காலங்களில் பாதுகாப்பிற்காகத் தனது வாயால் பத்திரமாகக் கவ்வி எடுத்து அடக்குவதைக் கண்ட புலவரின் தவறான புரிதலாகவும் இருக்கலாம்.

**பறவைகள்**

நாம் அன்றாடம் பல்வேறுபட்ட பறவைகளைப் பார்த்து வருகின்றோம். பல பறவைகளின் அழகால் கவரப்பட்டு திரும்பத் திரும்ப அவற்றின் காட்சியைப் பெறவும் ஆவல்கொள்கின்றோம். இவ்வாறு காணும் பறவைகளின் காட்சி அனைவருக்கும் கிடைக்கின்றது எனக் கூறவியலாது. கட்டிடங்கள் மட்டுமே நிறைந்த நகர்ப்பகுதி, வயற்புறங்கள் சூழ்ந்த கிராமப்பகுதி, மரங்கள் நிறைந்த காட்டுப்பகுதி என அவரவர் வாழும் சூழ்நிலைக்கேற்ப பறவைகளின் காட்சியும் அவைபற்றிய ஆர்வமும் அமைகின்றது. தனது சூழல் பற்றி அறிவில் பின்தங்கிய அல்லது சூழலியில் உயிரினம் பற்றிய அறிவு மறக்கப்பட்ட மக்கள் வாழும் தற்காலத்தில் பறவையினம் பற்றிய அறிவு பெரும்பான்மையும் இல்லாமல் போய்விட்டது எனலாம். கிராமப் பகுதியில் வாழ்ந்த முதியவர்கள் பறவை, பூச்சிகள் பறக்கும் நிலையை வைத்தே மழையின் வருகையை முன்கூட்டியே அறிந்தனர் என்பது தற்காலத்தில் ஏதோ அபூர்வக் கதை நிகழ்வாகப் பார்க்கப்படுகிறது. அந்த அளவிற்கு நமது மரபறிவு நம்மிடமிருந்து அற்றுவிட்டது. இந்த நிலையில் நமது பழமை வாய்ந்த இலக்கியங்களில் காணக்கிடக்கின்ற பறவையினங்கள் பற்றிய தகவல்கள் அக்காலத்திய பறவையியலின், பறவைகள் பற்றிய முன்னோரது அறிவின் தன்மையை நமக்குக் காட்டுவனவாக அமைந்துள்ளன.

**பறவை – விளக்கம்**

உலக அளவில் பறக்கும் தன்மையுடையனவாக இருவகை உயிரினங்களைச் சுட்டலாம். ஒன்று பூச்சிகள் மற்றொன்று பறவைகள். இரண்டு கால்களுடன் இரு இறக்கைகளைக் கொண்ட முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும் தன்மையுடைய உயிரினத்தை நாம் பறவை என்கிறோம். மேற்கூறிய இயல்புகளுடன் பறக்கும் தன்மையற்ற சிலவும் பறவையினமாகச் சுட்டப்படுகின்றன.

பறவைகளாக இருப்பதற்கு ஏழு இயல்புகள் அடிப்படை என சச்சிதானந்தன் குறப்பிடுகின்றார். அவ்வேழு இயல்புகளாயின, நடத்தல், நீந்தல், ஓடுதல், இரை பிடித்தல், முன்னங்கால்கள் இரண்டு சிறகுளாக கால்களின் தோற்றத்திலேயே இரு பின்னங்கால்கள் இது முதல் இயல்பு. முட்டையிட்டு அடைகாத்து குஞ்சு பொறித்தல் இரண்டாவது இயல்பு,

காற்றில் கலந்துள்ள உயிர்வளியை சுவாசித்தல் மூன்றாமியல்பு. இறகு பறவையின் நான்காமியல்பு. எந்தச் சூழ்நிலையிலும் மாறுபாடடையாத வெம்மையுடைய உடல் ஐந்தாம் இயல்பு. நான்கு அறைகள் கொண்ட இதயம் ஆறாம் இயல்பு. மூன்று விரல்களைக் கொண்ட இறகுகளாகப் பரிணமிக்கப்பட்ட முன்காலாகிய இறகுகள் பறவையின் ஏழாம் இயல்பு.[502] இத்தகைய இயல்புகளைக் கொண்ட கிவி, ஈமு போன்ற பறக்கத் தெரியாதனவும் பறவைகளாகும்.

**சங்க அகப்பாடல்களில் பறவைகள்**

சங்க அகப்பாடல்களில் கிட்டத்தட்ட முப்பது வகைப் பறவைகள் சுட்டப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது. சங்க காலத்து மக்களிடம் நிலவி வந்த பறவைகள் குறித்தான அறிவும் சங்க இலக்கியங்களில் சுட்டப்படும் பறவைகளின் அடையாளங்களைக் கொண்டு அவற்றைச் சரியாக அறியத் தேவையான பறவைகள் பற்றிய தெளிவும் நம்மிடம் இன்மையான் அவற்றை இனம் காண்பது சற்று கடினமாக உள்ள நிலையில் தற்காலத்துச் சூழலியல் மற்றும் பறவையியல் அறிஞர்கள் சங்க அகப்பாடல்களில் குறிப்பிடப்படும் பறவைகளை உணர நமக்குத் துணைபுரிகின்றனர். சங்க அகப்பாடல்களில் காணப்படும் குறிப்புகளை கொண்டும் பறவையியலாளர்களின் விளக்கங்களின் வாயிலாகவும் சங்க அகப்பாடலில் சுட்டப்படும் பறவைகளை நாம் அறியாலம்.

**அன்றில்**

சங்க அகப்பாடல்களில் அன்றில் எனும் பறவை பல பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. அன்றில் பறவையின் வாழிடச் சூழல் தெளிவுறச் சுட்டப்பட்டுள்ளது. இது நெய்தற் திணைப் பாடல்களில் மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளது. கடற்கரைப் பகுதியில் பனைமரத்தில் கூடுகட்டி வாழும் சூழல் காட்டப்படுகின்றது. வளைந்த வாயையும் சிவந்த தலையையும் கரிய காலினையும் உடையது என அன்றிலின் உடற்கூறு சுட்டப்படுகின்றது.

''நெருப்பி னன்ன செந்தலை யன்றில்
இறவி னன்ன கொடுவாய்ப் பெடையோடு''[503]

''கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூழ்
வயுவுப்பெடை யகவும்''[504]

''மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில்''[505]

''ஏங்குவயிர் இசைய கொடுவாய் அன்றில்''[506]

ஆகிய பாடலடிகளில் நெருப்பு போன்ற சிவந்த தலையையுடையதும் இறா மீனைப் போல் வளைந்த வாயினை உடையதும் கரிய காலையுடையதுமாகிய அன்றில் என இப்பறவையின் உடலமைப்புகள் சுட்டப்படுகின்றன.

''மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்
துணைபுணர் அன்றில் உயவுக்குரல் கேட்டொறும்''[507]

''மையிரும் பனைமிசைப் பைதல உயவும்
அன்றிலும்''[508]

“மன்றிரும் பெண்ணை மடல்சே ரன்றில்”[509]

எனும் நெய்தற் திணைப் பாடலடிகளில் அன்றிலானது பனைமரத்தில் கூடுகட்டி இருப்பதும் துணையைப் பிரிந்தவழி வருத்தத்தில் கத்துவதும் சுட்டப்படுகின்றது. சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் அன்றில் பறவையின் உடற்கூறுகள், இயல்புகள் வாழிடச் சூழலின் தன்மை ஆகியவற்றைக் கொண்டு ‘அன்றில்’ பறவை என்பது கருப்பு அரிவாள்மூக்கன் எனப்படும் பறவை என்று பறவையிலாளரும் சூழலியல் வல்லுநர்களும் துணிகின்றனர். ஆங்கிலத்தில் இப்பறவையை ‘Black Ibis’ எனக் குறிக்கின்றனர். சங்க அகப்பாடல்களில் காணப்படும் அடையாளங்கள் இப்பறவைக்குப் பொருத்தமாக அமைவது குறிப்பிடத்தக்கது.

**அன்னம்**

அன்னப்பறவை பற்றிச் சில கற்பனையான செய்திகள் உரைகளிலும் இலக்கியங்களிலும் பதிவு செய்யப்பட்டுள்ளன. இக்கற்பனைச் செய்திகள் அன்னம் எனப்படும் பறவையே கற்பனை என எண்ணச் செய்கின்றது. ஆனால் சங்க இலக்கியப் பதிவுகள் யாவும் அன்னத்தை இயல்பான ஒரு பறவை இனமாகவே தெளிவுறக் காட்சிப்படுத்தியுள்ளது. சங்க அகப்பாடல்களைப் பொறுத்தமட்டில் அன்னம் பற்றி எந்தவொரு கற்பனையான தகவலும் பதியப்படவில்லை. பிற்கால உரையாசிரியர்களே சில கற்பனைச் செய்திகளைப் பதிவு செய்துள்ளனர் எனலாம். அன்னப்பறவையானது நீரையும் பாலையும் ஒன்றாகக் கலந்து வைத்தால் நீரை விடுத்து பாலை மட்டும் பிரித்துண்ணும் தன்மையுடையது என்பது அன்னப்பறவை பற்றி உலாவரும் கற்பனைச் செய்தியாகும்.

“ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்

பாலூண் குருகின் தெரிந்து” [510]

எனும் நாலடியார் பாடலடிகளில் நீரொழியப் பால் உண்ணும் குருகு சுட்டப்படுகின்றது. இப்பாடலடிக்கு உரை கண்ட உரைகாரர்கள் ‘குருகு’ எனும் சொல்லிற்கு ‘அன்னப் பறவை’ என உரை கூறுகின்றனர். இச்செயல்பாடே அன்னம் பற்றி கற்பனையான தகவலுக்கு அடிப்படையாயிற்று. சங்க இலக்கியத்தில் எந்தப் பாடலிலும் இத்தகையதொரு கற்பனை சுட்டப்படவில்லை எனலாம். வடமொழியில் இத்தகைய கற்பனைச் செய்தி இருந்ததையும் அதனைப் பின்பற்றியே பிற்காலத்தில் தமிழ் இலக்கியங்களில் சுட்டப்பட்டது என்பதையும் “நீரிலிருந்து பாலைப்பிரிக்கும் தன்மையுடையது என்று பிற்கால நூல்கள் கூறும் செய்திகள் வடமொழியிலிருந்து வந்த செய்திகளாகும்.[511] எனும் கூற்றால் அறியலாம். நீரிலிருந்து பாலைப் பிரித்துண்ணும் தன்மையுடைய உயிரினம் இயற்கையில் இல்லை என்பது அறிவியலாளர்களின் கருத்தாகும். சிலர் ஐரோப்பிய பகுதிகளில் காணப்படும் “Swan” எனும் வாத்து இனத்தை அன்னப்பறவையினம் என்று சுட்டுகின்றனர். ஆனால் இவ்வகைப் பறவையினம் தமிழ்நாட்டிலோ பிற இந்திய பகுதிகளிலோ காணப்படுவதில்லை. இவ்வினத்தில் சில வகை இமயமலைப்பகுதிகளில் அரிதாகக் காணப்படுவதாகவும் கூறுகின்றனர். இந்நிலையில் சங்க அகப்பாடல்களில் அன்னம் பற்றிய

பதிவுகள் புலவர்கள் தம் கண்ணால் கண்டு உணர்ந்து வெளிப்படுத்தியதாகவே தோன்றுகின்றது. காரணம் அன்னப்பறவையின் உடற்கூறு மற்றும் வாழிடப் பகுதிகள் ஆகியன தெளிவுறக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன என்பதுதான். கண்ணால் காணாது இவ்வாறு தெளிவுறக் காட்டுவது இயலாதது. கேள்வியால் மட்டும் கேட்டுணர்ந்த ஒட்டகத்தை அதன் தன்மை அறியாது ஒட்டகம் பாறையின் மீது கிடந்த எலும்பைத் தின்றது எனும் சங்க இலக்கியப்பதிவு இங்கு குறிப்பிடத்தக்கது. ஆனால் அன்னத்தின் பதிவுகள் மிகத் தெளிவானவையாக அமைந்துள்ளன.

‘‘யானே, குறுங்கா லன்னங் குவவுமணற் சேர்க்கும்
கடல்சூழ் மண்டிலம்’’[512]

‘‘நெடுங்கரை யிருந்த குறுங்கா லன்னத்து’’[513]

‘‘துதிக்கா லன்னம்’’[514]

போன்ற பாடலடிகளில் அன்னப் பறவையின் காலமைப்பு தெளிவுறக் காட்டப்பட்டுள்ளது. அன்னப் பறவையின் காலை மேற்கண்ட பாடலடிகள் ‘‘குறுங்கால்’’ எனச் சுட்டுகின்றன. இது அன்னப்பறவையின் ஒட்டுமொத்த உடலமைப்பை நோக்கும்பொழுது அதன் பெரிய உடலுக்குக் குறுகிய கால்கள் அமைந்துள்ளதைச் சுட்டுகின்றது. ‘‘துதிக்கால்’’ என்பது கால் விரல்களுக்கு இடையே காணப்படும் விரலிடைச் சவ்வினைச் சுட்டுகின்றது. இது நீரில் நீந்தக் கூடிய பறவைகளுக்கு அமைந்திருக்கக் கூடிய உடலமைப்பு ஆகும்.

பொதுவாக வாத்தினத்தின் கால்களில் இவ்வாறு விரலிடைச்சவ்வு அமைந்திருப்பது இயல்பானது. இதன் மூலம் அன்னம் நீர்சார்ந்து வாழும் பறவை என்பது அறிவியல் அடிப்படையில் தெளிவாகின்றது. சங்க அகப்பாடல்களில் கடல் பகுதிகளிலும், கரைப் பகுதிகளிலும் அன்னம் இருப்பதாகக் காட்டப்படுவது மேற்கண்ட கருத்தை உறுதிப்படுத்துகிறது.

‘‘நிலந்தாழ் மருங்கின் தெண்கடல் மேய்ந்த
விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்’’[515]

எனும் பாடலடிகளில் செவ்விய காலை உடைய அன்னப்பறவை கடலில் இரை மேய்ந்தது காட்டப்படுகின்றது. அன்னப் பறவை மருத நிலத்தின் பொய்கையிலும், நெல் வயலிலும் இருந்ததை முறையே கலித்தொகை எழுபதாம் பாடல், நற்றிணை எழுபத்துமூன்றாம் பாடல் ஆகியவற்றில் காணலாம். கழிமுகப்பகுதியில் மேய்ந்த அன்னப் பறவை அடும்பங்கொடி படர்ந்த மணல்மேட்டில் தனது சிறகினை உலர்த்தும் காட்சியை,

‘‘நெடுங்கழி துழைஇய குறுங்கால் அன்னம்
அடும்புஅமர் எக்கர் அஞ்சிறை உளரும்
தடவுநிலைப் புன்னைத் தாதணி பெருந்துறை’’[516]

எனும் பாலடிகள் காட்டுகின்றன. அன்னப் பறவைகள் கூட்டமாக வரிசையாகவும் விரைவாகவும் பறக்கும் என்பது

“நிறைபறை அன்னத்து அன்ன விரைபரிப

புல்லுளைக் கலிமா”[517]

எனும் பாடலடிகளில் அன்னப் பறவையின் பறக்கும் தன்மை குதிரைக்கு உவமை கூறுவதிலிருந்து விளங்கும். இவ்வாறு நீரில் நீந்தவும், வானில் நன்கு பறக்கவும் குறுகிய சிவந்த காலையும் உடையதாகிய சங்க அகப்பாடல்களில் சுட்டப்படுகின்ற அன்னப் பறவையின் தன்மைகள் தற்காலத்தில் காட்டுவாத்து என சுட்டப்படும் பறவைக்குப் பொருந்துவதாக அறிஞர்கள் கூறுகின்றனர். இப்பறவையினத்தைத் தாரா எனவும் அழைக்கின்றனர். இதனை “இவை நீரில் நன்கு நீந்துவன. வானில் நன்றாகப் பறக்கவும் கூடியன. இவற்றைத் தமிழ்நாட்டில் தாரா என்றும் காட்டுவாத்து என்றும் அழைப்பர். சங்ககாலத்தில் அன்னமென்று அழைக்கப்பட்ட பறவையினமே சிறிது பிற்காலத்தில் தாரா என்றழைக்கப்பட்டதாகத் தெரிகின்றது”[518] எனும் பி.எல்.சாமியின் கூற்று தெளிவிக்கும். இப்பறவையினம் பெரும்பான்மையும் இமயமலைப் பகுதியில் முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும். தமிழ்நாட்டில் குளிர்காலத்தின் தொடக்கத்தில் வரிசையாக வந்து வெயில் காலத் தொடக்கத்தில் இமயமலைப் பகுதிக்குத் திரும்பும் இயல்புடையன என்கின்றனர் பறவையிலாளர்கள். இத்தகைய அறிவியல்பூர்வமான பதிவினைக் கற்று கற்பனையுடன்

“நிலந்தாழ் மருங்கில் தெண்கடல் மேய்ந்த
விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்
பொன்படு நெடுங்கோட்டு இமையத்து உச்சி
வானர மகளிர்க்கு மேவல் ஆகும்
வளராப் பார்ப்பிற்கு அல்கிரை ஒய்யும்” [519]

எனும் நற்றிணைப் பாடலடிகளில் பரணர் கூறுகிறார். இத்தகைய தன்மையினால் சங்க அகப்பாடல்களில் தாரா எனும் காட்டுவாத்தினமே அன்னம் எனச் சுட்டப்படுவது தெளிவாகின்றது. இதனால் அன்னம் என்பது கற்பனையான பறவையல்ல என்பதும் பிற்காலத்தவரே அன்னம் பற்றிய கற்பனைச் செய்திகளை எழுதினர் என்பதையும் உணரலாம். இந்த அன்னப் பறவை அகநானூற்றின் முப்பத்து நான்காவது பாடலில் ‘எகினம்’ எனச் சுட்டப்படுவதை உரையாசிரியர்களின் உரைவழி அறியலாம்.

**ஆந்தை**

சங்க அகப்பாடல்களில் ஆந்தையினம் சுட்டப்படுகின்றது. ஆனால் ஆந்தை என்ற பெயரில் சுட்டப்படவில்லை. தற்காலத்தில் இவ்வினத்தை ‘ஆந்தை’ என்ற பெயரில் சுட்டுவதால் இங்கும் ஆந்தை என்ற சொல்லே கையாளப்படுகின்றது. பொதுவாக உலகம் முழுவதும் பலவகையான ஆந்தையினங்கள் காணப்படுகின்றன. ‘பறவையியலார் ஆந்தையின் குடும்பத்தைச் சேர்ந்ததாக 50 வகையான ஆந்தைகளைப் பற்றிக் கூறியுள்ளனர். அவற்றுள் தென்னாட்டில் காணப்படுபவை 10 எனலாம்”[520] எனும் கூற்றால் தமிழகப் பகுதியில் பத்துவகையான ஆந்தையினங்கள் காணப்படுவதை அறியமுடிகின்றது. ஆண்டலைப்புள், குடிஞை, குரால், கூகை என்றும் பெயர்களில் சங்க அகப்பாடல்களில்

ஆந்தையினம் சுட்டப்படுகின்றது. ஆண்டலைப்புள், குடிஞை, கூகை என்பன தனித்தனி வகை ஆந்தையினப் பறவைகள் என அறிஞர்கள் விளக்கியுள்ளனர்.

சங்கப் பாடல்களில் ஆண்டலை எனும் ஆந்தை வகை பற்றிய செய்திகள் விளக்கமாக இல்லை. எனினும் ஆட்டலைப்புள் என்பது ஆந்தையினம் என அறிஞர்கள் நிறுவியுள்ளனர்.

> ‘‘அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவும்’’[521]

எனும் பட்டினப்பாலை அடியில் ஆண்டலைப் பறவையானது கூகையுடன் விளிப்பதாகச் சுட்டப்பட்டுள்ளது. பி.எல்.சாமி தமது நூலில் ஆண்டலை என்பது கூகையைச் சுட்டுவதைாக விளக்கியுள்ளார்[522]. மேற்கண்ட பாடலடியில் கூகையொடு சேர்ந்து ஆண்டலை கூப்பிடுகிறது என்ற விளக்கம் பெறப்படுதலின் கூகையும் ஆண்டலைப்புள்ளும் வேறு வேறு என்று தோன்றுகின்றது. க. ரத்னம் ஆண்டலைப்புள் என்பது ஆந்தையினத்தில் ஒன்றாகிய ‘‘Short-eared owl’ எனும் ஆந்தை என விளக்குகின்றார்[523]. மேலும் அவர் ‘‘அஞ்சத்தக்க வகையில் தொடர்ந்து குரல் கொடுக்கும் பழக்கம் இதனிடத்து இல்லை என்று பறவையியலாளர் தெரிவிக்கின்றனர்’’[524] என்கிறார். இங்கு அழுவது போன்று குரலையுடைய கூகை எனவும் விளிக்கும் தன்மையில் அமைந்த ஆண்டலையின் குரலையும் பட்டினப்பாலை சுட்டுவது எண்ணற்பாலது. பொதுவாக சங்க இலக்கியத்தின் ஆண்டலைப்புள் குறித்த விளக்கமற்ற பதிவினைக் கொண்டு சரியாக இப்பறவைதான் ஆண்டலைப்புள் எனக் கூறவியலாத நிலையில் அறிஞர்கள் தத்தமது கருத்தின் அடிப்படையில் இப்பறவையைப் பற்றி விளக்குகின்றனர்.

குடிஞை எனப்படும் ஆந்தை வகை சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. குடிஞை என்பதற்கு உரையாசிரியர்கள் பேராந்தை என உரைகூறுகின்றனர். சங்க அகப்பாடல்களில் குடிஞையின் வாழ்விடம் அது கத்தும் தன்மை ஆகியன சுட்டப்பட்டுள்ளன.

> ‘‘நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டுங்
> குன்றுபின் ஒழியப் போகி’’[525]
>
> ‘‘கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்றம்’’[526]
>
> ‘‘உருத்தெழு குரல குடிஞைச் சேவல்
> புல்சாய் விடரகம் புலம்ப வரைய
> கல்லெறி இசையின் இரட்டும்’’[527]
>
> ‘‘மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
> அலந்தலை ஞெமையத்து இருந்த குடிஞை’’[528]

போன்ற பாடலடிகளில் குடிஞையானது மலைப்பகுதியில் அடர்ந்த காட்டுப்பகுதியில் இருப்பது காட்டப்படுகின்றது. மேற்கண்ட பாடலடிகளிலும் ஐங்குறுநூற்றின் இருநூற்றித் தொண்ணூற்றொன்றாவது பாடலிலும் குடிஞை கத்துவதை ‘‘இரட்டும்’’ எனக் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது. சங்கப்பாடல்களில் காணப்படும் இத்தகைய விளக்கங்கள் மேற்கு

கிழக்கு தொடர்ச்சிமலை சார்ந்த பசுமை மாறா அடர்காடுகளில் காணப்படும் பெரிய காட்டு ஆந்தைக்குப் பொருந்திவருவதாகவும் இதன் குரல் பற்றி சங்கப் புலவர்கள் கூறுவது அவர்கள் இவ்வாந்தையின் கத்தும் தன்மையை நுட்பமாக ஆய்ந்து கூறுயிருப்பதாகவும் க. ரத்னம் கூறுகின்றார்[529]. இவ்வாந்தையினத்தைப் பறவையியலாளர்கள் 'Forest Eagle owl' எனச் சுட்டுகின்றனர்.

கூகை எனச் சுட்டப்படும் ஆந்தையினம் பற்றியும் சங்க அகப்பாடல் பதிவுகள் காணப்படுகின்றன. 'கூகை' எனும் சொல் தற்காலத்திலும் பொதுமக்களிடம் வழக்கத்தில் இருந்துவருவது குறிப்பிடத்தக்கது. எனினும் பொதுவாக ஆந்தையைச் சுட்டும் வகையிலேயே சுட்டப்பட்டு வருகின்றது எனலாம். கூகையைப் பறவையிலாளர்கள் 'Barn owl' என ஆங்கிலத்தில் சுட்டுகின்றனர். கூகைவகை ஆந்தைகள் பற்றிய சங்க அகப்பாடல் பதிவுகளை

''தேயா வளைவாயத் தெண்கண் கூருகிர்
வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை'' [530]

''பாராறை வேம்பின் படுசினை யிருந்த
குராஅல் கூகையும் இராஅ இசைக்கும்'' [531]

''மணல்மலி மூதூர் அகல்நெடுந் தெருவில்
கூகைச் சேவல் குராலோடு ஏறி
ஆரிருஞ் சதுக்கத்து அஞ்சுவரக் குழரும்'' [532]

''குன்றக் கூகை குழறினும்'' [533]

''இல்எலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தமிதகக் குழறும்'' [534]

''மன்ற மராஅத்த கூகை குழறினும்'' [535]

''வளைவாய்க் கூகை நன்பகற் குழறவும்''[536]

முதலிய பாடலடிகளில் காணலாம். வளைந்த வாய், கூர்மையான நகம் போன்ற கூகையின் உடற்கூறுகள் இவ்வடிகளில் சுட்டப்பட்டுள்ளன. கூகை கத்தும் ஒலியினை 'குழறுதல்' எனச் சுட்டுகின்றன. குன்றப் பகுதியிலும் சதுக்கத்திலும் ஊர்ப் பொதுவிடமாகிய மன்றத்தின்கண் உள்ள மரத்திலும் கூகை தங்கியிருப்பது சுட்டப்பட்டுள்ளது. 'குராஅல் கூகையும்' எனும் சொல் குராலாகிய கூகை எனப் பொருள்படும்படி வருகின்றது. இது இரண்டு ஒரே இனப்பறவை என்பதுபடத் தோன்றுகின்றது. தனித்தனிப் பறவையினம் எனில் 'குராலும் கூகையும்' என இருபெயரிலும் உம்மை பெற்று வந்திருக்கும் எனத் தோன்றுகிறது. கூகையையும் குராலையும் ஒரே இனமாகவும் கூகையின் பெண்பால் குரால் எனவும் சுட்டப்படுகின்றது. இதனை ''கூகையும் ஆணும் பெண்ணும் இணையாக வாழ்பவை என்பதையும் பெண் கூகைக்கு குரால் என்ற வழக்கு உண்டு என்பதையும் தெளியலாம்''[537] எனும் கூற்றால் அறியலாம். 'கூகைக் சேவல் குராலோடு ஏறி' எனும் தொடரில் கூகையும்

குராலும் தனித்தனியாகப் பிரித்துச் சுட்டப்பட்டுள்ளது. மூதூரின் அகன்ற நெடுந்தெருவின் சதுக்கத்தில் கூகைச் சேவலும் குராலும் இருப்பது சுட்டப்பட்டுள்ளது. பிற சங்க இலக்கியப் பாடல்களிலும் குராலும் கூகையும் சேர்ந்தே சுட்டப்பட்டுள்ளது. சிலர் கூகையின் பெண்பால் குரால் எனச் சுட்டுகின்றனர். ஆனால் பி.எல்.சாமி மக்கள் வாழிடங்களுக்கருகில் கூகையினத்துடன் குரால் என்ற தனிவகை ஆந்தை சேர்ந்து காணப்படுவதாகவும் அனாலேயே குராலும் கூகையும் சேர்ந்து சுட்டப்பட்டதாகவும் தமது நூலில் விளக்குகின்றார்.[538] இவர் அகநானூற்றின் இருநூற்றிபத்தைந்தாவது பாடலில் சுட்டப்படும் ‘‘குடுமிக் குரால்’’ எனும் தொடர்கொண்டு குடுமி போன்ற இறகுத் தொகுப்பு இருப்பதாகக் காட்டி கூகையினின்று வேறுபடுத்துகிறார். இதனை ‘‘தலையில் இரண்டு சிறு கொண்டைகள் உண்டு. ஆனால் கூகைக்கு இத்தகைய குடுமிகள் கிடையா’’[539] எனும் அவரது கூற்றால் அறியலாம். மேலும் ‘‘குடுமிக் கூகை குராலொடு முரல’’[540] எனும் அடியில் வரும் ‘குடுமிக் கூகை’ பற்றிக் கூறும் பொழுது ‘குடுமியுடைய குராலாகிய கூகை’[541] என இரண்டும் ஒரு இனப்பறவைபோல் கூட்டுவது மயக்கத்தைத் தருகின்றது எனலாம். குரால் என்பதை The Collared Scops Owl என்று பறவை நூலார் சுட்டுவதாகக் கூறுகின்றார். சங்க அகப்பாடல்களைப் பொருத்தமட்டில் கூகை, குரால் என்பனவற்றை தெளிவுற வேறுபடுத்தும் அளவிற்கு ‘பெயர்’ தவிறப் போதுமான விளக்கம் இல்லை என்றே தோன்றகின்றது. பறவையியலாளர்கள் தங்கள் ஆங்கிலப் பெயர்சுட்டும் விதத்தில் வேறுபடுத்துகின்றனரே தவிர சங்க இலக்கியத்தின் வழி விளக்கமளிப்பதில் இடர்படுவதாகத் தோன்றுகின்றது. இது நமது சூழலில்வாழும் உயிரினம் பற்றிய மரபார்ந்த அறிவின் குறைபாடாகவே அமைகின்றது. குறுந்தொகை இருநூற்று இருபத்து நான்காம் பாடலில் ஆந்தையினத்தின் ஒருவகையான ‘ஊமன்’ ஆந்தை குறிப்பாகச் சொல்லப்படுவதும் குறிப்பிடத்தக்கது. இக்குறிப்பின்றி வேறு எவ்வகை விளக்கமோ பெயரோ ஊமன் ஆந்தை பற்றி சங்க அகப்பாடல்களில் இடம்பெறவில்லை.

**எழால்**

சங்க அகப்பாடல்களில் எழால் எனும் பறவை பற்றிய செய்தி குறைவாகவே காணப்படுகின்றது. இப்பறவை பற்றி அதிகப்படியான விளக்கங்கள் ஏதுமில்லை. பறவைகளைத் தாக்கி இறையாக்கிக் கொள்ளும் தன்மை சுட்டப்படுகின்றது. இதனை,

‘‘வங்காக் கடந்த செங்காற் பேடை
எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணாது’’[542]

‘‘நிழலறு நனந்தலை யெழாலேறு குறித்த
கதிர்த்த சென்னி நுணங்குசெந் நாவின்
விதிர்த்த போலும் அந்நுண் பல்பொறிக்
காமர் சேவல்’’[543]

எனும் பாடலடிகளால் அறியலாம். இப்பாடலடிகளில் எழாலின் உடற்கூறு மற்றும் வாழிடம் பற்றிய தெளிவு இல்லை. வங்காப் பறவையையும் காட்டுச் சேவலையும் வானிலிருந்து

வீழ்ந்து அடிக்கும் தன்மை சுட்டப்படுவதைக் கொண்டு இப்பறவை எது என இனம் கண்டுள்ளனர். பறவையியலாளர்கள் எழாலை ஆங்கிலத்தில் "Falcon" எனக் குறிக்கின்றனர். 'எழாலுற வீழ்ந்தென' எனும் தொடர் எழால் பறவை இறைகொள்ளும் தன்மையைத் தெளிவுறக் காட்டுகின்றது எனலாம். வானில் வட்டமிட்டுப் பறந்து தனக்குரிய இரையைக் கண்டவுடன் இரையை நோக்கி தனது சிறகுகளை மடக்கிக்கொண்டு இறைமீது விழுவதுபோல பாய்ந்து அதனைப் பிடிக்கும். இது இப்பறவைக்கேயான வேட்டையாடும் முறையாகும். பறவைகளை வேட்டையாடி உண்ணும் தன்மை, வேட்டை முறைமை ஆகிய குறிப்புகளைக் கொண்டு இப்பறவை இனம்காணப்பட்டுள்ளது.

**கணந்துள்**

தற்காலத்தில் 'ஆள்காட்டி குருவி' எனச் சுட்டப்படும் பறவையைச் சங்க அகப்பாடல்கள் 'கணந்துள்' எனச் சுட்டுகின்றன. கணந்துள் பற்றி அதிகப்படியான பாடல்களில் சுட்டப்படவில்லையென்றாலும் இது இடம்பெறும் இருபாடல்களில் இது தெளிவுறக் காட்டப்பட்டுள்ளது.

"பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்கால் கணந்துளம் புளம்புகொள் தெள்விளி
சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்" [544]

"ஆற்றய லிருந்த விருந்தோட் டஞ்சிறை
நெடுங்காற் கணந்து ளாளறி வுறீஇ
ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்
மலையிடைக் கான நீந்தி"[545]

மேற்கண்ட பாடலடிகளில் "நெடுங்கால்" எனச் சுட்டப்படுவதைக் காணலாம். ஆட்காட்டி பறவை நீண்ட காலைக் கொண்டது எனும் பறவையிலாளரின் கருத்தை இது ஒத்திருக்கின்றது. நாம் இப்பறவையை நேரடியாகப் பார்க்கும் பொழுது இப்பொருத்தத்தை உணர முடியும். 'புளம்புகொல் தெள்விளி', 'ஆளறி வுரீஇ' எனும் தொடர்கள் கணந்துட் பறவையின் இயல்பினை உணர்த்துவதாக அமைகின்றது. இப்பறவை தான் இருக்கும் இடங்களில் ஆட்கள் நுழையும் பொழுது சத்தமிட்டுக் கத்தியபடி தான் இருக்கும் இடத்திலிருந்து மேலெழுந்து வட்டமிட்டுப் பறக்கும் இயல்புடையது. இப்பறவை இவ்வாறு சத்தமிட்டுப் பறப்பதைக் கொண்டு அவ்விடத்தில் ஆட்கள் இருப்பதைத் தெரிந்து கொள்ளலாம். இத்தகைய காரணத்தினாலேயே 'கணந்துள்' எனும் இப்பறவை 'ஆட்காட்டி குருவி' எனச் சுட்டப்படுவதை உணரலாம். மேற்கண்ட பாடலடிகள் இருவேறு இயற்கைச் சூழலை நமக்குக் காட்டுகின்றன. ஒன்று வேடுவர்கள் வலைவிரித்த சுரமாகிய பாலை நிலம். மற்றொன்று ஆறு அமைந்த மலைப்பகுதிக் காட்டு நிலம். இவ்விருவகைச் சூழலிலும் இருவேறு கணந்துள் பறவை வாழும் என்கின்றனர் பறவையியலாளர்கள். வறட்சியான பாலை நிலத்தில் 'மஞ்சள் மூக்கு ஆட்காட்டி' எனும்வகைப் பறவையும் நீர்நிலைச் சூழலாகிய குளம், குட்டை, ஆறு ஆகியன அமைந்த பகுதிகளில் 'சிவப்பு

ஆட்காட்டி’ காணப்படும் என்கிறனர். அவ்வகையில் முதலாவதாகக் காட்டப்பட்ட நற்றிணைப் பாடலடியில் மஞ்சள் மூக்கு ஆட்காட்டியும் அடுத்ததாக அமைந்த குறுந்தொகைப் பாடலில் ‘சிவப்பு’ ஆட்காட்டியும் சுட்டப்படுவதை, அவை காணப்படும் சூழலைக் கொண்டு நாம் உய்த்துணரலாம்.

**கம்புள்**

நீர்நிலைகளில் வாழக்கூடிய கம்புள் பறவை பற்றிய குறிப்புகள் ஐங்குறுநூறு மற்றும் அகநானூற்றில் காணப்படுகின்றன. உரையாசிரியர்கள் இதனைச் சம்பங்கோழி எனச் சுட்டுகின்றனர். கம்புள் என்பது பழைய வழக்கு என்றும் சம்பங்கோழி என்பது பிற்காலவழக்கு என்றும் அறிஞர்கள் விளக்கியுள்ளனர். சம்பங்கோழி பற்றிய பதிவுகளை,

“பழனக் கம்புள் பயிர்பெடை யகவுங்
குழனி யூரநின் மொழிவ லென்றும்” [546]

“வெண்ணுதற் கம்பு ளிரிகுரற் பேடை
தண்ணறும் பழனத்துக் கிடையோ டாலு” [547]

“கம்புள் இயவன் ஆக விசிபிணித்
தெண்கட் கிணையிற் பிறழும் ஊரன்” [548]

எனும் பாடலடிகளின் வாயிலாகக் காணலாம். இப்பாடலடிகள் யாவும் மருதத்திணையில் அமைந்த பாடலடிகள் ஆகும். நீர்நிலைப் பகுதிகள் கம்புட்பறவை காணப்படும் பகுதிகளாக இப்பாடல்களில் காட்டப்பட்டுள்ளன. இது நீர்வாழ் பறவை என்பதைக் காட்டுகின்றது. கம்புற்கோழி எனவும் இதனைச் சுட்டுவர். ‘வெண்ணுதற் கம்புள்’ எனும் தொடர் வெண்மை கலந்த இதன் நெற்றிப் பகுதியைச் சுட்டுகின்றது. குளம், குட்டை, நீர் ஓடுகின்ற பள்ளம் போன்றவற்றில் காணப்படும் நீர்த்தாவரத் தொகுப்பிற்குள்ளிருந்து தொடர்நது சத்தமெழுப்பிக்கொண்டிருக்கும் இதனை கிராமப்புற மக்கள் ‘கானாங்கோழி’ என்று அழைப்பதைக் காணமுடிகின்றது. நீர் நிறைந்திருக்கும் நெல்வயற் பகுதிகளிலும் இதனைக் காணமுடியும். இதே போன்று நீலக்கோழி என்றும் நீர்க்கோழி என்றும் அழைக்கப்படும் பறவையை “நீருறைக் கோழி நீலசேவல்”[549] எனும் ஐங்குறுநூற்றுப் பாடலடி காட்டுகின்றது. இதுவும் நீர்நிலைக்கண் காணப்படுவதாகும்.

**காக்கை**

காக்கை இனத்தில் இருவகைக் காக்கைகளை நாம் நமது சுற்றுப்புறங்களில் காணமுடியும். அண்டங்காக்கை ஒன்று, மற்றொன்று ஊர்க்காக்கை எனச் சுட்டப்படுகின்றது. கொங்குநாட்டுப் பகுதியில் அண்டங்காக்கையைப் “பெருந்தலைக் காக்கை” எனச் சுட்டுவதைக் காணமுடிகின்றது. பெருந்தலைக் காக்கை என்பதற்குத் தகுந்தாற்போல் ஊர்க் காக்கையை ஒப்பிடும்போது இதன் தலை பெரிதாகவும் நல்ல கரிய நிறத்திலும் காணப்படுகிறது. இதன் கருமை செறிவாக வெய்யில்படும் பொழுது சற்று மின்னுவது போன்று தெரியும். அதன் அலகு பெரிதாக நன்கு கருத்து வெளியில் படும்போது சற்று

பளபளப்பாகத் தோன்றும் தன்மையுடன் காணப்படும். இதன் கண்களும் நன்கு கருத்து மணிபோன்று விளங்கித் தோன்றுவதாகக் காணப்படும்.

> ''பச்சிறாக் கவா்ந்த பசுங்கண் காக்கை'' [550]
>
> ''மணிவாய்க் காக்கை மாநிறப் பெருங்கிளை'' [551]
>
> ''மைந்நிற உருவின் மணிக்கட் காக்கை
> பைந்நிணங் கவரும் படுபிணக் கவலை'' [552]

எனும் பாடலடிகள் அண்டக்காக்கையைச் சுட்டுவதாகத் தோன்றுகின்றது. ஊர்ப்புறமல்லாது பாலை நிலத்தின் காட்டுப்பகுதியில் இறந்த உடல்களை உண்டுவாழும் மைந்நிறமாகிய அண்டங்காக்கையை மேற்கண்ட பாடலடி காட்டுகின்றது. ஊர்க் காக்கையானது அண்டங்காக்கையுடன் ஒப்பிடும்பொழுது உடல் சற்று சிறியதாகவும், கரிய நிறத்துடனும், கழுத்துப்பகுதி சாம்பல் நிறத்துடனும் காணப்படும். இது நமது வீட்டின் சுற்றுப்புறப் பகுதிகளில் எளிதாகக் காணும்படி சுற்றித் திரியும் காக்கையினமாகும். இச்சிறிய காக்கை நம் வீட்டுப்பகுதியில் தொடர்ச்சியாக கரைந்தால் விருந்தினா் வருகை உண்டு எனும் நம்பிக்கை சங்ககாலம் முதல் இருந்து வருவதை,

> ''மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
> யன்புடை மரபினின் கிளையோ டாரப்
> பச்சூன் பெய்த பைந்நின வல்சி
> பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
> வெஞ்சின விறல்வேற் காளையொ
> டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே''[553]

எனும் பாடல் வழி அறியலாம். இப்பாடலில் சுட்டப்படும் 'சிறுகருங் காக்கை' என்பது ஊர்க்காக்கையைச் சுட்டுகின்றது என்பது விருந்துவரக் கரையக் கூறுவதன் மூலம் அறியலாம். இதுபோன்று அண்டங்காக்கை, ஊர்க்காக்கை பற்றிய பொதுவான சில பதிவுகளைச் சங்க அகப்பாடல்களில் காணமுடிகின்றது.

**கிளி**

சங்க அகப்பாடல்களில் கிளி பற்றிய பல பதிவுகள் காணப்படுகின்றன. கிளியின் பசிய நிறம், வளைந்த சிவந்த அலகின் தன்மை, கிளியின் விளி, அது காணப்படும் சோலை கானகம், திணைப்புனம் போன்ற பல திறப்பட்ட தகவல்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. கிளியினமானது பொதுவாகப் பாசினம் எனச் சுட்டப்படுவதை நற்றிணையின் இருநூற்றாவது பாடலில் காணமுடிகின்றது.

> ''தோடுதலை வாங்கிய நீடுகுரல் பைந்தினை
> பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்'' [554]
>
> ''சிறுகிளி முரணிய பெருங்குரல் ஏனல்'' [555]
>
> ''சோலைச் சிறுகிளி'' [556]
>
> ''பைம்புறச் சிறுகிளி'' [557]

“சேடியல் வள்ளத்துப் பெய்தபால் சிலகாட்டி

ஊடுமென் சிறுகிளி உணர்ப்பவள்” [558]

போன்ற பாடலடிகளின் வாயிலாகக் கிளியின் உடற்கூறு பற்றிய பதிவுகளையும், வேளாண் நிலங்களில் கிளிகள் பயிர்களை சேதப்படுத்தும் தன்மையையும், கிளியை வளர்ப்பயிரியாகக் கொண்டு வளர்க்கும் தன்மையையும் காணமுடிகின்றது. கிளியினத்தில் ஆண்பாற் கிளிக்குக் கருத்துப் பகுதியில் காணப்படும் செம்மைநிற மாலைபோன்ற வரியினைக் கண்டு உணர்ந்திருந்த சங்கப் புலவோர் அதனை “செந்தார்க் கிள்ளை”[559] என்றும் “செந்தார்ப் பைங்கிளி”[560] என்றும், “செந்தார்கிளி”[561] என்றும் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிகின்றது. ஆண்கிளியின் கழுத்தில் காணப்படும் செவ்விய வளையம் மாலை போன்று காணப்படுவதால் அதனை ‘செந்தார்’ எனச் சுட்டுகின்றனர். இது சிறு உயிரினத்தையும் நுணுகிநோக்கிய சங்கச் சான்றோரின் அறிவிற்குச் சான்றாக அமைகின்றது எனலாம்.

**குருகு**

சங்க அகப்பாடல்களில் ‘குருகு’ என்ற சொல்லானது சில இடங்களில் பொதுவாகப் பறவையினத்தைச் சுட்டுவதாக அமைவதைக் காணமுடிகின்றது. உரையாசிரியர்கள் குருகு என்பதற்குப் பல இடங்களில் அன்னம், நாரை என உரைகூறியுள்ளனர். ஆனால் குருகு என்று சங்க இலக்கியத்தில் சுட்டப்படும் பறவை தற்காலத்தில் “கூழைக்கடா” என அழைக்கப்படும் பறவையினத்தைக் குறிப்பதாகப் பி.எல்.சாமி கூறுகின்றார்.[562] குறுகிய வால் பகுதி குட்டையான கால்பகுதி, பெரிய உடல்பகுதியுடன் காணப்படும். பெரிய உடலின் குறுகிய கால்களுடன் காணப்படுவது இதனை ‘கூழைக்கடா’ எனச் சுட்டக் காரணமாகியது எனலாம். சங்க அகப்படால்களில் குருகு எனச் சுட்டப்படும் பறவையினங்களில் கூழைக்கடாவாகிய குருகினம் நீரில் நீந்தும் தன்மையைப் பெற்றதாகும். இந்தன்மையை

“காந்து செலற் கனலி கல்பகத் தெறுதலின்

நீந்து குருகுருகும்”[563]

எனும் அகநானூற்றுப் பாடலடிகளின் மூலம் அறியலாம். கூழைக்கடாவாகிய குருகினமானது நீர்நிலைகளில் கூட்டமாக இருந்து இரைகளைத் தேடி உண்ணும். இத்தன்மையை நற்றிணைப் பாடலானது,

“உரையாய் வாழி தோழி இருங்கழி

இரையார் குருகின் நிரைபறைத் தொழுதி”[564]

எனக் காட்சிப்படுத்தப்படுகின்றது. மருதம், நெய்தல் ஆகிய நிலப்பகுதிகளில் குருகினம் சுட்டப்பட்டிருப்பினும் நெய்தல் நிலத்தில் மிகுதியும் சுட்டப்பட்டுள்ளது. கழிமுகத்தில் இரையை உண்ட குருகு புன்னை, பனை போன்ற மரங்களில் தங்கிருந்ததைச் சங்க அகப்பாடல்கள் பல காட்டுகின்றன. கூழைக்கடாவிலிருந்து வேறுபட்ட நீர்நிலைப் பகுதிகளில் காணப்படும் குருகினத்தை,

"இரும்புலா அருந்துநின் கிளையொடு சிறிதிருந்து
கருங்கால் வெண்குருகு"[565]

"இறவருந்தி யெழுந்த கருங்கால் வெண்குருகு"[566]

"கழிதேர்ந் தசைஇய கருங்கால் வெண்குருகு"[567]

"இரைதேர் வெண்குருகு அஞ்சி"[568]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. வெண்மை நிறத்தையும் கரிய நிறக்காலினையும் உடைய பறவையினம் இப்பாடல்களில் 'வெண்குருகு' எனச் சுட்டப்படுவதைக் கரிய காலையுடைய பெரிய வெள்ளைக் கொக்கையே வெண்குருகு எனும் சங்க இலக்கியப் பெயர் சுட்டுவதாக அறிஞர்கள் கூறுகின்றனர். சங்க அகப்பாடல்களில் இது கூட்டமாக இல்லாமல் தனிப்பறவையாகக் காணப்படுவது பதிவு செய்யப்பட்டுள்ளது.

வெள்ளாங்குருகு எனும் குருகினம் சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. தற்காலத்தில் காணப்படும் சிறிய வெள்ளைக் கொக்கை இவ்வெள்ளாங்குருகு எனும் பறவைப் பெயர் குறிப்பதாக அறிஞர்கள் கூறுகின்றனர். நற்றிணையின் எழுபதாவது பாடலிலும் ஐங்குநுறூற்றின் 'வெள்ளாங்குருகுப் பத்து' பாடல்களிலும் வெள்ளாங்குருகு குறிப்பிடப்படுகின்றது.

**குருவி**

பறவையினங்களில் அளவில் சிறியனவாகிய குருவியினங்கள் பற்றிய பதிவுகளும் சங்க அகப்பாடலகளில் காணப்படுகின்றன. நமது வீட்டுப்பகுதியில் காணப்படும் சிட்டுக்குருவி, தூக்கணாங்குருவி காடு மற்றும் மலைப்பகுதியில் காணப்படும் தினைக்குருவி ஆகிய குருவியினங்கள் காட்டப்படுகின்றன. சிட்டுக் குருவிகள் மனிதர்களின் வாழ்விடப்பகுதிகளில் அவர்களின் வீட்டின் தாழ்வாரங்கள் மற்றும் வீட்டின் வெளியே தமக்கு வசதியான இடங்களில் கூடுகட்டி வாழ்வதைக் காணமுடியும். இதனைச் சங்க அகப்பாடல்கள் 'உள்ளூர்க் குருவி' எனச் சுட்டுவதை

"உள்ளிறைக் குரீஇக் காரணல் சேவல்"[569]

"ஆம்பற் பூவின் சாம்ப லன்ன
கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ
முன்றி லுணங்கன் மாந்தி"[570]

"உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்"[571]

ஆகிய பாடலடிகளான் அறியலாம். மனிதர்களின் வாழ்விடப் பகுதிகளில் அவர்களைச் சார்ந்து வாழும் சிட்டுக்குருவியின் தன்மையை 'முன்றில் உணங்கல் மாந்தி' எனும் தொடர் காட்டுகின்றது. தூக்கணாங் குருவியானது தூங்கணங் குருவி என்றும் முதுக்குறை குருவி என்றும் சுட்டப்படுகின்றது. தூக்கணாங் குருவியின் வியக்கதக்க 'கூடு', அது பனைமரத்தில் காணப்படுவது ஆகியன சுட்டப்பட்டுள்ளன.

"முடங்க லிறைய தூங்கணங் குரீஇ

நீடிரும் பெண்ணைத் தொடுத்த
கூடினு மயங்கிய மைய லூரே"[572]

"………….. கரும்பின்
வேல்போல் வெண்முகை பிரியத் தீண்டி
முதுக்குறை குரீஇ முயன்றுசெய் குடம்பை"[573]

போன்ற பாடலடிகளில் தூக்கணாங்குருவி, அதன் கூடு, கூட்டினை அமைத்த முறை ஆகியன காட்டப்படுகின்றன. மலைப்பகுதிகளிலும் காட்டுப்பகுதிகளிலும் கம்பு, சோளம், தினை போன்ற பயிர் நிலங்களில் தானியங்களைச் சேதப்படுத்தி உண்ணும் குருவிவகையான தினைக்குருவியானது,

"இருவி யிருந்த குருவி"[574]

"………… மாமலைப்
பரீஇ வித்திய வேனற்
குரீஇ யோப்புவாள்" [575]

"உளைக்குரற் சிறுதினை கவர்தலிற் கிளையமல்
பெருவரை யடுக்கத்துக் குரீஇ ஓப்பி" [576]

எனும் பாடலடிகளில் சுட்டப்பட்டுள்ளது. விளைநிலத்தில் மலையுறை குருவியாகிய தினைக்குருவிகளை ஓட்டுவது மனிதர்க்குத் தனியான வேலையாகவே அமைந்துள்ளதையும் இப்பாடலடிகளின் வழி அறிய முடிகின்றது.

**குயில்**

சங்க அகப்பாடல்கள் பலவற்றில் குயில் பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன. குயிலினத்தில் ஆண்குயிலானது நல்ல கரிய நிறத்துடன் சிவந்த கண்களுடன் காட்சிதரும். பெண் குயிலானது கரிய நிறத்துடன் வெள்ளிய பொறிகளுடன் காணப்படும். சங்க அகப்பாடல்களில் ஆண்குயிலே மிகுதியும் சுட்டப்பட்டுள்ளன. ஆண்குயிலின் கரிய நிறமும் சிவந்த செங்கண்ணும் பலபாடல்களில் சுட்டப்பட்டுள்ளன. இதனை,

"செங்கண் இருங்குயில் எதிர்குரல் பயிற்றும்"[577]

"பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்"[578]

"செங்க ணிருங்குயி லறையும் பொழுதே"[579]

"மாநனை கொழுதிய மணிநிற இருங்குயில்"[580]

"விரிகாஞ்சித் தாதாடி இருங்குயில் விளிப்பவும்"[581]

எனும் பாடலடிகளால் அறியலாம். இங்கு இருங்குயில் என்பது கரிய குயில் என்பதைக் காட்டுகின்றது. குயில் கத்துவது அழைப்பதுபோல் இருப்பதை 'விளிப்ப' எனும் சொல் விளக்குகின்றது. குயில்கள் தங்கும் இடமான சோலை, மாமரம் போன்றவை காட்டப்படுகின்றன. ஆண்குயிலின் உடற்கூறு தெளிவுறக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**கொக்கு**

கொக்கு என்பது நாட்டுப்புறமக்கள் நன்கறிந்த பறவையினமாகும். இது அடிப்புறம் தூய வெண்மை நிறத்திலும் மேற்புறம் பழுப்பு நிறமாகவும் காணப்படும். கொக்கின் நிறத்தினை,

‘‘மாரி யாம்ப லன்ன கொக்கின்
பார்வ லஞ்சிய பருவர லீர்ஞெண்டு’’[582]

‘‘மாரிச் சுதையின் ஈர்ம்புறத் தன்ன
கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்’’[583]

எனும் பாடலடிகள் உவமையின் வாயிலாக விளக்குகின்றன. மழையில் நனைந்த ஆம்பற்பூவானது வெண்மை மங்கி பழுப்பு நிறத்தில் தோன்றும். மலையில் நனையப்பெற்ற வெண்சுதை பூசப்பட்ட சுவர் மஞ்சள் கலந்து வெண்மை நீங்கி பழுப்பு நிறத்தில் காணப்படும். இவ்விரு உவமைகளும் கொக்கின் பழுப்பு நிறத்தை நமக்கு விளக்குகின்றன.

‘‘……………….. வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூரலகு’’[584]

‘‘செவ்வாய் வானந் தீண்டிமீன் அருந்தும்
பைங்காற் கொக்கின் நிரைபறை யுகப்ப’’[585]

‘‘குடுமிக் கொக்கின் பைங்காட் பேடை’’[586]

ஆகிய பாடலடிகளில் கொக்கின் கால் பசிய நிறத்தில் இருக்கும் என்பது சுட்டப்படுகின்றது. கொக்கின் கால்களில் கூரிய வலிய நகம் இருக்கும் என்பது ‘வள்ளுகிர்’ எனும் பதத்தால் விளங்கும். கொக்கு நீர்நிலைப்பகுதியில் மீன்களை உண்பதும் கூட்டமாகப் பறப்பதும் சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளன.

**கோழி**

தற்காலத்தில் ‘கோழி’ என்பது நமது வீட்டில் வளர்க்கும் கோழி, உணவாக உண்ணும் கோழியைக் குறிப்பதாக அமைகிறது. கோழி இனத்தில் பலவகைக் கோழிகள் இருப்பினும் ‘கோழி’ என்ற பதம் வளர்ப்புக் கோழியைச் சுட்டுவதாக அமைவது குறிப்பிடத்தக்கது. கோழியினத்திற்குத் தாயகம் இந்தியாவாகும். இந்நிலையில் கோழிவளர்ப்பானது பழமை வாய்ந்த இலக்கியமான சங்க இலக்கித்தில் பதிவாகியுள்ளது சிறப்பிற்குரியதாகும். இந்தியாவிலிருந்த கோழியினத்திலிருந்துதான் உலகில் காணப்படும் பல்வகைக் கோழியினங்களும் தோன்றின. இதனை,‘‘இந்தியாவில்தான் முதன் முதலில் கோழி மனிதரால் பழக்கப்படுத்தப்பட்டது என்றும், இங்குள்ள Red Jungle Fowl என்ற காட்டுக் கோழியிலிருந்துதான் உலகிலுள்ள எல்லாக் கோழியினங்களும் தோன்றின என்று உயிரியலாளர்கள் கூறுகின்றனர்’’[587] எனும் கருத்தால் அறியலாம். சங்க அகப்பாடல்களில் கோழி ‘வாரணம்’ என்ற பெயரிலும் சுட்டப்பட்டுள்ளது. கோழி, வாரணம் என்பன

பொதுப்பெயராகவும் சேவல் என்பது கோழியின் ஆண்பாலைக் குறித்தும் வருகின்றது. கோழியினம் சங்ககாலத்தில் இல்லங்களில் வளர்க்கப்படதை

''மனையுறை கோழி குறுங்காற் பேடை''[588]

''மனைச்செறி கோழி மான்குரல் இயம்பும்''[589]

''மனையுறை கோழி அணல்தாழ்பு அன்ன''[590]

எனும் பாடலடிகளில் பயின்று வந்துள்ள ''மனையுறைகோழி'' எனும் தொடர் காட்டுகின்றது. சேவலினது குடுமியினை,

''குவியிணர்த் தோன்றி யொண்பூ வன்ன
தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்''[591]

''குடுமி நெற்றி நெடுமரச் சேவல்''[592]

எனும் பாடலடிகளில் விளக்கப்படுகின்றது. கோழியானது வாரணம் என்றும் அதன்கால்கள் சிதர்க்கால் என்றும் சுட்டப்படுகின்றது.[593] மருதம், பாலை, குறிஞ்சி ஆகிய திணையிலமைந்த சங்க அகப்பாடல்களில் கோழியாகிய பறவையினம் சுட்டப்பட்டுள்ளது. கோழி கூவும் தன்மை, அது மனிதர்களால் காயவைக்கப்படும் உணங்களை உண்ணுதல் போன்றவை சுட்டப்படுகின்றன. பட்டினப்பாலையில் வரும் ''பல்கோழி''[594] எனும் பலவகைக் கோழிகளைச் சுட்டுவதாகவும் கொள்ள இடமுண்டு.

**சிரல்**

பழந்தமிழ் இலக்கியங்களில் மீன்கொத்திப் பறவையானது ''சிரல்'' என்ற பெயரில் சுட்டப்பட்டுள்ளது. ''சங்க நூல்களில் மீன் கொத்திக் குருவியைச் சிரல் என்று அழைத்தனர்.''[595] எனும் கூற்றால் இதனை அறியலாம். சங்க அகப்பாடல்களில் சிறல் பற்றிய பதிவுகளை

''பரல்தலை போகிய சிரல்தலைக் கள்ளி''[596]

''எரியகைந் தன்ன தாமரைப் பழனத்துப்
பொரியகைந் தன்ன பொங்குபல சிறுமீன்
வெறிகொள் பாசடை யுணீஇயர் பைப்பயப்
பறைதபு முதுசிரல் அசைபுவத் திருக்குந்''[597]

''இறாஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை யுறங்குந் தண்டுறை ஊர''[598]

ஆகிய பாடல்களின் வாயிலாக அறியலாம். இப்பாடலடிகளில் சிரல் பறவையானது மீனை உண்ணும் தன்மை சுட்டப்படுகின்றது. வாத்து, கொக்கு, நாரை போன்ற பறவைகளும் மீனை உண்ணும் நிலையில் ''சிரல்'' என்பது மீன்கொத்திப் பறவையைத்தான் குறிக்கிறது என்பதை விளங்கிக்கொள்ள,

''மீன்றேர் கொட்டிற் பனிக்கய மூழ்கிச்

சிரல்பெயர்ந் தன்ன நெடுவள் ளூசி

நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்''[599]

எனும் பதிற்றுப்பத்து பாடலடிகள் துணை செய்யும். மார்பில் புண்பட்ட போர்வீரரது புண்ணில் தைக்கும்போது நெடியவெள்ளிய ஊசியானது குருதிபொருந்திய தசையினுள் சென்று வெளிவருவது போன்று குளிர்ந்த குளத்தின்கண் மீனைப்பார்த்த சிரல் பறவை பாய்ந்து நீரில் மூழ்கி மீனைக் கவ்விக்கொண்டு மேலெழுந்து பறப்பதை மேற்கண்ட பாடலடி தெளிவுறக் காட்டுகின்றது. மீனை உண்ணும் பறவையினங்களில் வானில் பறந்துகொண்டு நீருள் பாய்ந்து மீனைப் பிடிக்கும் தன்மை மீன்கொத்திக்கு உரித்தான பண்பாகும். இதனால் சிரல் என்பது மீன்கொத்திப் பறவையைக் குறிக்கிறது என்பது தெளிவு. சில பாடல்களில் காணப்படும் ''சிறுசிரல்'' என்ற பதம் மீன்கொத்திப் பறவையினத்தில் காணப்படும் பெரிய வகைப் பறவையிலிருந்து சிறிய வகைப் பறவையைப் பிரித்துக் காட்டுகிறதெனலாம்.

**சிறுவெண்காக்கை**

சிறுவெண்காக்கை சங்க அகப்பாடல்களில் கடற்சூழலில் மட்டும் சுட்டப்பட்டுள்ளது. இது சிறுவெண்காக்கை, கடலங்காக்கை ஆகிய பதங்களில் சுட்டப்பட்டுள்ளது. பறவையியலாளர்கள் இதனைப் பொதுவாக 'கடற்காக்கை' எனச் சுட்டுவர். கடல் நீரில் நீந்தியும், மூழ்கியும் இரைதேடி உண்ணும் தன்மையது. காக்கையுடன் உடலளவில் சிறிது ஒத்து, கழுத்துப் பகுதியும் அடிப்பகுதியும் வெண்மை நிறத்திலும் முதுகுப்புறம் சாம்பல் நிறத்திலும் காணப்படும். உடலில் காணப்படும் சிறிதாகிய வெண்மை நிறத்தைக் கொண்டும் காக்கையுடன் ஒத்ததாகிய உடலமைப்புக்கருதியும் சங்கப் புலவர்கள் இதனை 'சிறுவெண்காக்கை' எனச் சுட்டினர் எனலாம்.

''சேயிறா வெறிந்த சிறுவெண் காக்கை''[600]

''பெருங்கடல் பரப்பின் இரும்புறந் தோயச்

சிறுவெண் காக்கை பலவுடன் ஆடும்''[601]

''பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை''[602]

''சிறுவெண் காக்கைச் செவ்வாய்ப் பெருந்தோடு''[603]

''கடலம் காக்கைச் செவ்வாயச் சேவல்''[604]

ஆகிய பாடலடிகளில் சிறுவெண்காக்கையானது கடற்பரப்பில் காணப்படுவதாகவும், கரிய புறத்தினை உடையதாகவும், சிவந்த அலகினை உடையதாகவும் சுட்டப்பட்டுள்ளது. இமயமலைக்கு வடக்கே இருந்து தமிழ்நாட்டுக் கடற்கரைப் பகுதிக்கு பனிக்காலங்களில் இப்பறவையினம் வலசைவருவதாக பறவையியலாளர் கூறுகின்றனர். பனிக்காலப் பின்புலத்திலேயே சங்க அகப்பாடல்களில் இப்பறவைகள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

**நாரை**

நாரையெனும் பறவையினத்தில் பெருநாரை, நந்துநாரை, செவ்வரி நாரை, செங்கால் நாரை, பூநாரை எனப் பல இனங்கள் அடங்கியிருப்பதாகப் பறவையியலாளர் சுட்டுவர்.

சங்க அகப்பாடல்களில் பல இடங்களில் நாரை என்ற சொல் பொதுவாக நாரையினத்தைச் சுட்டுவதாக வருவதைக் காணமுடிகின்றது.

“மடநடை நாரைப் பல்இனம் இரிய”[605]

“நாரை நிரைபெயர்ந் தயிரை யாரும்”[606]

“கடலி னாரை யிரற்றும்”[607]

“தனிப்பார்ப்பு உள்ளிய தண்பறை நாரை”[608]

“செக்கர்கொள் பொழுதினான் ஒலிநீவி இனநாரை”[609]

ஆகிய பாடலடிகளில் நாரை எனும் பறவையினம் அதன் உள்ளினம் அறியமுடியாதபடி பொதுவாக ‘நாரை’ என்று சுட்டப்படுவதைக் காணமுடிகின்றது. நாரை இனப் பறவைகளுக்குக் கால் நீண்டு காணப்படும். இத்தன்மையிலான காலமைப்பைச் சங்க அகப்பாடல்கள் ‘தடந்தாள்’ எனக் குறிப்பிடுகின்றன. நீண்ட காலை உடைய நாரை “தடந்தாள் நாரை”[610] எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

“கவிரித ழன்ன தூவிச் செவ்வாய்
இரைதேர் நாரைக் கெவ்வ மாகத்
தூஉந் துவலைத் துயர்கூர் வாடையும்”[611]

எனும் குறுந்தொகைப் பாடலில் முள்முருங்கைப் பூவின் இதழைப் போல் மெல்லிய சிவந்த, தூவியையும் சிவந்த வாயினையும் உடையதாகச் சுட்டப்படும் நாரை ‘பூநாரையாக’ இருக்கலாம் என அறிஞர்கள் கூறுகின்றனர். பூநாரையின் வாயானது சிவந்திருக்கும். இறகுப் பகுதியும் சிவந்து பூப்போன்று காட்சி தரும். இதனால் இது பூநாரை எனச் சுட்டப்படுகின்றது. மேற்கண்ட பாடலில் சுட்டப்படும் தோற்றம் பூநாரைக்குப் பொருந்துவதாக அமைவதைப் பூநாரையை நேரில் கண்டுணர்ந்தவர்களால் உணரவியலும். சங்க அகப்பாடல்களில் நாரையானது நெய்தல் திணைப்பாடல்களில் மிகுதியாகவும் மருதத் திணைப்பாடல்களில் குறைவாகவும் சுட்டப்பட்டுள்ளது.

**செம்பூழ், குறும்பூழ்**

செம்பூழ் எனும் பறவையினம் சங்க அகப்பாடல்களில் இடம்பெற்றுள்ளது. இது குறும்பூழ் எனவும் சுட்டப்பட்டுள்ளது.

“கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல்
சிறுபுன் பெடையொடு குடையும்”[612]

“பைந்தினை யுணங்கல் செம்பூழ் கவரும்”[613]

“பூழ்க்கா லன்ன செங்கா லுழுந்தின்
ஊழ்படு முதுகாய்”[614]

“நெய்கனி குறும்பூழ் காய மாக”[6115]

ஆகிய சங்க அக இலக்கியப் பாடலடிகளில் செம்பூழ்ப்பறவை சுட்டப்பட்டுள்ளதைக் காணலாம். கரிய மாலை போன்ற கழுத்தினை உடையது செம்பூழ்ச் சேவல் என அகநானூறு கூறுகின்றது. காயவைக்கப்பட்ட தினையினை இப்பறவை கவர்ந்துண்ணுவதும் மனிதர்கள் செம்பூழ்ப் பறவையினை நெய்யிட்டு வேகவைத்து உண்ட செய்தியையும் மேற்கண்ட பாடலடிகள் மூலம் அறிய முடிகின்றது. குறும்பூழ் மங்கிய சிவப்பு நிறமுடையது என்றும் அத்தன்மை கருதி ‘செம்பூழ்’ என்று இலக்கியங்கள் சுட்டுவதாகவும் தம் நூலில் பி.எல்.சாமி விளக்கியுள்ளார்.[616] நிகண்டுகள் குறும்பூழ் பறவைக்குக் காடை என பெயர் கூறியிருப்பதாகவும் பிற்காலத்தில் குறும்பூழ் என்ற பெயர் மறைந்து “காடை” என்பதே மக்களிடத்தில் நிலைத்துவிட்டதாகவும் க.ரத்னம் விளக்கியுள்ளார்”[617] இவ்வாறு அறிஞர்களின் கருத்துவழியாகவே குறும்பூழாகிய காடையினை விளங்கிக்கொள்ள முடிகின்றது. மற்றபடி தெளிவுற விளங்கிக்கொள்வதற்குச் சங்க அகப்பாடல்களில் போதுமான சான்றில்லை எனக் கூறலாம். காடையானது வயற்பகுதி, புல்வெளி போன்ற இடங்களில் காணப்படும். சங்க அகப்பாடல்களில் குறும்பூழ்ப் பறவையானது குறிஞ்சி, பாலை, முல்லை நிலப்பின்னணியில் கூறப்பட்டுள்ளது.

**பருந்து, கழுகு**

சங்க அகப்பாடல்களில் பருந்து, கழுகு ஆகிய ஓரினப்பறவைகளைப் பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன. கழுகு பற்றிய பதிவுகள் பருந்தின் பதிவுகளைக் காட்டிலும் குறைவாகவே காணப்படுகின்றன. பருந்து வகைகளுள் அனைவருக்கும் தெரிந்த பருந்து வகையாகச் செம்பருந்து விளங்குகின்றது. இதனை கிருஷ்ணப் பருந்து என்றும் திருமாலின் வாகனம் என்றும் புராண அடிப்படையில் சுட்டுவர். தமிழ்நாட்டில் செம்பருந்து, கள்ளப்பருந்து, கரும்பருந்து, கடல்பருந்து, தேன்பருந்து, கொண்டைவல்லூறு, புஞ்சைப்பருந்து, ராசாளிப்பருந்து, குடுமிப்பருந்து எனப் பருந்து வகைகள் காணப்படுவதாக பறவையியலாளர்கள் கூறுகின்றனர். சங்க அகப்பாடல்களில் பல பாடல்களில் பருந்து சுட்டப்பட்டுள்ளது.

“அத்த வோமை யங்கவட் டிருந்த
இனந்தீர் பருந்தின் புலம்புகொ டெள்விளி”[618]

“உலறுதலைப் பருந்தி னுளிவாய்ப் பேடை
யலறுதலை யோமை யங்கவட் டேறிப்
புலம்புகொள விளிக்கு நிலங்காய் கானத்து”[619]

“ஏறுதங் கோலஞ்செய் மருப்பினால் தோண்டிய வரிக்குடர்
ஞாலக்கொண் டெழூஉம் பருந்தின் வாய்வழீஇ”[620]

“பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்ப”[621]

ஆகிய பாடலடிகளில் பருந்து சுட்டப்பட்டுள்ளதைக் காணலாம். பல்வகைப் பருந்துகளில் மேற்கண்ட பாடலடிகளில் சுட்டப்பட்டுள்ள பருந்து எவ்வகைப் பருந்து என அறிந்துகொள்ள

போதுமான விளக்கமில்லை. பெரும்பான்மையும் பாலைத்திணையில் சுட்டப்படுவதால் இது பாலை நிலத்தில் காணப்படும் பருந்துவகையைச் சாரும் எனலாம்.

‘‘…………………….. இருஞ்சிறை

வளைவாய்ப் பருந்தின் வான்கட் பேடை’’[622]

எனும் பாடலடிகளில் கரிய சிறகினை உடைய பருந்து சுட்டப்படுகின்றது. இது பாலைத் திணைப் பாடலாக அமைந்துள்ளது. நாம் அனைவரும் எளிதாக அறிந்திருக்கும் செம்பருத்து தலைப்பகுதி வெண்மையாகவும் சிறகு செம்மை நிறமாகவும் காணப்படும். மேலும் செம்பருந்து நீர்நிலைப் பகுதிகட்கு அருகில் காணப்படும். பாலைநிலத்தில் காணப்படா. எனவே மேற்கண்ட பாடலடிகளில் காணப்படும் பருந்து ‘‘கருஞ்சிறகுப் பருந்து’’ (Black Winged Kite) எனும் பருந்து வகையாகவிருக்கலாம்.

‘‘கருங்கால் ஓமை யேறி வெண்டலைப்

பருந்துபெடை பயிரும் பாழ்நாட் டாங்கண்’’[623]

எனும் பாடலடிகளில் வெண்மையான தலையையுடைய பருந்து சுட்டப்படுகின்றது. மேற்கொண்டு எவ்வகைக் குறிப்பும் சுட்டப்படவில்லை. இதுவும் பாலை நிலத்தில் காணப்படும் வெள்ளிய தலையையுடைய பருந்தை சுட்டுகிறது எனலாம். சங்க அகப்பாடல்களில் பருந்துகள் கூட்டமாக இரையை உண்ணுதல், தனித்த நிலையில் கத்துதல், ஊன் உண்ணுதல் போன்ற பறுந்தைப்பற்றிய கருத்துகள் காணப்படுகின்றன. பெரும்பான்மையும் பாலைநிலைத்தில் காணப்படும் பருந்துகள் சுட்டப்படுகின்றன. கழுகு இனங்களுள் பல வகைகள் காணப்படுகின்றன. சங்க அகப்பாடல்களில் கழுகு என வரும் இடங்களில் அது எவ்வகைக்கழுகு எனத் தெளிவுற அறியத்தக்க குறிப்புகள் ஏதுமில்லை.

‘‘கருங்கட் காக்கையொடு கழுகுவிசும் பகவ’’[624]

‘‘புண்ணுமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்

கண்ணுமிழ் கழுகின் கானம் நீந்தி’[625]

ஆகிய பாடலடிகளின் வழி இதனை அறியலாம். இப்பாடல்களில் ‘கழுகு’ எனும் பெயர் மட்டுமே வருகின்றது. இது எவ்வகைக் கழுகு என அறியுமாறில்லை. ஒரு வேளை கழுகினத்தின் பல வகைகளுள் குறிப்பிட்ட வகையினை ‘கழுகு’ எனப் பொதுப் பெயரிட்டு சங்கமக்கள் அழைத்திருக்க வாய்ப்புள்ளது. ஆனால் நாம் அனைத்துவகைக் கழுகையும் ‘கழுகு’ என்றே சுட்டுவது குறிப்பிடத்தக்கது.

தற்காலத்தில் சூழலியலாளர்களால் கழுகினைப் பறவைகளாகச் சுட்டப்படும் எருவை, பாறு ஆகிய பிணந்தின்னிக்கழுகு வகைகள் சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இவ்விருவகைக் கழுகுகளும் தலையில் இறகுகள் இன்றி மொட்டையாகக் காணப்படும். எருவைச் சேவலின் தலை சிவந்த நிறத்தில் அமைந்திருக்கும். சிவந்த தலையில் அமைந்துள்ள இதன் காதுகள் நன்கு சிவந்து விளங்கித் தோன்றும். இதன் சிறகுகள் கரியநிறத்தில் காணப்படும். கழுத்துப் பகுதி வெண்மை கலந்து காணப்படும். வெண்மை கலந்து கழுத்து பகுதியில் சிவந்த

தலையுடன் விளங்கித்தோன்றும் எருவையின் செவ்விய காதானது ‘செஞ்செவி’ எனச் சுட்டப்படுகின்றது. சிவந்த காதுடைய எருவை “செஞ்செவி எருவை”[626] எனச் சங்க அகப்பாடல்களில் விளக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. எருவையானது பெரிய சிறகினைக் கொண்டது என்பதை,

“எருவை யிருஞ்சிறை யிரீஇ”[627]

“எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்”[628]

எனும் பாடலடிகளால் அறியலாம். எருவைக் கழுகானது இறந்த உயிரினங்களின் உடலைக் கூட்டமாகக் கூடி உண்ணும் தன்மை சங்க அகப்பாடல்களில் காட்டப்பட்டுள்ளது. உரையாசிரியர்கள் சில இடங்களில் எருவையை “எருவைப்பருந்து” எனச் சுட்டுகின்றனர். ஆனால் பறவையியலாளர்கள் எருவையைக் கழுகுவகை என்கின்றனர். சங்க அகப்பாடல்களில் “எருவை” என்று தனித்தே இப்பறவை சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

எருவை போன்றே பிணங்களை உண்டுவாழும் ‘பாறு’ எனும் கழுகு, சங்க அகப்பாடல்களில் சுட்டப்படுவதை,

“புனிற்று நிரைகதித்த பொறிய முதுபாறு”[629]

“ஆறுசெல் வம்பலர் உயிர்செலப் பெயர்ப்பின்
பாறுகிளை பயிர்ந்து படுமுடை கவரும்”[630]

“படுமுடை நசைஇய பறைநெடுங் கழுத்திற்
பாறுகிளை சேக்குஞ் சேட்சிமை”[631]

போன்ற பாடலடிகளின் வழி அறியலாம். எருவை போன்றே பாறு கழுகும் கூட்டமாக பிணங்களைத் தின்னும் காட்சி காட்டப்பட்டுள்ளது. எருவை, பாறு போன்ற பிணந்தின்னிக் கழுகுகள் பிணங்களை உண்டு அழித்து சூழலியலுக்கு அருந்தொண்டாற்றுவதாகச் சூழலியாளர்கள் கூறுவது குறிப்பிடத்தக்கது. இவ்விருவகைக் கழுகுகளும் பிணங்களை மட்டுமே தின்னக் கூடியனவாகும். சங்க அகப்பாடல்களிலும் இவ்விருவகைக் கழுகுகளும் பிணங்களைத் தின்பது மட்டும் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**புறா**

புறாக்களைப் பலர் தம் இல்லத்தில் வைத்து வளர்க்கின்றனர். இறைச்சிக்காகவும், பறக்கவிடும் போட்டிக்காகவும் புறாக்கள் வளர்க்கப்படுகின்றன. செயற்கையாகக் கூடமைத்துப் புறாக்களை வளர்க்கும் மனிதச்செயல்பாடன்றி புறாக்கள் இயற்கையாகவே இல்லங்கள், கோவில்கள், காட்டுப்பகுதி, மலைப்பகுதிகளில் வாழ்வதையும் காணமுடிகின்றது. சங்க அகப்பாடல்களில் வளர்ப்புப் புறா மற்றும் இயற்கையாக வாழ்ந்த புறா என இருவகை புறாக்கள் பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன. சங்க அகப்பாடல்களில் புறாவானது ‘புறவு’ எனச் சுட்டப்பட்டுள்ளது. நமது வீடுகளிலும் கோவில்

மாடங்களிலும் தங்கும் புறாக்களை நாம் மாடப்புறா என்று சுட்டுகின்றோம். மாடப்புறாவானது மனையுறை புறாவென அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. இதனை,

"வகையமர் நல்லில் அகஇறை உறையும்
வண்ணப் புறவின் செங்கால் சேவல்"[632]

"மனையுறை புறவின் செங்கால் பேடைக்
காமர் துணையொடு சேவல் சேரப்"[633]

"மனையுறை புறவின் செங்கால் சேவல்"[634]

ஆகிய பாடலடிகளின் வழி அறியலாம். தங்கள் மனையின்கன் தங்கிய புறாக்களை ஊறு செய்யாது பண்டைத் தமிழ் மக்கள் வளர்த்துள்ளனர் என்பது மேற்கண்ட பாடலடிகளின் வாயிலாக விளங்கும். 'மணிப்புறா' என்ற பதம் அகநானூற்றில் காணப்படுகின்றது. இது தற்காலத்தில் சுட்டப்படும் 'மணிப்புறாவாக' இருக்கலாம். மணிப்புறா என்ற புறாவகையின் பெயர் சங்ககாலம் தொட்டு இருந்து வருவதை இது காட்டுகின்றது.

"இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புறாத் துறந்து மரஞ்சேர் மாடத்தது"[635]

எனும் பாடலடிகளில் மணிப்புறா மக்கள் வாழ்ந்த பகுதியில் இருந்தது பதிவுசெய்யப்பட்டுள்ளது. தவிட்டுப்புறா என்றும் கள்ளிப்புறா என்றும் சுட்டப்படும் வறண்ட நிலப்பகுதிகளில் கள்ளியில் தங்கியிருக்கும் புறாவினம் சங்க அகப்பாடல்களில் சுட்டப்படுவதை,

"வண்புறப் புறவின் செங்கால் சேவல்
களரி ஓங்கிய கவைமுட் கள்ளி
முளரியம் குடம்பைஈன்றிளைப் பட்ட
வயவுநடைப் பேடை"[636]

"பெயன்மழை துறந்த புலம்புறு கடத்துக்
கவைமுட் கள்ளி காய்விடு கடுநொடி
துதைமென் றூவித் துணைப்புற விரிக்கும்"[637]

ஆகிய பாடலடிகளின் வழி அறியலாம். பாலை நிலத்தில் கள்ளியில் கூடுகட்டி முட்டையிடும் கள்ளிப்புறா மேற்கண்ட பாடலடிகளில் காட்டப்படுகின்றது. புறாவின் உடலில் காணப்படும் புள்ளிபொருந்திய வரிகளை "பொறிவரிப் புறவு"[638] என அகநானூற்றுப் பாடல் சுட்டுகின்றது. சங்க அகப்பாடல்களில் மாடப்புறா, மணிப்புறா, கள்ளிப்புறா ஆகிய புறாவகைகள் தெளிவுற எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. புறாக்கள் தம் பெடையுடன் இணைந்து வாழ்தல், பருக்கைக்கற்களைத் தேர்ந்துண்ணுதல் போன்ற காட்சிகள் காட்டப்பட்டுள்ளன. புறாக்கள் மனிதர்களுடன் நெருங்கி வாழ்ந்ததை மனையுறை புறாக்களின் பதிவுகள் வழி அறியமுடிகின்றது.

**போகில்**

சங்க அகப்பாடல்களில் சிறுபான்மையாகப் 'போகில்' என்ற பெயர் காணப்படுகின்றது. அகநானூற்றில் பருத்தியின் விதையை போகில் பேடைக்கு ஊட்டுவதாக ஒரு காட்சி காட்டப்படுகின்றது. இப்பாடலில் 'பேடை' என்ற பறவைகட்குரிய பெண்பாற் பெயர் வருவதுகொண்டு போகில் என்பது பறவையினம் என்பதைத் துணியலாம். சங்க அகப்பாடல்களில் பயின்று வருகின்ற போகில் பற்றிய செய்திகளைக் கொண்டு இது எப்பறவை என்று தீர்மாணிப்பது கடினமாக உள்ளது. அந்த அளவிற்குக் குறைவான பதிவுகளே காணப்படுகின்றன. மேலும் உரையாசிரியர்களும் போகில் என்பதற்குப் பொதுவாகப் 'பறவை' என்றே பொருள் கொண்டுள்ளனர். சங்க அகப்பாடல்களில் போகில் பற்றிய பதிவுகளை

"புதுக்கலத் தன்ன கனிய வாலம்
போகிறனைத் தடுக்கும் வேனில ருஞ்சுரம்"[639]

"வேனி லரையத் திலையொலி வெரீஇப்
போகில் புகாவுண்ணாது பிறிதுபுலம் படரும்
வெம்பலை யருஞ்சுர நலியா"[640]

"தாழிமுதல் கலித்த கோழிலைப் பருத்திப்
பொதிவயிற்று இளங்காய் பேடை ஊட்டிப்
போகில்பிளந் திட்ட பொங்கல் வெண்காழ்
நல்கூர் பெண்டிர் அல்கல் கூட்டும்"[641]

ஆகிய பாடலடிகளில் காணலாம். மேற்கண்ட பாடலடிகளின் வாயிலாக 'போகில்' எனும் பறவையானது ஆலங்கனி அரசங்கனிகளை விரும்பி உண்பதும் பருத்தியில் காணப்படும் காயை உடைத்து உண்பதும் காட்டப்படுகின்றன. மேற்கண்ட அகநானூற்றுப் பாடலில் 'பருத்திப் பொதிவயிற்று இளங்காய்' என்பது பருத்திக்காய் முற்றி வெடிப்பதற்கு முன்பான இளங்காயைக் குறிக்கின்றது. இதன்மூலம் போகில் பறவையானது பருத்தியின் இளங்காயைக் குடைந்துண்ணும் என்பது தெரிகின்றது. வேனில் காலத்தில் அரிய சுரத்தில் பறந்து செல்லும் போகிலைப் புதிய மட்கலம் போன்ற கனிகளையுடைய ஆலமரம் தடுத்ததாக ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது. போகிலைத் தடுப்பதாகக் கூறுவது ஆலங்கனிகளைக் கண்ட போகில் தன் வழியில் தடைபட்டு விருப்பமாகிய ஆலங்கனியை நாடிச் சென்றதைக் காட்டுகின்றது, இதனால் போகிலுக்கு விருப்பமான கனி ஆலங்கனி என்பது தெரிகின்றது. மேற்கண்ட பாடலடிகளில் சுட்டப்படும் தன்மைகளைக் கொண்டு போகில் எனச் சுட்டப்படும் பறவை தற்காலத்தில் காணப்படும் பச்சைப்புறா என அறிஞர்கள் விளக்குகின்றனர். "ஆலங்கனியையும் அரசங்கனியையும் விரும்பி உண்ணும் பறவைகளில் பச்சைப் புறாவினம் மிக முக்கியமானது எனப் பறவை நூலார் கூறுவர்"[642] என்கிறார் பி.எல்.சாமி. இதனை ஆங்கிலத்தில் "Imperial Green Pigeon" எனச்

சுட்டுகின்றனர். போகில் எனும் பறவை பற்றிய பதிவுகள் சங்க இலக்கியத்தில் மேலே எடுத்துக்காட்டப்பட்ட மூன்று பாடல்களில் மட்டும் கூறப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**மகன்றில்**

மகன்றில் எனும் பறவை பற்றிய இரு பதிவுகள் சங்க அகப்பாடல்களில் காணப்படுகின்றன. மகன்றில் எனப்படும் பறவை என்பது எது? என்ற வினாவிற்கு இன்னும் சரியான விடை கிடைக்கப்பெறவில்லை என்று கூறலாம்.

''பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன
நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு''[643]

''யார்கொ லளியர் தாமே வார்சிறைக்
குறுங்கான் மகன்றி லன்ன''[644]

ஆகிய பாடலடிகளில் மகன்றிற்பறவை பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. 'நீருறை மகன்றில்' என்பது மகன்றிற் பறைவயானது நீர்நிலையில் வாழும் பறவை என்பதைக் காட்டுகின்றது. மேலும் மகன்றில் பெடையுடன் பிரியாது சேர்ந்து வாழும் தன்மை கொண்டது என்பதையும் குறுந்தொகைப் பாடல் காட்டுகின்றது. 'வார்சிறைக் குறுங்கான் மகன்றில்' என்னும் தொடர் நீண்ட சிறகினையும் குறுகிய கால்களையும் கொண்ட பறவை என்பதைக் காட்டுகின்றது. நீரில் வாழும் பறவைகளுள் நீண்ட சிறகையும் குறுகிய காலையும் கொண்ட பறவை எனும் அடிப்படையில் பறவையியலாளர்கள் மகன்றில் என்பது புள்ளிமூக்குவாத்து எனும் பறவையாக இருக்கலாம் என ஐயுறுகின்றனர்.

**மயில்**

தற்காலத்தில் மயிலாகிய பறவையினம் மிகுந்து காணப்படுகின்றன எனலாம். காடு, பாலை நிலப்பகுதி, வயற் பகுதிகளில் மயிலை எளிமையாகக் காணமுடிகின்றது. சங்க அகப்பாடல்களில் மயில் பற்றிப் பல பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. ''மஞ்ஞை'' எனும் பெயரிலும் மயில் என்ற பெயரிலும் சுட்டப்படுவதைக் காணமுடிகின்றது. சில இடங்கில் ''தோகை'' எனும் சொல் மயிலைக் குறிப்பதாக அமைவதைக் காணப்படுகின்றது.

''வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி
மயிலறி பறியா மன்னோ''[645]

''பெயலுழந்து உலறிய மணிப்பொறிக் குடுமிப்
பீலிமஞ்ஞை ஆலுஞ் சோலை''[646]

''மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்''[647]

''மயில்க ளாலக் குடிஞை யிரட்டுந்''[648]

''வரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாட''[649]

''பீலி மஞ்ஞை பெடையோ டாடும்''[650]

"அவிர்பொறி மஞ்ஞை யாடுஞ் சோலை"[651]

"வலைப்பட்டு மஞ்ஞையின்"[652]

ஆகிய சங்க அகப்பாடல்களில் மயிலாகிய பறவை மயில், மஞ்ஞை, தோகை எனச் சுட்டப்படுவதை அறியலாம். நீலமணி போன்ற நிறமுடைய தன்மை, மணி போன்ற பொறிகளை உடைய குடுமியைக் கொண்ட தன்மை, நடனமாடும் தன்மை ஆகியன பாடல்களில் விளக்கப்பட்டுள்ளதையும் அறியலாம்.

"கான மஞ்ஞை யறையீன் முட்டை"[653]

"கான மஞ்ஞை கடிய வேங்கும்"[654]

எனும் பாடலடிகளில் காணப்படும் 'கான மஞ்ஞை' எனும் பதத்திற்கு உரையாசிரியர்கள் காட்டிலுள்ள மயில் என்று பொருள் கொள்கின்றனர். "தரையில் வாழும் கானமயில் எனும் The Great Indian Bustard வான்கோழி அளவான பறவை தமிழ்நாட்டிலிருந்து மறைந்துவிட்டது."[655] எனும் கூற்றின் அடிப்படையில் பார்க்கும் பொழுது "கான மஞ்ஞை" என்பது கானமயில் என்ற தனித்த பறவையினத்தைக் குறித்திருக்கவும் வாய்ப்புள்ளதாகக் கொள்ள வேண்டியுள்ளது. தற்காலத்தில் அழிந்துவிட்ட சங்க காலத்தில் காணப்பட்ட பறவையினப் பதிவாக இதனைக் கருதவும் வாய்ப்புள்ளது.

**வானம்பாடி**

பறவையினத்துள் வானம்பாடி என்றொரு பறவையினத்தைக் குறிப்பதுண்டு. சங்க அகப்பாடல்களில் இப்பறவையின் பெயர் 'வானம்பாடி' என்றே சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இதனை

"வானம் பாடி வறங்களைந் தானா
தழிதுளி தலைஇய புறவிற் காண்வர"[656]

எனும் ஐங்குறுநூற்றுப் பாடலடியால் அறியலாம். இப்பறவை பற்றிய மேலும் சில பதிவுகளை

"துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளின்"[657]

"யானெவன் செய்கோ தோழி பொறிவரி
வானம் வாழ்த்தி பாடவும்"[658]

"தற்பாடிய தளியுணவிற்
புட் டேம்பப் புயன்மாறி"[659]

ஆகிய பாடலடிகளின் வாயிலாக அறியலாம். வானம்பாடி மழைத்துளியை உண்ணும் வேட்கை மிக்கது என்பதை "துளிநசை வேட்கை" எனும் தொடர்காட்டுகின்றது. மழைத்துளியை உண்பதற்காக வானத்தை வானம்பாடி பறவை வாழ்த்திப் பாடுவதாக சங்ககால மக்களிடத்தில் நம்பிக்கை இருந்துவந்தது. மேற்கண்ட பாடலடிகளின் வாயிலாக அறியமுடிகின்றது. வானம்பாடி பறவை மழைத்துளியை மட்டும் உணவாக உட்கொள்ளும் என்ற நம்பிக்கை தற்கால மக்களிடத்தும் காணப்படுகின்றது. உண்மையில்

மழைத்துளியை மட்டுமே உண்டுவாழும் பறவை இயற்கையில் இல்லை என்பது பறவையியலாளர்களின் கருத்தாக உள்ளது.

**வேறுசில பறவைகள்**

சங்க அகப்பாடல்களில் பல பதிவுகளில் சுட்டப்படும் பறவையினங்களுடன் ஓரிரு பதிவுகளிலும் சில பறவையினங்கள் சுட்டப்பட்டுள்ளன. இதில் காட்டுக்கோழி, வங்காப் பறவை ஆகியன ஓரிரு இடங்களிலேயே சுட்டப்பட்டுள்ளன.

'இதல்' என்று சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் பறவையின் உடற்கூறினை அகநானூறு விளக்கியுள்ளது. புறத்தே வரிகளை உடையது; நுண்ணிய புள்ளிகளைக் கழுத்தில் கொண்டது; கால்களில் பின் விரல்களுக்கு மேலே முள் போன்ற அமைப்பைக் கொண்டது; மணிபோன்று விளங்கிய கண்களைக் கொண்டது என இதல் பறவையைக் காட்டுகின்றது. இதனை,

"வரிப்புற இதலின் மணிக்கட் பேடை
நுண்பொறி அணிந்த எரித்திற் கூர்முட்
செங்காற் வேசற் பயிரும் ஆங்கன்"[660]

எனும் பாடலடிகளால் அறியலாம். இதல் பறவையின் காலில் காணப்படும் முள்ளை,

"புதன்மிசைந் தளவின் தன்முட் செந்தனை"[661]

"இதல்முள் ஒப்பின் முகைமுதிர் வெட்சி"[662]

ஆகிய பாடலடிகளில் உவமையாகக் காட்டப்பட்டுள்ளதைக் காணலாம். இப்பாடலடிகளின் வழி இதலின் முள்ளானது சிவந்து காணப்படும் என்பது விளங்குகின்றது. உரையாசிரியர்கள் இப்பறவையைச் சுட்டும் இடங்களில் காடை, கவுதாரி என்று வெவ்வேறு விதமாக உரை கூறியுள்ளனர். ஆனால் இது கௌதாரிப் பறவையிலிருந்து வேறுபட்டது என்கின்றனர் அறிஞர்கள். "கௌதாரியை விடச் சற்றே பெரிதான இதன் வால் சற்று நீண்டது. தமிழ் நாட்டில் கிழக்குக் கடற்கரை மற்றும் தெற்கு மாவட்டங்கள் தவிர மற்ற பகுதிகளில் மூங்கில் காடுகள், லாண்டானா புதர்கள் ஆகியவற்றைச் சார்ந்து இது மறைந்து திரியக் காணலாம்"[663] என இதல் பறவை பற்றி க.ரத்னம் கூறுகின்றார். இப்பறவை நாட்டுப்புறங்களில் சுண்டாங் கோழி, சருகுக்கோழி என அழைக்கப்படுவதாகத் தெரிகின்றது.

வாரணம் எனும் சொல் பறவையினத்தில் கோழியைக் குறிப்பதாக அமைகின்றது. இச்சொல் காட்டுக்கோழியைச் சுட்டும் வகையில் 'கான வாரணம்' என அமைந்திருப்பதை நற்றிணையின் இருபத்தொன்பதாம் பாடலில் காணமுடிகின்றது. கானக்கோழி, கானங்கோழி என்ற பெயர்களில் சங்க இலக்கியத்தில் இப்பறவை சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. நாம் வீட்டில் வளர்க்கும் கோழிகளுடன் சற்று ஒத்த உடற்கூறு கொண்டது. கானக்கோழிச் சேவலின் கழுத்துப்பகுதியில் காணப்படும் பொறிகளாகிய புள்ளிகள் தனித்தன்மையுடன் கூறப்பட வேண்டியதாகும். இதனைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளதை,

"உருக்குறு நறுநெய் பால்விதிர்த் தன்ன
வரிக்குரல் மிடற்ற அந்நுண் பல்பொறிக்
காமரு தகைய கான வாரணம்"[664]

"கானங் கோழிக் கவர்குரற் சேவல்
ஒண்பொறி எருத்திற் றண்சித ருறைப்ப"[665]

எனும் சங்க அகப்பாடலடிகளின் வாயிலாக அறியலாம். காட்டுக்கோழிக்குக் கழுத்தில் புள்ளிகள் அமைந்திருப்பதைப் பறவையிலாளர்களும் சுட்டுகின்றனர். உருக்கிய நெய்யைப் பாலில் தெளித்தது போன்று கானக்கோழியின் கழுத்துப் பகுதிப் புள்ளிகள் பொன்மஞ்சள் நிறத்தில் காணப்படுவதை நற்றிணை தெளிவுறக் காட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது. இப்பறவை காடு மற்றும் மலைப்பகுதியில் காணப்படும் என்பர்.

'வங்கா' எனப்படும் பறவையைக் குறுந்தொகைப் பாடல் பதிவு செய்துள்ளது. இதனை,

"வங்காக் கடந்த செங்காற் பேடை
எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணாது
குழலிசைக் குரல் குறும்பல வகவும்"[666]

எனும் பாடலடிகளால் அறியலாம். சங்க இலக்கியத்தில் வங்காப் பறவை பற்றி தெளிவான விளக்கம் இடம்பெறவில்லை என்று கூறலாம். எழால் எனும் பறவையானது செவ்விய காலை உடைய சேவலை அடிக்க தன் துணை காணாது வங்காப் பேடை அகவுவதாக மேற்கண்ட பாடலில் சுட்டப்பட்டுள்ளது. இவ்வாறு எழால் அடிப்பது கொண்டு "வங்கா" என்ற சொல்லின் பிறமொழிப் பயன்பாடு கொண்டும் பி.எல்.சாமி வங்கா என்பது "மாம்பழக்குருவி" என நிறுவுகிறார்.[667] இதனை மாங்குயில் என்றும் சுட்டுவர். இப்பறவை இணையுடன் காணப்படும் என பறவையியலாளர்கள் கூறுகின்றனர். இதனைச் சேவலைக் காணாது பேடை அகவுதாகக் கூறும் மேற்கண்ட பாடலடிகளின் மூலமாகவும் நாம் அறியலாம்.

சங்க அகப்பாடல்களில் பல்வேறு பட்ட பறவையினங்கள் அவற்றின் உள்ளினம் அறியும்படிக்கு விளக்கப்பட்டுள்ளன. பறவைகளின் உடற்கூறமைவு, அவை பறக்கும் முறைமை, நிறம், கத்தும் தன்மை, வாழக்கூடிய இடங்கள் ஆகியவற்றின் பதிவுகளைக் கொண்டு அவற்றின் வகைகளை அறியும்படிக்குச் சங்க அகப்பாடல் பதிவுகள் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. இப்பதிவுகளில் சில அறிவியல் அடிப்படையில் அமைந்துள்ளன. இவை சங்கப் புலவர்களின் பறவையியல் அறிவையும் சங்க கால மக்களின் பறவைகளை இனம்கண்டறியும் திறனையும் காட்டுவதாக அமைகின்றது.

**பூச்சிகள்**

சங்க அகப்பாடல்களில் பூச்சிகளைப் பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன. ஈசல், கறையான், தும்பி எனப் பல பூச்சியினங்கள் பற்றிய பதிவுகளைச் சங்க அகப்பாக்களில் காணமுடிகின்றன. பூச்சியினங்களைப் பொருத்தமட்டில் இப்புவியானது பூச்சிகளால்

நிரம்பியுள்ளது எனக் கூறுமளவிற்குப் பிற உயிரினங்களைக் காட்டிலும் அதிகப்படியான எண்ணிக்கையில் இவை வாழ்கின்றன. உலகின் அனைத்து வகையான பகுதிகளிலும் பூச்சிகள் வாழ்கின்றன என அறிவியலாளர்கள் கூறுகின்றனர். பூச்சிகள் அனைத்து இடங்களிலும் அனைத்து உயிரினங்களிலும் பரவியிருப்பதற்குச் சான்றாக ஒரு மரத்தில் பல்வகைப் பூச்சியினங்கள் பல எண்ணிக்கையில் காணப்படுவதையும், ஓர் ஆட்டின் உடலில் காணப்படும் ஒட்டுண்ணிகளையும், மனிதனிடம் கூட பேனாகக் காணப்படுவதையும் கூறலாம். பொதுவாகத் தாவரங்களின் மீது பல்வேறு பட்ட பூச்சியினங்கள் காணப்படுவதை நாம் காணமுடியும். இதனால் உலகில் பிறவகை உயிரினங்களைக் காட்டிலும் பூச்சியினமே அதிகப்படியாக வாழும் உயிரினமாகும் என்பதை உணரலாம். இதனை “இவ்வுலகில் அதிக எண்ணிக்கையில் வாழும் உயிரினம் பூச்சிகள்தான். ஒரு தோராயமான கணக்கில் உலகில் வாழும் ஒவ்வொரு மனிதருக்கும் சுமார் 10லட்சம் பூச்சிகள் இருக்கின்றன. மேலும் இவ்வுலகில் அது இல்லாத இடமே இல்லை எனலாம். வேறு எந்த உயிரினமும் வாழமுடியாத இடத்தில் கூட பூச்சிகள் வாழ்கின்றன என்பது வியப்பான உண்மை”[668] என்ற நக்கீரனின் கூற்றால் தெளியலாம். அறிவியல் அடிப்படையில் பூச்சிகள் என்பதற்குச் சில அடிப்படையான கூறுகள் அமைந்திருத்தல் வேண்டும். அவ்வடிப்படைக் கூறுகள் ஒரு உயிரினத்திடம் இருந்தால் தான் அவ்வுயிரினம் பூச்சி எனும் வகைப்பாட்டிற்குள் வரும் என்கிறது அறிவியல். ஆனால் நாம் நமது மரபின் அடிப்படையில் பூச்சியில்லாத சிலவற்றையும் பூச்சி எனச் சுட்டி வருகின்றோம். எட்டுக்கால் பூச்சி இதற்குச் சான்றாகும். அறிவியல் அடிப்படையில் இது பூச்சியினமன்று. பூச்சிக்குத் தலைப்பகுதி, மார்புப்பகுதி, வயிற்றுப்பகுதி ஆகிய மூன்று உடற்பகுதிகளுடன் ஆறு கால்களாகிய உறுப்பும் சேர்ந்து நான்கு பகுதிகள் அமைந்திருத்தல் வேண்டும் என்கிறது அறிவியல். இதனை ஓர் பூச்சியின் உடலானது தலை, மார்பு, வயிறு ஆகிய மூன்று தெளிவான பகுதிகளைக் கொண்டிருக்க வேண்டுமாம். பூச்சியினத்தின் அனைத்துப் பூச்சிகளும் ஆறு கால்களைக் கொண்டிருக்கும்”[669] எனும் கோவை சதாசிவத்தின் கூற்று தெளிவிக்கும். இதனைச் சற்று விரிவாக “அனைத்துப் பூச்சிகளுக்கும் பொதுவான சில அமைப்புகள் உள்ளன. பூச்சி நான்கு முக்கிய அமைப்புகளைப் பெற்றுள்ளன. பூச்சிகளின் உடலானது தலை (Head), தோராக்ஸ் (Thorax) எனப்படும் உடல்பகுதி, வயிற்றுப்பகுதி (Abdomen) என்று மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இரண்டாவது அமைப்பு கால்களாகும். பூச்சி இனத்தில் அனைத்துப் பூச்சிகளுக்கும் ஆறு கால்கள் அமைந்திருக்கும். மூன்றாவது அமைப்பு தலைப்பகுதிகளில் அமைந்துள்ள இரண்டு ஆண்டெனாக்கள். நான்காவது அமைப்பு பூச்சியின் உடலைப் பாதுகாக்கக் கூடிய வெளிப்புறக் கூடு”[670] என ஆர். வி.பதி விளக்கியுள்ளார். பொதுவாக தலை, மார்பு, வயிறு, ஆறுகால்கள் அமையப்பெற்ற உயிரினம் பூச்சி என அழைக்கப்படும். இது பறக்கலாம், நடக்கலாம், நகரலாம். இதன் இடம்பெயர்வு எவ்வகையில் இருந்தாலும் மேற்கண்ட நான்கு அமைப்பு இன்றியமையாதது. இதனாலேயே எட்டுக்கால் கொண்டது பூச்சி எனும் வகைப்பாட்டிற்குள் அமையாது என்கின்றனர் பூச்சியிலாளர்கள். இதனைச்

சூழலியலாளர்களும் பின்பற்றி வருகின்றனர். பல்லுயிரிவளத்திற்கு இப்பூச்சிகள் பெரிதும் துணை செய்கின்றன. அறிவியலாளர்கள் விளக்கியுள்ள பூச்சி அமைப்புடன் பொருந்தக் கூடிய சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்ட உயிரினங்கள் இப்பகுதியில் விளக்கப்படுகின்றன.

**சங்க அகப்பாடல்களில் பூச்சிகள்**

பல்வேறு வகைப்பட்ட பூச்சி வகைகளுள் சங்க அகப்பாடல்களில் வண்டு, தும்பி, சுரும்பு, மின்மினி, கறையான், எறும்பு, ஈசல் போன்ற பூச்சியினங்கள் சுட்டப்பட்டுள்ளன. பூச்சியியலாளர்கள் பொதுவாகப் பிறவகை உயிரினங்களிலிருந்து பூச்சியினங்களைப் பகுத்தறிய அவற்றின் உடலில் பொருந்தியிருக்கும் ஆறு கால்களைத் தனித்தன்மையுடன் சுட்டி வகைப்படுத்துகின்றனர். சங்க அகப்பாடல்கள் சிலவற்றில் பூச்சியினங்களின் ஆறுகால்கள் சுட்டப்படுவது குறிப்பிடத்தக்கது.

‘‘அறுகாற் பறவை அளவில மொய்த்தலிற்’’[671]

‘‘அறுசில் கால வஞ்சிறைத் தும்பி’’[672]

எனும் பாடலடிகள் மூலம் இதனை அறியலாம். சங்ககால மக்கள் பூச்சியினங்களை ஆறுகால்களைக் கொண்டவை என வகைப்படுத்தி அறிந்திருந்ததை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. ஆறுகால்களைக் கொண்ட பறவை என்பது பூச்சியைக் குறிப்பதாகும். பூச்சியினத்துள் ஒன்றாகிய தும்பியை ஆறு சிறிய கால்களைக் கொண்ட தும்பி எனச் சுட்டுவதன் மூலம் ஆறுகாற்பறவை என்பது பூச்சியினத்தைக் குறிப்பது என்பது தெளிவாகின்றது. சங்க இலக்கியங்களைப் பொறுத்தமட்டில் அதில் காணப்படும் சுரும்பு, தும்பி போன்றவற்றிற்கு உரைகாரர்கள் வண்டு என்று பொருளுரைத்திருப்பதை உரைநூல்களின் வழி அறிய முடிகின்றது. ஆனால் சங்க கால மக்கள் வண்டு, தும்பி, சுரும்பு ஆகியவற்றை வேறுவேறாக அறிந்திருந்ததைக் காணமுடிகின்றது. இதனை,

‘‘புரிந்தார்க்கும் வண்டொடு புலம்புதீர்ந் தெவ்வாயும்
இருந்தும்பி இறைகொள எதிரிய வேனிலான்’’[673]

‘‘வடிநரம் பிசைப்பபோல் வண்டொடு சுரும்பார்ப்பத்
தொடிமகள் முரற்சிபோல் தும்பிவந் திமிர்தர’’[674]

‘‘கைகவர் நரம்பின் இம்மென இமிரும்
மாதர் வண்டொடு சுரும்புநயந் திருத்த’’[675]

எனும் பாடலடிகளின் வாயிலாக அறியலாம். ஒரே பாடலில் வண்டு, சுரும்பு, தும்பி ஆகியன பயின்று வருவதன் மூலம் இவை தனித்தனி வகை உயிரிகள் என்பதை உணரலாம். சங்ககாலத்தில் இவை இன்னின்ன பூச்சிகள் என மக்கள் அறிந்திருந்தனர் என்பதைச் சங்க அகப்பாடல்கள் காட்டுகின்றன. பிற்காலத்தில் இச்சொற்கள் பயன்பாட்டில் இருந்திருப்பினும் அவற்றிற்கான பொருண்மை விடுபட்டமையான் தற்காலத்தில் அனைத்தும் வண்டைப் குறிப்பதாகக் கொள்ளப்படுகின்றன. இதனால் இதன் பொருண்மை உணராத உரையாசிரியர்களும் பொதுவாக வண்டு எனக் குறித்தனர். ஆனால் மேற்காட்டப்பட்ட

பாடல்களில் இவை சேர்ந்து வரும் பொழுது மூன்றையும் தனித்தனியாக வேறுவேறாகச் சுட்டுவதையும் உரையாசிரியர்களின் உரைவழி அறியமுடிகின்றது. இது பூச்சியினம் பற்றிய உரையாசிரியர்களின் அறியாமையைக் காட்டுவதாக உள்ளதெனலாம். இந்நிலையில் பொ.வே. சோமசுந்தரனார் தம் குறிஞ்சிப்பாட்டு உரையில் சுரும்பு என்பதை ஆண் வண்டு என்றும் வண்டு என்பதைப் பெடை வண்டு என்றும் சுட்டுகின்றார். ‘‘மாதர்-காதல் இக்குறிப்பால் மாதர் வண்டென்றதற்குப் பெடை வண்டு எனப் பொருள் கூறப்பட்டது. சுரும்பு-ஆண்வண்டு. வண்டொடு என்றதனாலும் வண்டு பெடைவண்டாதல் அறிக’’[676] என விளக்கம் கூறுகிறார். இது ஆராயற்பாலதாகும். நச்சினார்க்கினியர் தம் கலித்தொகை உரையில் ‘‘வண்டொடே சுரும்புகளும் வடித்த நரம்புகள் ஒலிப்பனபோல ஆராவாரிப்ப’’[677] என உரைகூறியுள்ளார். இது பொ.வே. சோமசுந்தரனாரின் உரையிலிருந்து மாறுபடுவதைக் காணலாம். இந்நிலை நமக்கு வண்டு, சுரும்பு, தும்பி என்பன எவையெவை என்பது பற்றிய தெளிவின்மையைக் காட்டுகின்றது. இம்மூன்றும் பூச்சியினங்களில் காணப்படும் மூவகைப் பகுப்பாக அமையலாம் என எண்ணத் தோன்றுகின்றது. இங்கு எம்.எஸ். நாயர் அவர்கள் பூச்சிகளின் பகுப்பை விளக்கும் முறைமை சிந்திக்கத்தக்கது. ‘லெபிடாப்டிரா’ எனப்படும் இனைக் குடும்பத்தில் வண்ணத்துப்பூச்சிகளும், அந்துப் பூச்சிகளும் அடங்கும். இவை பல வண்ணங்களில், பல தினுசுகளில் தென்படும்’’[678] என ஒருவகைப் பூச்சியினத்திற்கு விளக்கமளிக்கின்றார். மேலும் ஒடோனேடா எனும் இனக்குடும்பத்தில் தும்பிவகைகளும் டேம்சல் பூச்சிகளும் அடங்கும் என்கிறார். வண்டுகள் ‘‘கோலியாப்டிரா’’ எனப்படும் இனக்குடும்பத்தைச் சார்ந்தவை என்கிறார்.[679] இவ்விளக்கங்களின்படி மூன்றுவகைப் பூச்சியினங்கள் இருப்பதை நாம் விளங்கிக் கொள்ளலாம். சங்க அகப்பாடல்களில் கூறப்பட்ட வண்டு, சுரும்பு, தும்பி ஆகியன தனிப்பட்ட பூச்சியினங்களா என்பதை அறியாத நிலையிலும் அவ்வாறு அவை தனித்தனிப் பூச்சியினங்களாக இருப்பின் மேற்கூறப்பட்ட அறிவியலடிப்படையிலான மூவகைப் பகுப்பினுள் அவற்றை எவ்வெவ்வகையில் அடக்குவது என்பதற்கான போதுமான விளக்கங்கள் சங்க அகப்பாடல்களில் இல்லை எனலாம். இந்நிலையில் சங்க அகப்பாடல்களில் காணப்படும் தற்காலத்திலும் வழக்கில் இருந்துவரும் பூச்சியினங்களின் பெயர்கள் நேரடியாகக் காணப்படுவது எந்தச் சிரமுமின்றிப் பூச்சியினங்களை அடையாளப்படுத்துகின்றன. ஈயல், மின்மினி போன்றவற்றை இதற்குக் காட்டாகக் கூறலாம்.

**ஈயல்**

சங்க அகப்பாடல்களில் ஈயல் எனும் பூச்சியினம் சுட்டப்பட்டுள்ளது. தற்காலத்தில் இப்பூச்சி ‘‘ஈசல்’’ என்று சுட்டப்பட்டுவதைக் காணமுடிகின்றது. ஈயல் என்பது சங்ககால வழக்கமாகும்.

‘‘நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி’’[680]

‘‘நெடுஞ்செம் புற்ற மீயல் பகர’’[681]

‘‘ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த’’[682]

ஆகிய பாடலடிகள் ஈயலைக் குறித்தமைவதைக் காணலாம். இப்பாடலடிகளில் ஈயல் புற்றுகளிலிருந்து வெளிப்படுவது காட்டப்படுகின்றது. இப்புற்றுகள் கறையான் புற்றுகளாகும். மழைக்காலங்களில் ஈயல்கள் கறையான் புற்றுகளிலிருந்து வெளிவருவதைக் காணலாம். உண்மையில் ஈயல்கள் கறையான்களின் முதிர்பருவ உருமாற்றமேயாகும். இதனை ‘‘முதிர்ந்த கறையான்களே ஈசல்களாகப் பரிணமிக்கின்றன’’[683] எனும் கூற்றால் அறியலாம். இறகுகளற்ற கறையான்களிலிருந்து உடலமைப்பிலும் வேறுபட்டு இறகுகளுடன் பறக்கும் கறையான்களாகிய ஈயல்களை மக்கள் தனித்த பூச்சியினமாகவே பார்க்கின்றனர். இவ்வாறான போக்கு சங்ககாலத்திலேயே இருந்துள்ளது போலும். இதனாலேயே ‘ஈயல்’ என்ற தனித்த பெயர் சங்கப்பாடல்களில் காணப்படுகின்றன. தற்காலத்திலும் மக்கள் ஈயலை உணவுப்பொருளாகப் பயன்படுத்துகின்றனர். இந்நிலை சங்க காலத்திலும் இருந்துவந்துள்ளதை ‘ஈயல் கெண்டி’ எனும் பதம் காட்டுகின்றது.

**எறும்பு**

சுள்ளெறும்பு, செவ்வெறும்பு, கட்டெறும்பு, சாமியெறும்பு எனப் பலவகைப்பட்ட எறும்புகளை நாம் காண்கிறோம். சுளக்கை என நாட்டுப்புறங்களில் சுட்டப்படும் பெரிய எறும்பு வகைகளையும் காண்கிறோம். சங்க அகப்பாடல்களில் எறும்பு பற்றிய விரிவான, அதிகப்படியான பதிவுகள் இல்லை எனலாம். நிலத்தில் வளை தோண்டி வாழும் எறும்பை,

‘‘எறும்பி யளையிற் குறும்பல் கனைய’’[684]

‘‘நுண்பல் எறும்பு கொண்டளைச் செறித்த
வித்தா வல்சி வீங்குசிலை மறவர்’’[685]

ஆகிய பாடலடிகள் காட்டுகின்றன. இவ்வகை எறும்புகள் சாதாரணமாக அனைத்து இடங்களிலும் நிலத்தில் துளையிட்டு வளையமைத்து வாழ்வனவாகும். சுள்ளெறும்பு, செவ்வெறும்பு போன்றவை இவ்வகையினவாகும். ‘நுண் பல்லெறும்பு’ என்பது நுண்ணிய உடலமைப்பு கொண்ட எறும்புகளைச் சுட்டுகின்றது. இதனால் செவ்வெறும்பு போன்ற சிறிய எறும்புவகையினை இது குறிக்கின்றதெனலாம். சற்று பெரிய எறும்பான கட்டெறும்பும் நிலத்தில் வளையமைத்துத் தங்கும் என்பது குறிப்பிடத்தக்கது. மா, பலா போன்ற மரங்களிலும் சிலவகைக் கொடித் தாவரங்களிலும் அவற்றின் இலையை இணைத்துக் கூடமைத்து வாழும் ‘‘முயிறு’’ எனும் எறும்பு வகையினை,

‘‘பழனப் பாகல் முயிறுமூசு குடம்பை’’[686]

எனும் பாடலடி காட்டுகின்றது. இது பாகற் கொடியில் கூடமைத்த எறும்பினைக் காட்டுகின்றது. இவ்வெறும்புகள் தாவர இலைகளில் கூடமைத்து வாழும் தன்மை கொண்டன. தாவரங்களில் இலைகள் விழும் காலங்களில் இவற்றின் இனம் குறைகின்றது என்கின்றனர் சூழலியலாளர்கள். இதனை ‘‘இலையுதிர்க் காடுகளில் இலைகள் கொட்டும் வேனிற் பருவத்தில் முயிறுகள் என்னும் எறும்புகளின் எண்ணிக்கை குறையும். காரணம் இவை கூடுகட்டி வசிக்க இவற்றுக்கு இலைகள் தேவைப்படும்’’[687] எனும் நக்கீரன் கூற்றால் அறியலாம். இவ்வகையான எறும்புகளை மரங்கள் உள்ள இடங்களில் காணமுடியும்.

இதனை ‘‘செஞ்சுளக்கை’’ என நாட்டுப்புற மக்கள் சுட்டுகின்றனா். இவ்வாறு இருவகையான எறும்பு வகைகளைச் சங்க அகப்பாடல்கள் சுட்டுவதைக் காணமுடிகின்றது.

**கறையான்**

சங்க அகப்பாடல்களில் கறையான் ‘‘சிதலை’’ என்ற பெயரில் சுட்டப்படுகின்றது. உரையாசிரியா்களின் உரைவழியும் அகராதிகளின் வழியும் இது தெளிவாகின்றது. சா. அனந்தகுமாா் கறையானின் பலபெயா்களில் சிதல், சிதலை என்ற பெயா்களையும் சுட்டிச்செல்வது குறிப்பிடத்தக்கது.[688] சங்க அகப்பாடல்களில் கறையான் பற்றிய பதிவுகளை,

‘‘நீடுசெயற் சிதலைத் தோடுபுனைந்து எடுத்த
அரவாழ் புற்றம் ஒழிய’’[689]
‘‘புல்லளைப் புற்றின் பல்கிளைச் சிதலை
ஒருங்கமுயன் றெடுத்த நனைவாய் நெடுங்கோடு’’[690]
‘‘சிதலை செய்த செந்நிலைப் புற்றின்’’[691]
‘‘சிறுபுன் சிதலை சேண்முயன் றெடுத்த
நெடுஞ்செம் புற்றத்து’’[692]

போன்ற பாடலடிகளால் அறியலாம். கறையான்கள் கூட்டமாக வாழ்வதையும், அவை ஒருங்கு முயன்று தொடா் செயல்பாட்டால் புற்றினை அமைப்பதையும், அப்புற்றில் அரவு புகுதலையும் மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. கறையான்களின் முதிா்ந்த நிலை ஈசல் எனினும் அது தனிப்பட்ட பூச்சியினமாகப் பாா்க்கப்படுவதாலும் சிதலையாகிய கறையானிலிருந்து மாறுபட்டு ‘‘ஈயல்’’ என்று பெயா் பெற்றமையானும் அது தனித்துக் கூறப்பட்டது.

**சிள்வீடு**

பேச்சு வழக்கில் சிள்வண்டு எனச் சுட்டபப்டும் பூச்சி சங்க அகப்பாடல்களிலும் சுட்டப்பட்டுள்ளது. மரங்கள் நிறைந்த பகுதிகளில் நாம் நுழையும் பொழுது ஓயாமல் ஒரு சத்தம் கேட்டுக்கொண்டே இருக்கும். இது மரங்களில் ஒட்டிக்கொண்டு சத்தமிடும் சில்வண்டின் சத்தமாகும். சங்க இலக்கியம் இப்பூச்சியைச் சிள்வீடு என்று பதிவுசெய்துள்ளது. இதனை,

‘‘உலவை ஓமை ஒல்குநிலை ஒடுங்கிச்
சிள்வீடு கறங்குஞ் சேய்நாட்டு அத்தம்’’[693]
‘‘சிள்வீடு கறங்கும் சிறியிலை வேலத்து’’[694]
‘‘தோ்மணி இசையில் சில்வீடு ஆா்க்கும்’’[695]
‘‘வறன்மரம் பொருந்திய சிள்வீ டுமணா்’’[696]

ஆகிய பாடலடிகளின் வாயிலாக உணரலாம். பட்ட மரங்களிலும் ஒட்டிக்கொண்டு சத்தமிடும் சிள்வீட்டின் தன்மை இப்பாடலடிகளில் தெளிவுறக் காட்டப்பட்டுள்ளது. சிள்வீடு

ஒலியெழுப்பும் முறைபற்றி ‘‘உலகில் 2400 வகைச் சிள்வண்டுகளில் (cicada) சில மட்டுமே ரீங்காரம் இடுகின்றன. தமது விரைப்பான சிறகுகளைத் தமது ஓட்டு உடல்களின் மீது அசாதாரண வேகத்தில் மோதி அதிர வைப்பதன் மூலம் ஆண்வண்டுகள் ஒத்த ஸ்தாயியில் ஒலி எழுப்புகின்றன’’[697] என ச. முகமது அலி விளக்குகின்றார். சிள்வீட்டின் ஒலியைக் ‘‘கறங்குதல்’’ எனச் சங்க அகப்பாடல்கள் சுட்டுகின்றன.

**சுரும்பு**

பொதுவாகச் சுரும்பு என்ற சொல்லிற்கு ஆண்வண்டு எனவும், வண்டு எனவும் உரையாசிரியர்களின் உரையும், அகராதிகளும் பொருள் கூறுகின்றன. ஒரே பாடலில் ஒருசேர வண்டு, சுரும்பு ஆகியன சுட்டப்படுவதால் இரண்டும் வேறுவேறு பூச்சியினமாக இருக்கலாம் என்பது ஆய்வாளர் கருத்தாகும். சங்க அகப்பாடல்களில் சுரும்பு பற்றிய பதிவுகளை

‘‘சுரும்புணக் களித்த புகர்முக வேழம்’’[698]

‘‘களிச்சுரும் பரற்றுங் காமர் புதலின்’’[699]

‘‘தளையவிழ்பூஞ் சினைச்சுரும் பியாழ்போல் இசைப்பவும்’’[700]

‘‘அரும்பற மலர்ந்த ஆய்பூ மராஅத்துச்
சுரும்புசூழ் அலரி’’[701]

போன்ற பாடலடிகளில் காணலாம். சுரும்பு வேழத்தின் மதநீரினை உண்பதாகவும் மரங்களின் பூக்களில் தேனை உண்பதாகவும் காட்டப்படுகின்றது. சுரும்பின் ஒலி ‘‘அரற்றுதல்’’ எனச் சுட்டப்படுகின்றது. இது யாழ் போல் இசைப்பதாகக் கூறப்பட்டுள்ளது. இது நீர்வாழ் தாவரங்களான தாமரை, குவளை போன்றவற்றின் தேனை உண்பதும் காட்டப்பட்டுள்ளது. வண்டுடன் சேர்த்துக் குறிக்கப்படும் ஆர்த்தல், இமிர்தல் போன்ற பதங்கள் சுரும்புடனும் சேர்த்துச் சுட்டப்படுகின்றது.

**செம்மூதாய்**

தற்காலத்தில் ‘‘வெல்வெட் பூச்சி’’ என சுட்டப்படும் மென்மையான துணியை ஒத்த மேற்புறத்தை உடைய பூச்சியைச் சங்க இலக்கியம் செம்மூதாய், மூதாய், ஈயல் மூதாய் எனச் சுட்டியுள்ளது. இதன் நிறம் நன்கு சிவந்த நிறமாகக் காணப்படும். இதனைச் சுட்டும் வகையில் ‘‘கடுஞ்செம்மூதாய்’’ எனச் சங்க அகப்பாடல்கள் சுட்டுகின்றன. மிகுந்த கோபத்தினைக் கடுங்கோபம் என்று சுட்டுவதுபோல செம்மையினை ‘‘கடுஞ்செம்மை’’ எனச் சுட்டுகின்றன. தற்காலத்தில் இப்பூச்சியைத் தம்பலப்பூச்சி, இந்திரகோபம் என்றெல்லாம் சுட்டுவர். இதனை ‘‘இப்பொழுது ‘தம்பலப்பூச்சி’ என்றும், ‘இந்திரகோபம்’ என்றும் கூறப்படுகின்ற மென்மையான ஓர் அரிய பூச்சியைப் பழங்காலத்தார் ‘மூதாய்’ என்று வழங்கினர்’’[702] எனும் பி.எல்.சாமியின் கூற்றால் அறியலாம். சங்க அகப்பாடல்களில் செம்மூதாய்

''தலைநாட் கெதிரிய தண்பெயல் எழிலி
அணிமிகு கானத்து அகன்புறம் பறந்த
கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டும்
நீவிளை ஆடுக''[703]

''பெய்புல மூதாய்ப் புகர்நிறத் துகிரின்''[704]

''தண்பெயல் பொழிந்த பைதுறு காலைக்
குருதி உருவின் ஒண்செம் மூதாய்
பெருவழி மருங்கில் சிறு பல வரிப்ப''[705]

''அரக்குநிற உருவின் ஈயல் மூதாய்''[706]

முதலிய பாடலடிகளில் காட்டப்படுகின்றன. மேற்கண்ட பாடலடிகளில் செம்மூதாயானது சிறப்புற கால இயல்பின் அடிப்படையில் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது எனலாம். இப்பூச்சியினத்தை ஆண்டு முழுமையும் காண்டல் இயலாதது. மழைக்காலத் தொடக்கத்தில் மட்டும் காணப்படும் பூச்சியினமாகும். இது திடீரென்று தோன்றி விரைவாகவே மறைந்துவிடும் தன்மை கொண்டது. இது தோன்றும் காலத்தில் அதிக எண்ணிக்கையில் தோன்றி காட்டு நிலத்தில் அருகருகே ஊர்ந்து செல்வது கண்கொள்ளாக் காட்சியாக அமையும். இவ்வாறு மழைக்காலத்தில் முதல் மழைக்குப் பின் காட்சிதரும் இயல்பை 'தலைநாட் கெதிரிய தண்பெயல்' என்ற தொடர் காட்டுகின்றது. இது இப்பூச்சியின் இயல்பை நன்குணர்ந்த புலவரின் கூற்றாக அமைகின்றது எனலாம். மேலும் தற்காலத்திலும் இப்பூச்சியைச் சிறார் பிடித்து விளையாடுவது இயல்பு. இத்தன்மை சங்க அகப்பாடலிலும் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. சங்க அகப்பாடல்களில் செம்மூதாயின் பதிவானது காலநிலை, இயற்கையின் இயக்கம் ஆகியவற்றை உணர்ந்த புலவர்களின் பதிவாக அமைந்துள்ளது என்றால் அது மிகையாகாது.

**தும்பி**

தற்காலத்தில் அறிவியலாளர்கள் தும்பி எனும் பூச்சியாகத் தட்டாம்பூச்சி என நாட்டுப்புறங்களில் சுட்டப்படும் பூச்சியைக் குறிக்கின்றார்கள். கிராமப்புற மக்கள் தும்பி என்ற பெயரில் கருமை நிறத்தில் காணப்படும் பூச்சியை குறிப்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. சங்க அகப்பாடல்களில் ''தும்பி'' என்ற பெயரில் சுட்டப்படும் பூச்சியினம் தற்காலத்து அறிவியலாளர்கள் சுட்டும் தும்பியுடன் தொடர்புடையதாகத் தோன்றவில்லை. அறிவியலாளர்கள் தும்பி என்ற பெயரில் சுட்டும் தட்டான் பூச்சி தனது தலைப்பகுதியில் பெரிய கண்களைக் கொண்டு காணப்படும். தட்டாம்பூச்சியின் கண்களின் பெரிய அமைப்பை ''தும்பியின் தலை முழுவதும் அதன் கண்கள் பரவியுள்ளது''[707] எனும் கோவை சதாசிவத்தின் கூற்று விளக்கும். தலையின் முக்கால்வாசிக்குப் பரந்திருக்கும் கண்களுடன் கடித்துத் தின்னும் வாயமைப்புடன் தட்டான் பூச்சியின் தலையமைப்பு அமைந்திருக்கும். இதன் கழுத்தால் இணைக்கப்பட்ட மார்புக் கூட்டின் மேற்பகுதியில் இருப்புறங்களிலும் கண்ணாடி போல் தோற்றம் கொண்ட நீண்ட நான்கு சிறகுகள் பக்கத்திற்கு இரண்டாய்

அமைந்திருக்கும். மார்புப் பகுதியை ஒட்டி நீண்ட குச்சி போன்ற வால்பகுதி காணப்படும். இத்தட்டான் பூச்சிகள் சிகப்பு, கருப்பு என பல நிறங்களில் காணப்படும். இவை பூச்சியினங்களை உண்டு வாழும் உயிரினமாகும். ‘‘தட்டாம்பூச்சி சமஸ்கிருத மொழியில் தும்பா எனப்படுகிறது. இது ஆங்கிலத்தில் Dragon Fly ஆகும். இது ஒரு முழு அசைவ உண்ணி (Predator) உலகம் முழுவதும் சுமார் 5500ம், இந்தியாவில் 500ம் தட்டாம்பூச்சி வகைகள் உள்ளன. இவை மழைக்கால முடிவில் கோடிக்கணக்கில் பெருகி பூச்சிகளை துரத்திப் பிடித்து உண்ணுகின்றன. மேலும் சில பறவைகளுக்கு தாமும் இரையாகின்றன.[708] எனும் ச. முகமது அலியின் கருத்து தட்டாம்பூச்சியின் இயல்பினை விளக்குகின்றது. தும்பியெனச் சுட்டப்படும் தட்டாம்பூச்சியின் உடலமைப்பும் இயல்பும் சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் தும்பிக்கு பொருந்துவதாகத் தோன்றவில்லை. சங்கப்பாடல் சுட்டும் தும்பியின் உடலமைப்பானது நாவல் பழத்தினை ஒத்தது என்பதை,

‘‘பொங்குதிரை பொருத வார்மண லடைகரைப்
புன்கால் நாவற் பொதிப்புற இருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்
பல்கா லலவன் கொண்ட கோட் கூர்ந்து
கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்’’[709]

எனும் நற்றிணைப் பாடலடிகள் தெளிவுறக் காட்டுகின்றன. கடற்கரை மணலில் விழுந்த கரிய நாவல் பழத்தினைத் தனது இனப் பூச்சி எனக் கருதிய அங்கு பறந்து வந்த தும்பி நாவல் பழத்தினை மொய்க்க அப்போது அங்கு வந்த நண்டு நாவற்பழமெனக்கருதி தும்பியைப் பிடிக்க அப்பிடியிலிருந்து விடுபட முடியாததாய்த் தும்பி யாழோசை போன்று இமிர்ந்து பூசலிட்டது என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலடிகளில் நாவல் பழம் தன்னினத்தை ஒத்த வடிவுடையதாய் இருந்தமையான் தும்பி நாவலைக் கண்டு தன்னை ஒத்த தும்பி என மயங்கியது. தும்பி நாவற் பழத்தை ஒத்த நிறத்தையும் வடிவையும் பெற்றிருந்தமையான் நண்டு தும்பியை நாவற்பழமெனக் கருதி மயக்கமுற்றது. இதனால் சங்கப் பாடலில் சுட்டப்படும் தும்பி நாவல் போன்ற வடிவனையும் நாவல் போன்ற நிறத்தினையும் உடையது என்பது பெறப்படுகின்றது. இவ்வுடற்கூறமைவு பெரிய பெரிய கண்களையும் நீண்ட சிறகு மற்றும் வால்பகுதியைக் கொண்ட தட்டான் பூச்சிக்குச் சிறிதும் பொருந்துமாறில்லை. அடுத்ததாகத் தும்பியின் ரீங்காரம் சுட்டப்படுகின்றது. நண்டிடம் அகப்பட்ட தும்பி தன்னை விடுவிக்கும் முயற்சியில் சிறகடிக்க யாழோசை போன்ற ரீங்காரம் வெளிப்படுவதாக மேற்கண்ட பாடல் குறிப்பிடுகிறது. மேலும் தும்பி பூக்களைச் சுற்றும் பொழுது ரீங்காரம் செய்வதை,

‘‘வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணும் இருந்தும்பி
யாழ்கொண்ட இமிழிசை இயன்மாலை அலைத்தரூஉம்’’[710]

எனும் கலித்தொகைப் பாடலடிகளும் காட்டுகின்றன. தட்டாம்பூச்சி பறக்கும் பொழுது ஓசை எழுவதில்லை என்பதைக் கண்கூடாகக் காணலாம். தட்டாம்பூச்சி தனது சிறகுகளை அதிகமாக இயக்காமல் நீட்டியபடியே ஓசையின்றிப் பறக்கும் தன்மை கொண்டது.

இத்தகைய தட்டாம் பூச்சியைப் பார்த்து யாழிசையைப் போன்று ரீங்காரம் கேட்டதாகப் பதிவுசெய்வதற்குச் சங்கப்புலவர்கள் இயற்கையியல் அறிவற்றவர்களல்லர். எனவே பறக்கும் ஓசை அடிப்படையிலும் சங்க இலக்கியத் தும்பி தற்காலத்து பூச்சியியலாளர்களின் தும்பியுடன் ஒத்தமையவில்லை எனலாம். அடுத்ததாக பூச்சியியலாளர்கள் தட்டான் பூச்சியானது தன்னின உண்ணியாக அதாவது தன்னைப் போன்ற பூச்சியினங்களை மட்டும் உண்ணும் என்று கூறுகின்றனர். ஆனால் சங்க இலக்கியத் தும்பியானது பூக்களை நாடித் தாதும்பதை,

''சிலம்புடன் கமழு மலங்குகுலைக் காந்தள்
நறுந்தா தூதுங் குறுஞ்சிறைத் தும்பி
பாம்புமிழ் மணியிற் றோன்றும்''[711]

''பன்மலர்ப் பழனத்த பாசடைத் தாமரை
இன்மலர் இமிர்பூதுந் துணைபுணர் இருந்தும்பி''[712]

''தாதுண் தும்பி முரலிசை கடுப்ப''[713]

முதலிய பாடலடிகளால் தெளியலாம். மேலும் குறுந்தொகை கூறும் ''குறுஞ்சிறைத் தும்பி'' எனும் தொடர் நீண்ட சிறகினைக் கொண்ட தட்டான் பூச்சிக்குச் சற்றும் பொருந்தாததாகும். எனவே சங்க இலக்கியத்தில் சுட்டப்படும் தும்பி எனும் பூச்சியினம் தற்காலத்துப் பூச்சியியலாளரின் தும்பியாகிய தட்டான் பூச்சியாக இருக்கமுடியாது எனத் துணியலாம். தட்டானைக் குறிக்கும் சமஸ்கிருதச் சொல்லான 'தும்பா' என்பதைத் தும்பி எனக் குறித்ததன் விளைவாக இக்குழப்பம் ஏற்பட்டிருக்கலாம். மேலும் தற்காலத்துத் தட்டானே தும்பியாக இருப்பினும் சங்கச் சான்றோர் 'தும்பி' எனச் சுட்டுவது வேறுவகைப் பூச்சி என்பது தெளிவு. கிராமப்புறங்களில் நாவற் பழம் போல் கருமையும் நீலமும் கலந்த நிறத்தில் தோன்றும் அழகிய சிறகினையும் கரிய உடலமைப்பினையும் கொண்ட பூச்சியைத் 'தும்பி' என முதுமக்கள் சுட்டுவதைக் காணமுடிகின்றது. தற்காலத்தில் சிலர் இதைக் 'கருங்குளவி' எனவும் சுட்டுகின்றனர். இது பூக்களில் தாதுண்ணுவதையும் அப்பொழுது மெல்லிய ரீங்கார ஒலி எழுவதையும் கேட்கமுடியும். சங்க அகப்பாடல்களில் சுட்டபப்டும் தும்பி இப்பூச்சியினமாக இருக்க வாய்ப்புள்ளது எனலாம். இத்தும்பியின் தலைப்பகுதிக்கும் வயிற்றுப்பகுதிக்கும் இடைப்பட்ட பகுதியில் மஞ்சள் நிறமமைந்த ஒரு பூச்சியை நாட்டுப்புறமக்கள் ''கோதும்பி'' எனச் சுட்டுவது குறிப்பிடத்தக்கது. சங்க அகப்பாடலில் சுட்டபப்டும் தும்பியை அறியாது தட்டானைத் தும்பி எனச் சுட்டுவது நமது அறியாமையின் விளைவெனலாம்.

**தேனீ**

பூக்களில் உள்ள தேனைக் குடித்துத் தேனடையில் சேகரிக்கும் பூச்சிகளை நாம் 'தேனீக்கள்' என்கின்றோம். நாட்டுப்புறங்களில் இப்பூச்சிகளைத் தேன்பூச்சி எனச் சுட்டுவர். இயற்கையாக அல்லாமல் செயற்கையாகவும் தேன் உற்பத்திக்காகத் தேனீக்கள் மனிதர்களால் வளர்க்கப்படுகின்றன. மலைத்தேனி, கொம்புத்தேனி, கொசுத்தேனி,

அடுக்குத்தேனி என நான்குவகைத் தேனீக்கள் இந்தியாவில் காணப்படுவதாக சூழலியலாளர்கள் கூறுகின்றனர். சில சங்க அகப்பாடல்களில் தேனீக்கள் சுட்டப்படுகின்றன. சங்க அகப்பாடல்களைப் பொறுத்தமட்டில் தேனீயானது 'தேன்' என்றே குறிக்கப்படுகின்றது. தேனீக்களில் மலைத்தேனி எனச் சுட்டப்படுவது மற்ற தேனீக்களைவிட பெரியதாகக் காணப்படும். இதனை,

"பெருந்தே னினிழக்கு நாடனொடு நட்பே"[714]

"பெருந்தேன் கண்படு வரையின்"[715]

"மயில்க ளாலப் பெருந்தே னிமிர"[716]

எனும் சங்க அகப்பாடலடிகள் பெருந்தேன் எனச் சுட்டுவதைக் காணலாம். உருவத்தில் பெரிய தேனியை இப்பாடலடிகள் 'பெருந்தேன்' எனச் சுட்டுவதைக் காணலாம். இது மலைத்தேனியைக் குறிக்கின்றது. தேனி 'தேன்' என்று சுட்டப்படுவதை "பெருந்தேனிமிர" எனும் சொல்லால் அறியலாம். இமிர்தல் என்பது பூச்சியின் ரீங்காரத்தைக் குறித்துவரும் சொல்லாகும். 'தேன் இமிர' என்பது சுவைக்கின்ற தேன் சத்தமிடுகின்றது எனச் சுட்டுவதாக அமையாது என்பது தெளிவு. எனவே இங்கு தேன் என்பது சத்தமிடும் தேனியைக் குறிக்கிறது என்பது விளங்கும்.

"தேன்செய் பெருங்கிளை இரிய"[717]

"தேன்செய் இறாஅல் துளைபடப்போகி"[718]

"தேனிமிர் நறுஞ்சினைத் தென்றல் போழ"[719]

ஆகிய பாடலடிகளில் தேனி என்பது பொதுவாகச் சுட்டப்பட்டுள்ளது. "தேன்செய் பெருங்கிளை" என்பது தேனைச் சேகரிக்கும் பெரிய கூட்டமாகிய தேனீக்களைச் சுட்டுகின்றது. "தேன்செய் இறால்" என்பது தேனீக்களால் கட்டப்பட்டுள்ள இறாலைக் குறிக்கின்றது. இறால் என்பது இங்கு தேனடையைக் குறித்து வந்தது. தேனீ பொதுவாகப் பறவை எனச் சுட்டப்படுவதையும் தேனடையாகிய இறாலின் அமைப்பையும்

"அகலிலைக் காந்தன் அலங்குகுலைப் பாய்ந்து
பறவை இழைத்த பல்கண் இறால்
தேனுடை நெடுவரை"[720]

எனும் நற்றினைப் பாடலடிகள் சுட்டுகின்றன. காந்தளின் குலைகளுள் பாய்ந்து பல்கண்களாகிய தேனைச் சேமிக்கும் அறைகளைக் கொண்ட இறாலில் தேனைச் சேமிக்கும் பறவை தேனியே ஆகும். இவ்வாறு சங்க அகப்பாடல்களில் தேனீ என்பது தேன் என்றும் பறவை என்றும் சுட்டப்படுகின்றன. பெருந்தேனியாகிய மலைத்தேனி 'பெருந்தேன்' எனச் சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**மிஞிறு**

சங்க அகப்பாடல்களில் "மிஞிறு" எனும் சொல் பூச்சிவகையினைக் குறிப்பதாகப் பயின்று வந்துள்ளதைக் காணமுடிகின்றது. அகராதிகளில் இதற்கு வண்டு, தேனீ என்று

பொருளுரைக்கப்பட்டுள்ளது. உரையாசிரியர்கள் இதனை வண்டு என்றோ தேனீ என்றோ சுட்டாமல் ''மிஞிறு'' என்றே சுட்டுகின்றார்.

''நரம்பின் தீங்குரல் நிறுக்குங் குழல்போல்
இரங்கிசை மிஞிறொடு தும்பிதா தூத''[721]
''வரிஞிமி றிமிர்ந்தார்ப்ப இருந்தும்பி யியைபூத''[722]

எனும் கலித்தொகையடிகளில் மிஞிறொடு தும்பி தாதுண்பது சுட்டப்படுவதால் இது தும்பியினின்றும் வேறானது என்பது அறியவருகின்றது. மேலும் இதுவும் தும்பிபோன்று ரீங்காரம் செய்வதும் மேற்கண்ட பாடலடிகளால் காட்டப்படுகின்றது.

''மீனேற்றுக் கொடியோன்போன் மிஞிறார்க்குங் காஞ்சியும்''[723]
''படியுண்பார் நுகர்ச்சிபோற் பல்சினை மிஞிறார்ப்ப''[724]
''வரிஞிமி றார்க்கும் வாய்புகு காடா அத்து
பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றெருத்தல்''[725]

எனும் பாடலடிகளிலும் ''மிஞிறு'' சுட்டப்படுவதைக் காணலாம். மேற்கண்ட பாடலடிகளில் ''வரிஞிமிறு'' எனச் சுட்டபப்டுவதைக் காணலாம். இதில் 'மிஞிறு' என்பதே 'ஞிமிறு' எனச் சுட்டப்படுகின்றது. ''மிஞிறு என்பது ஞிமிறு என்றாயிற்று''[726] எனும் ந.மு. வேங்கடசாமி நாட்டாரின் விளக்கத்தால் இதனை அறியலாம். மிஞிறு யானையின் மதநீரில் மொய்ப்பதாக அகநானூறு கூறுகின்றன. இதன் உடலில் வரிகள் காணப்படுவதும் சுட்டப்பட்டுள்ளது. மேற்கண்ட அகநானூற்றுச் செய்திகளின் வழி மிஞிறு எனும் பூச்சி பூக்களிலும் யானையின் மதநீரிலும் மொய்க்கும் என்பது தெரிகின்றது. மேற்கொண்டு இது இன்ன பூச்சிதான் என்று துணியுமளவிற்கு விளக்கங்கள் சங்க அகப்பாடல்களில் இல்லை.

**மின்மினிப் பூச்சி**

சங்க அகப்பாடல்களில் மின்மினிப் பூச்சி 'மின்மினி' எனச் சுட்டப்படுகின்றது. இதனை,

''பன்மர உயர்சினை மின்மினி''[727]
''துளிதலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்
மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்''[728]
''சிறுபன் மின்மினி''[729]

எனும் சங்க அகவிலக்கிய அடிகள் மூலம் அறியலாம். மழைக்காலங்களில் புற்றுப் பகுதிகளிலும், மரங்கள் காணப்படும் பகுதிகளிலும் மின்மினிப் பூச்சிகள் காணப்படுவதை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. சிறுத்த உடலமைப்பைக் கொண்ட சிறிய மின்மினிப்பூச்சிகள் பல சேர்ந்து கூட்டமாக வெளிப்படுவதை ''சிறுபன் மின்மினி'' எனும் தொடர் காட்டுகின்றது. இப்பாடலடிகளில் மின்மினிப்பூச்சிகள் இயல்பாகக் காட்டப்படுவதை நாம் உணரலாம்.

**நுளம்பு**

நுளம்பு எனும் பூச்சிவகை உயிரினம் குறுந்தொகைப் பாடலில் சுட்டப்பட்டுள்ளது. நுளம்பு என்பதற்குக் கழகத்தமிழ் அகராதி ‘கொசுகு, மின்மினி’ என விளக்கம் தந்துள்ளது.[730] வாடைக்காற்று வீசும், கூதிர்கால நள்ளிரவில் நுளம்பு ஒலிக்குந்தொறும் ஆவானது அலைவதாகக் குறுந்தொகை கூறுவதை,

“தூதை தூற்றுங் கூதிர் யாமத்
தானுளம் புலம்புதொ றுளம்பும்”[731]

எனும் பாடலடிகளால் அறியலாம். மேற்கண்ட அடிகளில் இரண்டாவது அடியை ‘ஆன்நுளம்பு உலம்புதொ றுளம்பும்’ என உரையாசிரியர்கள் விளக்கிக் கூறுகின்றனர். இதில் காணப்படும் நுளம்பு என்ற சொல்லிற்கு உ.வே.சா. அவர்கள் “நுளம்பு-ஈ; இங்கே மாட்டுஈ என விளக்கம் தந்துள்ளார்.”[732] தமிழண்ணல் அவர்களும் இவ்வாறே விளக்கியுள்ளர்.[733] இவர்கள் இருவரும் சுட்டும் பொருண்மை கழகத்தமிழ் அகராதியில் இடம்பெறாதது குறிப்பிடத்தக்கது. நுளம்பு எனும் சொல் இலங்கைத் தமிழரிடத்தில் இன்றும் வழக்கில் இருந்து வருவதை அறியமுடிகின்றது. அங்கு இச்சொல் கொசுவினைச் சுட்டுகின்றது. ஆவின் அருகினில் நுளம்பு ஆடுவதைக் குறுந்தொகை காட்சிப்படுத்துகின்றது. மாட்டீ, கொசு இரண்டுமே மாட்டினருகில் சுற்றுவதைக் காணமுடியும். நுளம்பு என்பதற்கு சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதி “சிறுகொசுகு, பெருங்கொசுகு என பொருள் சுட்டுகின்றது.”[734] இதையே, மெய்யப்பன் தமிழகராதியும் சுட்டுகிறது.[735] இவ்விரு அகராதிகள் மற்றும் கழகத்தமிழ் அகராதி அடிப்படையில் நுளம்பு என்பதைக் கொசு எனத் துணியலாம். ஆனால் நுளம்பு எனும் பதம் தமிழகத்தில் வழக்கில் இல்லாத நிலையில் உரையாசிரியர்கள் சுட்டும் மாட்டு ஈயினை முழுமையும் ஒதுக்குதற்கில்லை. எனவே நுளம்பு என்பதை மாட்டீ அல்லது கொசு என ஐயுறவுடனேயே அணுகவேண்டியுள்ளது எனலாம்.

**வண்டு**

வண்டு என்பது பல்வேறு உள்ளினங்களைக் கொண்ட தனித்த பூச்சியினமாகும். பொன்வண்டு, சாணவண்டு எனப் பல வண்டுகளை வரிசைப்படுத்தலாம். மின்மினிப் பூச்சியும் வண்டினத்தைச் சார்ந்த பூச்சியாகும். வண்டுகளின் மேற்புறத்தில் மெல்லிய இறக்கைகளுக்கு மேலாக இறக்கை வடிவில் ஓடுபோன்ற பாதுகாப்புக் கவசம் காணப்படும். பறக்கும் பொழுது இவ்வோடு போன்ற சிறகு மேலே தூக்கிக்கொள்ள உள்ளே சிறகுகள் படபடத்து வண்டுகள் பறக்கும். சங்க அகப்பாடல்களில் மற்ற பூச்சிகளைக் காட்டிலும் வண்டுகள் மிகுதியும் சொல்லப்பட்டுள்ளது எனலாம். பல்வகை வண்டினங்களுள் தனித்த வண்டினம் சுட்டபப்டாமல் பொதுவாக வண்டு என்று சுட்டப்படுவதைக் காணமுடிகின்றது.

“கானே பூமலர் கஞலிய பொழிலகந் தோறும்
தாம்அமர் துணையொடு வண்டிமி ரும்மே”[736]

"பொய்கை ஆம்ப லணிநிறக் கொழுமுகை
 வண்டுவாய் திறக்கும் தண்டுறை யூரனொடு"[737]

"நறுந்தண் சிலம்பி னாறுகுலைக் காந்தட்
 கொங்குண் வண்டிற் பெயர்ந்துபுற மாறிநின்"[738]

"தாதுதேர் வண்டின் கிளைபட"[739]

எனும் பாடலடிகளில் வண்டு பூக்களை மொய்ப்பதும் அவற்றின் தேனை உண்பதும் காட்டப்படுகின்றது. இதனால் இப்பாடலடிகளில் சுட்டப்படும் வண்டுகள் தேனை உண்டு வாழும் வண்டுவகை என்பது விளங்கும். இது போன்று சங்க அகப்பாடல்கள் பலவற்றில் இவ்வகை வண்டுகள் காட்டப்படுகின்றன.

"வரிவண் டூத வாய்நெகிழ்ந் தனவே"[740]

"பொறி வரிச் சிறைய வண்டின மொய்ப்ப"[741]

"பல்வரி யினவண்டு புதிதுண்ணும் பருவத்து"[742]

"பொறிவரி யினவண் டார்ப்ப"[743]

எனும் பாடலடிகளில் வண்டுகள் தம் உடலிலும், சிறகிலும் வரிகளையும், புள்ளிகளாலாய வரிகளையும் கொண்டு காணப்படுவது சுட்டப்படுகின்றது. வண்டுகளின் சிறகானது அழகாகவும், மென்மையாகவும், உள்ளார்ந்தும் இருப்பதை 'அஞ்சிறை'[744], 'மென்சிறை'[745] என்ற சொற்களின் மூலம் காட்டப்படுகின்றது. வண்டுகள் பல சேர்ந்து தேன் உண்பதும் அவ்வாறு தேனுண்ணும் பொழுது தோன்றும் ரீங்காரமும் பல பாடல்களில் சுட்டப்பட்டுள்ளன. சிதர்[746], பிரசம்[747] ஆகிய சொற்கள் வண்டினத்தைச் சுட்டுவதாக உரையாசிரியர்களால் சுட்டப்படுகின்றது. இவை பூக்களில் தாதுண்ணும் தன்மை இனமாக மொய்த்தல் போன்ற காட்சிகள் சங்க அகப்பாடல்களில் காட்டப்பட்டுள்ளன.

மற்ற உயிரினங்களின் பதிவுகளைக் காட்டிலும் பூச்சிகளைப் பற்றிய பதிவுகளில் இது இன்ன வகை, இது இன்ன பூச்சி எனத் தெளிவாக அறியும் விதமான பதிவுகள் குறைவு என்று தோன்றுகின்றது. இதற்கு நாம் சரியாக உணர்ந்துகொள்ளும் அளவிற்கு மரபறிவுடன் இல்லை என்பதும் ஒரு காரணமாகும். இம்மரபறிவுக் குறைபாட்டின் காரணமாக உரையாசிரியர்களும் வெவ்வேறு பூச்சியினங்களை 'வண்டு' எனச் சுட்டியுள்ளதைக் காணமுடிகின்றது. இந்நிலையில் சங்க அகப்பாடல்கள் அவற்றைத் தனித்து வகைப்படுத்தி அறிந்துகொள்ளத் துணைசெய்யும் குறிப்புகளைத் தம்கத்தே கொண்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. சில பூச்சியினங்களின் தன்மைகளைத் தெளிவுறக் காட்டும் பதிவுகளையும் காணமுடிகின்றது. இவை பூச்சிகளை உற்றுநோக்கியுணர்ந்த தமிழ்ச்சான்றோர்களின் அறிவைக் காட்டுவதாக அமைகின்றன.

**வேறுசில உயிரினங்கள்**

தாவரங்கள், விலங்குகள் என்ற இருவகைப் பகுப்பினுள் விலங்குகள், ஊர்வன, பறவைகள், பூச்சிகள் ஆகியன விலங்கு எனும் பகுப்பினுள் அடங்குகின்றன. இப்பகுப்பினுள் மேலும் சில உயிரினங்கள் காணபப்டுகின்றன. நண்டு, தேரை, தவளை,

சங்கு, நத்தை, சிப்பி, சிலந்தி போன்ற உயிரினங்கள் விலங்கு எனும் பகுப்பினுள் விலங்கு, ஊர்வன, பறவை, பூச்சி என்ற தொகுதியிலிருந்து மாறுபட்டு இருவாழ்வி, மெல்லுடலி, கனுக்காலி எனும் தொகுதியில் அறிவியல் அடிப்படையில் காட்டப்படுகின்றன.

**தவளை, தேரை**

தவளை, தேரை ஆகியன உலகின் பல்வேறுபட்ட பகுதிகளிலும் காணப்படுகின்றன. இவை பல்வேறு வகையினவாகக் காணப்படுகின்றன. தவளை, தேரை ஆகியன அவை வாழும் இடத்தினை அடிப்படையாகக் கொண்டு 'இருவாழ்வி' என அழைக்கப்படுகின்றன. இவை நிலம், நீர் ஆகிய இருவகைப்பட்ட வாழிடங்களிலும் வாழ்கின்றன. இதனாலேயே இவை இருவாழ்விகள் எனும் பகுப்பினுள் காணப்படுகின்றன. ஊர்வன வகையில் அடங்கும் முதலை, ஆமை போன்றவனவும் நிலம் மற்றும் நீரில் வாழும் தன்மையுடையன. எனினும் அவை அவற்றின் ஊர்ந்து செல்லும் தனித்தன்மையால் 'ஊர்வன' எனும் பகுப்பிற்குள் அடக்கிக் காட்டப்பட்டன. தவளை ஊர்வன எனும் பகுப்பினுள் அடங்கும் தன்மையற்றது. எனவே தவளை தனித்துக் கூறப்படுகின்றது. சங்க அகப்பாடல்களில் தவளை 'நுணல்' எனும் பெயரில் சுட்டப்படுகின்றது. பழமையான இலக்கியங்களில் தவளை என்ற பெயர் சுட்டப்படாது 'நுணல்' எனும் பெயரிலேயே சுட்டப்படுவது குறிப்பிடத்தக்கது. தவளை என்பது பிற்கால வழக்கமாகும்.

"உடும்பு கொரீஇ வரினுணல் அகழ்ந்து"[748]

"வரிநுணல் கறங்க தேரை தெவிட்ட"[749]

எனும் பாடலடிகளில் நுணல் பற்றிய பதிவுகளைக் காணமுடிகின்றது. பொதுவாக நமது இல்லினருகில் காணப்படும் தவளைகள் சொரசொரப்பான முதுகுப்புறத்தை உடையனவாகக் காணப்படும். ஒரே நிறமாகக் காணப்படும். சில வேளைகளில் வேறுபட்ட தவளைகளையும் காணமுடியும். மேற்கண்ட நற்றிணைப் பாடலடியில் "வரிநுணல்" எனச் சுட்டப்படுவது உடலில் வரியை உடைய நுணல் எனப் பொருள்படுகின்றது. இது வரியை உடைய தோற்றங்கொண்ட ஒருவகைத் தவளையைச் சுட்டுகின்றதெனலாம். தவளையின் கத்தும் ஓசையை "கறங்குதல்" எனச் சுட்டப்படுவதை ஐங்குறுநூறு காட்டுகின்றது. தேரையின் சத்தத்தினைத் தெலிட்டல் என்கிறது. தேரை காணப்படும் சூழ்நிலை,

"அவறொறுந் தேரை தெவிட்ட"[750]

எனும் பாடலடி காட்டுகின்றது. முல்லை நிலத்தின் பள்ளங்கள் தோறும் தேரை தெவிட்டுவதாக இப்பாடலடி கூறுகின்றது.

"வேனில் தேரையின் அளிய
காண விடுமோ தோழியென் நலனே"[751]

எனும் பாடலடியில் வேனில் காலத்தில் தேரை மணலுள் முழுகிக்கிடப்பதுபோல தலைவியின் நலன் தனது உடலுள் அடங்கியிருப்பதாகக் கூறப்படுகிறது. இதனால் தேரை மணலுள் மறைந்துறையும் என்பது பெறப்படுகின்றது. ஒரே இனமாகிய தேரையும்,

தவளையும் அதன் உடற்கூறு கொண்டும் தனித்தன்மை கொண்டும் பிரித்தறியப்படுகிறது. இவ்விரு உயிரினங்களும் கத்தும் தன்மையில் வேறுபடுவதும் கூட நுட்பமான முறையில் சங்க அகப்பாடல்களில் பதவு செய்யப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**சிலந்தி**

தற்காலத்தில் 'சிலந்தி' எனச் சுட்டப்படும் பூச்சியைச் சங்க அக இலக்கியங்கள் 'சிலம்பி' எனச் சுட்டுகின்றன. எட்டுக்கால் பூச்சியினை ஒத்த தோற்றமுடைய சிலந்தியை உயிரிநூல் அறிஞர்கள் பூச்சி வகையில் சேர்ப்பதில்லை. எட்டுக்கால் பூச்சி, சிலந்தி ஆகிய இரண்டு உயிரியையும் 'கணுக்காலி' என்ற வகையில் அடக்குகின்றனர். இவை பூச்சிகளுக்குண்டான அடிப்படைத் தன்மையான தலை, மார்பு, வயிறு ஆகிய பகுப்புகளைக் கொண்ட உடலமைப்பைக் கொண்டிறாததே இதற்குக் காரணமாகும். சங்க அகப்பாடல்களில் சிலந்தி பற்றிய செய்திகளை

"கானப் புறவின் சேவல் வாய்நூற்
சிலம்பி அஞ்சினை வெரூஉம்"[752]

"யானை கொண்ட துகிற்கொடி போல
அலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி"[753]

"சிலம்பி வலந்த வறுஞ்சினை வற்றல்"[754]

ஆகிய பாடலடிகளில் காணலாம். சிலந்தியின் வலை, வலையாக அமையப்பெற்ற நூல், மரங்களில் தன் வலையைப்பிண்ணி வாழ்வது போன்ற சிலந்தி பற்றிய செய்திகளை இப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

**நண்டு**

சங்க அகப்பாடல்களில் நண்டானது ஞெண்டு, களவன், கள்வன், அலவன், குளிறு என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளது. நாம் தற்காலத்தில் நண்டினங்கள் அனைத்தையும் நண்டு என்றே சுட்டுகின்றோம். கடலொழிந்த பிறபகுதிகளில் கிடைக்கும் நண்டுகளைப் பொதுவாக "நண்டு" என்றும் கடலிலிருந்து கிடைக்கும் நண்டுகளைக் "கடல் நண்டு" என்றும் சுட்டுகின்றோம். சங்க இலக்கியங்களில் சுட்டப்படும் நண்டிற்குரித்தாக பிற பெயர்கள் தற்காலத்தில் பயன்பாட்டில் இல்லை என்றே கூறலாம். நண்டு சங்க அகப்பாடல்களில் பலபெயர்களில் சுட்டப்படுவதை,

"பார்வ லஞ்சிய பருவர லீர் ஞெண்டு"[755]

"வேப்புநனை யன்ன நெடுங்கண் நீர்ஞெண்டு"[756]

"முள்ளி வேரளைக் கள்வ னாட்டிப்"[757]

"இ·.தொத்தன் புள்ளிக் களவன் புனல்சேர் பொதுக்கம்"[758]

"அலவன் ஆடிய புலவுமணல் முன்றில்"[759]

"கரையா டலவன் அளைவயிற் செறியத்
திரைபா டவியத் திமிழ்தொழில் மறப்பச்"[760]

"எடுகுளிறு மிதித்த வொருபழம் போல"[761]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியலாம். வேப்பம் பூவினை ஒத்த கண்களை உடையது நண்டு என நண்டின் கண்களை நுட்பமாக அறிந்து உவமை கூறியிருப்பது பண்டைத்தமிழ்ச் சான்றோரின் உயிரியல் அறிவினுக்குச் சான்றாக அமைகின்றதெனலாம். சங்க அகப்பாடல்கள் நண்டுகளின் ஓட்டில் காணப்படும் புள்ளிகள், அவற்றின் பலவாய கால்கள்,அவற்றின் மருப்பு போன்ற கொடுக்குகள், தங்கும் வளை என நண்டுகள் பற்றிய பல தகவல்கள் பல பாடல்களில் நுட்பமாகச் சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. நண்டைக் குறிக்கும் 'அலவன்' என்ற சொல் கவனிக்கத்தக்கது. 'அலவன்' எனும் நண்டைக் குறிக்கும் சொல் நெய்தல் திணைப் பாடல்களில் மட்டும் சுட்டப்பட்டுள்ளது. இவை கடற்கரைப் பகுதிகளில் ஊர்ந்து திரிவதும் அவற்றை மனிதர்கள் பிடித்து விளையாடுவதும் காட்டப்பட்டுள்ளது. நன்னீர் நண்டு போலவே சிறிய தோற்றம் கொண்ட நண்டுகள் கடற்கரையில் காணப்படுகின்றன. இவை உவர்நீரில் வாழும் தன்மைகொண்டவையாகும். இவை நண்ணீரில் வாழா என்பது உயிரியல் வல்லுநர் கருத்து. நெய்தல் திணையில் மட்டும் காணப்படும் "அலவன்" என்பது உவர்நீர் நண்டுகளை மட்டும் சுட்டுவதாகக் கொள்ளலாம். ஞெண்டு என்பது நெய்தல் மற்றும் பிற திணைகளிலும் காணப்படுவதால் இது சங்ககாலத்தில் நண்டைக் குறிக்கப் பயன்பட்ட பொதுப் பெயர் எனலாம். நண்டு விலங்குநூலின் படி 'கணுக்காலி' எனும் தொகுப்பில் காட்டப்பட்டுள்ளது.

**சங்கு, நத்தை, சிப்பி**

சங்கு, நத்தை, சிப்பி ஆகிய உயிரினங்களில் சங்கு, சிப்பி ஆகியன நீர்நிலைகளில் காணப்படுவன. நத்தைகளில் பலவகைகள் காணப்படுகின்றன. சில நீர்நிலைகளிலும் சில நிலத்திலும் காணப்படுவனவாக உள்ளன. இவையாவும் மெல்லுடலிகள் எனும் பிரிவில் அடங்குவன. இவை நன்னீர், உவர்நீர் எனும் இருவகையான நீர்நிலைகளிலும் காணப்படுவதாகக் கூறுவர். சங்கு சங்க அகப்பாடல்களில் கோடு, வளை, வலம்புரி என்ற பெயர்களில் சுட்டப்படுவதை,

"வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்
துறைகெழு கொண்கநீ நல்கின்"[762]

"தண்கடல் வளையினு மிலங்குமிவ"[763]

"வலம்புரி யுழுத வார்மண லடைகரை"[764]

எனும் பாடலடிகளால் அறியலாம். இப்பாடலடிகளில் கடற்கரைப் பகுதிகளில் காணப்படும் சங்கு சுட்டப்பட்டுள்ளது. நந்து, நொள்ளை ஆகிய பெயர்களில் சுட்டப்படுவதை,

"கழனி காவலர் சுடுநந்து உடைக்கும்"[765]

"உள்ளுன் வாடிய சுரிமுக்கு நொள்ளை"[766]

ஆகிய பாடலடிகளால் அறியலாம்."சுடுநந்து உடைக்கும்" எனும் தொடர் ஓட்டினுள் உள்ள நத்தையைத் தீயில் சுட்டு உடைத்து அதனுள் உள்ள ஊனினை எடுத்து உண்ணுதலைக்

குறிக்கின்றது. நாம் சிப்பி என்று தற்காலத்தில் குறிக்கின்ற உயிரியை ‘‘இப்பி’’ என்று குறிக்கின்றது. இது சங்ககால வழக்காக இருக்கலாம்.

‘‘துறைமேய் இப்பி ஈர்ம்புறத்து உறைக்கும்’’[767]

எனும் நற்றிணைப் பாடலடி கடற்கரையின்கண் சிப்பி மேய்வதைக் காட்டுகின்றது. சங்க அகப்பாடல்களில் சங்கு, நத்தை, சிப்பி பற்றிய பதிவுகள் குறைவாகவே காணப்படுகின்றன. எனினும் இவை சங்க அகப்பாடல்களின் பல்லுயிரி எண்ணிக்கையைக் கூட்டுவதாக அமைவது குறிப்பிடத்தக்கது.

**அசுணம்**

அசுணம் என்பது என்னவென்று முழுமையாகத் தெரியாத அளவில் பதிவுகள் காணப்படுகின்றன. உரையாசிரியர்கள் அசுணம் என்பது விலங்கு என உரை கூறுகின்றனர். ஆனால் இதற்கான விளக்கமான பதிவுகள் சங்க இலக்கியங்களில் இல்லை எனலாம்.

‘‘மாதர் வண்டின் நயவருந் தீங்குரல்
மணநாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்’’[768]

‘‘இருஞ்சிறைத் தொழுதி யார்ப்ப யாழ்செத்
திருங்கல் விடரளை அசுணம் ஓர்க்கும்’’[769]

எனும் பாடலடிகளில் அசுணம் வண்டினங்கள் ஆர்க்கும் ஓசையை விரும்பிக் கேட்பதாகக் கூறப்படுகின்றது. வண்டினங்களின் ஓசையை யாழோசை போல் கருதி அசுணம் கேட்பதாக அமைந்துள்ளது. மேலும் இப்பாடலடிகளில் அசுணம் மலைப்பகுதியில் கற்பிளப்புகளில் வசிப்பதாகக் கூறப்படுகின்றது. வண்டின் ஓசை கேட்டல் மலையின் பாறைப்பிளவுகளில் தங்கியிருத்தல் என்பவை இயல்பான உயிரியின் தோற்றத்தைத் தருவதாக அமைகின்றது. ஆனால் அசுணத்தை வேட்டையாடும் முறையைப் பற்றி

‘‘அசுணம் கொல்பவர் கைபோல் நன்றும்
இன்பமும் துன்பமும் உடைத்தே’’[770]

என நற்றிணை கூறுவது சற்று மயக்கத்தைத் தருகின்றது. இது இயற்கையின் இயல்பான உயிரியாக இருக்குமா? என்ற சிந்தனையைத் தூண்டுகின்றது. அசுணத்தைக் கொல்பவர் கை இன்பத்தையும் துன்பத்தையும் தருவதாகச் சுட்டப்படுகின்றது. இதற்கு உரையாசிரியர்கள் அசுணம் யாழோசையை விரும்புமென்றும் பறையோசையைக் கேட்டால் வெறுத்து உயிர்விடும் என்றும் கூறுகின்றனர். இதனைப் பிடிக்க எண்ணிய வேடர்கள் அசுணம் காணப்படும் இடத்திற்குச் சென்று முதலில் யாழை மீட்டி இசையெழுப்புவர். இதனைச் செவிமடுத்த அசுணம் அவ்விசையை விரும்பி மயங்கி நிற்கும். அப்போது திடீரென வேடர்கள் பறையை இசைப்பர் பறையோசைக்கு அஞ்சும் குணமுடைய அசுணம் பறையோசை கேட்டதும் உயிரைவிடும் என்று கூறுவர். இதனாலேயே நற்றிணை வேடரின் கை முதலில் இன்பத்தையும் பின்பு துன்பத்தையும் தருவதாகக் கூறுகின்றது. இத்தன்மையை உடைய விலங்கோ பறவையோ உண்மையில் இருந்திருக்குமா என ஐயம் எழுகின்றது. உரையாசிரியர்கள் அசுணம் என்பது விலங்கு எனக் கூறுவதை ‘இனிய

ஓசையை யாழோசை போலும்' என்று நறுமணங்கமழும் மலை முழையிலிருக்கின்ற அசுணமாகிய விலங்கு செவிகொடுத்துக் கேளாநிற்கும்[771] எனும் பின்னத்தூர் நாராயணசாமியின் உரையால் அறியலாம். ''அசுணம் எனும் பறவை இசையை விரும்பிக்கேட்கும் என்றும் திடீரென்று பறை போன்றவை முழக்கப்படுமாயின் அவை துடித்துக் கீழே விழுந்து இறக்கும் என்றும் இலக்கியம் குறிப்பிடுகின்றது''[772] எனும் மகிழேந்தியின் விளக்கம் அசுணத்தை பறவை என்று கூறுகின்றது. சங்க அகப்பாடல்களில் அசுணம் எவ்வகை உயிரினம் என்று சுட்டப்படாத நிலையில் உரையாசிரியர்களின் விளக்கமும் மகிழேந்தியின் விளக்கமும் நமக்கு மயக்கத்தை ஏற்படுத்துவதாக உள்ளது. அசுணம் போன்ற விலங்கு இயற்கையில் இருக்கவியலாது. இது கற்பனையாக இருக்கலாம் என்பது அறிஞர்களின் கருத்தாக உள்ளது.

**தொகுப்புரை**

- பல்லுயிரியியம் எனும் சூழலியல் தொடர்பான கருத்தாக்கம் பிற்காலத்தில் தோன்றியிருப்பினும் தொன்மைக்காலந்தொட்டே தமிழ்ச் சிந்தனை மரபில் உலக உயிரினங்களின் வகைதொகை பற்றிய பகுப்பிற்கான சிந்தனை இருந்து வந்துள்ளதைப் பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படும் உயிர்த்தொகுப்பு பற்றிய பதிவுகளின் வாயிலாக அறியமுடிகின்றது. இதன் தொடக்கம் தொல்காப்பியத்திற்கு முன்னரே வேரூன்றியிருந்தது என்பதற்குத் தொல்காப்பிய உயிர் வகைப்பாடு மற்றும் உயிரினங்களின் மரபுப்பகுப்பு இதற்குச் சான்றாக அமைவது இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.
- பல்லுயிரியியம் என்பது பல்வேறு பட்ட உயிரினங்களின் வகைதொகை பற்றிய பட்டியலை அடிப்படையாகக் கொண்டமைகின்றது.
- சங்க அகப்பாடல்கள் யாவும் மனிதனின் தன்னுணர்ச்சிப் பாடல்களாக வெளிப்பட்டுள்ள நிலையில் அப்பாடல்களுக்குப் பின்புலமாக அமைந்த உயிரிக் கருப்பொருள்களைப் பட்டியலிடுவதன் மூலம் சூழலியலின் பல்லுயிரி வகைமையினைச் சங்க அகப்பாடல்களைக் கொண்டு இவ்வியல் வெளிப்படுத்த முயன்றுள்ளது.
- சங்க அகப்பாடல்களில் காணப்படும் தாவரவகை உயிரினங்களை நிலம், நீர் என்ற அடிப்படையில் பகுத்து அதனடிப்படையில் மரம், செடி, கொடி, புல் என வகைப்படுத்தியும் நீர்வாழ் தாவரங்கள் தனித்தும் வகைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளது.
- விலங்கு வகை உயிரினங்கள் விலங்கு, ஊர்வன, பறவை, பூச்சி என்ற பகுப்பின் அடிப்படையில் வகைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளது
- உயிரினங்களைப் பற்றிய பதிவுகளில் சங்க அகப்பாடலாசிரியர்கள் நுட்பமான தகவலினைப் பதிவு செய்துள்ளதன் மூலம் பல்வேறுபட்ட உயிரினங்களையும் வேற்றுமை தோன்ற தெளிவுறக் காட்டியுள்ளனர். சிற்சில இடங்களில் மட்டுமே

தங்கள் கற்பனை நயத்தினைக் காட்டியுள்ளனர். பெரும்பான்மையும் உயிரினங்களை அதனதன் இயல்புகளுடன் காட்டியுள்ளனர். இயற்கையியல் அறிவு குறைவுற்ற நிலையில் சங்க அகப்பாடல் உயிரினங்கள் இதைத்தான் சுட்டுகின்றது என்ற தெளிவு பிற்காலத்தாரிடம் இல்லாமல் போய்விட்டது. இந்நிலையில் சங்க இலக்கியங்களுக்கு உரை வகுத்தவர்களான உரையாசிரியர்களும் சில இடங்களில் தவறான உயிரினங்களைச் சுட்டினர். இது சில இடங்களில் விளக்கிக் காட்டப்பட்டுள்ளது.

- புராண ஈடுபாடுள்ள சிலர் தாங்கள் தெளிவுற அறியவியலாத உயிரினங்கள் சிலவற்றைப் புராண உயிரினங்களுடன் தொடர்புபடுத்தி மாறுபட்ட உயிரினத்தைச் சுட்டலாயினர். இதற்குச் சான்றாக வரையாட்டைக் குறிக்கும் வருடை என்பதை எட்டுக்கால்களைக் கொண்ட வருடை என புராணத்துடன் தொடர்பு படுத்தியதைச் சுட்டலாம்.
- சங்க அகப்பாடலில் சுட்டப்பட்டுள்ள உயிரினங்களை நுட்பமாக ஆராயும்பொழுது அவற்றின் உள்ளினங்களையும் அறிந்து சுட்டவியலும் என்பது விளக்கப்பட்டுள்ளது.
- தொன்றுதொட்டு தமிழ் மரபில் வழங்கிவந்த இயற்கையியல் உயிரினங்கள் பற்றிய மரபார்ந்த அறிவு பிற்காலச் சமூகம் இயற்கையிலிருந்து விலகிவிட்ட நிலையால் அறுபட்டதன் விளைவாக சங்க அகப்பாடல்கள் குறித்த தெளிவின்மை, பிற்காலத்து உரையாசிரியர்களிடமும் மக்களிடமும் ஏற்பட்டு உயிரினங்கள் பிழையாக விளக்கப்பட்டமை தெளிவாகின்றது.
- சங்கப் புலவர்கள் தாவரங்கள் முதல் பூச்சிகள் வரையிலான பல்வேறுபட்ட உயிரினங்களின் உடலமைப்பினை நுட்பமாகக் கண்டு பதிவு செய்துள்ளனர். இந்த உடற்கூறியல் பதிவுகள் சில ஐயத்திற்கிடனான உயிரினங்களைக் குறித்த தெளிவினை நல்குகின்றன.
- விலங்கினங்களைப் பொறுத்தமட்டில் பூனைவகை, நாய்வகை, எலிவகை என மரபியற் பல்வகைமை அடிப்படையில் இனம்கண்டு பகுக்கவியலும் என்பது விலங்குகள் பற்றிய விளக்கங்களில் சுட்டப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்


1. கோவை சதாசிவம், பூக்களின் தேசம், ப.78
2. மேலது ப. 81
3. m.tamil.webdunia.com/article/environment – articles - in – tamil/ பூமியில் - 7 – லட்சம் - உயிரினங்கள் - உள்ளன – 111082400024 – 1. html
4. திருக்குறள், 322
5. தமிழண்ணல், திருக்குறள் தெளிவுரை, ப. 68
6. www.keetru.com/vizhippunarvu/nov06/mohammed_ali.php, Pg.1
7. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.எ. 571
8. இளம்பூரணர் (உரை), தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல் ப. 197
9. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.எ.573
10. மாணிக்கவாசகர், திருவாசகம், சிவபுராணம், பா.அ. 26-31
11. உமாபதிசிவம், சிவப்பிரகாசம், பா.எ. 47
12. tamilsiddhas.blogspot.com/2016/11/biology.html?m=1
13. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.எ. 632
14. மேலது நூ.எ. 633
15. நற்.பா. 282
16. ஐ.கு.பா. 212
17. கு.பா, பா.அ. 93
18. ப.பா, பா.அ. 188
19. நற், பா. 244
20. ஐ.கு, பா. 211
21. கு.பா, பா.அ.105
22. அகம், பா. 68
23. கு. சீநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், ப. 248
24. நற், பா. 95
25. குறு, பா. 24
26. கு.பா, பா.அ. 87
27. அகம், பா. 269
28. நற், பா. 343, அகம், பா. 70
29. குறு, பா. 329
30. அகம், பா. 171,247
31. அகம், பா.81
32. அகம், பா.95
33. ஐ.கு, பா. 368
34. புலவர் கி.ப. நடராசன், இலக்கியத்தில் பன்மலர், ப.22

35. ஐ.கு, பா. 338
36. அகம், பா. 11
37. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், ப. 139
38. நற், பா. 162, அகம், பா.345
39. குறு, பா. 106
40. அகம், பா. 57
41. நற், பா. 1216
42. குறு, பா. 363
43. மேலது, பா. 274
44. கு. சீநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், ப. 295
45. குறு, பா. 124
46. கு. சீநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், ப. 1
47. நற், பா. 137
48. குறு, பா. 174
49. அகம், பா. 184
50. மேலது, பா. 231
51. குறு, பா. 127
52. அகம், பா. 246
53. கு. சீநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், ப. 336
54. மா. இராசமானிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 573
55. நற், பா. 242
56. இரா. காஞ்சனா, சங்க இலக்கியத்தில் நிலையியலுயிர்கள், ப. 69
57. மேலது, ப. 71
58. நற், பா. 274
59. மேலது, பா. 6
60. மேலது, பா. 56
61. கு.பா, பா.அ.69
62. மேலது, பா.அ. 95
63. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக். 573,574
64. கு. சீநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், ப. 153
65. நற், பா. 246
66. கு.பா, பா.அ. 86
67. அகம், பா. 15
68. நற், பா.48,86, ஐ.கு, பா. 366, கலி, பா. 33
69. நற், பா. 328
70. அகம், பா. 242
71. குறு, பா. 376

72. ஐ.கு, பா. 112
73. கு. சீநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், ப. 168
74. கலி, பா. 56
75. அகம், பா. 240
76. மேலது, பா. 20
77. நற், பா. 394
78. அகம், பா. 187
79. நற். பா.19, குறு, பா. 219
80. ப.பா, பா.அ. 84
81. நற், பா.78, குறு, பா. 228
82. கலி, பா. 133
83. ஐ.கு, பா. 131
84. அகம், பா. 107,315
85. ச.வே. சுப்பிரமணியன், தமிழர் வாழ்வில் தாவரம், ப. 39
86. அகம், பா. 143
87. கு.பா, பா.அ. 94
88. நற், பா. 35
89. அகம், பா. 380
90. ஐ.கு, பா. 342
91. அகம், பா. 345
92. அகம், பா. 54
93. குறு, பா. 201
94. அகம், பா. 69
95. கு. சீநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள் ப. 579
96. நற், பா. 246
97. மேலது, பா. 44
98. அகம், பா. 91
99. நற், பா. 335
100. குறு, பா. 372
101. கலி, பா. 83
102. கு. சீநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், ப. 548
103. குறு, பா. 147
104. குறு, பா. 341, ஐ.கு, பா. 347, 368
105. நற், பா. 31
106. குறு, பா. 123, ஐ.கு, பா. 189
107. அகம், பா. 81
108. கு.பா, பா.அ. 176

109. ஐ.கு, பா.74
110. அகம், பா. 97
111. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பா. 42,43
112. ஐ.கு, பா. 87
113. கலி, பா. 84
114. குறு, பா. 164
115. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், ப.90
116. குறு, பா. 156, அகம். ப. 41,99
117. அகம், பா. 367
118. குறு, பா. 255
119. மேலது, பா. 260
120. கலி, பா. 50
121. அகம், பா. 89
122. மேலது, பா. 293
123. நற், பா. 89
124. குறு, பா. 76
125. அகம், பா. 262
126. குறு, பா. 222, அகம், பா. 44, 295
127. அகம், பா.154
128. கு. சீநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், ப. 371
129. நற், பா. 145
130. குறு, பா. 243
131. கு. சநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், ப. 293
132. நற், பா. 2
133. பின்னத்தூர். அ. நாராயணசாமி (உரை), நற்றிணை, ப. 5
134. கு.பா, பா.அ. 68
135. அகம், பா. 255
136. கு.பா, பா.அ. 187
137. கு. சீநிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், ப. 739
138. மேலது, ப. 13
139. நற், பா. 6
140. ப.பா, பா.அ. 241
141. அகம், பா. 176
142. மேலது, பா.6
143. நற், பா. 65
144. குறு, பா. 399
145. முனைவர் மகிழேந்தி, சுற்றுச்சூழலியல் நோக்கில் சங்கத் தமிழகம், ப.76

146. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், பக்.112,113
147. குறு, 41
148. மேலது, பா.49
149. அகம், பா. 12
150. அகம், பா. 109
151. நற், பா. 290
152. அகம், பா. 18
153. மேலது, 354
154. மேலது, 14
155. நற், பா. 315
156. அகம், 41
157. நற், பா. 359
158. அகம், பா.79
159. கலி, பா. 103, 104, 105
160. மேலது, 103,104
161. தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், நூ.எ. 12
162. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 449
163. குறு, பா. 221
164. நற், பா. 47
165. குறு, பா. 263
166. அகம், பா. 292
167. மேலது, பா.104
168. மேலது, பா. 156
169. உ.வே.சா. குறுந்தொகை மூலமும் உரையும், ப. 1iii
170. நற், பா. 169
171. அகம், பா. 94
172. அகம், பா. 394
173. நற், பா. 321
174. ஐ.கு, பா. 238
175. ப.பா, பா.அ. 77
176. மேலது, பா.அ. 141
177. பெ.வே. சோமசுந்தரனார் (உரை), பட்டினப்பாலை ப.அ. 59
178. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 67
179. மா. கிருஷ்ணன், மலைக்காலமும் குயிலோசையும், ப.107
180. பி.எல்.சாமி சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 130
181. நற், பா. 57
182. குறு, பா. 322

183. அகம்., பா. 238
184. கு.பா, பா.அ. 253
185. அகம், பா. 78
186. மேலது, 252
187. மேலது, 381
188. நற், பா. 205
189. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 370
190. மா. கிருஷ்ணன், மலைக்காலமும் குயிலோசையும், ப.171
191. நற், பா. 120
192. குறு, பா. 181
193. அகம், பா. 56
194. மேலது, பா. 206
195. ஐ.கு, பா. 97
196. குறு, பா. 181
197. நற், பா. 391
198. குறு, பா. 261
199. அகம், பா. 41
200. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப. 123
201. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 387
202. மேலது, ப. 381
203. புறனாநூறு, பா. 322
204. குறு, பா. 107
205. அகம், பா. 122
206. அகம், பா. 133
207. அகம், பா. 245
208. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப. 129
209. நற், பா. 325
210. அகம், பா. 112
211. மேலது, பா. 247
212. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 206
213. அகம், பா.171
214. மேலது, பா. 267
215. மேலது, பா. 88
216. மேலது, பா. 89
217. மேலது, பா. 207
218. மேலது, பா. 343
219. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப. 108

220. கலி, பா. 147
221. நச்சினார்க்கினியர் (உரை), கலித்தொகை, ப. 470
222. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப. 107
223. ப.பா, பா.அ.185
224. குறு, பா. 385
225. அகம், பா. 14
226. ஐ.கு, பா. 422
227. கலி, பா. 75
228. ஐ.கு, பா. 274
229. மேலது, பா. 275
230. மேலது, பா. 276
231. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப. 105
232. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 1
233. மேலது, ப. 32
234. நற், பா. 95
235. நற், பா. 355
236. மேலது, பா. 57
237. அகம், பா. 241
238. நற், பா. 334
239. மேலது, பா. 353
240. அகம், பா.382
241. குறு, பா. 121
242. நற், பா. 96
243. அகம், பா. 121
244. குறு, பா. 249
245. மேலது, பா. 373
246. கலி, பா. 43
247. மலைபடுகடாம், பா.அ. 208
248. நற், பா. 278
249. அகம், பா. 120
250. மேலது, பா. 350
251. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 454
252. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப. 127
253. எஸ்.எம் நாயர், அழிவுக்கு இலக்காகி இருக்கும் இந்திய விலங்குகளும் அவற்றைக் காக்கும் முறைகளும், ப. 32
254. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம் ப. 273
255. நற், பா. 112

256. மா. கிருஷ்ணன், மலைக்காலமும் குயிலோசையும், ப.129

257. கலி, பா. 15

258. மேலது, பா. 103

259. நற், பா. 43

260. குறு, பா. 56

261. ஐ.கு, பா. 323

262. அகம், பா. 21

263. அகம், பா. 219

264. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 189

265. அகம், பா. 375

266. நற், பா. 352

267. அகம், பா. 193

268. ப.பா, பா.அ. 257

269. நற், பா. 164

270. கலி, பா. 65

271. அகம், பா. 94

272. நற், பா. 212

273. மேலது, பா. 253

274. கலி, பா. 23

275. கு.பா, பா.அ. 240

276. அகம், பா. 167

277. நற், பா. 285

278. அகம், பா. 140

279. கு.பா, பா.அ. 131

280. ப.பா, பா.அ, 140

281. நற், பா.132

282. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 179

283. களவழி நாற்பது, பா. 64

284. பழமொழி நானூறு, பா. 292

285. நற், பா. 82

286. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 174

287. கலி, பா. 23

288. நற், பா. 276

289. குறு, பா. 237

290. உ.வே.சா. (உரை), குறுந்தொகை, ப. 440

291. ஐ.கு, பா. 216

292. பெ.வே. சோமசுந்தரனார் (உரை), ஐங்குறுநூறு ப. 321

293. நற், பா. 98
294. நற், பா. 336
295. அகம், பா. 277
296. மா. கிருஷ்ணன், மலைக்காலமும் குயிலோசையும், பக். 96,97
297. ஐ.கு, பா. 264
298. மேலது, பா. 265
299. அகம், பா. 178
300. மேலது, பா. 72
301. நற், பா. 36
302. ஐ.கு, 266
303. குறு, பா. 215
304. அகம், பா. 27
305. கலி, பா. 49
306. நற், பா. 322
307. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 229
308. நற், பா. 386
309. மேலது, பா. 142
310. கு.பா, பா.அ. 252
311. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப.114
312. மா. கிருஷ்ணன், மலைக்காலமும் குயிலோசையும், ப. 113
313. நற், பா. 205
314. மேலது, பா. 391
315. ஐ.கு, பா. 396
316. அகம், பா. 228
317. கலி, பா. 46
318. அகம், பா. 34
319. குறு, பா.338
320. அகம், பா. 4
321. மேலது, பா. 74
322. மு.பா, பா. 99
323. குறு, பா. 183
324. அகம், பா. 139
325. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 105
326. நற், பா. 124
327. குறு, பா. 282
328. அகம், பா. 7
329. மேலது, பா. 39

330. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 107
331. குறு, பா. 115
332. மேலது, பா. 321
333. கலி, பா. 6
334. அகம், பா. 3
335. நற், பா. 265
336. குறு, பா. 213
337. அகம், பா. 97
338. மேலது, பா. 151
339. மேலது, பா. 395
340. மேலது, பா. 291
341. ச. முகமது அலி, பல்லுயிரியம், ப.45
342. நற், பா. 311
343. குறு, பா. 68
344. அகம், பா. 173
345. குறு, பா. 179
346. மேலது, பா. 392
347. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 130
348. டாக்டர். உ.கருப்பணன், தெரிந்ததும் தெரியாததும், ப.32
349. மா. கிருஷ்ணன், மழைக்காலமும் குயிலோசையும், ப.203
350. நற், பா. 59
351. ஐ.கு, பா. 421
352. அகம், பா. 384
353. மேலது, பா. 394
354. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம் ப. 402
355. நற், பா. 85
356. மேலது, பா.285
357. ஐ.கு, பா. 364
358. அகம், பா. 182
359. குறு, பா. 54,79, அகம், பா. 123
360. நற், பா. 158
361. ஐ.கு, பா. 239
362. கலி, பா. 46
363. அகம், பா. 179
364. நற், பா. 353
365. மு.பா, பா.அ. 31
366. கலி, பா. 57

367. அகம், பா. 290
368. நற், பா. 205
369. குறு, பா. 232
370. அகம், பா. 13
371. எம்.எஸ்.நாயர், அழிவிற்கு இலக்காகி இருக்கும் இந்திய விலங்குகள், ப.72
372. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப.121
373. அகம், பா. 378
374. ப.பா, பா.அ. 139
375. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 59
376. நற், பா. 119
377. குறு, பா. 187
378. ஐ.கு, பா. 287
379. கலி, பா. 43
380. மேலது, பா. 50
381. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 62
382. நற், பா. 359
383. குறு, பா. 107
384. மேலது, பா. 139
385. அகம், பா.367
386. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப. 442
387. நற், பா.87
388. மேலது, பா. 218
389. மேலது, பா. 279
390. குறு, பா. 172
391. ஐ.கு, பா. 339
392. மேலது, பா. 378
393. அகம், பா. 244
394. நற், பா.16
395. மேலது, பா. 382
396. ஐ.கு, பா. 70
397. குறு, பா. 9,324
398. அகம், பா. 30
399. மேலது, பா. 46
400. மேலது, பா. 186
401. நற், பா. 230
402. ஐ.கு, பா. 10
403. குறு, பா. 296

404. ஐ.கு, பா. 1
405. மேலது, பா. 10
406. மேலது, பா. 165
407. நற், பா. 272
408. குறு, பா. 128
409. மேலது, பா. 166
410. மேலது, பா. 178
411. ஐ.கு, பா. 164
412. அகம், பா. 70
413. மேலது, பா. 246
414. குறு, பா. 114
415. கலி, பா. 75
416. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப.56
417. நற், பா. 49
418. மேலது, பா. 211
419. குறு, பா. 109
420. அகம், பா. 220
421. நற், பா. 111, அகம், பா. 376
422. நற், பா. 31
423. மேலது, பா. 358
424. அகம், பா. 60
425. மேலது, பா. 152
426. மேலது, பா. 170
427. ஐ.கு, பா. 47
428. மேலது, பா. 167
429. நற், பா. 70
430. குறு, பா. 91
431. மேலது, பா. 127
432. ஐ.கு, பா. 40
433. அகம், பா. 60
434. நற், பா. 291
435. மேலது, பா. 78
436. அகம், பா. 187
437. குறு, பா. 304
438. அகம், பா. 340
439. நற், பா. 207
440. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம் ப. 431

441. அகம், பா. 210
442. நற், பா. 388
443. ஐ.கு, பா. 48
444. அகம், பா. 36
445. மேலது, பா. 196
446. மேலது, பா. 216
447. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.613
448. நற், பா. 400
449. குறு, பா. 164
450. அகம், பா. 276
451. குறு, பா. 364
452. ஐ.கு, பா. 63
453. அகம், பா. 126
454. ஐ.கு, பா. 63
455. குறு, பா. 364
456. அகம், பா. 386
457. ஆர்.வி. பதி, ஊர்வன தகவல் களஞ்சியம், ப.23
458. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப.76
459. பாலாஜி லோகநாதன், காடு-இதழ், மே-ஜூன் 2016, பக். 58,59
460. ஆர்.வி. பதி, ஊர்வன தகவல் களஞ்சியம், ப.133
461. மகிழேந்தி, சுற்றுச்சூழல் நோக்கில் சங்கத் தமிழகம், ப. 104
462. நற், பா. 280
463. ஐ.கு, பா. 44
464. ப.பா, ப.அ. 64
465. ஐ.கு, பா. 43
466. மேலது, பா. 44
467. ஆர்.வி. பதி, ஊர்வன தகவல் களஞ்சியம், ப.139,140
468. மேலது, ப. 145
469. அகம், பா. 160
470. மேலது, பா. 256
471. குறு, பா. 152
472. தமிழண்ணல் (உரை), குறுந்தொகை, ப. 193
473. உ.வே.சா (உரை), குறந்தொகை மூலமும் உரையும், ப. 294
474. கழகத் தமிழ் அகராதி, ப. 444
475. நற், பா. 59
476. பெரும்பாணாற்றுப்படை, பா.அ. 131,132
477. நற், பா. 992

478. குறு, பா. 140
479. அகம், பா. 125
480. நற், பா. 186
481. மேலது, பா. 169
482. நற், பா. 333
483. கலி, பா. 20
484. குறு, பா. 16
485. அகம், பா. 88, 289
486. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப.74
487. நற், பா. 37
488. அகம், பா. 138
489. குறு, பா. 43
490. அகம், பா. 72
491. கு.பா, பா.அ. 255
492. நற், பா. 325
493. அகம், பா. 64
494. குறு, பா. 35
495. கு.பா, பா.அ. 256,257
496. நற், பா. 292
497. ப.பா, பா.அ. 242
498. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.611
499. ஆர்.வி. பதி, ஊர்வன தகவல் களஞ்சியம், ப.172
500. ஐ.கு, பா. 24
501. மேலது, பா. 41
502. க. சச்சிதானந்தன், பறவைகளே, ப.66
503. குறு, பா. 160
504. மேலது, பா. 301
505. அகம், பா. 50
506. கு.பா, பா.அ. 219
507. நற், பா. 303
508. மேலது, பா. 335
509. கலி, பா. 129
510. நாலடியார், பா. 135
511. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 95
512. குறு, பா. 300
513. மேலது, பா. 304
514. ஐ.கு, பா. 106

515. நற், பா. 356
516. அகம், பா. 320
517. மேலது, பா. 234
518. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 96
519. நற், பா. 356
520. க.ரத்னம், தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள், ப.25
521. ப.பா, பா.அ 258
522. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 304
523. க.ரத்னம், தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள், ப.25
524. மேலது, ப.26
525. அகம், பா.9
526. மேலது, பா. 19
527. மேலது, பா. 89
528. நற், பா. 394
529. க.ரத்னம், தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள், ப.56,57
530. நற், பா. 83
531. மேலது, பா. 218
532. மேலது, பா. 319
533. குறு, பா. 153
534. அகம், பா. 122
535. மேலது, பா. 158
536. ப.பா, பா.அ. 268
537. க.ரத்னம், தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள், ப.72
538. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம் ப. 287-290
539. மேலது, ப. 289
540. மதுரைக்காஞ்சி, பா.அ.170
541. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 289
542. குறு, பா. 151
543. அகம், பா. 103
544. நற், பா. 212
545. குறு, பா. 350
546. ஐ.கு, பா. 60
547. மேலது, பா.85
548. அகம், பா. 356
549. ஐ.கு, பா. 51
550. நற், பா. 258
551. அகம், பா. 319

552. மேலது, பா. 327
553. ஐ.கு, பா. 391
554. நற், பா. 317
555. மேலது, பா. 389
556. ஐ.கு, பா. 283
557. மேலது, பா. 284
558. கலி, பா. 72
559. அகம், 242
560. மேலது, பா. 34
561. நற்.பா, 301
562. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 24
563. அகம், பா. 55
564. நற், பா.123
565. மேலது, பா. 54
566. மேலது, பா. 67
567. குறு, பா. 303
568. அகம், பா. 176
569. நற், பா. 181
570. குறு, பா. 46
571. மேலது, பா. 85
572. மேலது, பா. 374
573. நற், பா. 366
574. ஐ.கு, பா. 295
575. குறு, பா. 72
576. அகம், பா. 388
577. நற், பா. 224
578. மேலது, பா. 243
579. ஐ.கு, பா. 346
580. அகம், பா. 25
581. கலி, பா.34
582. குறு, பா. 117
583. அகம், பா. 346
584. நற், பா. 100
585. அகம், பா. 120
586. மேலது, பா. 290
587. சு. தியடோர் பாஸ்கரன், வானில்பறக்கும் புள்ளெல்லாம், ப.27
588. குறு, பா. 139

589. அகம், பா. 122
590. மேலது, பா. 187
591. குறு, பா. 107
592. அகம், பா. 87
593. நற், பா. 297, 389
594. ப.பா, பா.அ. 75
595. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப.
596. நற், பா. 169
597. அகம், பா. 106
598. மேலது, பா. 286
599. பதிற்றுபத்து, ஐந்தாம் பத்து, பா. 2
600. நற், பா. 31
601. மேலது, பா. 231
602. குறு, பா. 246,313, ஐ.கு.பா. 161,170
603. குறு, பா. 334
604. நற், பா. 272
605. மேலது, பா. 330
606. குறு, பா. 166
607. ஐ.கு, பா. 114
608. அகம், பா. 240
609. கலி, பா. 126
610. நற், பா. 9, 178 குறு, பா. 349, அகம், பா. 40
611. குறு, பா. 103
612. அகம், பா. 63
613. ஐ.கு, பா. 469
614. குறு, பா. 68
615. மேலது, பா. 389
616. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 206
617. க.ரத்னம், தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள், ப.68
618. குறு, பா. 207
619. ஐ.கு, பா. 321
620. கலி, பா. 106
621. ப.பா, பா.அ. 233
622. அகம், பா. 79
623. மேலது, பா. 117
624. ஐ.கு, பா. 314
625. அகம், பா. 31

626. மேலது, பா.3, 51,77,161
627. அகம், பா. 291
628. மேலது, பா. 297
629. நற், 329
630. அகம், பா. 175
631. மேலது, பா. 247
632. நற், பா. 71
633. மேலது, பா. 162
634. அகம், பா. 254
635. மேலது, பா. 167
636. நற், 384
637. குறு, பா. 174
638. அகம், பா. 271
639. ஐ.கு, பா. 303
640. மேலது, பா. 325
641. அகம், பா. 129
642. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 171, 172
643. குறு, பா. 57
644. ஐ.கு, பா. 381
645. நற், பா. 13
646. மேலது, பா. 357
647. ஐ.கு, பா. 250
648. மேலது, பா. 291
649. மேலது, பா. 297
650. நற், பா. 288
651. அகம், பா. 242
652. கு.பா, பா.அ. 250
653. குறு, பா. 38
654. மேலது, பா. 194
655. சு. தியடோர் பாஸ்கரன், வானில் பறக்கும் புள்ளெல்லாம், ப. 87
656. ஐ.கு, பா. 418
657. கலி, பா. 46
658. அகம், பா. 67
659. ப.பா, பா.அ. 3,4
660. அகம், பா. 387
661. மேலது, பா. 23
662. மேலது, பா. 133

663. க.ரத்னம், தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள், ப.89
664. நற், பா.21
665. குறு, பா. 242
666. மேலது, பா. 151
667. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக். 239-243
668. கோவை சதாசிவம், பூச்சிகளின் தேசம் ப. 6
669. மேலது, ப. 111
670. ஆர்.வி.பதி, ஊர்வன தகவல் களஞ்சியம், பக். 20,21
671. நற், பா. 55
672. ஐ.கு, பா. 20
673. கலி, பா. 30
674. மேலது, பா. 36
675. கு.பா, பா.அ. 147,148
676. பொ.வே. சோமசுந்தரனார் (உரை), கு.பா, ப.66
677. நச்சினார்க்கினியர் (உரை), கலித்தொகை, ப. 100
678. எம்.எஸ்.நாயர், அழிவிற்கு இலக்காகி இருக்கும் இந்திய விலங்குகள், ப.110
679. மேலது. ப.111
680. நற், பா. 59
681. ஐ.கு, பா. 497
682. அகம், பா.8
683. கோவை சதாசிவம், பூச்சிகளின் தேசம், ப. 35
684. குறு, பா. 12
685. அகம், பா. 377
686. நற், பா. 180, ஐ.கு, பா. 99
687. நக்கீரன், எறும்புகள் ஆறுகால் மனிதர்கள், காடு (இதழ்), மார்ச் ஏப்ரல் 2015, ப.57
688. சா. அனந்தகுமார், தாவரங்கள், விலங்குகள், பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள், ப. 56
689. நற், பா. 325
690. அகம், பா. 81
691. மேலது, பா. 112
692. மேலது, பா. 149
693. நற், பா. 252
694. அகம், பா. 89
695. மேலது, பா. 145
696. மேலது, பா. 303
697. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப.64
698. ஐ.கு, பா. 239

699. மேலது, பா. 416
700. கலி, பா. 34
701. அகம், பா. 257
702. பி.எல் சாமி, சங்கநூல்களில் விந்தைப் பூச்சி, ப. 24
703. நற், பா. 362
704. கலி, பா. 85
705. அகம், பா. 74
706. மேலது, பா. 139
707. கோவை சதாசிவம், பூச்சிகளின் தேசம், ப.66
708. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப.63
709. நற், பா.35
710. கலி, பா. 29
711. குறு, பா.239
712. கலி, பா. 78
713. அகம், பா. 291
714. குறு, பா. 3
715. மேலது, பா. 273
716. ஐ.கு, பா. 292
717. நற், பா. 202
718. கலி, பா. 41
719. அகம், பா. 237
720. நற், பா. 185
721. கலி, பா. 33
722. மேலது, பா. 127
723. மேலது, பா. 26
724. மேலது, பா. 35
725. அகம், பா. 78
726. ந.மு. வேங்கடசாமி நாட்டார் (உரை), அகம், ப.206
727. நற், பா. 44
728. அகம், பா. 72
729. மேலது, பா. 291
730. கழகத் தமிழ் அகராதி ப. 619
731. குறு, பா. 86
732. உ.வே.சா. (உரை), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 175
733. தமிழண்ணல் (உரை), குறுந்தொகை ப. 124
734. Tamil Lexicon, Volume IV, Part I, Pg. 2824
735. ச. வே. சுப்பிரமணியன் (பதி), மெய்யப்பன் தமிழ் அகராதி, ப. 747

736. நற், பா. 348
737. குறு, பா. 370
738. ஐ.கு, பா. 226
739. கலி, பா. 25
740. குறு, பா. 260
741. ஐ.கு, 240
742. கலி, பா. 26
743. அகம், பா. 164
744. ஐ.கு, பா. 489, அகம், பா. 204, 234
745. அகம், பா. 41
746. நற், பா. 297, கலி, பா. 34, அகம், பா. 25, 41, 277, 294
747. நற், பா. 311, ஐ.கு, பா. 406, 417, 447, அகம், பா. 228, கு.பா, பா.அ. 189
748. நற், பா. 59
749. ஐ.கு, பா. 468
750. மேலது, பா. 453
751. நற், பா. 347
752. நற். பா. 189
753. அகம் பா. 111
754. மேலது பா. 199
755. குறு, பா. 117
756. அகம், பா. 176
757. ஐ.கு, பா. 23
758. கலி, பா. 88
759. நற், பா. 239
760. அகம், பா. 260
761. குறு, பா. 24
762. நற், பா. 172
763. ஐ.கு, பா. 106
764. மேலது, பா. 193
765. நற், பா. 280
766. அகம், பா. 53
767. நற், பா. 87
768. மேலது, பா. 244
769. அகம், பா. 88
770. நற், பா. 304
771. பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (உரை), நற், ப. 305
772. மகிழேந்தி, சுற்றுச் சூழலியல் நோக்கில் சங்கத் தமிழகம் ப. 97

## இயல் - 3
## பல்லுயிரி வாழிடச் சூழல்

உலகில் காணப்படும் உயிரின வாழிடங்கள் யாவும் பாதுகாக்கப்பட வேண்டியனவாகும். பல்லுயிரியவளம் வாழிடத்தின் அடிப்படையிலேயே நிலைக்கவும், அழியவும் நேரிடுகின்றது. உயிரின வாழ்விடம் எவ்விதச் சிக்கலுக்கும் உட்படாமல் இயல்பாயிருப்பின் அவ்வாழிடத்திற்குண்டான உயிரினங்கள் நிலைத்து பல்லுயிரினவளம் சிறக்கும். அவ்வாறன்றி வாழிடங்கள் சீர்கேட்டிற்குள்ளாகும் பொழுது உயிரினங்களின் வாழ்வும் சிக்கலுக்குள்ளாகி உயிரினங்கள் அழிவை எதிர்கொள்ள வேண்டிவரும். எனவே வாழிடக் காப்பு என்பது சூழலியலில் பெரிதும் வலியுறுத்தப்பட்டு வருகின்றது. இன்றைய உலகமானது இயற்கையிலிருந்து விடுபட்டு நவீனம் எனும் செயற்கைச் சூழலில் சிக்கி இயற்கைச்சூழலின் மீது தம்மினத்திற்கிருந்த மரபார்ந்த அறிவிலிருந்து விலகிய நிலையில் தமது சூழலில் வாழும் உயிரினங்கள் பற்றிய தெளிந்த அறிவின்றி இயங்கி வருகின்றதெனின் அது மிகையாகாது. சூழலியல் எனும் கருத்தாக்கம் இந்நிலையைக் களைய முற்பட்டுவருகின்றது. பண்டைத் தமிழ்மக்கள் தமது சூழல் உயிரிகளை நன்கறிந்திருந்தமையைப் பண்டைய இலக்கியங்கள் வழி அறியமுடிகின்றது. குறிப்பாக சங்க இலக்கிய அகப்பாடல்களில் சுட்டப்படும் உயிரினத் தொகையை முன்னியல் விளக்கியது. உயிரிகள் பற்றிய பதிவுகள் அவ்வுயிரினங்களின் வாழிடச்சூழலையும் பதிவு செய்துள்ளது. சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் உயிரினங்களின் வாழிடச்சூழல்களை விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

### வாழிடம்

ஓர் உயிரினம் எந்த இடத்தில் வாழ்ந்து வருகின்றதோ அவ்விடம் அவ்வுயிரினத்தின் வாழிடமாகும். பல விலங்குகள் தாம் வாழும் காடு அல்லது மலைப்பகுதியில் குறிப்பிட்ட சுற்றளவில் தனது எல்லையை வகுத்துக் கொண்டு வாழ்வதை அறிஞர்கள் விளக்குகின்றனர். அவ்வாறு வாழும் விலங்கிற்கு அதன் எல்லைக்குட்பட்ட பகுதி வாழிடமாக அமைகின்றது. அதன் வாழிடத்தில் அவ்விலங்கிற்குத் தேவையான உணவு, நீர், தங்குவதற்கு ஏற்ற உறைவிடப்பகுதி ஆகியன அமையப்பெற்றிருக்கும். வாழிடம் என்பது ஒரு தனித்த அமைப்பன்று. அது உயிரி வாழ்வதற்குத் தேவையான அனைத்துக் கூறுகளையும் உள்ளடக்கியது. இதனை ‘‘இயற்கையிலேயே உயிரினங்கள் அல்லது அவற்றின் சமுதாயங்கள் வாழக்கூடிய இடங்கள் ‘வாழிடங்கள்’ (Habitat) எனப்படுகின்றன. ஆகவே வாழிடம் என்பது ஒரு குறிப்பிட்ட இடத்தில் காணப்படும் சுற்றுப்புறச் சூழல் காரணிகளின் கூட்டாகும்’’[1] எனும் கூற்றால் தெளியலாம். ஓர் உயிரி தனது வாழிடத்தில் வாழ்வது என்பது அவ்விடத்தில் அவ்வுயிரி வாழ்வதற்கேற்ற தட்பவெப்பநிலை, உறைவிடம், உணவு ஆகியன அடங்கியிருத்தல் வேண்டும். இவை அனைத்தும் செம்மையுற அமைந்திருத்தல் வேண்டும். இவற்றில் குறைபாடு ஏற்படின் உயிரியின் வாழ்வு கேள்விக்குள்ளாகும். உதாரணமாக ஓர் இடத்தில் புலி வாழ்கிறதெனின் அவ்விடம்

காட்டுப்பகுதியாக இருத்தல் வேண்டும். புலி குளிர்ச்சியான தட்பவெப்பநிலையில் வாழும் இயல்புடையது. எனவே அக்காட்டுப்பகுதி நீர் நிறைந்த குளிர்ச்சியுடைய சோலையாக அமைதல் வேண்டும். புலி ஊன் உண்ணி என்பதால் மான், முயல், பன்றி போன்ற விலங்கினங்கள் அங்கு இருத்தல் வேண்டும். மான், முயல், பன்றி போன்ற விலங்கினங்கள் அங்கு இருக்க வேண்டுமெனின் அவற்றிற்கு உணவாகிய தாவரங்கள் நிறைந்த பகுதியாக அப்பகுதி இருத்தல் வேண்டும். இவ்வாறு அமைந்திருந்தால்தான் அப்பகுதி 'புலி'யின் வாழிடமாக அமையவியலும். நீரில் மீன் வாழ்கின்றதென்றால் அம்மீன் நன்னீர் மீனாகவிருப்பின் நன்னீரும், உவர்நீர்மீனாக இருப்பின் உவர்நீரும் அம்மீனுக்குத் தேவையான உணவுப்பொருட்களும் இருத்தல் இன்றியமையாதது. இதனால் வாழிடம் என்பது பல காரணிகளின் கூட்டு என்பதை உணரலாம். இக்காரணிகளின் அமைவிற்கு இரு பெரும் கூறுகள் அடிப்படையாக அமைகின்றன. அவை ஒன்று இடம். மற்றொன்று தட்பவெப்பநிலை. இதனையே நிலமும் பொழுதுமாகிய முதற்பொருள் எனத் தொல்காப்பியம் சுட்டுகின்றது. இவ்விரு கூறுகளை அடிப்படையாகக் கொண்டு ஓர் இடத்தில் என்னென்ன உயிரிகள் வாழவியலும் என இயற்கையால் தீர்மானிக்கப்படுகின்றது. தாவரம், விலங்கு, ஊர்வன, பூச்சி, பறவை என அனைத்துவகை உயிரினங்களுக்கும் இது பொதுவாகும். நிலம், நீர், என இருபெரும் பகுப்புகளில் உயிரின வாழிடங்களை அடக்கலாம். பறவைகள் பல நிலப்பகுதியில் தங்கியிருப்பினும் அவை நீர் நிலைகளுடன் கொண்டிருக்கும் தொடர்பால் நீர்ப்பறவைகள் எனச் சுட்டப்படுகின்றன. இதனை "வாழ்வின் பெரும்பகுதியை நீர்நிலையை சார்ந்திருக்கும் பறவைகள் 'நீர்வாழ் பறவைகள்' என அழைக்கப்படுகின்றன. வாழ்விடம், இரைதேடல், இனப்பெருக்கம், கூடமைத்தல் என யாவும் நீர்நிலைகளைச் சார்ந்தே இப்பறவைகளின் வாழ்வியல் பிண்ணப்பட்டுள்ளது"[2] எனும் விளக்கத்தால் அறியலாம். நிலப்பகுதியில் வாழக்கூடிய விலங்கினங்களும் மலைப்பகுதி, காடு, சமவெளி எனப் பல்வகைப்பட்ட வாழிடச் சூழல்களில் வாழ்கின்றன. சங்க அகப்பாடல்களில் பல்வேறுபட்ட வாழிடப்பதிவுகள் காணப்படுகின்றன. அவற்றை ஐந்து பெரும் பகுப்புகளில் சங்க இலக்கியங்கள் அடக்குகின்றன. அவ்வைந்து பகுப்புகள் திணைப்பகுப்பு எனக் குறிக்கப்படுகின்றது.

**திணைப்பகுப்பும் நிலமும்**

திணைப்பகுப்பு என்பது வேறு எந்த மொழியிலக்கியங்களிலும் அமையப்பெறாத தமிழ்மொழிக்கண் தனித்தன்மையுடன் அமையப்பெற்ற இலக்கியக் கட்டமைப்பாகும். இந்த இலக்கியக் கட்டமைப்பிற்கு அடிப்படை பண்டைத் தமிழ்மக்களின் வாழ்வியல் என்பதைத் திணையிலக்கியங்களின் வாயிலாக அறியமுடிகின்றது. பொதுமைப்படுத்தப்பட்ட பாடுபொருள்களின் வெளிப்பாட்டு வடிவமாக திணைப்பகுப்பு அமைகின்றது. மனித உணர்ச்சியினை வெளிப்படுத்தும் நோக்கில் பாடப்பட்ட திணையிலங்கள் ஒரு குறிப்பிட்ட பகுதியில் அமையப்பெற்ற நிலம், காலம், கருப்பொருள், மனித உணர்ச்சி என அனைத்தையும் காட்டுவதாக வெளிப்பட்டுள்ளன. திணைப்பகுப்பிற்கு அடிப்படை தமிழகத்தின்கண் காணப்பட்ட நிலவமைப்பாகும். தமிழகத்தின் நிலப்பகுதி மலைப்பகுதி,

காட்டுப்பகுதி, வயற்பகுதி, கடற்கரைப்பகுதி என நாக்கு வகையாக அமைந்திருந்தது. மலைப்பகுதியும் காட்டுப் பகுதியும் தமது இயல்பான தோற்றத்திலிருந்து மாறுபட்டு வறட்சிக்குட்பட்ட நிலையில் அத்தோற்றத்தைப் பாலை எனச் சுட்டினர். இவ்வாறான பன்முகத்தன்மை கொண்ட நிலவமைப்பே தமிழ் இலக்கியங்களில் ஐந்து வகையான திணையிலக்கியங்கள் தோன்றக் காரணமாயின. இதனை "கவிதையும் நிலவியல் பகுதிகளுக்கேற்ப மலைப்பாங்கான நிலத்துக் கவிதை, மேய்ச்சல் நிலக் கவிதை, கடற்கரைப்பகுதிக் கவிதை என்பது போலப் பகுக்க வாய்ப்பளித்தது"[3] எனும் கூற்றால் தெளியலாம். இவ்வைந்து வகையான திணைகளும் நிலத்தின் பெயராலேயே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப்பெயர் பெற்றன. திணை வைப்பு முறையினைத் தொல்காப்பியத்தின்,

"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"[4]

எனும் நூற்பாவடிகளையும், பாலைத் திணையைக் குறிக்கும்

"நடுவுநிலைத் திணையே நண்பால் வேணிலொடு"[5]

எனும் நூற்பாவடியினையும் கொண்டு முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என வரிசைப்படுத்தலாம். இத்திணைகளுக்கு உண்டான நிலங்களைத் தொல்காப்பியர்

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென"[6]

எனக்காட்டுகின்றார். இதனடிப்படையில் காட்டுப்பகுதியாகிய முல்லை, மலைப்பகுதியாகிய குறிஞ்சி, சுவையான நீரையுடைய மருதம், பெருமணல் நிரம்பிய கடற்கரையாகிய நெய்தல் எனக் கொண்டு நால்வகை நிலப்பகுதிகளை வகைப்படுத்தலாம். காலமாற்றத்தால் தோற்றம்பெறும் வறண்டபகுதிகளைப் பாலையெனவும் சேர்த்து ஐவகை நிலமாகவும் கொள்ளலாம். இவ்வைவகை நிலமும் உயிரிகளின் வாழிடச்சூழலாக அமையும் தன்மையுடையன. இவ்வைவகை நிலமும் பல்வேறு பட்ட வாழிடங்களைக் கொண்ட ஒத்த நிலப்பகுதியாகக் காணபப்டுகின்றன.

**நிலமும் வாழிடமும்**

திணையமைப்பில் சுட்டப்படும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நால்வகை நிலங்களும் தனிச்சிறப்புடைய வாழிடங்களாக அமைகின்றன. பாலை நிலம் முல்லை, குறிஞ்சி நிலங்களின் திரிபாக அமைவதைச் சங்க இலக்கியங்களின் வழி அறியமுடிகிறது. இந்நிலங்கள் யாவும் தம்மகத்தே பல்வேறு வாழிடச்சூழல்களை உள்ளடக்கியதாகக் காணப்படுகின்றன. குறிஞ்சி மலையும் மலைசார்ந்த நிலமாகவும், முல்லை காடும் காடுசார்ந்த நிலமாகவும், மருதம் வயலும் வயல் சார்ந்த நிலமாகவும்,

நெய்தல் கடலும் கடல்சார்ந்த நிலமாகவும் காட்டப்படும் நிலையில் இவை ஒவ்வொன்றிலும் அமையப்பெற்ற பல்வேறு பட்ட வாழிடங்களைச் சங்க அகப்பாடல்களின்வழி அறியமுடிகின்றது. மலையும் மலைசார்ந்த நிலமாகிய குறிஞ்சி மலை எனும் நிலையைக் கடந்து மலைச்சாரல், மலைப்பிளப்பு, மலைச்சோலை, அடர்காடு, பாறையிடுக்குகள், சமவெளியை ஒத்த மலைச் சரிவுகள், புதர்க்காடுகள், புல்வெளிப்பரப்புகள் என பலவகை நிலப்பகுதி வாழிடங்களையும் அருவி, சுனை, ஓடை, ஆறு போன்ற நீர்ப்பகுதி வாழிடங்களையும் உள்ளடக்கியுள்ளது. இது போன்றே பிற நிலப்பகுதிகளும் பல வாழிடங்களின் தொகுப்பாக அமைகின்றன. இதனைச் சங்க அகப்பாடல்கள் பல்வேறு இடங்களில் பதிவுசெய்கின்றன. இவற்றில் ஒவ்வொரு நிலத்திற்கும் தனித்த சிறப்புடைய வாழிடங்களையும் ஏனைய நிலங்களிலும் காணப்படும் பொதுவான வாழிடங்களையும் இனம் காணமுடிகின்றது. மருத நிலத்தில் சுட்டபப்டும் ‘பழனம்’ எனும் வாழிடச் சூழல் ஏனைய பிற நிலங்களில் அமையாத தனித்த சிறப்புடையது. சோலை, பொதும்பு எனும் வாழிடங்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என அனைத்து நிலங்களிலும் அமையப்பெற்ற வாழிடங்களாகக் காணப்படுகின்றன. இங்கு சிறப்பின வாழிடங்கள் பகுத்து விளக்கப்படுகின்றன. முதலில் நான்கு நிலங்களுக்கான சிறப்பான வாழிடங்கள் நிலப்பெயரின் தலைப்புகளிலும் பொதுவான வாழிடங்கள் தனியாகவும் விளக்கப்படுகின்றன.

**முல்லை**

தொல்காப்பிய வைப்புமுறையுள் முதற்கண் சுட்டப்படும் நிலம் முல்லை. காடும் காடு சார்ந்த இடமும் முல்லை. காடு என்பது மழைபொய்த்து நீராதாரங்கள் குறைவுற்ற நிலையிலும், பல்வேறு பொரளாதாரத் தேவைகளின் அடிப்படையில் சுரண்டலுக்குள்ளான நிலையிலும், கட்டுப்பாடின்றி கட்டிடங்களின் ஊடுருவலினாலும், விளைநிலமாக்கப்பட்டு குடையப்பட்ட நிலையிலும் இன்று நாம் காணும் சிதைவுக்குள்ளான காடாகச் சங்க காலத்தில் இருந்திருக்க வாய்ப்பில்லை. இருபது வருடங்களுக்கு முன்னால் இருந்த பருவ மழையும், அடைமழையும் இன்று இல்லாமல் ஆகிவிட்டது. விளைச்சலிலும் பல்வேறு முரண்பாடுகளைக் காண்கிறோம். மாதம் மும்மாரி என்ற நிலையிலும் அடை மழை அடாத மழையாகப் பெய்த காலங்களிலும் காட்டின் தன்மை என்னவாக இருந்திருக்கும் என எண்ணிப் பார்க்க வேண்டும். மலைப்பகுதிகளிலும் காடு அமைந்திருக்கும். அது மலைச்சரிவுகளில் அடர்த்தியான சோலைக் காடுகளாக அமைந்திருக்கும். முல்லைக் காடு என்பது அடர்காடாகவும், புதர்க்காடாகவும், புள்வெளிக்காடாகவும் பல நிலைகளில் அமைந்திருக்கும். இன்று மலை அடிவாரங்கள் வரை விளைநிலங்களும் மனையிடங்களும் பரவியுள்ள நிலையில் காடு என்பதை உணர்ந்து கொள்வது இயலாத நிலையாகிவிட்டது. குமரி முனைக்கும் வடவேங்கடத்திற்கும் இடைப்பட்டதாகப் பனம்பாரானரால் எல்லை சுட்டப்பட்ட தமிழகத்தின் முல்லை நிலத்தின் பரவலைத் தனிநாயக அடிகள் “திருச்சிராப்பள்ளிக்கும் மதுரைக்கும் இடையிலுள்ள பகுதிகள், சேலத்திற்கும் கோயமுத்தூருக்கும் இடையிலுள்ள பகுதிகள், செட்டிநாட்டுப் பகுதியில்

அரைக்காடுகளாகவும் புதர்களாகவும் இருக்கும் பகுதிகள் போன்ற மேய்ச்சல்நிலப் பகுதிகளை முல்லை என்று அழைத்தனர்''[7] என விளக்கியுள்ளனர். சூழலியல் காடு என்பதை வெறும் மரம், செடி, கொடி, நிறைந்த ஒரு அமைப்பு எனக் காணாமல் அக்காட்டில் வாழும் விலங்கு, பறவை, பூச்சி எனப் பல்லுயிரினக் கூட்டாகவே காண்கின்றது. காட்டிலுள்ள மரங்கள் பெருமளவில் அழிக்கப்பட்ட நிலையில் சூழலியலாளர் சுட்டும் காடு என்னும் பொருண்மையும் இன்று நாம் காணும் காடும் ஒத்ததாக இருக்குமா? என்பது ஐயத்திற்கிடமானது. சங்க அகப்பாடல்களில் முல்லை நிலம் பல்வேறுபட்ட மரங்கள், செடி கொடிகள், விலங்குகள் பறவைகள் என பல உயிரிகளின் வாழிடமாகக் காட்டப்பட்டுள்ளது. முல்லை நிலத்தில் காடு, புதர்காடு, காட்டாறு, ஆற்றங்கரை எனப் பல வாழிடங்கள் சங்க அகப்பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவை பிற நிலங்களிலும் குறிக்கப்பட்டுள்ள நிலையில் ''புறவு'' என்ற வாழிடமானது பிற நிலங்களில் காணப்படாததாய் முல்லை நிலத்திற்கு மட்டும் உரியதாய்ச் சாட்டப்பட்டுள்ளது.

**புறவு**

புறவு என்பது முல்லை நிலத்தில் அமையப்பெற்றதொரு தனித்த வாழிடப்பகுதி என்பதை சங்க அகஇலக்கியங்களின்வழி அறியமுடிகின்றது. புறவு என்பதற்குக் கழகத் தமிழ் அகராதி ''குறிஞ்சிநிலம்; புறா; முல்லை நிலம்; விலங்கின கூட்டம்; காடு; சிறுகாடு; சாகுபடி நிலம்''[8] எனப் பொருளுரைக்கின்றது. புறவு முல்லை நிலத்தில் அமைந்ததொரு நிலப்பகுதி என்பதை ''முல்லையம்புறவு''[9] எனும் தொடர் காட்டுகின்றது. இது முல்லை நிலத்தில் அமைந்த புறவு என விளக்குகின்றது. இது சில இடங்களில் முல்லை நிலத்தைக் குறிப்பதாக உரையாசிரியர்கள் சுட்டுகின்றனர். முயல், யானை, இறலைமான், வேங்கைமரம் ஆகியன புறவில் காணப்படுவதாக சங்க அகப்பாடல்கள் காட்டுகின்றன. புறவில் மழைபெய்து பள்ளப்பகுதியில் தேங்கிய நீரில் காணப்படும் தேரையை அகநானூறு,

''படுமழை பொழிந்த பயமிகு புறவின்
நெடுநீர் அவல பகுவாய்த் தேரை''[10]

எனும் பாடலடிகளால் காட்டுகின்றது. இது நீர்நிலையையும் தன்னகத்தே புறவு கொண்டுள்ளது என்பதைத் தெளிவிக்கின்றது. கழகத்தமிழ் அகராதி மற்றும் சங்க அப்பாடல்களின் வழி புறவு என்பது முல்லை நிலத்தின் ஒரு பகுதி என்றும், ஒட்டுமொத்த முல்லை நிலம் எனவும் இருவகையிலும் சுட்டலாம்.

**குறிஞ்சி**

மலையும் மலைசார்ந்த நிலமும் குறிஞ்சி. தமிழகத்தின் நிலப்பரப்பினுள் மலைப்பகுதியானது மேற்குத்தொடர்ச்சி மலை, கிழக்குக் குன்றுகள் என இருவகையாக அமைந்துள்ளது. தமிழ் இலக்கியத் திணைக்கோட்பாட்டினுள் குறிஞ்சி மனிதர்களின் வாழிடம் எனும் சுட்டப்படினும் அது பிற உயிரினங்களின் இருப்பையும் சுட்டுவதை

கருப்பொருள் வரிசை காட்டுகின்றது. பண்டைத் தமிழ் மக்களின் குறிஞ்சி நிலம் எது என்பதை ‘‘மலைப்பகுதிகள், குன்றுகள், பழனிமலை, நீலகிரி போன்ற இடங்களில் காணப்படும் மலைப்பாங்கான நிலப்பகுதிகள், மேற்குத்தொடர்ச்சி மலை போன்றவற்றை அவர்கள் குறிஞ்சி என்று பெயரிட்டழைத்தனர்’’[11] எனும் கூற்று தெளிவிக்கும். மலைப்பகுதி செறிவான காடுகளால் நிரம்பியது. உயரே செல்லச் செல்ல பல்வேறு தோற்றங்களைக் கொடுக்க வல்லது. உயரத்திற்குத் தக்கபடி பல்வேறுபட்ட தாவரங்கள், விலங்குகள், பறவைகள் என பன்முகத்தன்மை கொண்ட வாழ்விடமாகக் குறிஞ்சிநிலம் காணப்படுகின்றது. மிக உயர்ந்த மலைச்சிகரங்களின் உச்சிகள் புல்வெளிகளாகக் காட்சி தருகின்றன. சங்க அகப்பாடல்களில் மலைப்பகுதிகளின் பல்வேறு தன்மைகள் சுட்டப்பட்டுள்ளன. குறிஞ்சித்திணைப் பாடல்களில் மலை என்பதைச் சுட்ட மலை, வரை, நெடுவரை, அடுக்கம், சிலம்பு, சாரல், பெருங்கல் எனப் பல சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இப்பதங்கள் பொதுவாக மலையைக் குறிப்பதாகப் பொருள்கொள்ளப்படுகின்றது எனினும் சில நுட்பமான அமைப்புகளைக் காட்டும் வெவ்வேறு சொற்கலாக இருக்கலாம். உதாரணமாக ‘வரை’ என்பது மலையைச் சுட்டின் ‘நெடுவரை’ என்பது நெடிதுயர்ந்த சிகரங்களை உடைய மலையைச் சுட்டலாம். ‘அடுக்கம்’ என்பது அடுக்கடுக்காக அமைந்த மலையைச் சுட்டலாம். எனினும் அகராதிகளும் உரைநூல்களும் பொதுவாக மலை என்றும், மலைப்பக்கம், பக்கமலை என்றும் தெளிவற்ற பொருண்மையைக் காட்டுகின்றன.

பொதுவான மலை என்ற சொல்லினாலும் குறிஞ்சிநிலம் சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. வேங்கை, சந்தனம், சுரபுன்னை, வாழை, தினை, குறிஞ்சி, யானை, புலி, வருடை, பாம்பு, வண்டு, சுரும்பு எனப் பல்வேறுபட்ட உயிரினங்களின் வாழிடமாக மலை சுட்டப்படுகின்றது. மலையின்கண் தினை, சந்தனமரம், வருடை ஆகியன காணப்பட்டதை,

‘‘வளமலைச் சிறுதினை’’[12]

‘‘மலைச் சாந்தின்’’[13]

‘‘வருடைமான் குழவிய வளமலை’’[14]

ஆகிய பாடலடிகள் காட்டுகின்றன. வருடை எனும் வரையாடு நான்காயிரம் முதல் ஆராயிரம் அடி உயரமுடைய நெடிய மலைகளில் காணப்படும் விலங்காகும். இதன் வாழிடத்தை சங்க அகப்பாடல்கள் ‘நெடுவரை’ எனச் சுட்டுவது குறிப்பிடத்தக்கது.

மலைப்பகுதியானது ‘சிலம்பு’ எனப் பல இடங்களில் சுட்டப்படுகின்றது. மலைப்பகுதியில் அமைந்த குகைப்பகுதிகளில் தேனீக்கள் தேன்கூடுகளைக் கட்டியிருந்ததை,

‘‘நறைகால் யாத்த நளிர்முகைச் சிலம்பின்’’[15]

எனும் பாடலடி காட்டுகின்றது. மலைப்பகுதியில் வாழை செழித்து வளர்ந்திருந்ததை,

"படுநீர்ச் சிலம்பில் கலித்த வாழை"[16]

"வாழையஞ் சிலம்பின்"[17]

ஆகிய பாடலடிகள் காட்டுகின்றன. சங்க அகப்பாடல்களில் 'கறி' எனச் சுட்டப்படும் மிளகுக் கொடியானது மலைப்பாங்கான பகுதிகளில் மட்டுமே வளரும் தன்மையுடைய தாவரமாகும். இதனை பல குறிஞ்சித் திணைப் பாடல்கள் சுட்டுவதைக்காணமுடிகின்றது. இதனை,

"கறிவளர் சிலம்பின்"[18]

கறிவள ரடுக்கத் திரவின் முழங்கி"[19]

எனவரும் பாடலடிகளால் அறியலாம். அடுக்கம் எனவரும் மலையைக் குறித்த சொல்லிற்கு உரையாசிரியர்கள் பக்கமலை என்று உரைகூறுகின்றனர். அடுக்கமாகிய பக்கமலையில் மூங்கில், வேங்கைமரம், சுரபுன்னை, மயில், ஆந்தை, பன்றி போன்ற உயிரினங்கள் வாழ்வது பதிவுசெய்யப்பட்டுள்ளது. பரந்த மலையின் பல்வேறு பக்கங்களிலும் பல்வகை உயிரினங்களின் வாழிடங்கள் அமைந்திருந்ததை,

"வேங்கை ஓங்கிய தேங்கமழ் சாரல்"[20]

"சாந்துதலைக் கொண்ட ஓங்குபெருஞ் சாரல்"[21]

"கழைவளர் சாரல்"[22]

"சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கித்

தொன்முரண் சோருந் துன்னருஞ் சாரல்"[23]

"சாரற் பலவின்"[24]

"வலந்த வள்ளி மரனோங்கு சாரல்"[25]

எனும் பாடலடிகளால் அறியலாம். வேங்கை மரம், சந்தனமரம், மூங்கில், களிறு, புலி, பலாமரம், வள்ளிக்கொடி ஆகியன மலைச்சாரலில் இருந்ததை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன.

**இறும்பு**

குறிஞ்சி நிலப்பகுதிகளில் காணப்படும் தனித்த வாழிடமாக 'இறும்பு' காட்டப்படுகின்றது. இறும்பு என்பது குறுங்காடு என அகராதிகளும் உரைநூல்களும் விளக்குகின்றன. மலைப்பகுதிகளின் அடிவாரத்தில் தொடங்கி குறிப்பிட்ட உயரம் வரை இடைவெளியற்ற மரங்கள் நெருங்கிய காட்டுப்பகுதிகளை நாம் காணலாம். மேலே செல்லச்செல்ல புல்வெளிகளையும் ஆங்காங்கே காடுகளையும் காணமுடியும். இவ்வாறு மலையின் மீது ஆங்காங்கே அமைந்திருக்கும் சிறுசிறுகாடுகளின் அமைப்பையே இறும்பு எனும் சங்ககாலச் சொல் குறிப்பிடுகிறதெனலாம். இவ்விறும்பு பல்வேறுபட்ட உயிரினங்களின் வாழிடமாகத் திகழ்ந்ததை பல சங்க அகப்பாடல்கள் காட்டுகின்றன. காடு மரங்கள் நிறைந்திருக்கும். குறுங்காடாகிய இறும்பும் நீண்டுயர்ந்த மரங்களைக் கொண்டிருந்ததை,

"மந்தியும் அறியா மரம்பயில் இறும்பின்
ஒண்செங் காந்தள் அவிழ்ந்த ஆங்கண்
தண்பல் அருவித் தாழ்நீர் ஒருசிறை"[26]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. மரம் ஏறும் தொழிலை உடைய மந்தியும் ஏறி அறியாத நீண்ட பெரிய மரங்களையும், காந்தள் போன்ற சிறு செடிகளையும் அருவிநீர் வருகின்ற வழியையும் உடைய இறும்பு என இறும்பின் அமைப்பை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன.

"கன்றுகால் யாத்த மன்றப் பலவின்
வேர்க்கொண்டு தூங்குங் கொழுஞ்சுளைப் பெரும்பழம்
குழவிச்சேதா மாந்தி அயலது
வேய்பயில் இறும்பின் ஆம்அறல் பருகும்"[27]

"காம்பமல் இறும்பில் பாம்புபடத் துவன்றிக்"[28]

எனும் பாடலடிகளில் இறும்பின்கண் பலாமரம் இருத்தல், ஆமேய்தல் ஆகியன காட்டப்படுகின்றன. இறும்பானது மூங்கில் நிறைந்து காணப்படுவதும் அங்கு நீர்நிலை அமைந்திருப்பதும் சுட்டப்படுகின்றது. இதனால் பல்வேறுவகைத் தாவரங்கள் விலங்குகள் நிறைந்து நீர்நிலைகளையும் கொண்டதாக இறும்பு எனும் உயிரின மலைவாழிடம் சங்க அகப்பாடல்களில் காட்டப்பட்டுள்ளதை அறியலாம்.

**பாலை**

சங்க அகப்பாடல்களைப் பொருத்தமட்டில் பாலை நிலமானது தனித்த நிலமாகச் சித்தரிக்கப்படவில்லை. முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் தம் இயல்பிலிருந்து திரிந்த நிலையிலேயே காட்டப்பட்டுள்ளது. பாலைக்கண் காணப்படும் உயிரிக்கருப்பொருட்களும் முல்லை மற்றும் குறிஞ்சி நிலத்திற்குரிய கருப்பொருட்களாகவே அமைந்துள்ளன. பாலைப் பாடல்களின் நிலமாக வறண்டமலைப்பகுதியும் காட்டுப்பகுதியும் காட்டப்படுகின்றன. மலைப்பகுதியானது பாலை நிலமாகச் சுட்டப்படுவதை,

"களிறு பிடிதழீஇப் பிறபுலம் படராது
பசிதின வருத்தும் பைதறு குன்றம்"[29]

எனும் ஐங்குறுநூற்றுப் பாடலடி களிறானது பிடியைத் தழுவி அதனை விடுத்து வேறு நிலம் செல்ல இயலாமல் தம்மை பசியானது உண்ணுமாறுபோல் வருத்தும் பசுமை அற்ற குன்றம் என விளக்குகின்றது. மழை இன்றி வெம்மை மேவுதலின் பசுமை அற்ற குன்றம் பாலைத்தோற்றம் பெற்றதை இப்பாலைத்திணைப் பாடலடிகள் பதிவுசெய்கின்றன.

"சூழ்கம் வம்மோ தோழி பாழ்பட்டுப்
பைதற வெந்த பாலை வெங்காட்டு"[30]

எனும் பாடலடிகள் காடானது பாழ்பட்டு பசுமை அறுந்து வெந்து உருவான பாலையின் தோற்றத்தைச் சுட்டுகின்றது.

"………………… நிலம்பக

அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின்

நிழல்தேய்ந் துளறிய மரத்த அறைகாய்

பறுநீர்ப் பைஞ்சுனை ஆமறப் புலர்தலின்"[31]

"வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின்"[32]

எனும் பாடலடிகள் நிலம் பிளக்குமாறு செய்யும் பகலவனின் அழல்போல் வெம்மைமிகு கதிர்களால் மரம் நிழல் தருதலின்றி காய்ந்தும் பாறைகள் வெம்மை மிகுந்து கொதிக்கவும் பசுமை நிறைந்த சுனைகளில் ஈரம் துளியும் இல்லையாம்படி காய்ந்தும், மரம் வேரோடும் காய்ந்து காணப்படும்படியும் பாலை தோற்றம் பெற்றதைச் சுட்டுகின்றன. மேற்கண்ட பாலைத்திணைப் பாடல்களில் காணப்படும் "பைதற" எனும் சொல் ஏற்கனவே இருந்த பசுமை இல்லையாம்படி சூரியனின் வெம்மையால் அற்றுப்போவதைக் காட்டுகின்றது. இது பாலை தோற்றம் என்பது இடையில் மழையற்றகாலத்து சூரியனின் வெம்மையால் உருவாவதை நமக்கு உணர்த்துகின்றது. இதனை "தமிழ்நாட்டில் இருக்கும் பாலைநிலங்கள் என்பவை, மிகச் சிறிய அளவில் கற்பனை செய்தாலும் கூடக் கோபி, சகாரா போன்ற மணற்பாங்கான பாலைவனப் பகுதிகள் அல்ல. தமிழர்கள் பாலை என்ற சொல்லால் குறித்தது, பிற நிலப்பகுதிகளை-குறிப்பாக மலைப்பகுதிகள், மேய்ச்சல் நிலங்களைத்தான் பருவமழை தப்பியோ, இயற்கையாக நீர் வறண்டதாலோ, கோடைக்காலத்தில் அவை பாலைவனம் போன்ற தோற்றத்தைப் பெற்றன."[32] எனும் தனிநாயக அடிகளாரின் கருத்து தெளிவுபடுத்தும் பாலை நிலத்தின் இத்தன்மையினாலேயே தொல்காப்பியர் பாலைக்கு தனித்த நிலம் சுட்டாது விடுத்தார். சங்க அகப்பாடல்களில் குறிஞ்சி நிலவாழிடங்களாகச் சுட்டப்படும் இறும்பு, சோலை, அடுக்கம், சாரல், முல்லை நில வாழிடங்களாகக் காட்டப்படும் புறவு, பொழில், சோலை, புதர் ஆகியன பாலைத்திணை பாடல்களிலும் காட்டப்படுகின்றன. குறிஞ்சி முல்லையில் செழிப்புடன் காட்டப்படுகின்ற வாழிடங்கள் பாலையில் செழிப்பற்று காய்ந்த பாழ்பட்ட நிலையில் காட்டப்படுகின்றன. பாலை நிலத்தில் கள்ளிநிறைந்த கள்ளியங்காடு தனித்த வாழிடப்பதிவாக அமைவதைக் காணமுடிகின்றது.

"வண்புறப் புறவின் செங்கால் சேவல்

களரி ஓங்கிய கவைமுட் கள்ளி

முளரியம் குடம்பை ஈன்றிளைப் பட்ட

வயவுநடைப் பேடை"[34]

"செங்காற் பல்லி தன்றுணை பயிரும்

அங்காற் கள்ளியங் காடிறந் தோரே"[35]

"நிலங்கரி கள்ளியங் காடிறந் தோரே"[36]

"கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை"[37]

போன்ற பாடலடிகளில் பாலை நிலத்தின் மண்ணை களரி, கரி எனச் சுட்டப்படுவதைக் காணமுடிகின்றது. இது ஏதும் விளையாத களர்நிலத்தைக் குறிப்பதாகக்கொள்ளலாம். இத்தகைய நிலத்தில் கள்ளி நிறைந்து காணப்படுவதும் அதில் புறா கூடுகட்டி குஞ்சு பொறிப்பதும், பல்லி, மான் போன்றவை வாழ்வதும் காட்டப்படுகின்றன.

**மருதம்**

மருதநிலம் நீர்வளம் மிக்கது. நீர் நிறைந்துள்ள நிலமதலின் நீர் நிறைந்துள்ள பல்வேறு நீர்நிலைகளும் தனித்தனி வாழிடங்களாக அமைந்தன. ஆற்றின் இருகரைகளிலும் மரங்கள் மற்றும் நீர்வாழ்தாவரங்கள் நிறைந்து காட்சியளித்தன. செழித்து வளர்ந்திருந்த மரம் செடி கொடி எனப் பல தாவரங்களுக்கும் தகுந்தாற்போல் பறவைகள் நிறைந்திருந்தன. நீர்வளம் நிறைந்த குளிர்ந்த பகுதிகளில் காணப்படும் எருமை மருத நிலத்தில் நிறைந்திருந்ததை சங்க அகப்பாடல்கள் காட்டுகின்றன. சேறுநிறைந்த கழனிகள் மருத நிலத்தின் செல்வப்பெருக்கிற்குக் காரணமாகின்றன. கழனிகளில் நெல் முதலியவற்றை மனிதர்கள் பயிர் செய்தனர். பிற உயிர்களின் வாழிடமாகவும் கழனி விளங்கியதை சங்க அகப்பாடல்கள் பதிவு செய்துள்ளன. சோலை போன்றவையும் மருதநிலத்தில் அமைந்திருந்தன.

**கழனி**

மனிதர்களின் சேறுநிறைந்த விளைநிலங்கள் கழனி எனப்பட்டன. மருத நிலைத்தின் நீரின்மிகையால் கழனிகள் சேறுடையதாகக் காணப்பட்டன. செறு, வயல் என்ற பெயர்களிலும் கழினகள் சுட்டப்பட்டன. கழனிகள் இயற்கையான நிலத்தில் மனிதனால் செயற்கையாக உருவாக்கப்பட்டவை. இது படிப்படியாக வளர்ந்தெழுந்த திணைக்கட்டமைப்பாகும். மனிதன் உழவுத்தொழிலை அறிந்து அவன் முறையாக நிலத்தை நீர்கொண்டு செம்மைப்படுத்தும் வரை அந்நிலம் வெறும் காடாக இருந்திருக்கும் என்பதை அவதாணிக்கமுடிகிறது. மனிதன் செயற்கையாக உருவாக்கிய கழனியில் விளைந்த தாவர உயிரினங்கள் யாவும் செயற்கை வாழிட உயிரிகளாகும். செயற்கை வாழிடத்தில் காணப்படும் தாவரஉயிரிகளைநாடி இயற்கையாகவே பூச்சி, நண்டு, ஆமை, பாம்பு, எலி போன்ற பிற உயிரினங்கள் வந்தன. மனிதனின் கழனியில் அமையப்பெற்ற செயற்கையின் விளைவாய் அமைந்த இயற்கையான வாழிடச்சூழல் பிற உயிர்களை தன்னிடத்தே வரவழைத்துக் கொண்டது. இவ்வாறு சங்க அகப்பாடல்களில் கழனி எனும் வாழிடம் செயற்கை வாழிடமாகவும் இயற்கை வாழிடமாகவும் பதிவு செய்யப்பட்டுள்ளது. மருதநிலத்து வயற்பகுதிகளில் விளைபயிர்களுடன் பல மரங்களும் செடிகளும் இருந்ததை,

“நீருறு செறுவில் நாறுமுடி யழுத்தநின்
ஆடுந ரோடுநீ சேறி யாயின்வண்
சாயும் நெய்தலும் ஓம்புமதி”[38]

“எரிமருள் வேங்கைக் கடவுள் காக்குங்
குருகார் கழனியின் இதணத்து”[39]

"கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்"[40]

"புள்ளிமிழ் அகல்வயல் ஒலிசெந்நெ லிடைபூத்த

முள்ளரைத் தாமரை முழுமுதல் சாய்த்ததன்"[41]

"விளைவறா வியன்கழனிக்

கார்க்கரும்பின்"[42]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. வயலில் கோரைப்புல், ஆம்பல், வேங்கைமரம், மாமரம், நெல், தாமரை, கரும்பு ஆகியன இருந்ததை மேற்கண்ட பாடலடிகள் சுட்டுகின்றன. தாவரவகை, பறவை, வலங்குவகை, உயிரினங்களின் வாழிடமாக கழனி அமைந்ததை,

"குருகுகொளக் குளித்த கெண்டை யயல

துருகெழு தாமர வான்முகை வெரூஉம்"[43]

"கரந்தையஞ் செறுவிற் றுணைதுறந்து கள்வன்

வள்ளை மென்கா லறுக்கு மூரன்"[44]

எனும் பாடலடிகளால் அறியலாம். குருகு, கெண்டை, தாமரை, கரந்தைக்கொடி, நண்டு, வள்ளைக்கொடி ஆகிய பல்வகை உயிரினங்களும் கழனியில் வாழ்ந்ததை மேற்கண்ட பாடலடிகள் காட்டுகின்றன. பழங்காலத்தில் மருதநிலம் எப்பொழுதும் நீர்நிறைந்து காணப்பட்டமையின் தாமரை, வாளைமீன், நண்டு என நீர் வாழிடங்களில் காணப்படும் உயிரினங்களும் கழனியில் காணப்பட்டதை அறியமுடிகின்றது. வயலில் மீன் குஞ்சுகளைக் காணும் நிலை இருபதுவருடங்களுக்கு முன்பாவும் இருந்தது குறிப்பிடத்தக்கது.

**பழனம்**

மருத நிலத்தின் பல்லுயிரிகளின் தனித்த வாழிடமாகப் பழனம் அமைவதைச் சங்க அகப்பாடல்களின்வழி அறியமுடிகின்றது. பழனம் என்பது நிலப்பகுதி, நீர்நிலை என இரு கூறையும் உள்ளடக்கியதாக இருந்திருக்க வேண்டும் எனும் எண்ணம் தோன்றுகின்றது.

"சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்

தந்தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி

வாளைமேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்

முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்"[45]

எனும் அகநானூற்றுப் பாடலடிகள் பழனத்தை நீர்நிலையாகக்காட்டி நீர்வாழ் உயிரினங்களையும் தாவரங்களையும் சுட்டுகின்றன. இவ்வாறே சங்க அகப்பாடல்கள் பலவற்றில் பழனம் நீர்நிலையாகவும் நீர்வாழ் உயிரிகளின் வாழ்விடமாகவும் காட்டப்படுகின்றது. பழனத்தில் காணப்படும் பல்வகை மீன்களை நாரை உண்பதை, ஐங்குநுறூறு காட்டுகின்றது.[46] பழனத்தின் நீர்வளம், மீன்வளம் பல பாடல்களில் சுட்டப்படுகின்றது. பொ.வே. சோமசுந்தரனார் "பழனம்-ஊர்ப்பொதுநிலம்"[47] என விளக்கி அதன்கண் காணப்படும் மீனை நாரை உண்பதை விளக்குகிறார். இது ஊர்ப் பொதுவிடமாகிய பழனத்தின்கண் அமையப்பெற்ற நீர்நிலையைச் சுட்டுவதாவும்

கொள்ளவிடமுள்ளது. சங்க அகப்பாடல்களில் வரும் “பழனப்பாகல்”[48] என்ற தொடர் பழனத்தின்கண் உள்ளதாகிய பாகலைக் குறிக்கின்றது. பாகல் என்பதற்கு உரையாசிரியர்கள் பாகற்கொடி என்றும் பலாமரம் என்றும் உரை கூறுகின்றனர். பலாவாயினும் பாகற்கொடியாயினும் நிலத்தின்கண் வளருந்தன்மையுடையது அறிந்தது. இதனை பழனமாகிய நீர்நிலையின் அருகில் உள்ளது எனவும் கொள்ளவிடமுன்டு.

“வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்
பழனப் பல்புள் இரியக் கழனி
வாங்குசினை மருதத் தூங்குதுணர் உதிரும்”[49]

எனும் நற்றிணையடிகளில் நெல் அறுவடைக்காலத்து பழனத்தில் அதாவது அறுவடைக்குண்டான பழனத்தின்கண் உள்ள பலபுள்ளினங்களை பாதுகாப்பாக வெளியேற்ற தண்ணுமை எனும் இசைக்கருவி ஒலிக்க, அதுகேட்டுப் பயந்த பறவைகள் கழனியின் அருகிலிருந்த மருதமரத்தின் கிளைகளில் சென்று தங்கியது எனும் கருத்து வெளிப்படுகின்றது. இங்கு பழனம் என்பது நெல்விளையப்பெற்ற வயலைச் சுட்டுவதாக வருவது குறிப்பிடத்தக்கது. இதனால் பழனம் என்பதற்கு ஊர்ப்பொதுவிடம், விளைநிலம், நீர்நிலை எனப் பல பொருண்மைகள் சுட்டப்படும் நிலையில் இது நிலப்பகுதியுடன் நீர்நிலையையும் கொண்டமைந்த வாழிடக்கூறு எனக் கொள்ளலாம். பழனம் என்பது மருதநிலத்திற்கண் பலவகைப்பட்ட உயிரினங்களையும் தன்னிடத்தே கொண்ட தனித்த பல்லுயிரிய வாழிடமாக விளங்கியதை சங்க அகப்பாடல்கள் நமக்குக் காட்டுகின்றன.

**நீர்நிலைகள்**

மருதநிலத்தில் அமையப் பெற்ற நீர்நிலைகள் யாவும் நன்னீர் நீர்நிலைகளாகும். ஆறு, குளம், ஏரி எனப் பல அமைப்புகளில் இவை அமைகின்றன. ஆறு குறிஞ்சியில் தோன்றி முல்லை வழியாக மருதநிலத்திற்குவந்து இறுதியில் நெய்தல் நிலத்தில் கடலில் கலக்கின்றது. மருத நிலத்தின் தனித்த நீர்நிலையாக மருதத்திணைப் பாடல்களில் பொய்கை இலஞ்சி ஆகியன சுட்டபப்டுகின்றன. இவற்றின்கண் பல்வேறு நீர்வாழ் உயிரினங்கள் வாழ்வது காட்டப்படுகின்றது.

“கயற்கணங் கலித்த பொய்கை ஊர”[50]
“பொய்கை யாம்ப லணிநிறக் கொழுமுகை”[51]
“வண்டுறை நயவரும் வளமலர்ப் பொய்கை”[52]
“பாசிப் பரப்பிற் பறழொடு வதிந்த
உண்ணாப் பிணவின் உயக்கஞ் சொலிய
நாளிரை தரீஇய எழுந்த நீர்நாய்
வாளையோ டுழப்ப”[53]

“மணிநிற மலர்ப்பொய்கை மகிழ்ந்தாடும் அன்னந்தன்”[54]

ஆகிய பாடலடிகளில் பொய்கையை வாழிடமாகக் கொண்ட பல உயிரினங்கள் சுட்டப்படுவதைக் காணலாம். இதுபோன்று பல உயிரினங்களின் வாழிடம் பொய்கையாக

அமைவது சங்க அகப்பாடல்களில் சுட்டப்படுகின்றது. தற்காலத்தில் ஆறு தவிர்த்த நன்னீர் நீர்நிலைகள் குளம், குட்டை, ஏரி, ஊரணி, கன்மாய் எனப்பல பெயர்களில் சுட்டப்படுகின்றது. இந்நிலையில் சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் பொய்கை எனும் நீர்நிலை எது என்பது தெளிவுற அறியமாறில்லை. பொய்கையில் மீனினங்கள் நிறைந்து காணப்படுவதும் ஆம்பல் தாமரை மலர்ந்திருப்பதும், நீர்ப்பறவைகள் காணப்படுவதும் பொய்கையின் மேற்பரப்பு பாசிபடர்ந்து காணப்படுவதும் நீர்நாய் உறைவதும், ஆமை உலவுவதும் சுட்டபப்டுகின்றது. குளத்தின் கண்ணும் இத்தகைய சூழலை நாம் காணமுடியும். ஓடும் நீர்நிலைக்கண் பாசிபடர்ந்து காணப்படுவது அரிது, எனவே பொய்கை என்பது குளம், குட்டை, ஏரி போன்ற நீர்நிலையாகவே இருந்திருக்கும் எனத் துணியலாம். பொய்கையை அடுத்து இலஞ்சி எனப்படும் நீர்வாழிட அமைப்பினை,

> ''அரிற்பவர் பிரம்பின் வரிப்புற விளைகனி
> குண்டுநீ ரிலஞ்சிக் கெண்டை கதூஉம்''[55]
>
> ''மீன்முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை''[56]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. குண்டுநீர் என்பதற்கு ஆழம் மிகுந்த நீர்ப்பகுதி என்று உரையாசிரியர்கள் சுட்டுகின்றனர். மிக ஆழமான பள்ளம் என இதனைக் கொள்ளலாம். இலஞ்சி எனும் நீர்நிலையானது தன்னிடத்தே ஆழமான பகுதியையும் கொண்டிருந்தது என்பதை 'குண்டுநீ ரிலஞ்சி' எனும் தொடர் குறிக்கின்றது. இது மீன் மிகுந்து காணப்பட்டது 'மீன்முதிர் இலஞ்சி' எனும் தொடரால் அறியவருகின்றது. 'கயம்' எனும் நீர்நிலை பல்வகை நீர்வாழ் உயிரிகளையும் கொண்டதாகக் காட்டப்படுகின்றது. இதனைக் குளம் எனச் சுட்டுவர். மருதநிலத்தோர் தமது நீர்த்தேவைக்காக கிணற்றைப் பயன்படுத்தினர். கிணற்றைக் கேணி எனச் சுட்டினர். இக்கேணி பாசி நிறைந்து காணப்பட்டதை,

> ''ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க
> பாசி''[57]

எனும் குறுந்தொகைப் பாடலடி காட்டுகின்றது. இவ்வாறு மருதநிலத்தின் நீர்நிலைகள் பல்லுயிரின வாழிடமாக அமையப் பெற்றிருந்ததை சங்க அகப்பாடல்கள் வழி அறியமுடிகின்றது. தாவரம், விலங்கு, பூச்சி பறவை, புல்வகை எனப் பல்வேறு உயிரினங்களின் ஆதாரமாக மருதநில நீர்நிலைகள் இருந்தது காட்டப்படுகின்றது. நீர்வளம் மிகுந்த அக்காலகட்டத்தில் இத்தகைய பல்லுயிரிவளம் சாத்தியமே என்பதை உணரலாம். இன்று அவ்வாறில்லை என்பது குறிப்பிடத்தக்கது. நன்னீர்நிலைகள் மீதான தொழிற்சாலைகலின் வேதிப்பொருள் மற்றும் கழிவுப் பொருட்களின் தாக்கத்தால் நன்னீர் நிலைகள் மாசடைந்து தான் கொண்டிறுந்த பல்வேறு உயிரினங்களின் இருப்பை இழந்துவிட்ட தன்மையை இன்று நாம் காண்கிறோம்.

**நெய்தல்**

நெய்தல் நிலம் மற்ற நிலங்களினின்று வேறுபட்டது. தனித்த கூறுகளைத் தன்னகத்தே கொண்டது. இது ஒருபுறம் பரந்த நீர்ப்பரப்பைக் கொண்டது. மற்றொருபுறம்

பரந்த மணற்பரப்பைக் கொண்டது. மற்றநிலங்களில் மண் இருக்க நெய்தல் நிலம் முழுவதம் மணல் காணப்படுகின்றது. இவ்வமைப்பு நெய்தல் நிலத்தைப் பிற நிலங்களிலிருந்தும் முற்றிலும் வேறான நிலமாகக் காட்டுகின்றது. இங்கு காணப்படும் தாவரங்களும் பிறநிலத் தாவரங்களிலிருந்து வேறுபட்டது. நெய்தல் நிலத்தின் பரப்பினை ‘‘கடலின் கரைப்பகுதியை மட்டுமே நெய்தல் என்று நினைத்துவிடக்கூடாது. கடலிலிருந்து உள்நாட்டுக்குள் மூன்று, நான்கு, ஐந்து மைல் வரையிலும் கூடச் செல்லுகின்ற மணல் நிரம்பிய தரைப்பகுதி அனைத்தும் நெய்தல் ஆகும்’’[58] எனத் தனிநாயக அடிகள் விளக்குகின்றார். பண்டையத் தமிழகத்தின் கடற்கரைப் பரப்பானது இன்றைய கடற்கரைப் பகுதிகளுடன் கேரளத்தின் கடற்கரைப்பகுதிகளையும் கொண்டிருந்தது. கடற்கரையின் மணற்பரப்புச் சோலைகள், ஆறு கடலில் சேரும் கழிமுகங்கள், உப்பு விளையும் உப்பங்கழிகள் என நெய்தல் நிலம் பண்முகத்தன்மை கொண்டமைகின்றது.

**கடற்கரைப்பகுதி**

கடற்கரைப்பகுதி முழுமையும் மணலால் நிரம்பியது. கடலலையால் ஓயாது தீண்டப்படுவது. கடலின் விளம்பில் இருந்து நோக்கும் பொழுது மணல்மேடு நீண்டுசெல்வதை உணரலாம். கடற்கரை பரதவர்களின் வாழிடமாக அமைவது. கடலையும் கடற்கரையின் இயக்கத்தையும் தெளிவுற அறிந்த இனம் அது. தமது மரபார்ந்த அறிவு பல்வேறு இடையூறுகளாலும் தொழில்முறை மாற்றத்தாலும் அழிந்துபட்டநிலையில் பல்வேறு இன்னல்களுக்கு ஆட்பட்டுள்ள இனம். இவர்களது இயற்கையறிவு பல்லுயிரிய வளத்திற்குத் துணைசெய்வதாகும். கடற்கரை சார்ந்த சட்டங்களும் திட்டங்களுமே தற்காலத்தில் இவர்களை இயக்கி வருகின்றதெனலாம். இம்மக்களையும் உள்ளடக்கியதாக கடற்கரைப்பகுதி பல்லுயிரின வாழிடமாகத் திகழ்கின்றது. கடற்கரைப்பகுதிமணல் மேடுகளையும் மணற்பரப்பையும் உள்ளடக்கியது. இத்தகைய நெய்தல் நிலக்கடற்கரையில் பனைமரங்கள் மிகுந்து காணப்படுவதை பல சங்க இலக்கியப் பாடல்கள் பதிவு செய்துள்ளன. கடற்கரை மணற்தொகுதி அடும்பங்கொடி நிறைந்து காணப்படுவதை,

‘‘அடும்பிவ ரணியெக்கர்’’[59]

எனும் கலித்தொகைப்பாடலடி சுட்டுகின்றது. கடற்கரையில் அடும்பங் கொடி மிகுந்திருத்தலை பல பாடல்கள் சுட்டியுள்ளன. ‘எக்கர்’ என்னும் சொல் மணல் மேட்டைக் குறிக்கின்றது. நெய்தற்திணைப் பாடல்கள் பலவற்றில் கடற்கரையின்கண் காணப்படும் புன்னை தாழை, பனை ஆகிய மரங்கள் திரும்பத்திரும்பச் சுட்டப்படுகின்றன.

‘‘பொங்குதிரை பொருத வார்மண லடைகரைப்
புன்கால் நாவற் பொதிப்புற இருங்கணி’’[60]

‘‘கழிதேர்ந் தசைஇய கருங்கால் வெண்குரு
கடைகரைத் தாழைக் குழீஇப்’’[61]

‘‘அழுவ நின்ற வலர்வேய் கண்டல்’’[62]

“பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
கருங்கோட்டுப் புன்னைத் தங்கும்”[63]

“மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்
கான லணிந்த உயர்மணல் எக்கர்”[64]

“எக்கர் புன்னை இன்னிழல் அசைஇச்
செக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டி”[65]

ஆகிய பாடலடிகளில் கடற்கரைப் பகுதி உயிரினங்கள் காட்டப்படுகின்றன. இவ்வுயிரினங்களின் வாழிடமாக கடற்கரை அமைந்துள்ளது. அடைகரை, அழுவம், கடற்கரை எக்கர் என்பன கடற்கரையைச் சுட்டுகின்றன. கடற்கரை மணலில் காணப்படும் மரங்களில் தங்கும் பறவைகள், கடற்கரையில் ஊர்ந்து திரியும் சங்கு முதலியன, வளைபறித்துத் தங்கும் நண்டு, ஆமை ஆகியவற்றின் வாழிடமாக கடற்கரை பதிவுசெய்யப்பட்டுள்ளது.

**கழி**

நெய்தல் நிலத்தில் அமையப்பெற்ற சிறப்புமிக்க வாழிடமாக கழிமுகம் காணப்படுகின்றது. தாவரம், விலங்கு, மீனினம், பறவை என அனைத்து வகை உயிரினங்களின் கூட்டான வாழிடமாக கழிமுகம் அமைந்துள்ளது. சங்க அகப்பாடல்களில், நெய்தல்திணைப் பாடல்களில் கழிமுகம் சுட்டப்பட்டுள்ளது. குறிஞ்சி நிலத்தில் உற்பத்தியாகும் அருவி மற்றும் ஓடைநீர் சேர்ந்து முல்லை நிலத்தில் ஆறாய்ப் பெருக்கெடுத்து விரைந்தோடி மருதநிலத்தின் சமவெளியில் ஊர்ந்து இறுதியில் நெய்தல் நிலத்தில் கடலுடன் கலக்கின்றது. இவ்வாறு ஆறு கடலுடன் கலக்கும் பகுதியே கழிமுகம் எனச் சுட்டப்படுகின்றது. இது ஆற்றின் நன்னீரும் கடலின் உவர்நீரும் கலக்கும் பகுதியாகும். நன்னீர் உப்புநீருடன் கலப்பதால் இங்கு கடல்நீரின் உப்புத்தன்மை சற்று குறைந்து காணப்படும். இங்கு நன்னீர் மற்றும் உவர்நீர் உயிரினங்க்ள காணப்படுவது இயல்பு. ஆறு கடலில் கலக்கும் பொழுது பல கிளைகளாகப் பிரிந்து கலக்கும் தன்மை காணப்படுகின்றது. இப்பகுதிகள் சேறுநிறைந்த சதுப்பு நிலங்களாகக் காணப்படுகின்றன. அதனை அடுத்து கடலை ஒட்டி கழிமுகம் அமைகின்றது. சங்க இலக்கியத்தில் கழி என்பதற்கு இரு வகையில் உரையாசிரியர்கள் விளக்கம் கூறுகின்றனர். ஆறு கடலில் இணையும் கழிமுகம் என்றும் உப்பங்கழி என்றும் பொருளுரைக்கின்றனர். உப்பங்கழி எனச்சுட்டப்படும் உப்பளம் உப்புவிளையும் வயல் போன்ற அமைப்பினை உடையது. கழிமுகம் தில்லை, புன்னை, தாழை, நெய்தல் எனப் பல்வேறு பட்ட தாவரங்களைக் கொண்டது. கழிமுகச் சோலைகள் பல பாடல்களில் சுட்டப்படுகின்றன. சங்க அகப்பாடல்கள் கழியைச் சுட்டும் பொழுது ‘இருங்கழி’[66], ‘கொடுங்கழி’[67], ‘இனமீனிருங்கழி’[68] எனச் சுட்டுகின்றன. இருங்கழி என்பதை இருண்டகழி எனவும் பெரியகழி எனவும் பொருள்கொள்ளலாம். கழிமுகத்தில் கழிமுகத் தாவரங்கள் நிறைந்து காணப்படுதலின் கழிமுகம் நிழல்படிந்து இருண்டு காணப்படுவதால் இருண்டகழி எனவும் கொள்ளலாம். பண்டைக் காலத்தில் ஆறுகளின் நீர்ப் பெருக்கின் காரணமாக மிகுந்த நீர்

கழிமுகத்தில் சேர்தலின் பரந்து விரிந்த கழிமுகம் அமையப்பெற்றிருத்தலின் பெரியகழி எனக்கொள்ளலாம். இந்நிலை இன்று பெரிதும் மாறிவிட்டது. கொடுங்கழி என்பது வளைந்த கழி எனப் பொருள்படும் கடற்கரை நூல் பிடித்தாற்போல் நேரான அமைப்புடையதன்று. வளைந்து பொதுவான நிலப்பகுதியினின்று நீண்டும் உள்வாங்கியும் வளைந்தும் நெலிந்தும் செல்லும் அமைப்புடையது. கடற்கரையில் அமையப்பெற்ற கழிமுகமும் வளைந்து செல்லும் தன்மையுடையது. குறிப்பாக கழியில் அமையப்பெற்ற கழிமுக மரத்தொகுப்பு ஒரே நேராக அமையாது. பலதரப்பட்ட அமைப்பைக் கொண்டிருக்கும் இதனையே 'கொடுங்கழி' எனும் பதம் குறிப்பிடுகின்றது. இத்தகைய தன்மையால் சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் கழி என்பது பெரும்பான்மையும் ஆறு கடலில் இணையும் கழியையே சுட்டுகின்றது எனலாம். பலதரப்பட்ட மீன்வகைகள் வாழும் தன்மையுடையது. இதனையே 'இனமீன் இருங்கழி' எனும் தொடர் சுட்டுகின்றது. ஆமை, நீர்நாய், முதலை, சுறா போன்ற உயிரினங்கள் கழிமுகத்தில் வாழும்.

> "கோட்சுறா வழங்கும் வாட்கேழ் இருங்கழி
> மணியேர் நெய்தல் மாமலர் நிறையப்
> பொன்நேர் நுண்தாது புன்னை தாஅம்
> வீழ்தாழ் தாழைப் புக்கமழ் கானல்"[69]

> "இருங்கழிச் சேயிறா வினப்புள் ளாரும்"[70]
> "நெடுநீர் இருங்கழிக் கடுமீன் கலிப்பினும்"[71]
> "கொடுந்தாள் முதலையொடு கோட்டு மீன் வழங்கும்
> இருங்கழி யிட்டு"[72]

எனும் பாடலடிகளில் கழிமுகத்தின் தன்மை காட்டப்படுகின்றது. கழிமுகம் என்பது கடல்வாழ் உயிரினங்களின் முக்கிய வாழ்விடமாகும். சுறா மீன், இறால் போன்ற பலவகை மீன்களின் குஞ்சுகள் குறிப்பிட்ட காலம் வரை கழிமுகப்பகுதிகளிலேயே தமக்கு வேண்டிய உணவினைப் பெறுகின்றன. பின்னரே அவை கடலினுள் செல்லும். இதனாலேயே கடல்வாழ் உயிரினங்கள் பல கழிமுகத்தில் காணப்படுகின்றன. இத்தன்மை சங்க அகப்பாடல்களில் தெளிவுறக் காட்டப்பட்டுள்ளது. கழிமுகத்தின் இத்தகைய சிறப்பினை பல சூழலியலாளர்கள் சுட்டுகின்றனர். கழிமுகம் பல்லுயிரின வாழிடமாக அமைவதை, "பெரும்பாலான மீன், கூன் இறால் குஞ்சுகள் கழிமுகங்களுக்கு வலசை வந்து ஊட்டச்சத்தை உணவாகக் கொண்டு, வளர்ந்தபின் மீண்டும் கடலுக்குச் செல்கின்றன. ஆறு, ஏரிகளில் இருந்து கடலில் சேரும் நன்னீரால் உப்பின் அளவு குறைந்திருப்பது, உயிரினங்கள் வளர்வதற்கு ஏற்ற சூழலை உருவாக்கியுள்ளது. கண்டல்களில் தாவர மிதவை உயிரி, விலங்கு மிதவை உயிரி என இருவகை மிதவை உயிரிகள் காணப்படுகின்றன. இந்த மிதவை உயிரிகள் தான் கூன் இறால், மீன் குஞ்சுகளுக்கு முக்கிய உணவாக அமைகின்றன. கூன் இறால்களின் (Shrimps) குஞ்சுகள் கடலில் பொரிக்கப்பட்டாலும், கண்டல்களுக்கு வலசை வந்து இங்குள்ள மக்குகளை உணவாக்கி

வளர்ந்து இனப்பெருக்கத்திற்குத் தயாராகும்போது கடலுக்குப் பயனிக்கின்றன. இந்தக் கூண்இறால்கள்தான் பூநாரைகளின் முக்கிய உணவாக அமைகிறது"[73] எனும் ஏ.சண்முகானந்தம் அவர்களின் கருத்து காட்டுகின்றது. ஆற்றுநீர் இல்லாமல் போனால் கழிமுகவாழிடம் பாதிக்கப்பட்டு கடல்மீன் இனங்கள் உட்பட பல தாவரங்களும், பறவைகளும் தமது வாழிட இழப்பிற்குள்ளாகும். மேலும் கடல் மீன்களின் சில இனங்கள் இல்லாமல் போய் ஒட்டுமொத்த கடலின் பல்லுயிரியியம் பாதிக்கப்பட்டு கடல் சீர்கேடுறும். இதனால் கழிமுகம் சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் பல்வேறு பட்ட உயிரினவளங்களுடன் பாதுகாக்கப்படுவது இன்றியமையாததாகும்.

### பொது வாழிடங்கள்

ஐந்திணையில் அடங்கும் நிலவமைப்புகளில் அமையப்பெற்ற அந்தந்த நிலத்திற்கே உண்டான தனித்த வாழிடங்கள் தவிர அந்நிலங்களில் அமையப் பெற்ற பொதுவான வாழிடங்களை சங்க அகப்பாடல்கள் சுட்டியுள்ளன. குறிஞ்சி நிலத்தில் காணப்படும் சோலையாகிய வாழிடமானது முல்லை, மருதம், நெய்தல் என பிற நிலங்களில் காணப்படுவது இதற்குக் காட்டாகும். காடு, புனம், ஆற்றங்கரை, புற்று, வளை என இயற்கையாக அமையப்பெற்ற வாழிடங்களையும் மனிதர்கள் தாங்கள் வாழும் சூழலில் தமது தேவைகருதி ஏற்படுத்திக் கொண்ட சில வாழிடச்சூழல்களையும் சங்க அகப்பாடல்கள் காட்டியுள்ளன. இத்தன்மையில் அமைந்த வாழிடங்களை விளக்குவதாக இப்பகுதி அமைகின்றது.

### காடு, சோலை

காடு, சோலை ஆகியன மரம் செடி கொடிகள் மிகுந்து காணப்படும் வாழிட அமைப்பாகும். இவை குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை என அனைத்து நிலங்களிலும் அமைந்திருக்கும். காடு, சோலை என்பவை வெறும் மரம் செடி கொடிகளின் தொகுப்பன்று அது பல்வேறு பட்ட உயிரினங்களின் தொகுப்பாகும். இதனை "மனிதரின் வாழ்வாதாரங்களுக்கு ஒரு கருவூலமாகவும் எண்ணற்ற உயிரினங்களுக்கு வாழிடமாகவும் விளங்கும் காடுகள் பல நுண்ணிய இயற்கைப்பிணைப்புகளாலான ஒரு சூழல் தொகுதி"[74] எனும் கருத்தால் அறியலாம். குறிஞ்சி நிலத்திலும் முல்லை நிலத்திலும் காடுகள் அமைந்திருக்கும் எனினும் இரண்டும் ஒன்றுக்கொன்று வேறானவை. அவற்றில் காணும் உயிரினங்களும் வேறுவேறானவை. மலைப்பகுதிக் காட்டின் தன்மையை "காட்டினுள் நடத்து செல்கையில் அழகுமிகு இயற்கை காட்சிகளையும், அருவிகளையும், சிற்றோடைகளையும் ஆங்காங்கே காண்பதோடு மட்டுமன்றி பெரிய பள்ளத்தாக்குகளும், மலைமுகடுகளும், மேகங்களைத் தழுவி நிற்கும் மரங்களும், மரங்களற்ற திறந்த புல்வெளிகளும், காட்டுப் பூக்களையும், பழங்களையும் கொண்ட செடி கொடிகளைப் பார்த்தபடியும், தாங்கள் இருப்பதை உணர்த்த பறவைகள், மான்கள், யானைகள் எழுப்பும் ஒலியினை காடு முழுக்க ஆங்காங்கே கேட்டுக்கொண்டு அமைதியாகவும், மகிழ்ச்சியாகவும் செல்லலாம்"[75] எனும் பதிவு விளக்குகின்றது. இது மலைக்காட்டின் தன்மையை தெளிவுறக் காட்டும் பதிவாகும். பொதுவாக சங்க அகப்பாடல்களில் காடு என்பது காடு, கா என்ற

பெயர்களில் சுட்டப்படுகின்றது. குறிஞ்சி நிலத்தில் காணப்படும் மழைக்காடுகள் தனிச்சிறப்புடையதாகும். உயர்ந்த மரங்களால் நிறைந்த மலைப்பகுதியில் காணப்படும் ‘‘மழைக்காடுகள்’’ சூரியவொளியும் புகாதவண்ணம் மரங்கள் அடர்ந்து இருள்கவிந்து காணப்படும். இத்தகைய காட்டை கலித்தொகை,

‘‘வெயிலொளி யறியாத விரிமலர்த் தண்காவின்’’[76]

எனத் தெளிவுற எடுத்துக்காட்டுகின்றது. பகலவனின் வெயிலோ, ஒளியோ ஊடுருவிச்செல்லவியலாத குளிர்ச்சியையுடைய காடு என்பது இவ்வடியில் காட்டப்படுகின்றது. திருவள்ளுவர் கூறும் ‘அணிநிழற்காடு’[77] என்பதற்கு விளக்கம் கூறும் ஏ. சண்முகானந்தம் மழைக்காடுகள் பற்றி ‘‘அணிநிழற்காடுகளில் மழைத்துளிகள் மண்ணைத் துளைக்காமலும், வெயில் தரையைத் தொடாதவாறு நெடிதுயர்ந்த மரங்களும், இலைகளும் அடர்த்தியாக வளர்ந்து காணப்படும்’’[78] என விளக்கியுள்ளது மேற்கண்ட கலித்தொகையடிக் கருத்தையும் உள்ளடக்கி வருவதைக் காணலாம். மேலும் இக்காடுகள் நெடிதுயர்ந்த மரங்களுடன் குட்டைமரங்கள், புதர்ச்செடி, கொடியினங்கள், மரத்தில் படர்ந்து காணப்படும் கொடியினங்கள், புற்கள் என அமையும் என்கிறார். சங்க அகப்பாடல்களில் சோலை என்பது சோலை, காணல், பொதும்பு என்ற பெயர்களில் சுட்டப்படுவதை காணமுடிகின்றது. இது முல்லை, குறிஞ்சி, நெய்தல் திணைப் பாடல்களில் காணப்படுகின்றது. மருதநிலச் சோலையானது மாஞ்சோலை, ஆற்றங்கரைச்சோலை என்ற நிலைகளில் சுட்டப்பட்டுள்ளது.

‘‘உள்ளூர்க் குரீஇக் கருவுடைத் தன்ன
பெரும்போது அவிழ்ந்த கருந்தாள் புன்னைக்
காணலம்’’[79]

‘‘தேம்படு சிலம்பில் தெள்ளறல் தழீஇய
துறுகல் அயல தூமணல் அடைகரை
அலங்குசினை பொதுளிய நறவடி மாஅத்துப்
பொதும்பு’’[80]

‘‘பல்வீ பட்ட பசுநனைக் குரவம்
பொரிப்பூம் புன்கொடு பொழிலணி’’[81]

‘‘காடுகால் யாத்த நீடுமரச் சோலை
விழைவெளில் ஆடுங் கழைவளர் நனந்தலை’’[82]

‘‘கானல் பெண்ணைத் தேனுடை அழிபழம்’’[83]

‘‘பொதும்பில் புன்னைச் சினைசேர்பு இருந்த’’[84]

எனும் பாடலடிகள் சோலையினைச் சுட்டுவதாக அமைகின்றன. குறிஞ்சி முல்லையில் பலவகை மரங்கள் சோலையாக அமைய நெய்தலில் புன்னை ஞாழல் தில்லை மரங்கள் சோலையாக அமைகின்றன. இதன்கண் வாழும் உயிரினங்களை சங்க அகப்பாடல்கள்

சுட்டியுள்ளன. மழைக் காடுகளின் தோற்றத்தையும் அதன்கன் வசிக்கும் உயிரினங்களையும் சங்க அகப்பாடல்கள் பதிவு செய்துள்ளன. வளமான சோலையில் குரங்கு, களிறு, புலி ஆகியன வாழும் நிலை காடுகளின் செழிப்பைக் காட்டுவதாக அமைகின்றது. நெய்தல் சோலையில் பல்வகைப் பட்ட பறவைகள் கடல் மற்றும் கழியில் உள்ள மீன்களை உண்டு உறையும் தன்மை நெய்தல் நிலப் பாடல்களில் சுட்டப்பட்டுள்ளன.

**சுனை**

சுனை எனச் சுட்டப்படும் நீர்வாழிடம் முல்லை மற்றும் குறிஞ்சி நிலப்பகுதிகளில் சுட்டப்பட்டுள்ளது. இயற்கையாக அமைந்த நீர்தேங்கிய இடம் அல்லது இயற்கையில் ஏற்பட்ட நீர்ஊற்றின் காரணமாக நீர் தேங்கிக் காணப்படும் இடம் சுனை எனச் சுட்டப்படுகின்றது. சுனை நீரில் பலவகைப்பட்ட நீர்வாழ் விலங்குகள் வாழ்வது சுட்டப்படுகின்றது. இதனை,

''கண்போல் நீலம் சுனைதொறும் மலர
வீதா வேங்கைய வயனெடும் புறவின்''[85]

''குன்ற நாடன் குன்றத்துக் கவாஅற்
பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையு''[86]

''இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை''[87]

ஆகிய பாடலடிகளால் அறியலாம். குறிஞ்சி முல்லை நிலங்களில் தனித்த வாழிடமாக சுனையாகிய நீர்நிலை அமைந்ததை இவ்வடிகள் காட்டுகின்றன. சில பாலைத்திணைப் பாடல்களிலும் சுனை சுட்டப்படுவது குறிப்பிடத்தக்கது. அது குறிஞ்சி அல்லது முல்லை நிலத்தின் பின்னனியில் காட்ட்டப்படுகின்றது.

**புதர்**

புதராகிய வாழிடம் அனைத்துப் பகுதிகளிலும் இயல்பாகக் காணப்படும் அமைப்பாகும். புதர் என்ற அமைப்பானது தனித்த வாழிடம் அன்று இது பல்வகை உயிரிகளின் கூட்டாகும். நாம் பொதுவாக ஒரு புதரினைப் பார்க்கும்பொழுது அதில் பெரிதும் நம் காட்சிக்கு கிடைப்பது புதர்ச் செடிகளாகும். சில புதர்களில் சில புல்வகை மட்டும் செழித்து அப்புல்கூட்டமே ஒரு பெரும் புதராகக் காட்சியளிக்கும். சில இடங்களில் புதர்ச்செடிகளுடன் பலவகைச் கொடிகளும் பின்னிப் பிணைந்து காணப்படும். அங்கு புற்களும் அடர்ந்திருக்கும். மழைக்காலத்திற்குப்பின் இப்புதர்கள் செழித்துக் காணப்படும். கோடையில் சற்று அடர்த்தி குறைந்து காணப்படும். இத்தகைய புதராகிய வாழிடத்தை சங்க அகப்பாடல்கள் நால்வகை நிலங்களிலும் காட்டியுள்ளன. புதர் என்பது தாவரக் கூட்டாக நமக்குத் தெரியும். ஆனால் அப்புதரில் எண்ணற்ற பூச்சியினங்கள் வாழ்வதை புதரை நாம் உற்று நோக்கும் பொழுது அறிந்துகொள்ள முடியும். முல்லை மற்றும் குறிஞ்சி நிலத்தின்கண் அமையப்பெற்ற பெரிய அளவிலான புதர்களில் பெரிய விலங்குகள் வசிக்கும் தன்மை காணப்படுகின்றது. புதரை முயல் தனக்குரிய

வாழ்விடமாகக் கொண்டது அனைவரும் அறிந்தது. சங்க அகப்பாடல்களில் காணப்படும் புதரின் தன்மையை

''மணிகண் டன்ன மாநிறக் கருவிளை
ஒண்பூந் தோன்றியொடு தண்புதல் அணிய''[88]

''வருமழைக் கெதிரிய மணிநிற இரும்புதல்
நரைநிறம் படுத்த நல்லிணர்த்து எறுழ்வீ''[89]

''பனிப்புத லிவர்ந்த பைங்கொடி யவரை''[90]

''மானேறு மடப்பினை தழீஇ மருள்கூர்ந்து
கான நண்ணிய புதன்மறைந் தொடுங்கவும்''[91]

''நெடும்புதற் கானத்து மடப்பிடி''[92]

''மடிவீடு வீளை வெரீஇக் குறுமுயல்
மன்ற இரும்புதல் ஒளிக்கும்''[93]

போன்ற பாடலடிகளின் வழி உணரலாம். பல்வேறு வகையான கொடிகள் படர்ந்து புதர்தோற்றம் பெற்றதையும் அத்தகைய புதர் அமைந்த சூழலில் முயல், மான் போன்றவை வாழ்ந்ததையும் மேற்கண்ட சங்கப்பாடலடிகள் விளக்குகின்றன. புதர்க்காடுகளுள் வாழும் இயல்புடைய பல்வகை உயிரினங்கள் இவ்வகைப் புதர்களில் வாழ்கின்றன. இப்புதர்களின் தோற்றத்திற்கு அடிப்படையாக அமைவன தாவரங்களாகும்.

**புற்று**

அறிவியல் வளர்ச்சி பண்மடங்கு பெருகிவிட்ட தற்காலத்திலும் பாம்புகள் புற்றில் உறைவதைக் கொண்டு அவை புற்றை உருவாக்குகிறது என்று மூட நம்பிக்கை நடப்பில் இருப்பதைக் காணமுடிகின்றது. ஆனால் ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதாகக் கூறப்படும் சங்க இலக்கியங்களில் புற்று எவ்வாறு உருவாகின்றது, அதில் என்னென்ன உறையும் என்பது தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. இதனை,

''நீடுசெயற் சிதலைத் தோடுபுனைந்து எடுத்த
அரவாழ் புற்றம்''[94]

''நெடுஞ்செம் புற்ற மீயல் பகர''[95]

''சிறுபுன் சிதலை சேண்முயன் றெடுத்த''[96]

ஆகிய பாடலடிகள் மூலம் அறியலாம். கறையான்களின் கூட்டம் தங்களது சீரிய முயற்சியால் புற்றை உருவாக்குவதை இப்பாடலடிகள் தெளிவுறக்காட்டுகின்றன. இப்புற்றிலிருந்தே கறையான்கள் ஈசல்களாக வெளிப்படுகின்றன. கறையான்கள் கட்டிய புற்றிலேயே பாம்பு உறையும் உண்மை சுட்டப்படுகின்றது. பாம்பு புற்றினை உருவாக்குவதில்லை. பாம்பின் வாழிடங்களைச் சுட்டும் ரோமுலஸ் விடேகர் பாம்பின் புற்றை கறையான் புற்று எனச் சுட்டுவதை ''தானியக் களஞ்சியங்கள், கறையான் புற்றுக்கள், மண்ணாலான அணைக்கட்டுகள் மற்றும் கற்குவியல்கள், இவை வாசம்புரியும்

இடங்கள். எலிகள் உள்ள இடத்திலெல்லாம் நல்ல பாம்புகளும் இருக்கும்''[97] எனும் கருத்தால் அறியலாம். இவ்வாறு புற்றாகிய வாழிடத்தில் கறையான்களும் பாம்புகளும் வாழ்வதை பல சங்க அகப்பாடல்கள் காட்டியுள்ளன.

**புனம், கொல்லை**

முல்லை, குறிஞ்சி ஆகிய நிலங்களில் வாழ்ந்த மனிதர்கள் அந்நிலங்களில் தமக்கான உணவின்பொருட்டு பயிர்த்தொழிலில் ஈடுபட்டனர். அவ்வாறு அவர்கள் பயிர்விளைவித்த, பண்படுத்தப்பட்ட பயிர்விளைநிலங்கள் புனம், கொல்லை என்ற பெயர்களில் சுட்டப்பட்டுள்ளன. இவை முழுக்க முழுக்க மனிதர்களால் உருவாக்கப்படுபவை ஆகும். முல்லை, குறிஞ்சி ஆகிய பகுதிகளில் காட்டுப்பகுதியை தேவையான அளவு தீயிட்டு எரித்து கொல்லையும் புனமும் உருவாக்கப்பட்டதை,

''சுடுபுன மருங்கிற் கலித்த வேனற்
படுகிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே''[98]

''எரிதின் கொல்லை யிறைஞ்சிய ஏனல்''[99]

ஆகிய சங்க அகப்பாடலடிகள் காட்டுகின்றன. இவ்வாறு மனிதர்கள் செயற்கையாக உருவாக்கிய புனம் மற்றும் கொல்லையில் தினை, வரகு போன்ற பயிர்கள் பயிர்செய்யப்பட்டன. தினை, வரகு ஆகிய பயிர்களின் வாழிடம் பல பறவைகளுக்கு உணவினை நல்கும் சூழலை உருவாக்கியது. யானை, மான் போன்றவையும் மனிதர்களின் எதிர்ப்புகளுக்கிடையில் புனத்தினை நாடிவந்தது, மனிதர்களால் விரட்டப்படுவது பல சங்க அகப்பாடல்களில் காட்டப்பட்டுள்ளன.

**மரங்கள்**

மரங்கள் பறவைகள், பூச்சிகளுக்கு உறைவிடமாக இருப்பது பல சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளன. நான்குவகை நிலங்களிலும் பறவைகள் மரங்களில் தங்குவது சுட்டப்பட்டுள்ளது. கூட்டமாகவும் தனித்தும் தங்கும் தன்மை காட்டப்படுகின்றது. இதனை,

''திரைமுதிர் அரைய தடந்தாள் தாழைச்
சுறவுமருப்பு அன்ன முள்தோடு ஒசிய
இறவார் இனக்குருகு இறைகொள''[100]

''மன்றவம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை
அன்றிலும் பையென நரலு மின்றவர்''[101]

''யுளைப்பூ மருதத்துக் கிளைக்குரு கிருக்குந்
தண்டுறை யூரன்''[102]

''இறாஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை யுறங்குந் தண்டுறை ஊர''[103]

எனும் பாடலடிகளால் அறியலாம். இனக்குருகு என்பது ஒரே இனமான பறவைகளைக் குறிக்கின்றது. ‘இறைகொள’, ‘குறுகிருக்கும்’, ‘உறங்கும்’ என்ற சொற்கள் பறவைகள் தாம் தொடர்ந்து தங்கும் தன்மையைக் குறிக்கின்றது எனலாம். அன்றில் பறவை பெரும்பான்மையும் பனைமரத்தில் தங்குவது சங்க அகப்பாடல்கள் பலவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. பொதுவாக அன்றில் பறவை பனைமரத்தில் உறைவதை வழக்கமாகக் கொணடிருத்தலை சூழலியியலாளர்களும் இன்று உறுதிசெய்கின்றனர். பறவைகளை உற்றுநோக்கி அறிந்த கூர்த்த அறிவுடைய புலவர்களின் பதிவாக அன்றில் பறவை பற்றிய பதிவுகள் அமைந்துள்ளன எனலாம். இதேபோல் ஓமை மரத்தில் பருந்து உரைறவது பல பாடல்களில் சுட்டப்படுகின்றது. இதற்கு காட்டாக,

‘‘அத்த வோமை யங்கவட் டிருந்த
இனந்நீர் பருந்தின் புலம்புகொ டெள்விளி’’[104]

‘‘உலறுதலைப் பருந்தி னுளிவாய்ப் பேடை
யலறுதலை யோமை யங்கவட் டேறிப்’’[105]

‘‘பருந்திளைப் படூஉம் பாறுதலை ஓமை’’[106]

எனும் பாடலடிகளைச் சுட்டலாம். பருந்து ஓமை மரத்தில் உரைவது மிகுதியும் சுட்டப்படுவது ஆராயற்பாலதாகும். ஓமைமரத்திற்கும் பருந்திற்கும் உண்டான தொடர்பு பறவையியலாளர்கள் ஆராயின் அறியவரும் எனலாம். பறவைகள் மரங்களில் தங்கும் தன்மையைச் சுட்டிய புலவர்கள் பூச்சிகளின் மரத்தின் மீதான இருப்பையும் கவனித்துப் பதிவு செய்திருப்பதை,

‘‘உலவை ஓமை ஒல்குநிலை ஒடுங்கிச்
சிள்வீடு கறங்குஞ் சேய்நாட்டு அத்தம்’’[107]

‘‘வறன்மரம் பொருந்திய சிள்வீடு’’[108]

‘‘பொறைதளர் கொம்பின்மேற் சிதரினம் இறைகொள’’[109]

‘‘சிதர்சினை தூங்கும் அற்சிர அறைநாள்’’[110]

போன்ற பாடலடிகளின் வழிக் காணலாம். சிள்வீடு எனும் பூச்சி வறண்ட மரங்களில் ஒட்டிக்கொண்டு சத்தமிடுவதும் பல வண்டுகள் மரக்கிளைகளில் தங்கியிருப்பதும் காட்டப்படுகின்றன. வாகையின் அடிமரத்தில் உள்ளிருக்கும் ஊன் வாடப்பெற்ற நிலையில் ஓட்டினுள் ஒடுங்கிக் காணப்படும் சிறுநத்தைகள் ஒட்டிக்கொண்டிருப்பது வாகைமரத்தின் அடியை பொறிந்த அடியாகக்காட்டுவதாக,

‘‘கள்ளியங் காட்ட கடத்திடை உழிஞ்சில்
உள்ளுன் வாடிய சுரிமூக்கு நொள்ளை
பொரியரை புதைத்த புலம்புகொள் இயவின்’’[111]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. இது ஒரு சிறிய சிற்றுயிரையும் கவனித்த சங்கத்தமிழனின் இயற்கையியல் அறிவிற்குச் சான்றாக அமைவதாகும். நாம் தற்காலத்தும்

சில வேளைகளில் நத்தைகள் மரங்களில் ஒட்டியிருப்பதைக் காணமுடியும். சிலநேரங்களில் பாறைகளிலும் பல நத்தைகள் ஒட்டிக் கொண்டிருப்பதைக் காணமுடியும்.

மரங்களின் கிளைகளில் பறவைகள் தங்குவதைக் காட்டிய சங்கப் புலவர்கள், அப்பறவைகள் மரங்களில் கூடமைத்து அதன்கண் தங்குவதையும் பல பாடல்களில் சுட்டியுள்ளனர். இதற்குச் சான்றாக,

> ''………………….. கரும்பின்
> வேல்போல் வெண்முகை பிரியத் தீண்டி
> முதுக்குறை குரீஇ முயன்றுசெய் குடம்பை''[112]

> ''முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக்
> கொழுமட லிழைத்த சிறுகோற் குடம்பைக்
> கருங்கா லன்றிற்''[113]

> ''முடங்க லிறைய தூங்கணங் குரீஇ
> நீடிரும் பெண்ணைத் தொடுத்த
> கூடினு''[114]

ஆகிய பாடலடிகளைக் காட்டலாம். சங்க அகப்பாடல்கள் பறவைகளின் கூடானது, குடம்பை, கட்சி, கூடு என்ற பெயர்களில் சுட்டப்படுகின்றது. அன்றில் பனையில் கூடுகட்டி உறைதல், தூக்கணாங்குருவி பனைமரத்தில் கூடுகட்டுதல் போன்றவை தெளிவுறக் காட்டப்படுகின்றன. இதுபோல் பறவைகள் தமக்கு மரத்தின்கண் தனித்த வாழிடமாக கூடினை அமைத்துக் கொள்வது பல சங்க அகப்பாடல்களில் காட்டப்படுகின்றது. மரங்களை மையப்படுத்திய வாழிடப் பதிவுகள் யாவும் மரங்களின் இன்றியமையாமையைக் காட்டுவதாக அமைகின்றன எனலாம்.

**மக்கள் வாழிடங்கள்**

மக்கள் ஒழிந்த பிற பல்லுயிரினங்களுள் சில மக்களின் வாழிடத்தின்கண் வாழ்வதைச் சங்க அகப்பாடல்கள் காட்டியுள்ளன. மக்கள் தமது வளர்ப்புயிரிகளாக கோழி, ஆடு, மாடு, கழுதை போன்றவற்றை வளர்த்ததைச் சங்க அகப்பாடல்கள் பதிவுசெய்துள்ளன. இது இரண்டாவது இயலின்கண் பல இடங்களில் விளக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இது தவில சில தாவர வகைகளை மக்கள் வாழ்விடங்களில் மக்கள் தமது தேவைக்காக அமைத்துக்கொண்டனர். தம் வீட்டினருகிலும், வீட்டுத்தோட்டத்திலும், முன்றிலிலும் சில தாவரவகைகளை வளர்த்தனர். இவற்றை மனிதர் வாழிடங்கள் சார்ந்த தவார வாழிடங்களாகச் சுட்டலாம். இதனை நாம் சங்ககால மக்களின் இயற்கையியல் சார்ந்த நடவடிக்கையாகவும் கொள்ளலாம். புறாவானது மக்கள் வாழும் இல்லங்களில் வாழ்ந்தது சுட்டப்பட்டுள்ளது.

> ''வகையமர் நல்லில் அகஇறை உறையும்
> வண்ணப் புறவின் செங்கால் சேவல்''[115]

> ''மனைமர நொச்சி மீமிசை மாச்சினை''[116]

"முன்றில் பலவின் படுசுளை மரீஇப்
புன்தலை மந்தி தூா்ப்ப"[117]

"ஆம்பற் பூவின் சாம்ப லன்ன
கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ"[118]

"…………………………… மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன"[119]

"மனையிள நொச்சி மௌவல் வான்முகை"[120]

"பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்கால் நெல்லிப் பைங்காய் தின்றவா்"[121]

போன்ற பாடலடிகளில் மனிதா்களின் வாழிடப் பகுதியில் காணப்படும் உயிரினங்கள் காட்டப்படுகின்றன. மனிதா்களின் இல்லம் அமைந்த பகுதிகள், அவா்களது வீட்டுத் தோட்டமாகிய 'படப்பை' ஆகிய பகுதிகளில் பல தாவரவகைகளும் அவற்றைச் சாா்ந்து சில பறவைகளும் வாழ்வது மேற்கண்ட பாடலடிகளில் காட்டப்படுகின்றது. 'மன்றம்' என்ற மக்கள் வாழ்விடப் பகுதிகளில் சிலவகை மரங்கள் பாதுகாக்கப்பட்டதை சங்க அகப்பாடல்கள் பதிவுசெய்துள்ளன. மன்றம் என்ற சொல்லிற்கு 'ஊா்ப்பொதுவிடம்' என்று உரையாசிரியா்கள் உரை கூறுகின்றனா். இம் மன்றின்கண் காணப்படும் மரங்களில் பறவைகளும் இருந்தன. இதனை,

"மன்ற வேங்கை மலா்பத நோக்கி"[122]

"மன்றிரும் பெண்ணை மடல்சேரன்றில்"[123]

"மன்ற மராஅத்த கூகை குழறினும்"[124]

எனும் பாடலடிகளால் அறியலாம். இன்றும் கிராமப் புறங்களில், நகா்ப்புறங்களிலும் ஒருசில ஊா்ப் பொதுவான இடங்களில் மரங்கள், முதிய மரங்கள் இருப்பதை நாம் காணலாம். செழுமையாகப் பறந்து விரிந்த ஆலமரம், அரசமரம், வேம்பு போன்ற மரங்களை இன்று நாம் காண்கிறோம். இவற்றில் பல பறவைகள் இரவில் உறைவதும் அம்மரத்தின் கனிகளை உண்பதும் கண்கூடாகும். இது மக்கள்வாழ்விடப் பகுதிகளில் இயல்பாகக் காணப்படும் பறவைகளுக்குச் சிறந்த வாழிடமாக அமைவதைக் காணமுடிகின்றது. மனிதா்களின் வாழ்விடங்களில் பிற உயிரினங்களும் வாழக்கூடிய சூழல் சங்ககாலத்தில் இருந்துள்ளதை இதனால் அறியலாம். இன்று வீட்டிலும், ஊா்ப்புறங்களில் ஏற்பட் சில மாற்றங்களால் இந்நிலை மாறுபட்டு வருகின்றது.

சங்க அகப்பாடல்களில் நான்குநிலப் பகுதிகளிலும் பல்வேறு பட்ட வாழிடச்சூழல்களில், உயிரினங்களின் வாழ்விடங்கள் அமையப்பெற்றிருக்க அவற்றுள் சில இங்கு விளக்கப்பட்டன. இவைதவிர சங்க அகப்பாடல்களில் ஆற்றங்கரை தனித்த வாழிடச் சூழலைப் பெற்றமைந்திருப்பதை சங்க அகப்பாடல்கள் காட்டுகின்றன. முல்லை நிலத்தின் காட்டாறு கான்யாறு என்று சுட்டப்படுகின்றது. மருதநிலத்தின் ஆற்றங்கரை தன்னிடத்தே

பல்வகைப்பட்ட மரங்கள் சோலைகளாகக் குழுமியிருப்பதும் அவற்றின்கண் பல பறவைகளும் உயிரினங்களும் வாழ்வதும் காட்டப்படுகின்றன. மருதநிலத்து ஆற்றங்கரை மரங்கள் அழிக்கப்பட்டு தற்காலத்தில் ஆற்றின் விளிம்புவரை விளைநிலங்கள் ஆக்கிரமிப்புகளின் வடிவங்களாகக் காட்சிதருகின்றன. இந்நிலையில் ஆற்றங்கரையின் பல்லுயிரின வாழிடச்சூழல் அமைப்பினை நமக்கு உணர்த்துவதாக சங்க அகப்பாடல்கள் உள்ளன எனலாம். நண்டு வளையில் தங்கும் நிலை பல இடங்களில் சுட்டப்படுகின்றது. தான் வாழும் நீர்நிலையில் காணப்படும் செடிகளின் வேர்ப்பகுதிகளில் நண்டு தனக்குரிய வளையினை ஏற்படுத்திக் கொள்வது காட்டப்படுகின்றது. குறிப்பாக முள்ளிச் செடியின் வேரினை ஒட்டி தனது உறைவிடத்தை அமைத்துக் கொள்வது காட்டப்படுகின்றது. இது போன்று பல்வேறுபட்ட உயிரின வாழிடங்களினை எடுத்துக் கூறும் களஞ்சியமாக சங்க அகப்பாடல்கள் விளங்குகின்றன.

**தொகுப்புரை**

- ஒரு உயிரியின் வாழிடம் என்பது அவ்வுயிரி வாழ்ந்துவரும் நிலத்தை மட்டும் குறிப்பதன்று, அவ்வுயிரினம் வாழ்வதற்கேற்ற தட்பவெப்ப நிலை, அதற்கான உணவு எனப் பலகாரணிகளின் கூட்டமைப்பாகும்.
- மனித உணர்ச்சிகளின் வெளிப்பாடாகத் தோன்றிய சங்க அகப்பாடல்கள் உயிரிக்கருப்பொருட்களான உயிரினங்களைச் சுட்டும் வழி அவற்றின் வாழிடம் குறித்த பதிவுகளையும் தம்மகத்தே கொண்டுள்ளன.
- சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் உயிரின வாழ்விடங்கள் யாவும் இயற்கையில் அமைந்த இயல்பான அமைப்புகளாகத் தெளிவுறப் பதிவுசெய்யப்பட்டுள்ளன.
- சங்க அகப்பாடல்களில் அமையப் பெற்ற ஐந்திணைப் பாடல்களில் சுட்டப்படும் நிலங்களாகிய முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் ஆகிய ஐந்நிலங்களில் பாலை ஒழிய மற்ற நான்கு நிலங்கள் என்றும் நிலைத்த நிலமாக அமைந்திருப்பதையும் பாலையாகிய நிலமானது குறிஞ்சி திரிந்த பாலையாகவோ, முல்லை திரிந்த பாலையாகவோ அமைந்திருப்பதையும் காணமுடிகின்றது.
- பாலைநிலப் பாடல்களில் காணப்படும் நில அமைப்புகளும், கருப்பொருட்களும் முல்லை மற்றும் குறிஞ்சி ஆகிய இருநிலங்களில் ஒன்றின் அமைப்பினை உடையதாக வெளிப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது. குறிஞ்சியின் அடுக்கம், சிலம்பு, சாரல் ஆகிய நிலத்தோற்றங்களும் முல்லையில் புறவு, காடு, கான்யாறு ஆகிய கூறுகளும் பாலைப் பாடல்களில் அமைந்து வருவதை இதற்குச் சான்றாகக் காட்டலாம்.
- சங்க அகப்பாடல்களைப் பொறுத்தமட்டில் பாலை எனும் தனிநிலம் தனித்து இல்லாததை உணரமுடிகின்றது.
- சங்க அகப்பாடல்களைக் கொண்டு உயிரினங்களின் வாழ்விடங்களைத் தொகுக்கும் பொழுது நானிலங்களில் சில தனித்த கூறுகளையும் பொதுவான கூறுகளையும்

இனம் காணமுடிகின்றது. குறிஞ்சியின் சாரல், அடுக்கம் ஆகியன பிற நிலப்பகுதிகளில் அமைவதில்லை. மருதத்திணையின் பழனம் வேறு நிலத்தில் காணப்படுவதில்லை. இவ்வாறு தனித்த வாழிடச் சூழல்களை இவ்வியல் விளக்கியுள்ளது. சுனையாகிய வாழிடம் குறிஞ்சி, முல்லை ஆகிய இருநிலங்களிலும் காணப்படுகின்றது. புதர் எனும் வாழிடம் குறிஞ்சி, முல்லை, மருதம் என அனைத்து நிலத்திலும் காணப்படும் வாழிடமாக அமைவது விளக்கப்பட்டுள்ளது.

- மருதநிலத்தில் அமையப் பெற்ற பழனம் எனும் வாழிடச் சூழலானது நிலப்பகுதி மற்றும் நீர்நிலைகளைத் தன்னகத்தே கொண்டதாக சங்க அகப்பாடல்களில் சுட்டப்படுவது விளக்கப்பட்டுள்ளது.
- காடு, சோலை, புதர், புற்று, மக்கள் வாழிடப்பகுதி வாழிடங்கள் ஆகிய பொதுவான வாழிடங்களின் தன்மை விளக்கப்பட்டுள்ளது. குறிஞ்சி நிலத்தின் வனப்பகுதிகள் அழிக்கப்பட்டு தேயிலைத் தோட்டங்கள் எனும் பசுமைப் பாலைவனமாக மாற்றப்பட்டுள்ள நிலையையே மலைக்காடாகக் கண்ட நமக்கு மழைக்காடுகளின் வெயில் புகாத தன்மையை சங்க அகப்பாடல் காட்டுவது சிறப்புடையதாகும்.
- நெய்தல் நிலம் பிற நிலங்களிலிருந்து வேறுபட்ட பல்வகைக் கூறுகளையுடைய வாழிட அமைப்புகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. கடற்கரைச் சோலைகள், கடற்கரையில் வளரும் இயல்புடைய மரங்கள், அவற்றை அண்டிவாழும் பறவைகள் எனப் பல்வேறு பட்ட உயிரினங்களைக் கொண்ட பல்வேறு வாழிடத்தொகுப்பாக நெய்தல் நிலம் காட்டப்படுகின்றது.
- சங்க அகப்பாடல்களில் காட்டப்படும் கழிமுகத்தின் தன்மை சங்க காலத்தில் அமையப் பெற்ற பல்லுயிரின வளத்திற்கு ஆதாரமான வாழிடமாக அமைந்திருந்ததை நெய்தற்திணைப் பாடல்கள் காட்டியுள்ளன.
- பறவைகள் மரங்களின் கிளைகளிலும், கூடுகளிலும் தங்கியிருப்பதைக் காட்டுவதுடன் சிறு பூச்சிகளும் மரங்களை வாழிடமாகக் கொண்டிருப்பது சங்க அகப்பாடல்களின்வழி விளக்கப்பட்டுள்ளது.
- மனிதர்களின் இல்லம், மற்றும் அவர்களது ஊரின்கன் அமையப்பெற்ற மன்றமாகிய பொதுவிடங்கள் பல்லுயிரின வாழிடமாக அமைந்திருந்தது விளக்கப்பட்டுள்ளது.

### சான்றெண் விளக்கம்

1. முனைவர் லிவிங்ஸ்டன், தாவர சூழலியல், ப.16
2. ஏ. சண்முகானந்தம், வலசைப் பறவைகளின் வாழ்விடச் சிக்கல்கள், ப.23
3. கா. பூரணச்சந்திரன் (மொழி), நில அமைப்பும் தமிழக்கவிதையும், ப.3
4. தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூ.எ.5
5. மேலது, நூ.எ.11
6. மேலது, நூ.எ.5
7. கா. பூரணச்சந்திரன் (மொழி), நில அமைப்பும் தமிழக்கவிதையும், ப.85
8. கழகத்தமிழ் அகராதி ப.695
9. அகம், பா.384
10. மேலது பா.154
11. கா. பூரணச்சந்திரன் (மொழி), நில அமைப்பும் தமிழக்கவிதையும், ப.34
12. ஐ.கு, பா. 268
13. குறு, பா.321
14. கலி, பா. 43
15. அகம், பா.242
16. நற், பா. 188
17. நற், பா.176, அகம் பா.328
18. ஐ.கு, பா.243
19. குறு, பா. 90
20. நற், பா.259
21. மேலது, பா. 328
22. மேலது, பா. 386
23. குறு, பா. 88
24. ஐ.கு, பா. 214
25. அகம், பா.52
26. மேலது, பா. 92
27. நற், 213
28. அகம், 88
29. ஐ.கு, பா. 305
30. மேலது, பா. 317
31. அகம், பா.1
32. கலி, பா. 10
33. கா. பூரணச்சந்திரன் (மொழி), நில அமைப்பும் தமிழக்கவிதையும், ப.85
34. நற், பா. 384
35. குறு, பா. 16

36. மேலது, பா. 67
37. அகம், பா.68
38. நற், பா.60
39. மேலது, பா. 216
40. குறு, பா. 8
41. கலி, பா. 79
42. ப.பா, பா.அ. 8,9
43. குறு, பா. 127
44. ஐ.கு, பா.26
45. அகம், பா.6
46. ஐ.கு, பா. 70
47. பொ.வே. சோமசுந்தரனார் (உரை), ஐ.கு, ப.108
48. நற், பா.180, ஐ.கு, பா.99
49. நற், பா. 350
50. மேலது, 230
51. குறு, 370
52. ஐ.கு, பா. 88
53. அகம், பா. 336
54. கலி, பா. 70
55. குறு, பா.91
56. அகம், பா. 70
57. குறு, பா.399
58. கா. பூரணச்சந்திரன் (மொழி), நில அமைப்பும் தமிழக்கவிதையும், ப.91
59. கலி, பா.132
60. நற், பா. 35
61. குறு, பா.303
62. மேலது, பா.340
63. ஐ.கு, பா.161
64. கலி, பா. 133
65. அகம், பா.20
66. நற், பா. 345, கலி, பா. 123
67. குறு, பா.345, நற், பா. 349, கலி, பா.127
68. குறு, பா.324
69. நற், பா. 78
70. ஐ.கு, பா.188
71. அகம், பா. 50
72. மேலது, பா.80

73. ஏ. சண்முகானந்தம், வலசைப் பறவைகளின் வாழ்விடச் சிக்கல்கள், ப.64
74. சு. தியடோர் பாஸ்கரன், வானில் பறக்கும் புள்ளெலாம், ப.13
75. டி.ஆர்.ஏ. அருந்தவச் செல்வன், மேற்குத்தொடர்ச்சி மலையும் அதன் பயன்களும் காடு-இதழ், மே-ஜூன்-2015
76. கலி, பா.30
77. திருக்குறள், 742
78. ஏ. சண்முகானந்தம், வலசைப் பறவைகளின் வாழ்விடச் சிக்கல்கள், ப.60
79. நற், பா. 231
80. மேலது, பா. 243
81. குறு, பா.341
82. அகம், பா.109
83. நற், பா.372
84. அகம், பா.190
85. நற், பா. 161
86. ஐ.கு, பா. 299
87. குறு, பா. 193
88. நற், பா. 221
89. நற், பா. 302
90. குறு, பா. 240
91. குறு, பா.319
92. ஐ.கு, பா. 216
93. அகம், பா. 394
94. நற், பா. 325
95. ஐ.கு, பா.497
96. அகம், பா.149
97. ஓ.ஹென்றி பிரான்சிஸ் (மொழி) இந்தியப் பாம்புகள், ப.62
98. குறு, பா. 291
99. அகம், பா. 288
100. நற், பா. 131
101. குறு, பா. 177
102. ஐ.கு, பா. 7
103. அகம், பா. 286
104. குறு, பா. 207
105. ஐ.கு, பா.321
106. அகம், பா. 21
107. நற், பா. 252
108. அகம், பா.303

109. கலி, பா. 34
110. அகம், பா. 294
111. மேலது, பா.53
112. நற், பா. 366
113. குறு, பா.301
114. மேலது, பா. 374
115. நற், பா. 71
116. மேலது, பா. 246
117. மேலது, பா. 373
118. குறு, பா. 53
119. கலி, பா. 11
120. அகம், பா. 21
121. மேலது, பா.54
122. குறு, பா. 241
123. கலி, பா. 129
124. அகம், பா. 158

## இயல் - 4

## பயன்பாட்டு நோக்கில் சங்க இலக்கியப் பல்லுயிரியியம்

உலக அளவில் பல்லுயிரினவள மேம்பாடு பற்றிய சிந்தனை மேலோங்கி வருகின்றது. பல்வேறுபட்ட சிக்கல்களுக்கு இடையே சூழலியலாளர்கள் பல்லுயிரின வளத்தைக் காக்கப் போராடிவருகின்றனர். பள்ளி மாணவர்கள் முதல் முதியவர்கள் வரை உயிரினக் காப்பு பற்றிய சிந்தனையை வளர்க்க முற்பட்டு வருகின்றனர். மனிதன் தனது இயற்கைச் சூழலிலிருந்து விலகி நவீன உலகில் சொகுசாக வாழ முற்பட்டதன் விளைவாகவே இயற்கைக் கூறுகள் சிதைவிற்குள்ளாகி பல்லுயிரின வளம் அச்சுறுத்தலுக்குள்ளாகியது. மனிதன் இயற்கை பற்றிய தனது மரபறிவினை இழந்ததும் இயற்கை இழிநிலையடையக் காரணமாகும். இதனாலேயே இன்று சூழலியல் என்ற கருத்தாக்கம் தோன்றி அதனடிப்படையில் இயங்கும் சூழலியற் செயல்பாட்டாளர்கள் மனிதனுக்கு இயற்கை பற்றிய புரிதலை ஏற்படுத்த வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. தமிழ் மண்ணின்கண் தோன்றிய சங்க இலக்கியம் தமிழகத்தின் இயற்கைக் கூறுகளையும், பல்லுயிரியியச் சிந்தனையையும் தன்னகத்தே கொண்ட மரபறிவுப் பதிவுகளைக் காட்டுகின்ற இலக்கியமாக விளங்குகின்றது. அகம் புறம் என்ற இருநிலைகளில் தனிமனித உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் நோக்கில் தோற்றம் பெற்ற இலக்கியமாக இருப்பினும் அது மனிதனின் இருப்பிற்கும் உணர்விற்கும் அடிப்படையாக விளங்கிய இயற்கையைப் பின்னணியாகக் கொண்டமைந்ததன் வாயிலாக இயற்கையியல் இலக்கியமாகவும் திகழ்கிறதென்றால் மிகையாகாது. ஒரு குறிப்பிட்ட நோக்கில் ஏற்படுத்தப்படும் ஒரு பொருள் இயல்பாகவே வேறுசில செயல்பாடுகளுக்கும் பயன்படுவதாக அமைந்துவிடுவது இயல்பு. மனித மனவுணர்வுகளைப் பதிவுசெய்யும் அழகுணர்ச்சியுடன் தோற்றம் பெற்ற சங்க இலக்கியங்கள் இன்று பல்வேறு துறை பற்றிய கருத்தாக்கங்களையும் தன்னகத்தே கொண்டதாக, பலதுறையினரும் பயன்படுத்திக் கொள்வதாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. அவ்வகையில் சூழலியலில் சுட்டப்படும் பல்லுயிரிவள மேம்பாட்டிற்கான செயல்பாடுகளில் சங்க இலக்கியங்களில் அமையப்பெற்ற இயற்கைக் கருத்துக்களின் பயன்பாடு குறித்து இவ்வியல் விளக்குகின்றது

### பயன்பாட்டியல்

பயன்பாட்டியல் என்பது தற்காலத்தில் தனித்த ஆய்வுமுறையாக மேற்கொள்ளப்பட்டு வருகின்றது. இது ஒரு சிக்கலுக்கான தீர்வினை நடைமுறைப்படுத்திப் பயன்பாட்டில் கொண்டுவரும் முறைகளை ஆராய்கின்றது. பல்வேறுபட்ட கருத்தாக்கங்களை நடப்பில் பயன்படுத்தும் முறைகளை இனம்காணுகின்றது. ஒரு தனிநபருக்கோ அல்லது குழுவினருக்கோ குறிப்பிட்ட நடைமுறைச் சிக்கல்களைக் களைவதற்கான வழி பயன்பாட்டியல் ஆய்வாகும். இதனை "Applied research is amethodology used to solve a specific practical problem of an individual or group"[1] எனும் விளக்கத்தான் அறியலாம். சூழலியலில் காணப்படும் சிக்கல்களுக்கான தீர்வுகள் என்னென்ன? அவற்றை எவ்வாறு நடைமுறைப்படுத்தி சிக்கல்களைத் தீர்ப்பது? என ஆராய்வது சூழலியியல் சார்ந்த

பயன்பாட்டாய்வாக அமையும். எந்தவொரு சிக்கலுக்கும் நாம் தீர்வினை இனம்கண்டு விடலாம். ஆனால் அதனை நடைமுறைப்படுத்துவதிலேயே வெற்றி என்பது இருக்கின்றது. சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ள இயற்கை பற்றிய பதிவுகள் சூழலியல் சார்ந்த கருத்துகளுடன் பொருத்திப்பார்க்கவும் அவை குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தவும் துணைசெய்யும் வகையிலும் அமையுமாற்றைப் பயன்பாட்டியல் முறையில் விளக்கலாம். சங்க இலக்கியங்களின் இயற்கைப் பதிவுகள் சூழலியல் சீர்கேட்டினைக் களைவதற்கான கருவியைத் தயார்செய்யும் தொழில்நுட்பத்தைக் கொண்டிருக்கவில்லை. ஆனால் அவை மனிதன் இயற்கையைப் புரிந்து கொள்ளவும், சூழலியல் பாதுகாப்பிற்கான விழிப்புணர்வினை ஏற்படுத்தவும் பயன்மிக்க கருவியாக அமையும் எனலாம்.

**சங்க இலக்கியம் - சூழலியலாளர் பார்வை**

இலக்கியம் என்பது பொதுவாக புனைவு, கற்பனை, மிகைப்படுத்தல் என்ற நிலையிலேயே பலராலும் பார்க்கப்படுகின்றது. மிகை புனைவுகள் கலந்த புராண இலக்கியங்கள், அப்புராணங்களைத் தழுவி எழுந்த பல்வகைப்பட்ட இலக்கியங்கள் ஆகியன இலக்கியங்கள் குறித்த தவறான கண்ணோட்டத்தை நல்குவதில் முன்னிற்கின்றன. அழகுணர்ச்சியை வெளிப்படுத்தும் இலக்கியங்களும் சில மிகைப்படுத்தல்களை நம்முன் காட்டத் தவறுவதில்லை. சங்க இலக்கியங்களும் மனிதனின் உணர்வுநிலைக்கேற்ற கற்பனைகளையும் மிகைப்படுத்தல்களையும் வெளிப்படுத்தவே செய்கின்றன. ஆனால் அவை உண்மை நிகழ்வின் அடிப்படையில் அமைவதைக் காணமுடியும். ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் குறிப்பிட்ட காலத்தில் இணைந்திருக்கும் பறவையையோ, துணையைப் பிரிந்து ஏங்கிச் சத்தமிடும் பறவையையோ சங்க இலக்கியம் காட்சிப்படுத்தும் பொழுது அப்பறவையின் செயல்பாடுகளில் சில மிகைப்படுத்தல்கள் இருக்கலாம். ஆனால் அப்பறவை அந்நிலப்பகுதியில் அக்காலச் சூழ்நிலையில் காணப்பட்ட உண்மைநிலையின் பதிவாகவே அப்பதிவு அமைந்திருக்கும் என்பது குறிப்பிடத்தக்கது. சங்க இலக்கியங்களில் காட்டப்படும் இயற்கையியல் சார்ந்த பதிவுகள் யாவும் பெரும்பான்மையும் இயல்பாக அமைந்த பதிவுகளாக அறிஞர் பெருமக்களால் சுட்டப்படுகின்றன. சங்கப் புலவர்கள் தாம் நேரில் கண்டு தெளிவுற அறிந்த கருத்துகளையே தமது பாடல்களில் குறித்துள்ளனர். இயற்கையுடன் இணைந்து வாழ்ந்த காலகட்டத்தில் இயற்கை பற்றிய அறிவு தானாகவே வாய்க்கப்பெறுவதும் இயல்பான செயல்பாடாகும். எனினும் அவர்கள் நிலங்களையும் நிலங்களில் காணப்பட்ட கருப்பொருட்களையும் நன்கு ஆராய்ந்து அறிந்திருந்தனர் என்றே கூறவேண்டும். அந்த அளவிற்கு நுட்பமான கருத்துக்களை அவர்கள் வெளிப்படுத்தியுள்ளனர். தமிழக நில அமைப்பினை இலக்கிய அடிப்படையிலும் வரலாறு, அறிவியல் அடிப்படையிலும் ஆய்வு செய்த தனிநாயக அடிகள் பண்டைய தமிழ்க் கவிஞர்கள் இயற்கையை நுட்பமாக ஆய்வுசெய்தனர் என்கின்றார். இதனை ‘‘ஆகவே கவிதை மரபு, கவிதை விதிகளின்படி, ஒரு முழுமையான, துல்லியமான இயற்கை பற்றிய ஆய்வு தமிழ்க் கவிஞர்கள் மீது சுமத்தப்பட்டது. இத்தகைய நிலவியல்-தாவரத்தொகுப்பு-விலங்குத்தொகுப்பு – ஆய்வை

மேற்கொள்ள வேண்டிய நிலை பிறமொழிகளில் எக்கவிஞருக்கும் இல்லை. தமிழ்க் கவிஞர்கள் மேற்கொண்ட நுட்பமான ஆய்வு, கூர்நோக்கு அகியவை இன்றியே பிறமொழிக்கவிஞர்கள் கவிதையில் சிறப்பெய்தி இருக்கக்கூடும். நிலப்பகுதி, நிலத்தோற்றம் ஆகியவற்றிற்கேற்ப பெரும்பாலான கவிதைகள் பகுக்கப்பட்டதால், தமிழ்க் கவிதைச் செவ்வியின் கடைக்கண் நோக்கினை விரும்பும் எவரும், தமது இலக்கிய முயற்சிகளைத் தாவரத்தொகுப்பு, விலங்குத்தொகுப்பு ஆகியவை பற்றிய ஆய்வுகளோடும் கடல், மலை, சமவெளி, பாலை ஆகிய இயற்கையின் பரந்த மேற்பரப்பில் காணப்படும் கூறுகளைப் பற்றிய நுட்பமான நோக்கோடும் தொடங்க வேண்டியிருந்தது"[2] எனும் கருத்தால் அறியலாம். இக்கருத்தின் அடிப்படையில் சங்க இலக்கியத்தில் சுட்டப்படும் நிலப்பகுதிகள், உயிரினங்கள் பற்றிய செய்திகள் யாவும் தெளிவான ஆய்வின் அடிப்படையிலேயே பதிவுசெய்யப்பட்டிருக்கின்றன எனத் துணியலாம். சங்கப் பாடல்களின் உயிரினத் தகவல் நுட்பங்களை விளங்கிக்கொண்டால் மேற்கண்ட கருத்து ஐயத்திற்கிடனின்றித் தெளிவாகும்.

சங்க இலக்கிய உயிரினங்களை அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்து தெளிவுபடுத்திய பி.எல்.சாமி, இயற்கை உயிரினத்தின் ஒரு நிகழ்வை சங்கப் புலவர்கள் காட்டுவது உயிரின வல்லுநர்கள் ஆராய்ந்து தெளிந்துரைத்த கருத்துடன் ஒத்திருப்பது தமக்கு வியப்பளிப்பதாகக் கூறுவதை, 'சங்க நூல்களில் கலைமானின் கொம்பு பற்றிச் சில அருமையான அறிவியற் செய்திகள் காணப்படுகின்றன. கலைமான் தன் கொம்புகளை உதிர்ப்பது அரிய செய்தியாகையால் விலங்குநூலார் பலர் இதை ஆராய்ந்து எழுதியுள்ளனர். விலங்குநூலார் கலைமானின் கொம்பு பற்றி ஆராய்ந்து கூறிய செய்திகளைச் சங்க நூல்கள் கூறுவது மிகுந்த வியப்பை அளிக்கின்றது"[3] எனும் கூற்றால் அறியலாம். மேலும் அவர் கருத்தை விளக்குவதில் சங்கப் புலவர்களுக்கு உள்ள நேர்மையினை "சங்கப் புலவர்கள் உவமைகள் வாயிலாகவே இயற்கைப் பொருட்களை, செய்திகளை, நிகழ்ச்சிகளை விளக்குவதில் மிக மிக வல்லவர்கள். கற்பனைகளில் உழன்று இல்லாததை ஒப்பிட்டுப் பொல்லாத மயக்கத்தில் நம்மை ஆழ்த்துவதில்லை"[4] எனும் தமது கூற்றால் விளக்கியுள்ளார். சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், புள்ளின விளக்கம், செடி கொடி விளக்கம் என சங்க இலக்கியத்தில் சுட்டப்படும் அனைத்து விதமான உயிரினங்களையும் அறிவியல் அடிப்படையில் தெளிந்த ஆய்வுப் போக்குடன் உயிரிநூல் வல்லுநர்களின் கருத்தினைக் காட்டி விளக்கியுள்ள பி.எல்.சாமி மேற்கண்டவாறு சங்கப் புலவர்களைப் பற்றிக் கூறுவது சங்கநூற் பதிவுகளில் தெளிந்த அறிவுடையோராலும் அன்னாரது நூலைப் படித்தறிந்தோராலும் மட்டுமே அறியத்தக்க உண்மையாகும். அவரது கூற்றால் சங்க இலக்கியம் என்பது அடிப்படை ஆதாரமின்றி கற்பனை, மிகைப்படுத்தல் போன்றவற்றால் நிரம்பியது எனும் தவறான கூற்றை உடைக்கும்.

இயற்கையியலாளரும் 'காட்டுயிர்' இதழின் ஆசிரியருமான ச. முகமது அலி சங்க இலக்கியத்தின் உண்மையான உயிரியற் பதிவுகளைப் பற்றிக் கூறும் பொழுது "சங்க

இலக்கியங்களில் காணப்படும் விலங்குகள் பற்றிய செய்திகள் போல், உலக இலக்கியங்களின் செய்திகள் தகுமா என்பது சந்தேகமே! அக்காலப் புலவர்கள் இயற்கையை நுணுகிப்பார்த்து தாம் நேரில் கண்டவற்றையே நாணயமான பனுவல்களாக தம் பாடல்களில் சேர்த்துள்ளனர். இந்த சரியான போக்கு காலம் செல்லச் செல்ல முழுவதும் கற்பனையாகவே மாறியிருக்கிறது''[5] என்று கூறுகின்றார். இவர் சங்க இலக்கியங்களின் உயிரின உண்மைத் தன்மையை விளக்குவதுடன் பிற்காலத்திய பனுவல்களின் நிலையையும் குறையாகச் சுட்டுவது கவனிக்கத்தக்கது.

சூழலியலாளரும், சூழலியல் எழுத்தாளருமான சு. தியடோர் பாஸ்கரன் ''சங்கப் பாடல்களில் இயற்கையைப் பற்றி, தாவரங்கள், புள்ளினங்கள், விலங்குகள் பற்றிய துல்லியமான கவின் மிகு குறிப்புகளைக் காணும்போது, தற்காலத் தமிழில் அது இல்லாதது புலப்படுகின்றது''[6] எனக் கூறுவது சங்க இலக்கியத்தில் உயிரினப் பதிவின் உண்மைத் தன்மையைப் பறைசாற்றுவதாக உள்ளது.

சங்க இலக்கிய ஆய்வாளர்கள் மற்றும் சூழலியல் வல்லுநர்களின் மேற்கண்ட விளக்கங்களால் சங்க இலக்கியங்களில் காட்டப்படுகின்ற பல்வேறுபட்ட உயிரினத் தகவல்கள் பெரும்பான்மையும் உண்மையான மற்றும் சரியான உற்றுநோக்கலின் மூலம் வெளிப்படுத்தப்பட்ட தகவல்கள் என்பது விளங்குகின்றது. பல்வேறு காலநிலை, பல்வேறு பட்ட தாவரங்கள், விலங்குகள், பறவைகள் என தினம்தினம் அறிவியலைத் துணையாகக் கொண்டு முறையான அறிவுடன் இயற்கையை உற்று நோக்கும் சூழலியலாளர்கள் சங்க இலக்கியங்களைக் கற்று அவற்றுடன் தமது அனுபவ அறிவினை ஒப்புமைப்படுத்தி சங்க இலக்கியங்கள் அறிவியலடிப்படையிலான உயிரினப் பதிவுகளைக் கொண்டிருக்கின்றன என விளக்கியுள்ளனர். இதனால் சங்க இலக்கியங்களின் வாயிலாக பண்டைத் தமிழ் நிலத்தில் காணப்பட்ட இயற்கை அமைப்புகளையும், உயிரி இயங்கியலையும் அடிப்படையாக அறியமுடியும் என்பதை உணரலாம். சங்க இலக்கிய உயிரினப் பதிவுகள் சரியான, நம்பத் தகுந்த பதிவுகளாக அமையும் நிலையில் அவற்றைக்கொண்டு அறிவியல் அடிப்படையிலான பல்லுயிரியியத்தை இனம் காண்பதும் தற்காலதிற்குத் தேவையான பயன்படக் கூடிய கருத்துகளையும் பெறவியலும் என்பதும் சரியான நோக்காகவும் தெளிவுடன் அமைவதாகவும் இருக்கும் என்பதும் புலனாகின்றது.

**இயற்கையியல் - சூழலியல் - திணையியல்**

இயற்கையியல் இயற்கையின் அனைத்துக் கூறுகளையும் உள்ளடக்கியது. இதில் உயிருள்ள, உயிரற்ற அனைத்துப் பொருட்களும் அடக்கம். இயற்கையியலின் மீதான கவனிப்பு சூழலியல் எனும் கருத்தாக்கமாக வெளிப்பட்டுள்ளது. சூழலியலின் அடிப்படையான நிலம், காலம், உயிரினங்கள் ஆகியன உலகின் அடிப்படை ஆதாரமான விடயங்களாக முன்வைக்கப்படுகின்றன. இதனைத் தொல்காப்பியம் முதல், கரு என இருவகையில் விளக்கியுள்ளது. இதனைத் திணை என்றும் திணையியல் என்றும் சுட்டுகின்றோம். திணையின் அடிப்படையில் எழுந்த சங்க இலக்கியங்கள் இயற்கையியலின் கூறுகளைத் தன்னகத்தே கொண்டமைந்துள்ளன. இன்று தமிழ்

இலக்கிய மரபின் திணையியல் சூழலியலுடன் தொடர்புபடுத்தப்பட்டு வருகின்றது. சூழலியலாளர்கள் பலர் சூழலியலைத் திணையியலாகப் பார்க்க முற்பட்டுள்ளனர். சூழலியலாளர்கள் திணையை மையமாக வைத்து தமது சூழலியல் கருத்துகளைப் பேசிவருவதை "கடல்சூழ் வாழ்வியலும், மீன் பிடித்தலும் அதனை ஒட்டிய பண்பாட்டு உருவாக்கமும் நெய்தல் திணையைக் கட்டி எழுப்பியுள்ளது. பரதவர், முக்குவர், பட்டினவர், கரையர், செம்படவர், வலையர், மரைக்காயர் முதலிய பல்வேறு மீனவப் பழங்குடிகள் தமிழகத்தில் வாழ்கின்றனர். மீன் உணவு நமது பாரம்பரியத்தில் இன்றியமையாத ஒன்று... தமிழர் திணை மரபில் வேளாண்மைக்கு அடுத்தபடியாக மீன் பிடித்தல் என்பது மருதத்திணையின் பாரம்பரிய துணைத் தொழிலாக இருந்து வந்திருக்கிறது"[7] என்ற கருத்தால் அறியலாம். சூழலியலாளர்கள் பண்டைத் தமிழ் மக்களின் நிலப்பகுப்பையும் உயிரினப் பதிவையும் கண்டு வியப்புறுகின்றனர். சூழலியலாளர்கள் சிலர் சூழலியல் என்பதைத் திணையியல் என்ற பெயரில் சுட்டத் துணிகின்றனர். இதனால் தற்காலச் சூழலியல் பண்டைத் தமிழரின் திணையியல் நோக்கி நகர்கின்றதெனலாம்.

**சங்க இலக்கியமும் பல்லுயிரியியமும்**

சங்க இலக்கியம் பல்லுயிரியியத் தகவல் களஞ்சியமாகத் திகழ்கின்றது. சங்க இலக்கியத்தில் காணப்படும் பல்வேறுபட்ட உயிரினங்களை நாம் வகைப்படுத்தவும் அவற்றின் வாழ்வியற் கூறுகளை இனங்கண்டுணரும் வகையிலும் உயிரினங்களைப் பற்றிய தெளிவான பதிவுகள் அடங்கியுள்ளன. இவை பழங்காலத் தமிழகத்தின் தாவர, விலங்கு, பறவை, பூச்சி என அனைத்து வகையான உயிரினங்களையும் அவற்றின் சூழலையும் காட்டுவதாக அமைந்துள்ளது. இயற்கையிலிருந்து விலகி உயிரினங்களைப் பற்றிய அறிவு துளியும் இல்லாத நிலை தற்காலத்தில் நிலவுகின்றது. இது சூழலியலுக்குப் பொருத்தமான இயக்கமாக இல்லை என்பது தெளிவு. ஒரு நிலத்தில் வாழும் மனிதன் தனது புறச்சூழலில் என்னென்ன உயிரினங்கள் உள்ளன என்றும் அவ்வுயிரினம் எத்தன்மையது என்றும் அறியாத நிலை நிலவிவருகின்றது. தன்வாழ்க்கைக்குத் துணைசெய்யும் உயிரினங்களை மனிதன் தான் அறியாமலேயே அழித்துவரும் நிலை காணப்படுகின்றது. சங்க காலத்தில் இத்தகைய நிலை அமைந்திருக்கவில்லை, இயற்கையுடன் இயற்கையாக மக்கள் வாழ்ந்தனர். இதனை "உலக தொல்குடிகளில் ஒன்றான தமிழ்ச்சமூகம் இயற்கையோடு ஒத்திசைந்து வாழ்ந்திருந்தது. இயற்கையின் பருப்பொருட்கள் பாதிக்கப்பட்டால், தங்களுடைய வாழ்வியல் பாதிக்கும் என்ற பேருண்மையை உணர்ந்திருந்தனர்"[8] எனும் கூற்று தெளிவிக்கும். இன்று தான் உண்ணும் உணவுப் பொருட்கள் எங்கு? எவ்வாறு? உருவாகின்றது என்ற அடிப்படையான அறிவு கூட இன்றி உலகம் இயங்கிக் கொண்டிருக்கின்றது. இந்நிலையில் உலகம் முழுமையும் வாழிட இழப்பால் பல்வகை உயிரினங்கள் முற்றாக அழியும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளது என சூழலியிலாளர்கள் அறைகூவல் விடுக்கின்றனர். உயிரினங்கள்

பற்றி அறியாத நிலையில் உயிரினங்களைக் காப்பது எவ்வகையில்? இந்த வினாவிற்கு விடையாக அமைவது சங்க இலக்கியப் பல்லுயிரியியம் என்றால் அது மிகையாகாது.

சங்க இலக்கியம் காடு, மலை, சமவெளி, கடற்பகுதி என்ற நான்கு வகையான பொது வாழ்விடங்களையும் அவற்றில் காணப்படும் உயிரினங்களையும், பொது வாழ்விடங்களான நிலப்பகுதியில் அமையப்பெற்ற தனிவாழிடங்களையும் விளக்கும் பெட்டகமாக விளங்குகின்றது. சூழலியல் கூறும் பல்லுயிரியியம் ஒரு குறிப்பிட்ட வாழ்விடத்தில் அமையப் பெற்ற குறிப்பிட்ட உயிரினங்களின் தொகுப்பை விளக்குவதாகவும் அவற்றின் சூழலினையும் அவற்றின் இருப்பையும் சுட்டுவதாக அமைகின்றது. சங்க அகப்பாடல்களில் காணப்படும் பல்வேறு பாடல்களில் மேற்கண்ட நிலவமைப்பு மற்றும் உயிரினங்களின் தொகுப்பு விளக்கப்பட்டுள்ளது. இதனையே இவ்வாய்வின் இரண்டாவது மற்றும் மூன்றாவது இயல்கள் விளக்கியுள்ளன. அவ்வகையில் சூழலியலாளரின் பல்லுயிரியியத்திற்கான அறிவுறுத்தல்களைச் சங்க இலக்கியப் பாடல்களைக் கொண்டு முன்னெடுக்கவியலும்.

தனது சூழலில் வாழும் உயிரினங்கள் பற்றிய அறிவினை மக்களிடத்து ஊட்ட சங்க அகப்பாடல்களில் காட்டப்படுவதுபோல் அந்த நிலத்திற்குரிய உயிரினங்களை அறியச் செய்வதின் மூலம், பல்லுயிரியியத்தின் அடிப்படையான உயிரினங்களின் தொகையினை உணரச் செய்யலாம். பள்ளிச் சிறார்களுக்கு இது புதுமையான மற்றும் அறிவார்ந்த செயல்பாடாகவும் அவர்கள் சிறுவயதிலிருந்தே தமது சூழலைக் கவனிப்பவர்களாகவும் இயங்க வாய்ப்பளிப்பதாக இது அமையும்.

திணையியல் அடிப்படையில் சுட்டப்படும் நிலவமைப்புகளில் அமையப்பெற்ற வாழிடவமைப்புகள் சிதைவிற்குள்ளாகி இருக்கும் சூழலில் பல்லுயிரினவளம் சிதைவிற்குள்ளாயிருக்கின்றது. பல்லுயிரியியம் சிதைவிற்குள்ளாவதற்கு முக்கியக் காரணம் வாழிட அழிப்பாகும் இதனை “ஒரு இடத்தில் வாழும் உயிரினத்தை அழிக்க வேண்டுமானால், அதன் வாழ்விடத்தை அழித்தாலே போதும் அந்த உயிரினம் முற்றாக அழிந்து போகும். அதுபோல உயிரினங்களை மனிதர்களின் வசதிக்காக இடமாறுதல் செய்தாலும் முரண் ஏற்பட்டு வாழ்விடச் சிக்கலால் அழிந்து தான் போகும் என்பது உயிரின வரலாற்றில் நாம் அறிந்த உண்மைகள்”[9] எனும் கூற்றால் அறியலாம். வாழிட அழிப்பு என்பது உயிரினத்தின் வாழிடத்தில் அடங்கும் பல்வேறு காரணிகளை அழிக்கும் செயல் ஆகும். வாழிட அழிப்பு என்பது மனிதன் தன் தேவை அடிப்படையில் பிற உயிரினங்களைப் பற்றியோ அதன் வாழிடத்தைப் பற்றியோ யாதொரு எண்ணமும் இன்றி மேற்கொள்ளும் நடவடிக்கையாகும். சங்க அகப்பாடல்களில் காணப்படும் தாவர, விலங்கு, பறவை இன உயிரினங்கள் யாவும் அவ்வவற்றின் வாழிடக் கூறுகளின் தொகுப்புடன் சுட்டப்படுவதை சரியான முறையில் நோக்குவோமானால் உயிரின வாழிட அமைப்பு முறைகளை இனம்காணவியலும். இது பல்லுயிரி வாழிட அமைவுகளை மேம்படுத்தி பல்லுயிரி வளம் சிறக்க வழிவகுக்கும்.

சங்க அகப்பாடல்கள் பலவற்றில் திணைகளுக்குரிய வாழிடங்களில் பல்லுயிரிவளம் மிகுந்து காணப்படும் காட்சிகள் இடம்பெற்றுள்ளன. இவை சங்க காலத்தில் காணப்பட்ட பல்லுயிரிய வளத்திற்குச் சான்றாக அமைகின்றன. அவற்றைத் தற்காலத்தில் அந்நிலவமைப்புகளில் காணப்படும் உயிரின வளங்களுடன் பொருத்திப் பார்த்துத் தற்காலத்து இழப்புகளை நாம் பட்டியலிட சங்க இலக்கியப் பதிவுகள் நமக்கு உதவியாக அமையும்.

"குருதி வேட்கை உருமெழு வயமான்
வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்
மரம்பயில் சோலை மலியப் பூழியர்
உருவத் துருவின் நாள்மேயல் ஆரும்
மாரி எண்கின் மலைச்சுர நீளிடை"[10]

எனும் நற்றிணைப்பாடல் குறிஞ்சி நிலத்தில் அமைந்த மலைச்சோலையில் காணப்பட்ட உயிரினத் தொகுப்பைக் காட்டுகின்றது. குருதியை உண்ணும் விருப்பத்தில் வலிமைமிக்க புலி தன்முன் வரும் இளையகளிறைப் பார்க்கும் மரங்கள் நிறைந்த சோலையில் ஆட்டுக் கூட்டங்களைப் போல் வைகறைப் பொழுதில் கரடிக் கூட்டங்கள் மேய்வதை இப்பாடல் காட்டுகின்றது. 'மரம்பயில் சோலை' என்பது மரங்கள் நிறைந்த மலைச் சோலையைக் குறிக்கின்றது. மரங்கள் நிறைந்த வளமிக்க சோலையில் பல்வேறுபட்ட உயிரினங்கள் வாழ்வது இயல்பு. இன்று இத்தகைய மலைச்சோலைகளை நாம் காண முடியுமா? என்பது ஐயமே.

'நெடுவரை ஆசினிப் பணவை யேறிக்
கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலின்
இறுவரை வேங்கையின் ஒள்வீ சிதறி
ஆசினி மென்பழம் அளிந்தவை உதிராத்
தேன்செய் இறாஅல் துளைபடப் போகி
நறுவடி மாவின் பைந்துணர் உழக்கிக்
குழையுடை வாழைக் கொழுமடல் கிழியாப்
பலவின் பழத்துள் தங்கும்'[11]

எனும் கலித்தொகைப் பாடலடிகள் மலைப்பகுதிக் காட்டின் தன்மையை நமக்கு விளக்குகின்றன. ஆசினி, வேங்கை, தேன்கூடு, மா, வாழை, பலா என பல்வேறுபட்ட உயிரினத் தொகுப்பைக் காட்டுகின்றது இப்பாடல். இது மலைச்சோலையின்கண் நெருங்கி வளர்ந்திருந்த மரத் தொகுப்பினை நமக்குக் காட்டுவதுடன் ஒரு காடு என்பது எவ்வாறு அமைந்திருக்க வேண்டும் என்பதையும் நமக்கு உணர்த்துகின்றது. பல்வேறுபட்ட மரங்களின் கூட்டாக மலைக்காடுகள் அமைதல் வேண்டும். மலைப்பகுதிகளில் இன்று தேயிலைத் தோட்டங்கள் ஏற்படுத்தப்பட்ட நிலையில் உண்மையில் ஒரு மலைப்பகுதிக் காடு என்பது எவ்வாறு இருக்கும் என்பதைக் கூட அறிய முடியாதவர்களாக இருக்கிறோம் என்பது கண்கூடான உண்மை. இந்நிலையில் சங்க இலக்கியங்களில் சுட்டப்படும்

மலைப்பகுதிக்காடுகள் பற்றிய காட்சிகள் மலைக்காடுகளையும் சோலையையும் அவற்றின் அமைப்பு, அதில் வாழும் உயிரினங்கள் என ஒரு பல்லுயிரினக் கூட்டாகவே காட்டுவது மலைப்பகுதிக் காட்டை அறிமுகம் செய்து அதுபற்றிய அறிவினை நமக்குக் கொடுக்கிறது எனலாம். இது சூழலியலாளா்களுக்கு சூழலை விளக்குவதற்கும் முற்கால பல்லுயிரிய வளநிலையை அறிவதற்கும் துணைசெய்யும் எனலாம். இது போன்று பல்வேறுபட்ட நிலப்பகுதிகளில் அமையப்பெற்ற பல்லுயிரின நிலையை அறிந்துகொள்ள சங்க இலக்கியம் நமக்குப் பயன்படுகின்றது.

**பல்லுயிரினக் கணக்கீடு**

தொல்காப்பியக் கருப்பொருள் வரிசையும் அதனடிப்படையில் எழுந்த சங்க இலக்கியமும் அக்காலகட்டத்தின் பல்லுயிரினக் கணக்கீட்டைக் காட்டுகின்றன எனலாம். முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்ற நிலப்பகுப்பின் அடிப்படையில் உயிரினங்களையும் அவற்றின் வாழிட அமைவு முறைகளையும் காட்டுவதன் மூலம் இன்னின்ன நில அமைப்பில் இத்தனை வகையான உயிரினங்கள் வாழ்ந்திருக்கின்றன என அறியமுடிகின்றது. இவ்வுயிரினக் கணக்கீட்டைத் தற்காலச் சூழலுடன் ஒப்பிடும் பொழுது இயற்கையில் அழிந்துபட்ட உயிரினங்களை நாம் தெரிந்துகொள்ள வாய்ப்பாக இருக்கும். குறிப்பிட்ட வாழிடத்தில் காணப்படும் உயிரினங்களைத் தொடர்ந்து கண்காணித்தல் மூலம் சூழல் உயிரிகளின் நிலையை நாம் உணரமுடியும்.

**மரபறிவு மீட்டுருவாக்கம்**

சங்க இலக்கியங்களில் சுட்டப்படும் உயிரினங்கள் பலவற்றை இன்றைய சூழலியல், உயிரியல் வல்லுநர்களாலும் சரியாக இனம் காண இயலவில்லை எனலாம். இதற்குக் காரணம் நமது மரபார்ந்த அறிவின் குறைபாடே ஆகும். சங்க இலக்கியங்களில் சுட்டப்படும் சில உயிரினங்களுக்கு உரையாசிரியர்கள் கூட சில இடங்களில் தவறான உரையினைக் குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது. உதாரணமாக மலைப்பகுதியில் வாழ்ந்து வரும் வரையாட்டைக் குறிக்கும் ‘வருடை’ எனும் சொல்லிற்கு ‘எட்டுக் கால்களையுடைய வருடை’ எனப் பொருள் கொள்ளப்பட்டதைச் சுட்டலாம். பழங்காலந் தொட்டு இருந்து வரும் மரபார்ந்த அறிவின் குறைபாட்டால் நாம் சங்க இலக்கயத்தில் சுட்டப்பட்டுள்ள தாவரம் முதல் விலங்கினங்கள் வரை இன்னது என்று சரியாக உணரவியலாத நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளோம். மேலும் தற்காலத்தில் காணப்படும் வேற்றுமொழிச் சொற்பயன்பாடு, வேற்றுமொழி கற்பித்தல் காரணமாக தமிழ் மண்ணின் மரபார்ந்த உயிரினப் பெயர்கள் தற்காலத்தார்க்குத் தெரிவதில்லை. இந்நிலையை “உலகமயமாக்கலின் விளைவால் இயற்கை பற்றிய மரபான அறிவை நாம் இழந்துவிட்டோம். இன்று நம்மைப் பொறுத்தவரை பறப்பது பறவை, நீந்துவது மீன், நிற்பது மரம் அவ்வளவுதான். நம் பிள்ளைகள் அறிந்து வைத்திருக்கும் ஒரே பறவை ‘கோபக்காரப் பறவை (Angry bird) மட்டும்தான்”[12] எனும் கூற்று நமக்குத் தெளிவுற விளக்குகின்றது. நமது வீட்டருகினில் காணப்படும் செடியோ மரமோ நமக்கு என்ன எனத் தெரியாத நிலை

நிலவுகின்றது. சங்க இலக்கியம் மற்றும் அதனைத் தொடர்ந்து எழுந்த பல்வேறு இலக்கியங்களை நாம் முறையாக அணுகும் பொழுது நமது நிலங்களில் காணப்படும் உயிரினங்களின் குறிப்பைக் கொண்டு அவற்றிற்கான மரபுப்பெயர்களை இனம்காண முடியும். இது போன்ற மரபார்ந்த பெயர்களையும், உயிரினத் தகவல்களையும் அறிந்துகொள்ள சங்க இலக்கியப் பல்லுயிரியியம் நமக்குத் துணை செய்யும். மரபார்ந்த பெயர்களும், தகவல்களும் பல்லுயிரிவளப் பாதுகாப்பிற்கு இன்றியமையாதது என்பது ‘வேர்களை இழந்த பெயர்களை வைத்து நம் சொல்லாடலைத் தொடருவதும் காட்டுயிர் பாதுகாப்பு பற்றிப் பேசுவதும் சிரமம். தமிழ்நாட்டில் காட்டுயிர் பாதுகாப்பு ஒரு மக்கள் இயக்கமாக உருவாகாததற்கு இது ஒரு காரணம் என்று சுட்டிக்காட்ட விரும்புகின்றேன்’’[13] எனும் கூற்றால் தெளிவாகும். சாதாரண மக்களிடம் பல்லுயிரியியப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ள அடிப்படையான விடயமாக மரபுப் பெயர்கள் விளங்குகின்றன என்பதை இதனால் உணரலாம். சூழலியல் குறித்து கற்பிப்பதற்கும் இம்முறையையே பயன்படுத்த வேண்டியுள்ளது என்பதை “அண்மையில் சுற்றுச்சூழல் நமது பள்ளிகளில் பாடமாக வைக்கப்பட்டிருக்கின்றது. இந்தத் துறையில் புத்தகங்கள் உருவாக்கப்பட்டு அவைகளில் பாரம்பரிய தமிழ்ப்பெயர்களைப் பயன்படுத்துவது தேவையாகின்றது. உயிரினம் சார்ந்த தமிழ்ப் பழமொழிகள், உவமைகள் உருவகப்படுத்தல்கள் இவற்றை நாம் பயன்படுத்தினால், புறவுலகையும் அதில் வாழும் உயிரினங்களையும் நம் மாணவர்கள் புரிந்துகொள்வது எளிதாகும். உயிரினங்களின் பெயர்கள் நம் மொழிவளத்தின் ஒரு பரிமானம்’’[14] எனும் கருத்தால் அறியலாம். சங்க இலக்கியங்கள் போன்றே பிற்காலத்தில் தோன்றிய இலக்கியங்களிலும் காணப்படும் உயிரினங்கள் பற்றிய மரபார்ந்த தகவல்களைக் கொண்டும் பல்லுயிரிய வளத்தினை மேம்படுத்தவியலும்.

சங்க அகப்பாடல்களில் காணலாகும் பல்லுயிரினங்கள் பற்றிய தகவல்களைக் கொண்டு அவற்றின் வாழிடம் பற்றிய தகவல்களை அறியமுடிகின்றது. அவற்றின் வாழிடங்களைப் பாதுகாப்பதன் மூலம் பல்லுயிரின வளத்தைப் பெருக்கலாம். காடுகளின் அமைப்பு அங்கு காணப்படும் உயிரினங்களின் இருப்பு ஆகியவை பற்றி நாம் தெளிவுற அறியாத நிலையில் சங்கப் புலவர்கள் பதிவுசெய்துள்ள காடுவாழ் உயிரினங்களின் தொகை அவற்றின் உணவு, வாழிடம் பற்றிய செய்திகளால் நாம் ஒரு முறையான அறிவினை அல்லது உயிரின இருப்பு பற்றிய அடிப்படை அறிவினைப் பெறமுடிகின்றது. சங்க இலக்கியத்தில் சுட்டப்படும் காட்டுவளம் இன்று இல்லை. இதனால் பல உயிரினங்கள் அழிவிற்கு உள்ளாகியுள்ளன. இதனை “மழைக்காடுகளை வாழ்விடமாகக் கொண்ட பேருயிர்களான யானைகள், புலிகள், சிறுத்தை, தாவர உண்ணிகளான மான் காட்டுமாடு போன்றவற்றிற்கும் ‘பசுமைப் பாலைவனத்தால்’ பல்வேறு சிக்கல்கள் ஏற்படலாயின’’[15] எனும் கருத்தால் அறியலாம். நம் மரபறிவால் உணர்ந்திருந்த காட்டிற்கும்

இன்று பசுமைப் பாலைவனம் எனச் சுட்டப்படும் தேயிலைக் காட்டிற்கும் வேறுபாடு அறியாதவர்களாகத் தற்காலத் தலைமுறை இருந்துவருகின்றது.

**இயலுயிரிகளை அறிதல்**

ஒரு நிலப்பகுதியில் தொன்றுதொட்டு இருந்துவரும் பாரம்பரியமான உயிரி அந்நிலத்திற்கான இயலுயிரியாகும். இன்று வளர்ப்புயிரிகளாக வளர்க்கப்படும் உயிரினங்களில் நாயினமானது பல கலப்பிற்கு உள்ளாக்கப்படுவதுடன் பல நாடுகளிலும் காணப்படும் நாய்கள் பல்வேறு நாடுகளிலும் வளர்க்கப்பட்டு வருகின்றது. தாவரவகைகளில் பல தாவரங்கள் இயல்தாவரங்களாக இல்லாமல் வேறுவேறு நாட்டு தாவரங்கள் உள்நாட்டில் வளர்க்கப்படுகின்றன. உள்நாட்டில் தொன்றுதொட்டு இருந்துவரும் தாவரங்களே சுற்றுச்சூழலிற்கு ஏற்றது. நிலம் சம்பந்தமில்லாத புதிய தாவரங்கள் வளர்க்கப்படுவது சூழலியல் சீர்கேட்டை ஏற்படுத்துவதுடன் மனிதர் மற்றும் பிற விலங்கினங்களுக்கு நோய்கள் பல வரக்காரணமாக அமைகின்றது என்கின்றனர் சூழலியலாளர்கள். இதனை "இந்த வழியில் வேறு நாடுகளின் மரவகைகளையும் இங்கு கொணர்ந்து சகட்டுமேனிக்கு வளர்க்க அதனாலும் சூழல் கெட்டு புதிய புதிய நோய்கள் உருவாகின்றன"[16] எனும் கருத்தால் அறியலாம். இதனால் நம் நாட்டிற்கே உரிய இயல்தாவரங்களையே நட வேண்டும். சூழலியல் பாதுகாப்பு எண்ணத்தில் மரம் நடுகின்றோம் என்ற எண்ணத்தில் இயல் மரங்களை விடுத்து அயல் மரங்களை நடுவது மேலும் சூழலியலைச் சிக்களுக்குள்ளாக்கும். அயல் தாவரமான தைலமரம் மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதிக்காடுகளில் நாட்டதன் எதிரொலியாகப் பல சிக்கல்கள் ஏற்பட்டதை "இவர்கள் உருவாக்கிய தைலமரக் காடுகளின் கேடுகளை இருபதாம் நூற்றாண்டு தொடக்கத்திலேயே ஆங்கிலேயர் உணர்ந்தனர். தைலமரம் இயல் தாவரங்களைக் காட்டிலும் அதிக அளவில் மண்ணிலுள்ள ஈரத்தை உறிஞ்சும் தன்மையுடையது என்று புரிந்து கொண்டனர். ஓடைகள் மற்றும் ஊற்றுகள் அருகே இதை நடுவதற்கு அப்போதே ஆங்கில அரசு தடைவிதித்தது… தைலமரம் நாளொன்றுக்கு ஐநூறு லிட்டர் தண்ணீரை உறிஞ்செடுக்கும் தன்மை கொண்டது. இன்று நீலகிரி மாவட்டம் எதிர்கொள்ளும் தண்ணீர் பஞ்சத்திற்கு, வரைமுறையின்றி, சோலைக்காடுகளையும் புல்வெளிகளையும் சிதைத்து மண்ணுக்கே உதவாத யூகலிப்டஸ் போன்ற அயல் தாவரங்களை நட்டதே காரணம் எனச் சூழலியலாளர்கள் கூறுகின்றனர்… மண்ணை மலடாக்கும் தைலமரம் மட்டுமல்ல பைன், சீகை, சவுக்கு என இன்னும் பல அயல்தாவரங்கள் மேற்குத் தொடர்ச்சி மலைகளை அச்சுருத்தி வருகின்றது"[17] எனும் கருத்துகளால் அறியலாம். இத்தகைய சிக்கல்களுக்குத் தீர்வுகளை நமது பழமையான இலக்கியங்களில் தேடவியலும். சங்க இலக்கியங்கள் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகக் கூறப்படுகின்றது. அவற்றுள் சுட்டபப்டும் தாவரங்கள், விலங்குகள், பறவைகள் ஆகியன தமிழ் மண்ணின்கன் நின்று நிலவி வளர்ந்த இயலுயிரிகளாகும். சங்க அகப்பாடல்களில் நூற்றைம்பதற்கும் மேற்பட்ட தாவர வகைகள் சுட்டப்படுகின்றன. இவை ஈராயிரம் ஆண்டு பாரம்பரியம் கொண்ட தமிழ்மண்ணின் இயல்தாவரங்கள் ஆகும். இவ்வாறு

இயலுயிரிகளை இனம் காணலாம். அவற்றைக் கொண்டு பல்லுயிரியவளத்தினை மேம்படுத்தவும் சங்க இலக்கியப் பதிவுகள் உதவுகின்றன.

**கழிமுகச் சூழல்காப்பு**

சங்க இலக்கியம் பல்வேறுபட்ட வாழிடச்சூழல்களையும் அவற்றில் காணப்பட்ட பல்லுயிரிப் பெருக்கத்தையும் நமக்கும் படம்பிடித்துக் காட்டுகின்றது. இந்நிலையில் நெய்தல் நிலத்தில் அமையப்பெற்ற கழிமுகச் சூழல் மிகவும் செழிப்புடனும் பல்லுயிரிவளத்துடனும் காட்டப்பட்டுள்ளது எனலாம். ஆறுகள் மழையின்றி வறண்ட நிலையிலும், அணைகளால் தடுக்கப்பட்ட நிலையிலும் தற்காலத்தில் கழிமுகம் தனது இயல்பான தோற்றத்தை இழந்து விட்டது எனலாம். சங்க அகப்பாடல்கள் தாவரங்கள், விலங்குகள், பறவைகள், மீன்கள், பூச்சிகள் என பல்லுயிரிவளம் நிறைந்த பெரும் வாழிடமாக கழிமுகத்தைக் காட்டியுள்ளன. இது நமக்குக் கழிமுகத்தின் சூழலை முழுமையாக உணரவைக்கும் செயல்பாடாகும். "'கண்டல்கள்' எனச் சங்க இலக்கியங்கள் சுட்டும் அலையாத்திக் காடுகளில் சுமார் 100 வகையான தாவரங்களும், அதனைச் சார்ந்து வாழும் சுமார் 12க்கும் மேற்பட்ட ஒட்டுயிரித் தாவரங்கள் மட்டுமின்றி, சுமார் 559க்கும் மேற்பட்ட பாசிகள், மிதவிகள், சுமார் 195 பூஞ்சைகள், பாக்டீரியாக்கள் செழித்து வாழ்வதால், பறவைகள் கண்டல்களை நோக்கி வருகை புரிவதில் வியப்பில்லை"[18] எனும் கூற்று கழிமுக வாழிடச் சூழலை நமக்கு விளக்குகின்றது. சங்க இலக்கியங்களில் காட்டப்படும் உயரினத் தொகுப்பைக் கொண்டு கழிச்சூழலை ஆராயவும், பழந்தமிழரின் உயிரின அறிவை மக்களிடம் கொண்டு செலுத்தவும் இயலும்.

**மன்றம்**

சங்க அகப்பாடல்களில் நானிலங்களிலும் 'மன்றம்' என்னும் பொதுவிடத்தில் குறிப்பிட்ட மரங்களும் அம்மரத்தில் காணப்படும் பறவைகளும் காட்டப்பட்டுள்ளன. இது மூன்றாம் இயலின்கண் விளக்கப்பட்டது. இத்தகையதொரு நிலையை நாம் இன்றும் கிராமப்புறங்களில் காணமுடிகின்றது. ஊர் கூடும் பொதுவிடத்தில் முதுமையான மரங்கள் நிற்பதைக் காணமுடியும். இம்முதியமரம் தனக்கான விதைகளை வெளிப்படுத்துவதிலும் தன்னை நாடிவரும் பறவைகளுக்கு வாழ்விடங்களை அளிப்பதிலும் முன்னிற்கின்றன. இது சங்ககாலம் முதல் இன்றுவரை பாதுகாக்கப்பட்ட அமைப்பாக இருந்து வருகின்றதெனலாம். இதற்கு மேலும் இதுபோன்ற அமைப்புகளைப் பாதுகாப்பதன் மூலம் பல்லுயிரிவளத்திற்குச் சற்று உதவலாம்.

**சூழலியல் நோக்கில் கற்பித்தல்**

மாணவர்களின் மனதில் நின்று நிலைக்கும் கருத்தாக்கங்களே பின்னாளில் அவர்கள் வாழ்வில் அவர்களை வழிநடத்தும் எனலாம். அவ்வகைக் கருத்தாக்கங்களை விதைப்பவர்கள் ஆசிரியர்களாவர். இன்றைய காலகட்டத் தேவைக்கேற்ப சங்கப் பாடல்களைக் கருப்பொருள் என்ற நிலையில் மட்டும் விளக்கமளிக்காது பல்லுயிரியியத்தின் பதிவாக விளக்க வேண்டும். இவ்வாறு விளக்கமளிக்க சங்க

இலக்கியங்கள் இடம் கொடுக்கும் தன்மையை இவ்வாய்வு பல இடங்களில் பதிவு செய்துள்ளது. மேலும் இன்று சூழலியலாளர்களாகச் செயலாற்றும் பலர் சங்க இலக்கியத்தின் திணையியலை நோக்கித் தம் கருத்தாக்கங்களை அமைக்கின்றனர். பறவைகளின் வலசை பற்றிப் பேசும் சூழலியலாளர் சங்கப் பாடல்களில் சுட்டப்படும் 'வம்பப்புள்'[19] 'வம்பநாரை'[20] என்ற பதங்களை எடுத்துக்காட்டி விளக்குவதைக் காணமுடிகின்றது.[21] சூழலியலாளர்கள் பலர் சூழலியல் என்பதை 'திணையியல்' என்ற பெயரிலேயே சுட்டுவதும் இன்று நிகழ்ந்து வருகின்றது. எனவே பல்லுயிரித்தகவல் பெட்டகமாக விளங்கிவரும் சங்க இலக்கியங்களை காலத்தின் தேவைக்கேற்ப சூழலியல் பார்வையிலும் கற்பிக்க வேண்டியது ஆசிரியரின் கடமையாக உள்ளது. வலசை பற்றிப் பேசும் சூழலியலாளர்கள் வம்பப்புகள் பற்றிப் பேசுகின்றனர். வம்பப்புள் பற்றிப் பேசும் தமிழாசிரியர்கள் வலசை பற்றிப் பேசவேண்டும். இது மாணவர்களின் மத்தியில் சங்க இலக்கியத்திற்கும் சூழலியலிற்கும் ஒரு சேர மதிப்பினைக் கூட்டும் செயலாக அமையும். பல்லுயிரிவளம் காக்க உதவும். பல்லுயிரிப் பாதுகாப்பைச் சட்டங்கள் மூலம் மட்டும் ஏற்படுத்திட முடியாது. தனிமனிதக் கவனிப்பும் பங்கெடுப்புமே துணைசெய்யும். அதற்கு அவர்களைக் கவரும் இலக்கியங்களும் செம்மையான பணிகளைச் செய்யும் என்பது குறிப்பிடத்தக்கது.

**தொகுப்புரை**

- சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ள பல்வேறுபட்ட உயிரினங்களின் தொகுப்பு பற்றிய பதிவுகளைக் கொண்டு பல்லுயிரிவள மேம்பாட்டிற்கு உதவும் கருத்தாக்கங்களை அமைக்கவியலும்.
- உயிரினப் பதிவுகளைப் பொருத்தமட்டில் சங்க இலக்கியப் புலவர்கள் பெரும்பான்மையும் கற்பனைகளற்ற உண்மையான தகவல்களையே பதிவுசெய்துள்ளனர் என்பது சங்க இலக்கிய அறிஞர்கள் மற்றும் சூழலியல் அறிஞர்களின் கருத்துக்களின் வழி விளக்கப்பட்டுள்ளது.
- தொல்காப்பியம் மற்றும் சங்க இலக்கியங்களில் அமையப்பெற்ற திணையியல் கொள்கைகளைச் சூழலியலாளர்கள் தற்காலத்தில் இயற்கையியலுடன் ஒப்பிட்டுப் பேசுகின்றனர்.
- சங்க அகப்பாடல்களில் பல்லுயிரினச் சூழல் பல பாடல்களில் இடம்பெற்றுள்ளது. குறிப்பிட்ட நிலத்தில் இடம்பெற்ற பல்வேறுபட்ட உயிரினங்களை அவற்றின் வாழிட அமைப்புடன் பதிவு செய்யப்பட்டுள்ள விதம் சூழலியலின் பல்லுயிரியியத்துடன் ஒப்பிட ஏதுவாக அமைகின்றது. இதனால் சங்க இலக்கியத்தின் வாயிலாகப் பல்லுயிரியியத்தை விளக்க இயலும்.
- சங்கப் பாடல்களில் புலவர்கள் குறிப்பிட்ட சூழலில் உள்ள உயிரினங்களை அறிந்து பதிவு செய்துள்ளது போல் அவற்றை எடுத்துக்காட்டாகக் காட்டி

மக்களைத் தத்தமது சூழல் உயிரிகளைப் பற்றிய விழப்புணர்வடையச் செய்யவியலும்.

- இயற்கைச் சூழல் சூறையாடப்பட்டுள்ள தற்போதைய நிலையில் செம்மையாக அமையப் பெற்ற செயற்கைகளால் பாதிக்கப்படாத வாழிடங்களை அறிந்து கொள்ளவும் விழிப்புணர்வை ஏற்படுத்தும் வகையில் எடுத்துக் கூறவும் சங்க இலக்கியங்களில் சுட்டப்படும் காடு, மலை போன்ற வாழிடப்பதிவுகள் துணை செய்யும்.
- சங்க இலக்கியங்களில் சுட்டப்படும் உயிரின வகைகள் பண்டைத் தமிழகத்தின் உயிரினக் கணக்கீடாக அமைகின்றன.
- சங்க இலக்கியப் பதிவுகளுக்கு உரையாசிரியர்கள் கூட சில இடங்களில் தவறான விளக்கங்களைத் தந்துள்ளனர். இதற்குக் காரணம் இயற்கைபற்றிய மரபார்ந்த அறிவு கடத்தப்படாமையேயாகும். மரபார்ந்த அறிவுக் குறைபாட்டின் காரணமாக நம்மைச் சூழ்ந்துள்ள மரஞ்செடி கொடி முதலியவற்றின் பெயர்களைக்கூட தெரியாத நிலையில் இன்றைய சமூகம் உள்ளது. சங்க இலக்கிய உயிரினப் பதிவுகள் பற்றிய ஆராய்ச்சி இந்நிலையைப் போக்க வாய்ப்பாக அமையும்.
- அயல் தாவரங்களை நம் நிலத்தில் நடும்பொழுது சூழலியல் சீர்கேட்டுடன் நோய்களும் ஏற்படுகின்றன. இதனால் இயல்தாவரங்களைப் பேணவும் அவற்றை மட்டுமே நடவும் செய்ய வேண்டும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்த இயல் உயிரிகள் தொகுப்பை சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியமுடிகின்றது.
- பெரும்பாலான தமிழகத்து ஆறுகள் வறண்டுள்ள மற்றும் ஆறுகள் அணைகளால் தடுக்கப்பட்டுள்ள சூழ்நிலையில் ஆறு கடலில் கலக்கும் கழிமுகமாகிய வாழிடச் சூழலையும், அதன் பல்லுயிரி வளச் செழுமையையும் காட்டும் காலக்கண்ணாடியாகச் சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. சங்க இலக்கியத்தின் மூலமாகவே நாம் இயல்பான கழிமுகத்தின் தோற்றத்தை அறியமுடியும்.
- சங்க இலக்கியங்களைக் கற்பிற்கும் பொழுது கருப்பொருட்கள் என்ற நிலையில் மட்டுமல்லாது சூழலியலின் பல்லுயிரியியத்துடன் இணைத்துக் கற்பிக்கும் பொழுது மாணவர்கள் விழிப்புணர்வைப் பெறுவர். சங்க இலக்கியம் இதற்கான பல்லுயிரியியப் பதிவுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

**சான்றெண் விளக்கம்**

1. www.yourdictionary.com
2. கா. பூரணச்சந்திரன் (மொழி), நில அமைப்பும் தமிழ்க்கவிதையும், ப.39
3. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.114
4. மேலது, ப.120
5. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப.152
6. சு. தியடோர் பாஸ்கரன், வானில் பறக்கும் புள்ளெலாம், ப.120
7. கயல் அ. இரவிச்சந்திரன், அழிவின் விளம்பில் நாட்டு மீன்கள், காடு-இதழ், மே-ஜூன், 2016, ப.51
8. ஏ. சண்முகானந்தம், வலசைப் பறவைகளின் வாழ்விடச் சிக்கல்கள், ப.59
9. திருப்பூர் அம்சா, மறக்க முடியாத தருணங்கள், காடு-இதழ், மே-ஜூன், ப.36
10. நற். பா.192
11. கலி, பா.41
12. கயல் அ. இரவிச்சந்திரன், அழிவின் விளம்பில் நாட்டு மீன்கள், காடு-இதழ், மே-ஜூன், 2016, ப.50
13. சு. தியடோர் பாஸ்கரன், வானில் பறக்கும் புள்ளெலாம், ப.118
14. மேலது, ப.119
15. ஏ. சண்முகானந்தம், வலசைப் பறவைகளின் வாழ்விடச் சிக்கல்கள், ப.92
16. ச. முகமது அலி, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப.10
17. ப. அருண்குமார், மேற்குத் தொடர்ச்சி மலையின் முற்றுகைத் தாவரங்கள், காடு-இதழ், மே-ஜூன், 2015, ப.31
18. ஏ. சண்முகானந்தம், வலசைப் பறவைகளின் வாழ்விடச் சிக்கல்கள், ப.65
19. அகம், பா.181
20. மேலது, 100
21. ஏ. சண்முகானந்தம், வலசைப் பறவைகளின் வாழ்விடச் சிக்கல்கள், பக்.19, 20

## முடிவுரை

- பண்டைத் தமிழ் மக்களிடம் அமையப்பெற்ற இயற்கை பற்றிய நுட்பமான அறிவு அவர்களிடமிருந்து திணையிலக்கியம் தோன்ற அடிப்படையாக அமைந்தது.
- பண்டைத் தமிழ் இலக்கியங்களில் நிலவமைப்பு, உயிரினப்பதிவு, பிற இயற்கைக் கூறுகள் ஆகியன அதிகம் இடம்பெற்றதற்கான காரணம் நிலமும் நிலத்தின் சாயலான இயற்கையும் மனிதவாழ்வில் நீங்காதிடம் பிடித்திருந்தமையைக் காட்டுகின்றது.
- பழந்தமிழ் மக்கள் அவர்கள் வாழ்ந்த நிலப்பகுதி, அந்நிலத்தின்கண் அமையப்பெற்ற இயற்கை இவையாவும் ஒன்றுக்கொன்று பின்னிப் பிணைந்திருந்தமையாலேயே தமிழ்நிலத்தில் தோன்றிய தொன்மை வாய்ந்த இலக்கியங்களில் இயற்கையின் கூறுகள் நுட்பமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. இதனாலேயே புலவர்களால் பதிவு செய்யப்பட்டன யாவும் மக்களாலும் அறிய முடிந்தனவாக அமைந்துள்ளன.
- மனித உணர்வுகளின் வெளிப்பாடாக அமைந்த சங்கப் பாடல்கள் அக்கால மக்களின் இயற்கையுடனான இணைவு, ஈடுபாட்டின் காரணத்தினால் இயற்கைக் கூறுகளைப் பின்னணியாகக் கொண்டமைந்தன.
- சங்க இலக்கியம் உயிரின வாழ்வின் அடிப்படையாக அமைந்த நிலத்தையும் காலத்தையும் முதற்பொருளாகவும், நிலத்தின்கண் காணப்படும் பல்வேறுபட்ட உயிரி, உயிரிசார் பொருட்களைக் கருப்பொருளாகவும் கொண்டு பாடப்பட்டுள்ளது. நிலத்தில் காணப்படும் பல்வேறுபட்ட பொருட்களையும் கருப்பொருள் காட்டுகின்றது.
- கருப்பொருள் என்ற சொல் ஒருநிலத்தில் உள்ளடங்கியிருக்கும் பொருள், ஒரு நிலத்தில் கருக்கொண்டு வெளிப்பட்டுள்ள பொருள் என்ற பொருண்மைகளைத் தருவதாக அமைகின்றது.
- சங்க இலக்கியக் கருப்பொருட்களை உயிரிக் கருப்பொருள், உயிரல் கருப்பொருள் என இரு பகுப்பாகப் பகுத்துக் காணலாம். உயிரிக் கருப்பொருள் தொகுப்பு ஒரு நிலத்தில் காணப்படும் பலவகைப்பட்ட உயிரினங்களையும் காட்டுவதாக அமையும்.
- தொல்காப்பியம் கருப்பொருள் வரிசை எண்ணிக்கையை அறுதியிட்டு முடிந்த முடிபாகக் கூறவில்லை. அதன்கண் தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், யாழ் என்ற கருப்பொருட்கள், இதுபோன்று வரக்கூடிய பிறவும் கருப்பொருட்களாக அமையும் என்பது கூறப்பட்டுள்ளது. பிறவும் என்றதனால் வேறுபல உயிரினங்களும், பிற பொருட்களும் கருப்பொருட்களாக வரும் என்பது பெறப்படுகின்றது. அதன்வழி நிலப்பகுதிகளில் காணப்படும் பல்வேறுப்பட்ட பொருட்களைக் கருப்பொருள் வரிசையில் அடக்கலாம்.
- தொல்காப்பியத்திற்குப் பின் வந்த பொருளிலக்கண நூல்கள், உரையாசிரியர்களின் உரைகள், இலக்கண இலக்கியத் திறனாய்வாளர்கள், அறிஞர்களின் கூற்றுக்கள் ஆகியவற்றின்வழி கருப்பொருட்களின் வகையினையும் அவற்றுள் அடங்கும் பொருட்களையும் அதிகப்படுத்தலாம் என நிறுவப்பட்டுள்ளது.

- திணைப்பகுப்பின் அடிப்படையில் சுட்டப்படும் அனைத்துவகை வாழிடங்களிலும் அமையப்பெற்ற அனைத்துப் பொருட்களும் கருப்பொருள் என்ற நிலையில் பார்க்கப்படுகின்றது. திணைப்பகுப்பினுள் அடங்கும் அனைத்து உயிரிப் பொருட்களும் உயிரிக் கருப்பொருள்களாக அமைகின்றன.
- பல்லுயிரியியம் என்பது நிலம், நீர் நிலைகள் என அனைத்துவகை வாழிடங்களிலும் காணப்படும் அனைத்துவகை உயிரினங்களையும் வகைப்படுத்திக் காண்கின்றது. உயிரினங்களின் சூழல் தொடர்பையும் இது கருத்தில் கொள்கின்றது. கருப்பொருள் திணையடிப்படையிலான நிலத்தின்கண் காணப்படும் உயிரி, உயிரிசார் கருப்பொருட்களை விளக்குவதாக அமைகின்றது. பல்லுயிரியியம் உலகின்கண் காணப்படும் அனைத்துவகை உயிரினங்களையும் அவற்றின் சூழல் தொடர்பையும் விளக்குவதாக அமைகின்றது. இயற்கையியல் அடிப்படையில் திணையமைப்பின் கருப்பொருளும் சூழலியலின் பல்லுயிரியியமும் ஒத்தமையும் தன்மையைக் காணமுடிகின்றது. அதனடிப்படையில் கருப்பொருள் வரிசையையும் பல்லுயிரியியத்தையும் இணைத்து சூழலியல் நோக்கில் சங்க அக இலக்கியங்களைக் காணமுடியும்.
- சங்க அகப்பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ள உயிரினங்களை வாழிட அமைப்பின் அடிப்படையில் நிலம், நீர் என்ற இருவகை வாழிடங்களையும் சுட்டி வகைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளது.
- நிலையியல் உயிரிகளான தாவர உயிரினங்கள் மரம், செடி, கொடி, புல் என வகைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளது. விலங்குவகை உயிரினங்கள் விலங்கு, ஊர்வன, பறவை, பூச்சி என்ற பகுப்பின் அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளது.
- சங்க அகப்பாடல்களில் அனைத்துவகை உயிரினங்களும் உடற்கூறுசுட்டி நுட்பமாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. உயிரினங்களை அடையாளம் காண்பதற்கு அவற்றின் உடற்கூறு துணைபுரிந்துள்ளது.
- தாவரத் தொகுப்பினுள் பலவகைத் தாவரங்களின் பெயர்கள் வழக்கில் இன்மையாலும், தாவரங்கள் குறித்த முறையான அறிவு தற்காலத்து மக்களிடம் இன்மையாலும் சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் தாவரங்களை விளக்குவதில் அறிஞர்கள் மத்தியில் குழப்பம் நீடிக்கின்றது.
- உயிரினங்களை நுட்பமாகக் கவனித்தறிந்து அறிவியல் அடிப்படையில் பதிவுசெய்துள்ள நிலையைக் காணமுடிகின்றது.
- கானமயில், காட்டெருமை போன்ற தமிழக நிலப்பகுதியில் அழிந்துவிட்ட உயிரினங்களையும் சங்க அகப்பாடல்கள் பதிவு செய்துள்ளன.
- காட்டெருமை கலித்தொகைப் பாடலடியில் குறிப்பாக உணர்த்தப்பட்டுள்ளது விளக்கப்பட்டுள்ளது.

- குரங்கினத்தின் நான்கு வகைகள், மானினத்தின் ஐந்து வகைகள் என உயிரினங்களின் உள்ளினங்களையும் சங்க அக இலக்கியங்களைக் கொண்டு வகைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளது.
- ஆமை குழி தோண்டி முட்டையிடுவது, பின் குஞ்சுகள் தானாகப் பொறிந்து வெளிவருவது போன்ற தகவல்கள் சங்க அகப்பாடல்களில் தெளிவுறக் காட்டப்பட்டுள்ளன. ஆமை பற்றிய தெளிந்த அறிவில்லாத உரையாசிரியர்கள் ஆமை பற்றிய சில முரணான கருத்துக்களைச் சுட்டுவது விளக்கப்பட்டுள்ளது.
- பூச்சியினங்களில் வண்டு, சுரும்பு, தும்பி என்பவற்றை விளக்குவதில் உரையாசிரியர்களிடம் தெளிவில்லாத தன்மை காணப்படுகின்றது. பூச்சிகளைப் பற்றிய அறிவு முற்காலந்தொட்டே குறைந்து வந்துள்ளதை இது காட்டுகின்றது.
- சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் தும்பியும் இன்று சூழலியலாளர்களால் சுட்டப்படும் தும்பியாகிய தட்டான் பூச்சியும் வேறுவேறானவை என்பதும், சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ள தும்பி தற்காலத்தில் 'கருங்குளவி' என்பதும் விளக்கப்பட்டுள்ளது.
- சங்க அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ள சில தாவரங்கள், விலங்கினங்கள் பற்றிய தெளிவான அறிவு இன்று இல்லை. அதனால் சில தாவரங்கள் எது என்பதை அறிந்து கொள்வது இயலாத நிலையில் உள்ளது.
- சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் பல்வேறுபட்ட உயிரினங்களின் தொகுப்பினைக் கொண்டு சூழலியல் அடிப்படையிலான பல்லுயிரின அட்டவணையைத் தயார் செய்ய இயலும்.
- சங்க அகப்பாடல்களில் உயிரினங்கள் பற்றிய பதிவுகள் அவற்றின் வாழிடச் சூழலையும் வெளிக்காட்டும் வகையில் பதிவு செய்யப்பட்டுள்ளன.
- சங்க அகப்பாடல்களில் சுட்டப்படும் பாலை நிலமானது முல்லையும் குறிஞ்சியும் திரிந்து உருவான நிலையிலேயே காட்டப்பட்டுள்ளது. பாலைத் திணைப் பாடல்களில் சுட்டப்படும் உயிரினங்கள், வாழிட அமைப்புகள் யாவும் முல்லை, குறிஞ்சி நிலத்தில் காணப்படுபவையாகவே அமைந்துள்ளன.
- திணையியல் அடிப்படையிலான வாழிடங்களில் ஒவ்வொரு திணையிலும் பல்வேறுபட்ட வாழிடங்கள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. குறிப்பிட்ட திணையில் மட்டும் காணப்படும் தனித்த வாழிடங்களும் திணைகளுக்குள் பொதுவாக அமைந்த வாழிட அமைப்புகளும் விளக்கப்பட்டுள்ளன.
- மருத நிலத்தின் 'பழனம்' என்ற வாழிடச் சூழலானது நீர்நிலை, நிலப்பகுதி ஆகிய இரு கூறுகளையும் கொண்ட பல்லுயிரிவளம் மிகுந்த தனித்த சூழல் தொகுதியாக அமைந்திருந்தது எடுத்துக்கூறப்பட்டுள்ளது.
- மழைவளம் குன்றி ஆறுகளின் முன்னைய நிலை மாறுபட்டு ஆறுகள் இல்லாமல் ஆகிக்கொண்டிருக்கும் நிலையில், ஆறு கடலில் கலக்கும் கழிமுகங்கள் சிதைவிற்குள்ளாகியுள்ளன. சங்க அகப்பாடல்கள் பழங்காலத்தில் காணப்பட்ட

கழிமுகத்தின் செழுமையை எடுத்துக்கூறிக் காட்சிப்படுத்தியுள்ளதன் வாயிலாகக் கழிமுகத்தைப் பற்றிய தெளிந்த அறிவினை நமக்கு நல்குகின்றன.

- கழிமுகம் தனித்த சிறப்பு சாய்ந்த உயிரின வாழிடமாக அமைவதும், கழிமுகத்தின் சிதைவு ஒட்டுமொத்த கடல்சார் வாழிடங்களின் அழிவிற்கு வித்திடும் என்பதும் விளக்கப்பட்டுள்ளது.
- சங்க அகப்பாடல்களில் காணப்படும் உயிரினப் பதிவுகள் யாவும் குறிப்பிட்ட சூழலின்கண் காணப்பட்ட உயிரினங்களின் பதிவாக அமைகின்றன. இது சங்க கால மக்கள் தங்களது சூழலில் வாழ்ந்த உயிரினங்கள் பற்றிய தெளிந்த அறிவினைக் கொண்டிருந்தனர் என்பதைக் காட்டுவதுடன் தற்காலத்துச் சூழலியலாளர்கள் குறிப்பிட்ட சூழலில் காணப்படும் உயிரினங்களைக் கணக்கெடுக்கும் முறைமையுடன் ஒத்ததாக அமைந்துள்ளது.
- சங்க அகப்பாடல்களின் உயிரினப்பதிவு பற்றிய பதிவுகளைக் கொண்டு மக்களிடையே பல்லுயிரின விழிப்புணர்வினை ஏற்படுத்தவியலும்.
- பல்வேறுபட்ட அயல்நாட்டுத் தாவரங்கள் உள்நாட்டில் வளர்க்கப்படுவது சூழல் சீர்கேட்டிற்கு வழிவகுக்கின்றது. மேலும் புதிய நோய்கள் தோன்றவும் காரணமாகின்றன. இது களையப்பட வேண்டியதாகும். உள்நாட்டுத் தாவர வகைகளான இயல் தாவரங்களை அறிந்துகொள்ள சங்க அகப்பாடல்கள் மற்றும் ஒட்டுமொத்த சங்க இலக்கியப் பாடல்களில் சுட்டப்படும் தாவர உயிரித்தொகுப்பு நமக்குத் துணை செய்யும் தன்மையில் அமைந்துள்ளது.
- செயற்கை வசத்தால் பல வாழிட அமைப்புகள் சிதைவுக்குள்ளாகிய நிலையில் ஒரு முழுமையான உயிரின வாழிடம் எவ்வாறு பல்லுயிரின வளத்துடன் அமைந்திருந்தது என்பதைச் சங்க இலக்கியங்கள் பல இடங்களில் பதிவு செய்துள்ளது. இது தற்காலத்து மக்களுக்கு இயற்கை வாழிடச் சூழல் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்துவதாக உள்ளது.
- சூழலியலாளர்கள் பலரும் சங்க இலக்கியத்தின் திணையியலைச் சூழலியலுடன் தொடர்புபடுத்திப் பேசுகின்றனர். அந்த அளவிற்குச் சங்க இலக்கிய இயற்கை சார்ந்த பதிவுகள் அமைந்துள்ளன. இந்நிலையில் சங்க இலக்கியக் கருப்பொருட்களைச் சூழலியலின் பல்லுயிரியியத்துடன் தொடர்புபடுத்திக் கற்பிக்கும் பொழுது பல்லுயிரிவளம் பற்றிய விழிப்புணர்வு மாணவர்களிடையே ஏற்படும்.
- தொல்காப்பியக் கருப்பொருள் வரிசையும் சங்க அகப்பாடல்களில் காட்டப்படும் பல்லுயிரினப் பதிவுகளும் சங்ககால மக்களின் இயற்கையியல் அறிவினைக் காட்டுகின்றன. இது தற்காலத்து மக்களுக்குச் சூழலியல் தொடர்பான கருத்தாக்கங்களை விளக்க துணைசெய்யும் தன்மையில் அமைவது விளக்கப்பட்டுள்ளது. இதனால் பண்டைத் தமிழரின் சூழலியல் அறிவு தற்காலச் சூழலியல் கோட்பாடுகளை அறிந்து கொள்வதற்கும் வளம்பெறச் செய்வதற்கும் உறுதுணையாக அமையும் எனும் ஆய்வுக் கருதுகோள் உறுதிப்படுத்தப்படுகின்றது.

